தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—131

# பொருளாதார ஆய்வு நூல்-I

## (Text Book of Economic Analysis)

ஆசிரியர்
எட்வர்ட் நெவின்

தமிழாக்கம்
கோ. இராதாகிருட்டினன், எம்.ஏ.,
பொருளாதாரப் பேராசிரியர்,
அரசர் கல்லூரி, புதுக்கோட்டை.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—April 1967

B.T.P. No. 131



**Text Book of**

**ECONOMIC ANALYSIS**

EDWARD NEVIN

Translation

G. RADHAKRISHNAN

**Price Rs. 7-75**

This translation of 'Textbook of Economic Analysis' by Edward Nevin is published by arrangement with Macmillan and Company, London.

PRINTED BY
KUMARAN PRESS,
MADRAS-1.

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாண வர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந் துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரி யர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும், மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பொருளாதார ஆய்வு நூல்-I' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் **131**ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **166** நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலுவீற்றிருக்கிறாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.



இரா. நெடுஞ்செழியன்

## மூல நூலின் (இரண்டாம் பதிப்பு)

# முன்னுரை

பாடநூலினை இயற்றும்போது, முதற்கண் கவனத்தில் வைக்கத்தக்கது ஒன்றுண்டு. எவ்வகை மாணுக்கருக்காக நூல் எழுதப்படுகின்றதோ, அன்னாரின் தேவையறிந்து அதனளவிற்கே எழுத வேண்டும். இரண்டாவது, அத் தேவைக்கேற்ப நூலின் அளவினைக் கடுகி ஆராய்ந்து சமைத்தலாகும். இயலைப்பற்றிய அடிப்படையான கருத்துகளைக் கூறுவான்வேண்டி நூலெழுதும் ஆசிரியர், ஒரு தவறு செய்துவிடுவது இயற்கை. பல்வேறுவகை வாசகர்களுக்காக நூலினை எழுதப்போய் முடிவில் அவர்களில் எந்த ஒரு வகையினருக்கும் பயன்தராவண்ணம் நூலினை முடிக்க நேரிடும். பல்வேறு வகையான வாசகர்கள் பல்வேறு நோக்கங்களுக்காகப் படிக்கும் பொருளாதாரம் போன்றதோர் இயலில் இக் குற்றம் மிகுதியும் இழைக்கப்படுதல் கூடும். ஏற்கெனவே இக் கருத்தினை இந் நூலின் முதற்பதிப்பு முன்னுரையில், குறிப்பிட்டுள்ளேன். இந் நூலைப் பயன்படுத்திய ஐந்து ஆண்டுகள் அனுபவத்திற்குப் பிறகும் மேற்கூறிய தவறு சிறிதும் களையப்பெருமல்தானிருந்தது. இத்தகைய குற்றம் களையுமுகத்தான், இந் நூலின் பொது நாட்டம் கண்டிப்பாய் பாடத்திட்டத்தின் ஆளுகையின் எல்லைக்குட்படுவதாகவேயுள்ளது. பாடத்திட்டத்தின் ஆய்வுக் குழுவொன்று பாடத்திட்டத்தில் கூறியுள்ள கருத்திற்கிணங்கவே இப் பதிப்பு இயற்றப்பட்டுள்ளது. ‘நூல், பொருளாதாரத்தைப்பற்றிய அடிப்படைக் கோட்பாடுகளுக்கு ஒரு முன்னுரையாகவும்......... தேர்வெழுதப் போகும் மாணுக்கர்களுக்கு அடிப்படையானதும் அப்பழுக்கற்றதுமான அடிப்படைக் கருத்துகளை அளிக்க வல்லதாயும் ......... ஆய்வுக் கருத்துகளையும் ஆழ்ந்த ஆய்விற்குகந்த அருங் கருத்துகளையும் பொதுப்படையாகவும் தெளிவுகாண வகையற்ற முறையிலும் கூருது, அடிப்படையான கருத்துகளை மாணுக்கர் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்து தெளிவுகாணும் வகையில் அடிப்படைப் பொருளாதாரக் கோட்பாட்டிற்கு ஒரு முன்னுரையாய் அமைதல் வேண்டும்’. இதுவே தேர்வுக் குழுவின் கருத்தாகும். இக் கருத்துக்கிணங்கவே இந் நூல் இயற்றப்பட்டுள்ளது.

எனவேதான், பொதுப்படையில், இந் நூல் மார்ஷல் அவர்களின் வழியாகிய மரபு வழியில் செல்வதாக அமைந்துள்ளது. ‘நடப்புப் பிரச்சினைகளை’ ஆயும் முறை இந் நூலில் தவிர்க்கப்

பட்டுள்ளது. தற்காலப் பொருளாதாரப் பிரச்சினைகளை அறிவுத் திறங்கொண்டு ஆய்வு செய்வதை நோக்கமாகக் கொண்டுள்ள மாணுக்கர்களுக்கு நடப்புப் பிரச்சினைகளை ஆயும் முறை பெரிதும் பயன்படக்கூடும் என்பது பலரின் எண்ணம். இவ் வழியில் நூலியற் றிஞல் புதியதாத இயலைக் கற்க வருபவர்களை நிச்சயமாக உவக்கச் செய்யும் என்பதில் ஐயமில்லை. ஆயினும், இதற்கு முற்றிலும் மாருன கருத்தில்தான் நான் அசையாத நம்பிக்கை கொண்டவனுக இருக்கிறேன். தேர்வுத் திட்டத்தின் விதிமுறைகள் ஒருபுறமிருக் கட்டும் (இந் நூல் தேர்வுத் திட்டத்தின் விதிமுறைகளை யொட்டியே எழுதப்பட்டுள்ளது), பொதுவாக, பொருளாதார நடவடிக்கைகளை ஆளுகின்ற அடிப்படையான தத்துவங்களை முழுமையாகப் புரிந்து கொள்வதற்கு, பொருளாதாரக் கோட்பாட்டினைத் தொன்று தொட்ட மரபு முறையாகவே கற்றல் வேண்டும். இதற்குச் சரிநிக ரான வேறு வழியொன்றும் இருப்பதாக நான் கருதவில்லை. கோட் பாட்டினைச் செவ்வையாகக் கற்பதற்கு ஒரு குறிப்பிட்ட காலத்தின் தனிவகைப் பிரச்சினைகளை ஆய்வதுமட்டுமே சிறந்த வழியாகாது என்னும் கருத்துடையேன்.

இந் நூலினைப் போதிய அளவிற்குள் வெளியிடும் நோக்கத் தால், விளக்கங்கள் குறைந்தபட்சமாகவே தரப்பட்டுள்ளன. மேல்மட்ட பாடத்திட்டத்தின் தேவையளவிற்கே அவை தரப் பட்டுள்ளன. இவ் வழியில், உடன் பிறக்கும் நலன்களுமுள்ளன. இதனை எடுத்தோதும் ஆசிரியர்கள் தம் மாணுக்கர்களின் தேவைக்கேற்ப, விளக்கங்களைத் தந்து பொருளாதாரக் கோட்பாடு கள் என்னும் கற்பாறைகளில் சிற்பங்களைச் செதுக்கிக் கவின்பெறச் செய்து தெளிவுகாட்டி ஈர்த்து ஓதலாம். மற்ருெரு நன்மையும் உண்டு. நடைமுறைப் பிரச்சினைகளை விளக்கும் நூல்களைக் காட் டிலும் இந் நூல் மிகக் குறைந்த அளவிற்கே காலம் வழுவியதாக இருக்கும்.

இருப்பினும், நூலின் மறுபதிப்பை இயற்றும்போது 'அரசாங்க நிதியம்', 'ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயம்' ஆகியவற்றை யும் சேர்க்கவேண்டியதாயிற்று. பொருளாதாரத்தினை ஆரம்பமாக விளக்கும் ஒரு நூல், நமது தற்காலப் பொருளாதார முறையை ஆளுகின்ற முக்கிய மூலக் கூறுகளை மாணுக்கர்களுக்கு விளக்கா தொழியின், எவ்வாறு முற்றுருப்பெற்றதாகும் என்னும் கருத்தே இவைகளை இந் நூலில் இடம்பெறச் செய்தது. இப் பதிப்பின் மற்ருெரு முக்கிய மாற்றமென்னவெனில் 'நுண் பொருளாதாரத் தினை' ஆயும் உட்பிரிவுகள், 'சமநோக்குக் கோடுகளைக்'

கையாண்டு விளக்குமுகத்தான் மேலும் ஒளிபெறப்பட்டுள்ளமை யாகும்.

இவை தவிர்த்து, சென்ற பதிப்பின் பொதுவான அம்சங்கள், இப் பதிப்பிலும் காணப்படுகின்றன. ஒவ்வோர் அத்தியாயத்தின் இறுதியிலும் அவ் அத்தியாயம் கூறும் பொருளினை முழுமையாகவும் ஆழமாகவும் விளக்கும் நூல்களைக் குறிப்பிட்டுள்ளேன். இப் பட்டியலை இயன்றவரை மிக அண்மைக் காலம் தழுவியதொன்றுகச் செய்துள்ளேன். சென்ற பதிப்பில் குறிப்பிட்டிருந்ததுபோன்றே, 'மேலும் படித்தற்குரிய நூல்கள்' என்ற தலைப்பின்கீழ், மேம்பாடான பாடத்திட்டத்திற்குரியனவாக இருக்கும் காரணத்தால், அவைகள் மாணுக்கர்களுக்கு உகந்தவையாக இருத்தலைக் காட்டிலும் ஆசிரியர் களுக்கு உகந்தவையாக உள்ளனவெனக் கூறலாம். அந் நூல்களில் பலவற்றைப் படித்துப் பெரும்பயன் எய்துமாறு ஆசிரியர்கள் தம் மாணுக்கர்களை ஆற்றுப்படுத்தலாம். இதன் வழியில் மாணுக்கர் பெரும்பயன் எய்துவர் என்பதில் ஐயமில்லை. இந் நூல்களில் மேல்மட்ட ஆராய்ச்சிக்குகந்த நூல்களை ஆங்காங்கே உடுக்குறியால் சுட்டியுள்ளேன்.*

இந் நூலில் ஆயப்பட்டுள்ள கோட்பாடுகள் பெரும் பகுதியும் தற்காலப் பொருளாதாரக் கோட்பாட்டினைப் பெரிதும் சார்ந்தன வாகக் காணப்படினும் குறிப்பிட்ட சில பிரச்சினைகளில்—சிறப்பாக, 'வட்டிவீதம்', 'வேலைக் கோட்பாடு' ஆகிய இரு தலைப்புகளில்—மூதறிஞரின் கருத்தினைக் கூருதொழியின் அது ஒரு பெருங் குறையாயமையுமாதலின் இந் நூலின் முன் பதிப்பில். கெயின்ஸ் பிரபுவின் கருத்துகளைத் தீவிரமாகவே கையாண்டேன்—அதாவது, 'பொதுக் கோட்பாட்டின்' கருத்து நடையைப் பின்பற்றியுள்ளேன். மேலும், 'வட்டிவீதக் கோட்பாடு', 'வருமானங்களின் முழுவதும் தழுவிய மட்டம்', 'விலைகள்', 'வேலை' ஆகியவை சம்பந்தமான பிரச்சினைகளை விளக்குவதற்கும் இம் முறையை வேண்டுமென்றே நான் கையாண்டுள்ளேன். இவைகளைச் செவ்வையாக ஆய்வதில், இரண்டகமான விளக்கங்களைக் கூறிச் செல்வதைக் காட்டிலும் இம் முறையைத் தழுவி நூலினைச் சமைத்தலே பெரும்பயனளிக்க வல்லது என்னும் கருத்துடையேன். பொருளாதாரத்தைக் கற்கும் மாணுக்கர்கள் நாளடைவில் இவை சம்பந்தமான திறனுய்வுகளை யும், வேறு பிற கருத்துகளையும் தாமே கற்றுத் தெளிதல் கூடும். இயலை ஆரம்பமாகக் கற்கும் மாணுக்கர் ஒருவர், ஆழமானவையும்

* இத்தகைய நூல்களின் பெயர்களைத் தொகுத்து ஒன்றுகப் பக்கம் ix-ல் தரப்பட்டுள்ளது.

சிக்கலானவையுமான வாதங்களில் ஈடுபட்டுக் குழப்பமென்னும் துயர்க் கடலில் மூழ்கிக் கிடப்பதைக்காட்டிலும், ஒரு குறிப்பிட்ட வழி நடந்து விளக்கம் காண்பதே நலம் பயக்கவல்லதென்பதை நான் திடமாக நம்புகிறேன்—அம் மாணுக்கர், சம்பந்தப்பட்ட கருத்துகளை, நன்கு புரிந்துகொள்ளத்தக்கதொரு சிறந்த நிலையினை அடையும்போது வேண்டுமானல் இவ் வழி துறந்து வேறு வழியினைப் பற்றட்டும்.

கடைசியாக, முன் பதிப்பு குறித்துத் தங்கள் கருத்துகளையும் அறிவுரைகளையும் நல்கி, பேருதவியாற்றிய அன்பர்கள் அனைவருக்கும் என் நன்றி. சிறியனவும் பெரியனவுமாகிய பல திருத்தங்களை இப் பதிப்பில் நான் செய்வதற்கு அவை பெரிதும் துணை செய்தன. இந் நூலில் காணப்படும் பல பிழைகள், குறைகள் இவைகட்கு நானே பொறுப்பு.

எ. நெ.

# தமிழாக்கியோன் முகவுரை

உலகின் தலைசிறந்த கலைகள் பலவற்றுள் பொருளியல் கலையும் ஒன்றாகும். இதனைத் தமிழில் முறையாகக் கற்க விழையும் அன்பர்கள் இம் மூல நூலாசிரியராகிய திரு. எட்வர்ட் நெவின் போன்றாரின் நூல்களைக் கற்பது இன்றியமையாததாகும்.

இந் நூல், தற்காலப் பொருளாதார, பணக் கோட்பாட்டின் அடிப்படைக்கோர் அறிமுகமாக அமைந்துள்ளது. பொருளா தாரத்தைப் புதிதாகக் கற்பவர்களுக்காகவே இயற்றப்பட்டதைப் போன்றுள்ளது. அடிப்படைப் பொருளாதாரக் கருத்துகளையும் அவைகளின் பயன்களையும் அறிந்துகொள்வதற்கு இந் நூல் வழி செய்யும் என நம்புகிறேன்.

இயன்றவரை. திரு. எட்வர்ட் நெவின் அவர்களின் கருத்து களைப் பிறழாமல் தமிழில் கொணர்ந்துள்ளேன். இதனைப் படிக்கும் ஆசிரியர்களும், மாணாக்கர்களும், பிறரும் தாம் காணும் குறைபாடு களைச் சுட்டி, மறுபதிப்பில் குறை களைந்து செம்மைப்படுத்து வதற்குப் பேருதவி நல்குமாறு பணிவன்புடன் வேண்டுகின்றேன்.

தமிழாக்கத்தைச் செய்யுமாறு எனக்கு ஆணையிட்ட தமிழ் வெளியீட்டுக் கழகத்திற்குப் பெரிதும் நான் நன்றியுடையேன். தமிழ் வெளியீட்டுக் கழகம் உவந்து தந்த ஆணையினைத் தமிழன்னை யின் ஆணையிது எனக்கொண்டு இந் நூலை அவ் அன்னைக்கே அணிவித்து அஞ்சலி செய்வேன்!

**கோ. இராதாகிருட்டினன்**

## உடுக்குறியால் குறிப்பிடப்பட்டுள்ள நூல்கள்


Chapter 1

1. J. N. Keynes, 'The Scope and Method of Political Economy'. Chs. I-IV.
2. L. Robbins, 'An Essay on the Nature and Significance of Economic Science', Chs. I–II.

Chapter 2

3. Robbins, 'An Essay on the Nature and Significance of Economic Science', Chs. IV-V.
4. Keynes, 'The Scope and Method of Political Economy', Chs. IX, Note A.

Chapter 3

5. J. R. Hicks, 'Value and Capital', Part I, Chs. I-III.

Chapter 4

6. 'H. Schultz, The 'Theory and Measurement of Demand', Chs. I.

Chapter 6

7. R. Turvey, 'The Economics of Real Property', Chs. II-V.

Chapter 9

8. D. H. Macgregor, 'Economic Thought and Policy', Chs. I-II.

Chapter 10

9. Joan Robinson, 'The Economics of Imperfect Competition', Introduction, Chs. 1 and 2.

Chapter 11

10. Joan Robinson, 'The Economics of Imperfect Competition', Introduction, Chs. 7.

Chapter 12

11. Joan Robinson, 'The Economics of Imperfect Competition' Introduction, Chs. 3 and 11.

Chapter 13

12. Joan Robinson, 'The Economics of Imperfect Competition', Introduction, Chs. 11-14.

Chapter 16

13. Joan Robinson, 'The Economics of Imperfect Competition', Introduction, Ch. 8.

Chapter 17

14. B. S. Keirstead, 'An Essay in the Theory of Profits and Income Distribution', Chs. II

Chapter 19

15. R. A. Musgrave, 'The Theory of Public Finance'.

# பொருளடக்கம்

## மடல் 1
## தோற்றுவாய்

பக்கம்

1. பொருளாதாரத்தின் தன்மையும் எல்லையும் ... 1

கிடைப்பருமையும் தெரிதலும்—பொருளாதார விளக்கம்—பொருளாதார ஆய்வு முறைகள்—பொருளாதார ஆய்வின் நோக்கங்கள்—பொருளாதாரத்திற்கும் பிற இயல்களுக்குமுள்ள தொடர்பு.

2. சில அடிப்படைக் கருத்துகள் ... ... 19

பயன்பாடு—செல்வமும் நலமும்—மூலதனமும் வருமானமும்—உற்பத்திக் காரணிகள்—இறுதிநிலை—சமநிலை—பொருளாதார விதிகள்.

## மடல் II
## தேவைக் கோட்பாடு

3. தனிநபரின் தேவை ... ... ... 35

மொத்தப் பயன்பாடும் இறுதிநிலைப் பயன்பாடும்—குறைந்துசெல் பயன்பாட்டு விதி—சமநோக்குக் கோடுகள்—சம இறுதிநிலை விளைவுகள் என்னும் கருத்து—விலைகளின் விளைவுகளைப்பற்றிய ஆய்வு—வருமானத்தின் விளைவுகள் பற்றிய ஆய்வு.

4. அங்காடித் தேவை ... ... ... 68

தேவைக் கோடுகள்—பிறழ்நிலைத் தேவைக் கோடுகள்—தேவையின் பரிமாற்றத் தொடர்புகள்—விலை நெகிழ்ச்சி—விலை நெகிழ்ச்சியை ஆளுகின்ற காரணிகள்—நெழ்ச்சியின் மற்ற வகைகள்—நெகிழ்ச்சித் தத்துவத்தின் முக்கியத்துவம்.

## மடல் III
## உற்பத்தி இயல்

5. உழைப்பு ... ... ... ... 95

முகவுரை—உழைப்புப் பகுப்பு—உழைப்புத்திறமைக்கான மற்றக் காரணிகள்—மக்கள் தொகையின் அளவு—ஐக்கிய அரசாங்கத்தின் மக்கள் தொகை—தொழிலாளர் இடப்பெயர்ச்சி.

6. நிலம் ... ... ... ... ... 122

நிலத்தின் அளிப்பு—குறைந்துசெல் பயன்பாட்டு விதி—மனைகளும் தொழில் இட அமைப்பும்.

7. முதல் ... ... ... ... ... 140

முதலின் வகைகளும் அம்சங்களும்—மொத்த உற்பத்தியும் நிகர உற்பத்தியும்—முதல் ஆக்கமும் நுகர்ச்சியும்.

8. தொழில்துணிவு ... ... ... ... 154

தொழில்துணிவோனின் பணிகள்—உத்தம காரணிச் சேர்க்கை—பேரளவு உற்பத்தி—சிற்றளவு உற்பத்தி—தொழிலமைப்பு.

9. அளிப்பு நடவடிக்கை ... ... ... 176

உற்பத்தி செலவுக் கோடுகள்—சராசரி உற்பத்திச் செலவும் இறுதிநிலை உற்பத்திச் செலவும்—அளிப்புக் கோடுகள்—அளிப்பில், காலத்தின் முக்கியத்துவம்—கூட்டளிப்பு—பிற வாய்ப்புச் செலவு.

## மடல் IV
## விலைக் கோட்பாடு

10. அங்காடிச் சமநிலையின் தன்மை ... ... 207

விலைகள், பொருள்கள், அங்காடிகள்—தொழிலும் நிறுவனமும்: தேவைக்கோடு—தொழிலும் நிறுவனமும்: சமநிலைச் சூழ்நிலைகள்.

11. நிறைவுப் போட்டியில் விலை ... ... ... 217

நிறைவுப் போட்டி என்றால் என்ன ?—நிறைவுப் போட்டியில் தேவைக்கோடு—நிறைவுப் போட்டியில் அங்காடிச் சமநிலை.

12. சர்வாதீனத்தில் விலை ... ... ... 226

சர்வாதீனத்தின் தன்மை—சர்வாதீன அதிகாரத்திற்குரிய வழிகள்—சர்வாதீனச் சமநிலை—சர்வாதீனமும் அரசாங்கக் கைக்கோளும்.

13. நிறைகுறைப் போட்டியில் விலை ... ... ... 245

நிறைகுறைப் போட்டியின் தன்மை—அங்காடிச் சமநிலை—நிறைகுறையான போட்டியின்கண்ணுள்ள சமநிலையின் முக்கியத்துவம்.

**14.** விலை அமைப்பு ... ... ... ... 258

சாதனங்களின் பங்கீடு—உத்தம அளவுப் பங்கீடு—அளிப்பு, தேவை இவற்றில் ஏற்படும் மாற்றங்கள்—வரி விதிப்பும் பங்கீட்டு முறையும்.

மடல் V

## வருமானப் பகிர்வுக் கோட்பாடு

**15.** கூலிகள் ... ... ... ... 281

உழைப்பிற்கான தேவை—உழைப்பின் அளிப்பு—போட்டியில் கூலிகளை நிர்ணயித்தல்—ஒப்பீடான கூலி மட்டங்கள்—காலவீதக் கூலிகளும் வேலைவீதக் கூலிகளும்—உண்மைக் கூலிகளும் பணக் கூலிகளும்—தொழிற்சங்கங்களின் பணி—பிரிட்டனில் கூலி நிர்ணயித்தலில் அரசாங்கத்தின் தலையீடு.

**16.** வாரம் ... ... ... ... 315

வாரமென்பது நிலத்திற்காகச் செலுத்தப்படும் ஒரு செலுத்துநிலை—வாரம் ஓர் எச்சப்பாடு என்பது—போலி வாரம்.

**17.** இலாபங்கள் ... ... ... 327

இலாபம் ஒரு கணித எச்சப்பாடு என்பது—இலாபம் ஓர் உற்பத்திச் செலவென்பது—நிலையின்மையைத்தாங்குதல்—இலாபங்களும் சாதனங்களின் பங்கீடும்—சர்வாதீன இலாபங்கள்.

**18.** நாட்டு வருமானம் ... ... ... ... 340

நாட்டு வருமானத்தை அளவிடல்—நாட்டு வருமானக் கணக்குகள்—நாட்டு வருமானமும் மக்கள் நலமும்—நாட்டு வருமானப் பகிர்வு.

**19.** அரசாங்க நிதியம் ... ... ... ... 367

அரசாங்கத்தின் வேலை—மத்திய அரசாங்கச் செலவீடு—மத்திய அரசாங்க வருவாய்—நாட்டுக் கடன்—உள்ளாட்சி நிதியம்.

கலைச்சொல் அகராதி

ஆங்கிலம்—தமிழ் ... ... ... ... 388

தமிழ்—ஆங்கிலம் ... ... ... 406

பொருள் குறிப்பு அகராதி ... ... ... 424

மடல் I

# தோற்றுவாய்

## 1. பொருளாதாரத்தின் தன்மையும் எல்லையும்

### 1. கிடைப்பருமையும் (Scarcity) தெரிதலும் (Choice)

நாம் வாழும் இவ்வுலகம் மிகவும் வறிய நிலையில் உள்ளதென்றே கூறவேண்டும். இவ்வுலகில் ஏறக்குறைய முந்நூறு கோடி மக்கள் வாழ்கின்றனர். இவர்களில் ஒவ்வொருவரும் தாம் உயிர் வாழ்வதற்குத் தேவையான உணவு, குடியிருப்பு இவற்றையே பெரிதும் வேண்டுகின்றனர். ஆனால், உலகத்தின் பல பாகங்கள் இத்தகைய ஏழ்மை நிலையில் இல்லை. உதாரணமாக, அமெரிக்காவில் ஒரு வீட்டின் கார் நிறுத்துமிடத்தைப் (garage) பார்த்தால், அதில் இரண்டு கார்கள் நிறுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். வீட்டினுள் குளிர்சாதனப் பெட்டியில் பனிப்பாலேடும் (ice-cream) கோழிக் குஞ்சுகளும் இருக்கும். ஐரோப்பாவிலும் பொதுவாக வாழ்க்கைத் தரம் சீராக உள்ளதென்றே கூறவேண்டும். பட்டினியாலோ அல்லது குடியிருப்பின்மையினால் குளிரால் தாக்கப்பட்டோ அங்கு மக்கள் இறக்கின்றார்கள் என்பது கிடையாது; டெலிவிஷன்களும் கார்களும் அங்கே அரியனவல்ல. ஆனால், ஐரோப்பாவும் வடஅமெரிக்காவும் மட்டுமே உலகமாகிவிடாதல்லவா? உண்மையில் உலகத்தின் பெரும் பகுதியில் வாழும் மக்கள் மிகக் குறைவான வாழ்க்கைத்தரத்துடன் உயிர்வாழ்ந்துகொண்டிருத்தல், அவைகளுமின்றி இறத்தல் ஆகிய இரு அவலநிலைகளுக்கிடையேதான் இருந்துகொண்டிருக்கின்றனர் ஐரோப்பா, வடஅமெரிக்கா ஆகிய நாடுகளிலும் மிக ஏழ்மையான பகுதிகள் இருக்கத்தான் செய்கின்றன. இவ்வேழ்மையைக் களைவதற்கு இன்னும் பல காலம் பிடிக்கும். உலகத்திலுள்ள பயன்படு பொருள்களத்தனையையும் ஒருங்கு சேர்த்து அவற்றை உலக மக்களனைவரும் சமமாகப் பங்கிட்டுப் பயன்படுத்துகிறார்களெனக் கொள்வோம். இத்தகைய சூழ்நிலையிலும், உலகத்திலுள்ள

மக்களுக்கு உணவு, உடை, குடியிருப்பு ஆகியவற்றிற்குப் பற்றுக் குறை இருக்கவே செய்யும்.

இதுமட்டுமன்று; உலகத்திலுள்ள வயதுவந்தவர்களில் ஒவ்வொருவரும் பொருள்சார் செல்வத்தினைத் (material wealth) தங்களாலியன்ற அளவிற்கு, அமெரிக்காவிலுள்ளதோர் நவீனத் தொழிற்சாலையில் பணிபுரியும் மிகத் திறமை வாய்ந்த தொழிலாளியைப்போல் திறம்பட உற்பத்தி செய்கின்றனரென வைத்துக் கொள்வோம்—ஆனால், இத்தகைய நிகழ்ச்சி இன்னும் பல ஆண்டுகளுக்குப் பிறகும் ஏற்படுமாவென்பது ஐயமே—இந் நிலையிலும் உலகத்தின் வாழ்க்கைத்தரத்தில் குறைபாடு இருப்பதாகவே காணப் படும். இதற்குக் காரணம் என்ன? மனித இனம் தன்னிடமுள்ள பொருள்சார் செல்வத்தைமட்டும் வைத்துக்கொண்டு மனநிறைவு பெறுவதில்லை. அதன் தேவைகள் இடையருது வளர்ந்துகொண்டேயிருக்கின்றன. வாழ்க்கைத்தரம் உயரத் தேவைகள் அதிகமாக வேண்டப்படும். இது மனித இனத்திற்கே உரிய தனித்தன்மையான பண்பு.

நான் சிறுவனுக இருக்கும்போது, இனிப்புகளும் இன்ன பிறவும் வாங்குவதற்கு வழக்கமாக வாரத்திற்கு ஒரு பென்னி (penny) கொடுப்பார்கள். அப்போதெல்லாம் வாரமொன்றிற்கு இரண்டு பென்னிகள் அல்லது ஆறு பென்னிகள் பெறும் செல்வச் சிறுவர்களைக் கண்டு நான் பொருமைப்படுவேன். அவர்களைப்போலவே எனக்கும் அதிகமான பென்னிகள் கொடுக்கப்பட்டால் நான் மன நிறைவுடன் மகிழ்ச்சி கொள்வேனென நினைத்தேன். என் கணக்குத் தவறியது! நான் வாரத்திற்கு ஆறு பென்னிகளை அடையும் காலமும் வந்தது. ஆனல், அதுபோது, நான் அடையக்கூடாத பொருள்கள் யாவையும் பெற்றுள்ள பிறரைப் பார்த்து என் மனம் வெதும்பியது. மனித இனத்தின் வரலாற்றில் இத்தகைய நிகழ்ச்சியே முழுமையும் காணப்படுகிறது. இன்றியமையாத தேவைகளை அடைந்துவிட்ட பின்னர் வசதியும் முழுமையானதுமான வாழ்க்கையை மக்கள் அடையத் தலைப்பட்டனர். புதிய தேவைகள்—இவைகளும் இன்றியமையாத தேவைகளைப் போலவே—ஏற்பட்டன. பிரிட்டனில் உள்ள ஒரு தொழிலாளியின் இன்றைய வாழ்க்கைத்தரத்தை நோக்குவோம். அவனுடைய வாழ்க்கைத்தரம், இரு நூற்றுண்டுகட்கு முன்னர் வாழ்ந்த நடுத்தரமான செல்வர்களைக் காட்டிலும் நம்பமுடியாத அளவிற்கு உயர்ந்தே காணப்படுகிறது. ஆனல், அத் தொழிலாளி கருதுவதென்னவோ வேறு. தன்னையொத்த பிற நாட்டுத் தொழிலாளிகளின் வாழ்க்கைத்தரத்துடன் ஒப்பிட்டுப் பார்த்துத் தான் பெற்றிராத நலன்களையே எண்ணுகிருன். இரு கார்

களையும் குளிர்சாதனப் பெட்டியையும் வைத்துக்கொண்டு, பிறர் பார்த்துப் பொருமைப்படக்கூடிய அளவிற்குச் செல்வமுமிக்க ஓர் அமெரிக்கக் குடும்பத்திற்கும் தனது தேவைகளத்தனையும் பூர்த்தி செய்துகொள்ள இயல்வதில்லை. தேவைகளத்தனையையும் நிறை வேற்றிக்கொள்ளும் தருணத்தில் புதிய தேவைகள் அதிவேகத்தில் முளைக்கத் தலைப்படுகின்றன.

இவ்வுலகம் பொருள்சார் செல்வத்தில் (material wealth) இன்றும் ஏழ்மை நிலையில்தானுள்ளது; அதனுடைய தேவைகள் எல்லையின்றி வளர்ந்துகொண்டேயிருக்கின்றன. இவ்விரு நிகழ்ச்சிகளுமே பொருளாதாரம் என்னும் அறிவியலுக்கு அடிப்பீடமாக உள்ளன. மனித இனம் எல்லையின்றிப் பொருள்களை உற்பத்தி செய்துவிட முடியாது; அதன் உற்பத்தித்திறன் வரையறுக்கப்பட்டதாகவே யுள்ளது. இதனால் இரு பிரச்சினைகள் ஏற்படுகின்றன. ஒன்று, கிடைக்கின்ற சாதனங்களத்தனையையும் பூரணமாகவும் இயன்றவரை திறம்படவும் பயன்படுத்தவேண்டும்; மற்றொன்று, உற்பத்தி செய்த செல்வப் பொருள்களைப் பங்கீடு செய்யும்போது எந்தத் தேவைகளை முதலில் நிறைவேற்றிக்கொள்ளவேண்டும், எவற்றை நிறை வேற்றாமல் விட்டுவிடக் கூடும் என்பதாகும். இத்தகைய பிரச்சினை—இதுவே பொருளாதாரப் பிரச்சினை எனக் கூறப்படுகிறது—தோன்று வதற்குக் காரணம் உலகத்தின் செல்வம் அதன் தேவைக்கு ஏற்பப் போதுமானதாக இல்லாமலிருப்பதே. தேவைகளை எந்த அளவிற்கு நிறைவேற்றிக்கொள்ள இயலும், அல்லது 'அ' என்ற ஒருவரும் 'ஆ' என்ற மற்றொருவரும் தங்களின் விருப்பத்தை (want) நிறை வேற்றிக்கொள்ள எதனைத் தெரிந்தெடுக்கின்றனர் (choose) என்பதே பொருளாதாரத்தின் சாரமாகும் (essence). எப்போதாவது ஒரு காலத்தில் மனித இனம் தனது தேவைக்கும் மேலாகத் தான் என்ன செய்வது என்று திகைப்பூட்டும் அளவிற்குப் பொருள்சார் செல்வத்தை உற்பத்தி செய்யக்கூடுமானால்—இத்தகையதொரு நிகழ்ச்சி என்றுமே ஏற்படப்போவதில்லை—ஒரு விருப்பத்தைப் புறக் கணித்துப் பிறிதொரு விருப்பத்தைத் தெரிந்தெடுக்கும் அவசியமோ, அல்லது கிடைக்கின்ற சாதனங்களைச் சிறந்த வழிகளில் பயன்படுத்த வேண்டிய அவசியமோ இல்லாமற்போகும். இதனுடன் பொருளா தாரம் என்னும் அறிவியலும் (science) மறைந்துபோகும்.

## 2. பொருளாதார விளக்கம்

கிடைப்பருமை (scarcity) என்பதே பொருளாதாரத்தின் அடிப் பீடமாகத் திகழ்கிறது. அப்படியானால், பொருளாதாரம் என்பதை மனிதன் கிடைப்பருமை (scarcity) என்னும் பிரச்சினைக்கு முடிவு காணும் முயற்சிகளைப்பற்றியதென்று கூறலாமா? அப்படிக் கூறுவது

பொருளாதாரம் என்னும் அறிவியலின் எல்லையை அனுவசியமாக விரிவுபடுத்துவதாகும். பொருளாதாரத்திற்குப் பீடிகையானதொரு விளக்கம் தரவேண்டுமெனில், அது ஒரு சமூக (social) அறிவியல் எனக் கூறலாம். அதாவது, அது மனித நடவடிக்கைகளைப்பற்றியது. இந்த நடவடிக்கைகள் சமுதாயத்தின் ஏனைய அங்கத்தினர்களையோ அல்லது நடவடிக்கைகளை ஏற்று நடத்துபவர்களையோ பாதிப்பனவாக இருக்கும். உதாரணமாக, காலம் (time) என்பது ஒரு கிடைப் பருமைப் பொருள்; ஒரு மனிதன், காலத்தைப் பயன்படுத்தும் முறைகள் பலவற்றுள் சிலவற்றையே தெரிந்தெடுக்கவேண்டியவ னாக இருக்கிறான். உதாரணமாக, அம் மனிதன் ஒரு சனிக் கிழமையின் பிற்பகலைப் படுக்கையில் கழிப்பதா அல்லது நெடுந்தூர நடைப்பயிற்சிக்குச் (long walk) செலவிடுவதா என்று யோசித்து, இவற்றுள் ஒன்றை முடிவு செய்தலால் சமூகத்திலுள்ள மற்ற அங்கத்தினர்களுக்கு எவ்வித விளைவுமில்லை. ஆனால், அதே மனிதன் அப் பிற்பகலைப் படுக்கையில் கழிப்பதா அல்லது வேலை செய்வதில் பயன்படுத்துவதா என்னும் இவ்விரண்டினுள் ஒன்றைத் தெரிந் தெடுக்கும்போது, சமூகம் அம் முடிவில் தொடர்பு கொண்டுள்ளது. ஏனெனில், அத்தகையதொரு முடிவினால் சமூகத்தின் செல்வ உற்பத்தியின் மொத்த அளவு, அதன்மூலம் ஏற்படும் பொதுவான வாழ்க்கைத்தரம் ஆகியவைகளில் விளைவுகள் ஏற்படுகின்றன. எனவே, தூங்குதல், வேலை செய்தல் ஆகியவற்றுள் ஒன்றினைத் தெரிந்தெடுப்பது சம்பந்தமான நிகழ்ச்சிகளில்தான் பொருளாதார வல்லுநர் நேரடியான கவனம் செலுத்துவார்.

இதனால் பொதுவாக என்ன விளங்குகிறது? தெரிந்தெடுத்த லென்பது அது மாற்றுச் செய்துகொள்ளத்தக்க (exchanged) சில வற்றோடு சம்பந்தப்பட்டிருக்கும்போது அல்லது பல்வேறு பயன்களைத் தரக்கூடிய சாதனங்களுடன் தொடர்புகொண்டிருக்கும்போது மட்டுமே பொருளாதாரத்தின்பாற்படும். படுக்கை அல்லது நடைப் பயிற்சி இவ்விரண்டினுள் ஒன்றினை முடிவு செய்யும் மனிதன் அவ் விரண்டினுள் எதனுடைய பயனையும் தான் நுகருவதைத் தவிரப் பிறருக்கு வழங்க இயலாது; அப் பயன் முற்றிலும் தன்வயமானதும் (personal) அகவியலானதுமாகும் (subjective). ஆனால், அம் மனிதன் பிற்பகலொன்றினை ஓர் ஆலையில் பணியாற்றுவதில் பயன் படுத்துவானேயாகில், தனது வேலையின் பயனைப் பிறருக்கு வழங்க இயலும்—அவன் உற்பத்தி செய்த பொருள்களையோ அல்லது அப் பொருள்களைச் செய்ய உறுதுணை செய்த தன் உழைப்பையோ (labour) பிறருக்கு விற்க இயலும். பொருளாதாரம் என்பது முக்கியமாக மாற்றுச் செய்தல் (exchange) என்னும் நிகழ்ச்சிபற்றிய தாகவேயிருக்கிறது. மாற்றுச் செய்யப்படும் பண்டங்களின் உற்பத்தி,

நுகர்ச்சி ஆகிய இவைகளைப்பற்றியும் அது கூறுகிறது. இவ் வுற்பத்தியும் நுகர்ச்சியும் மாற்றுச் செய்தல் என்னும் நிகழ்ச்சியின் இரு புறங்களிலும் அடங்கியுள்ள செயல்முறைகளாகும். இச் செயல் முறைகளைப்பற்றியதாக உள்ள எதுவும் பொருளாதாரத்தின் பாற்படும்.

இவ்வகையில் நோக்கினும், கிடைப்பருமையை (scarcity) வெல்ல முயல்வது பொருளாதாரம் என்று விளக்கம் கூறுவதும் பொருளாதாரத்தின் எல்லையை மிக விரிவுபடுத்திக் கூறுவதாகும். ஒரு குறிப்பிட்ட அளவு உழைப்பு (labour), நிலம் (land), இவற்றில் ஒரு குறிப்பிட்ட அளவு உணவு உற்பத்தி செய்யப்படலாமென்பது பொருளாதாரப் பிரச்சினையாகாது. அது, இயைபியலைத் (chemistry) துணைகொண்டு நிலத்தின் வளம் பெருக்கல் அல்லது பொறியியலின் துணைகொண்டு விவசாயம் செய்தல்போன்ற தொழிலியல் (technological) பிரச்சினைகளைக் குறிக்கும்.

ஆனால், உணவு நுகர்ச்சிக்கு (consumptions of food) மனிதர்களின் இனப் பண்பாடுகள் (racial characteristics), தட்பவெப்பநிலை (climate), உடற்கூற்றியல் (physiology) ஆகியவைகளே காரணிகளாக (factors) உள்ளன. மனிதனின் அன்றாட வாழ்வில் நிகழும் மிகச் சாதாரணமான நடவடிக்கைகளையும் நிகழ்ச்சிகளையும்கூட, பங்கு பெறுகின்ற அறிவியல்கள் (sciences), தொழிலியல்கள் (technologies) அத்தனையும் ஒரு பொருளாதார நிபுணர் தெரிந்திருக்கவேண்டுமென்பதில்லை. இவைகளனைத்தும் மாற்றுமுறையை (process of exchange) எவ்வாறு பாதிப்பனவாக உள்ளன அல்லது மாற்று முறையால் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்பது குறித்தே அவரின் நாட்டமும் திறனறிவும் இருக்கும். ஒரு குறிப்பிட்ட உரத்தில் (fertiliser) என்னென்ன இயைபியல் பொருள்கள் (chemical properties) உள்ளனவென்னும் ஆராய்ச்சி, பொருளாதார அறிஞரின் எல்லைக்குப் புறம்பானதாகும்; அவ்வாறு ஆராய்வதில் அவருக்கு எவ்விதச் சிறப்பு நாட்டமும் (special interest) இருக்காது. ஆனால், உரம் விஷயத்தில் அவருக்கு எப்போது அக்கறை தோன்றும் தெரியுமா? உரத்தினுடைய உறுபொருள்கள் எத்தன்மைத்தாயினும், அவ்வுரத்தினால் சில உணவுப் பொருள்களின் உற்பத்தி வெகு அதிகமாகி, அதன் காரணமாக அந்த உணவுப் பொருளின் மாற்று மதிப்பு (exchange value) குறைந்துபோகும் போதோ அல்லது இயைபுப் பொருள்கள் (chemicals) அல்லது தொழில் (labour) அல்லது நிலம் (land) இவற்றில் ஏற்படும் அங்காடி மாற்ற நிகழ்ச்சி (market development) காரணமாக உரத்தினைப் பயன்படுத்துதல் அதிகமாகும்போதோ அல்லது குறை

யும்போதோதான் 'உரமிடுதல்' என்பது பொருளாதார விற்பன்னரின் ஆளுகையின்கீழ் வரும்.

எனவே, மாற்றுச் செய்தல் (exchange) என்பதே பொருளாதாரத்திற்கு முக்கியமானதாக உள்ளது. ஏனெனில், அதுவே ஒரு குறிப்பிட்ட மனித நடவடிக்கையை (அது சமூக முக்கியத்துவம் வாய்ந்ததாயினும் அல்லது தனி நபரைத் தழுவியதாக இருப்பினும்) உணர்த்துவதாக உள்ளது. மற்றொரு காரணமும் உண்டு. பொருளாதார விற்பன்னருக்கு, மாற்றுச் செய்தல் முறையை நேரடியாகப் பாதிக்கும் அல்லது அம் முறையால் பாதிக்கப்படும் தனித்த அல்லது சமூக நடவடிக்கையின் தன்மைகளைமட்டுமே ஆராயத் தகுதியுண்டு. எனினும், மாற்றுச் செய்தலில் ஏற்படும் எல்லா நடவடிக்கைகளுமே பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்தனவாக மாட்டா. சிறுவர்கள் தங்களுக்கிடையே ஏழாங்காய் விளையாட்டில் வைத்து ஆடப்படும் கொட்டைகளில் ஒரு குறிப்பிட்ட கொட்டையைக் கொடுத்துவிட்டு அதற்கு மாறாக மற்றொன்றைப் பெறுவதா அல்லது வேண்டாவா என்று தன் பல்திறப்பட்ட எண்ண எழுச்சிகளால் உந்தப்பட்டு முடிவு செய்வதைப் பொருளாதார நிகழ்ச்சி என்று ஒரு பொருளாதார விற்பன்னர் கூறமாட்டார். ஏனெனில், மாற்றுச் செய்யப்படும் எதுவும் சமூகம் முழுமைக்கும் உள்ள தேவைக்கொப்ப கிடைப்பருமையானதாக இருத்தல்வேண்டா. மேற்சொல்லப்பட்ட கொட்டைகள் பொதுவாக இவ் வரிசையில் வரவில்லை. மாற்றுச் செய்தல் (exchange) என்பது கிடைப்பருமை (scarcity) என்னும் அடிப்படையில்தான் நிகழுகிறது. இத்தகைய கிடைப்பருமையை வெல்லும் முயற்சி நிச்சயமாக மாற்றுச் செய்தலில் (exchange) நேரடியாகத் தொடர்பு கொண்டுள்ளது.

இதனால் நமக்கு என்ன விளங்குகிறது? மனித இனத்திற்கு அது விரும்பும் பண்டங்களும் பணிகளும் அதன் தேவைக்கொப்ப எப்போதும் கிடைப்பருமையாகவே இருக்கின்றன. இக் கிடைப்பருமையை வெல்ல முயலும் முயற்சிகளின்கண் நிகழும் மாற்றுச் செய்தலின் (exchange) தன்மைகளை ஆராய்வதே பொருளாதாரம் என விளங்குகின்றது. பொருளாதாரம் என்பது பணத்தினால் மதிப்பிடப்படுகின்ற அல்லது மதிப்பிடக்கூடிய நடவடிக்கைகளைப் பற்றிமட்டுமே கூறுவதாகும் என்று சில சமயங்களில் சொல்லப்படுகிறது. இவ் விளக்கம் எளிதானதும் நேரடியாக விளக்கப் போதுமானதாகவுமேயுள்ளது. ஏனெனில், தற்காலப் பொருளாதார வாழ்வில் அநேகமாக எல்லா மாற்றுமுறையிலும் பணமே பயன்படுத்தப்படுகிறது. ஆனால், முற்றிலும் இக் கூற்று உண்மையாகாது. பண்டமாற்றின்மூலம் நடைபெறும் மாற்றுமுறைகளையும் பொருளா

தார விற்பன்னர் ஆராயவேண்டியவராக இருக்கிறார். மேலும், ஓர் உதாரணத்தை ஆராய்வோம். உள்ளாட்சி மன்றங்களில் பணி புரியும் அங்கத்தினர்கள் தங்களின் பொன்னான நேரத்தைச் சமுதாயப் பணிபுரிவதில் தியாகம் செய்கின்றனர். உள்ளாட்சி மன்றங்கள் பொருளாதார சம்பந்தமான பணிகளை இயற்றுவதால் நிச்சயமாக அம் மன்ற உறுப்பினர்களின் நடவடிக்கைகள் பொருளாதார முக்கியத் துவம் வாய்ந்தவைதாம் என்றாலும், அம் மன்ற உறுப்பினர்களுக்குச் சம்பளமெதுவும் கொடுக்கப்படுவதில்லையாகையால், அவர்களின் பணிகளைப் பொருளாதார நடவடிக்கைகளாகக் கருதுவதில்லை. காரணம் மனித உளப்பாங்கை (sentiments) அளவிடுவதோ அல்லது சரிநுட்பமாக (precise) மதிப்பீடு செய்வதோ இயலாது. ஆனால், ஒருவன் மற்றொருவனுக்குக் கொடுக்கும் பணத்தின் தொகையைக் கணக்கிடுவதோ அல்லது ஒரு குறிப்பிட்ட அளவு பணத்தொகையை மற்றோர் அளவு பணத்தொகையுடன் ஒப்பிட்டுக் கூறுவதோ சாத்திய மானதாகும். மாற்றானது (exchange) பணமத்திமத்தில் (medium of money) நடைபெறும்போது நமக்கு அளவிட ஓர் அளவுகோல் உள்ளது. இவ் அளவுகோலினை (measuring-rod) ஒரு மிகச் சரியான அளவுகோல் என்று கூறமுடியாமலிருப்பினும், மாற்றில் சம்பந்தப் பட்டுள்ள பலதிறப்பட்ட பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் ஒப்பீடான மதிப்பை இதன் துணைகொண்டு அளவிட முடிகிறது. ஆனால், பணவூதியம் கொடுக்கப்படாத (unpaid) பணிகளுடைய, அவைகளின் தன்மை நோக்கியும் மற்றெவ்வகையாலும் அவ்வாறு மதிப்பிடுதல் இயலாது. எனவேதான், பொருளாதார விற்பன்னர் இப் பணிகளில் அக்கறை காட்டுவதில்லை—இவைகளைக் கணக்கிடுதல் இடர்ப்பாடானது எனக் கருதிப் புறக்கணிப்பதில்லை. வீட்டில் பணி புரியும் பணிப்பெண்ணின் பணிகளின் மதிப்பை அப் பணிப்பெண் ணிற்குக் கொடுக்கப்படும் வாரக்கூலியை (weekly wage) வைத்துப் பொருளாதார விற்பன்னர் கணக்கிட்டுக் கூறமுடியும். ஆனால், தன் வீட்டில் தன் குடும்பத்திற்கு அன்னை செய்யும் சேவைகளை மதிப் பிட்டுக் கூற யாவரால் இயலும்? அன்னையின் பணிகளை மதிப்பீடும் முயற்சியில் ஆராயப் பொருளாதார விற்பன்னரின் அறிவுத் திறந்தான் இடந்தருமோ ?

### 3. பொருளாதார ஆய்வு முறைகள் (Methods of Economic Analysis)

நாம் இதுவரையில் பொருளாதார விற்பன்னர் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றில் உள்ள கிடைப்பருமையைப் (scarcity) போக் கும் முயற்சியில் நேரடியாக சம்பந்தப்பட்டுள்ள மாற்று நடவடிக்கை களிலும் (acts of exchange), இன்னும் நடைமுறையில் பார்க்கும்

போது பணத்தை மத்திமமாகக்கொண்டு நடைபெறுகிற மாற்று நடவடிக்கைகளையே ஆராய்வதிலும் விளக்குவதிலும் முனைகிறார் என்பதைப் பார்த்தோம். இப்போது, இருவிதக் கேள்விகள் எழுகின்றன. இந்த ஆராய்ச்சியினை அவர் எவ்வாறு மேற்கொள்கிறார்? ஏன் அவர் இவ்வாராய்ச்சியினை மேற்கொள்ளவேண்டும்? பிந்திய தாகவுள்ள கேள்வியினுக்கு அடுத்துள்ள உட்பிரிவில் (section) விடை காண்போம். தற்போது முன்னதாகவுள்ள கேள்விக்கு விடை காண்போம்.

பொருளாதார விற்பன்னர், பருப்பொருள்சார் விஞ்ஞானியைப் போன்று (physical scientist) தனது சோதனைகளை ஆய்வுக் கூடத்தில் (laboratory) நிகழ்த்த இயலாது. குறிப்பிட்ட சோதனைகளை விஞ்ஞானி ஆய்வுக்கூடச் சூழ்நிலையில் நடத்தும்போது ஓரளவிற்கு நிச்சயமான முடிவுகளைக் கொணர்தல் இயலும். ஏனைய சமூக அறிவியல்களுக்கு (Social Sciences) உள்ளதுபோல் பொருளாதாரத்திற்கும் 'மனிதன்'தான் முதன்மைப் பொருள் (subject-matter). மனிதன் என்றால், மார்ஷல் (Marshall) குறிப்பிடுவதைப் போல, 'சாதாரண மனித வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள மனிதன்' (in the ordinary business of life) என்று கொள்ளவேண்டும். 'சாதாரண வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள மனிதனை', அவன் ஆய்வுக் கூடச் சூழ்நிலையில் வாழ்க்கை நடத்துகின்றான் என்று கருதுவது தவறானதல்லவா? எனவே, சாதாரண வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள மனிதனை ஆய்வுக்கூடத்தில் வைத்து ஆராயமுடியாது. இம் முறை ஒவ்வாததெனில், பொருளாதார விற்பன்னருக்கு அம்மனிதனைப்பற்றி ஆராய்ச்சி நடத்த இரண்டுவகை முறைகளைத் தவிர வேறு வழியில்லை —ஒன்று பகுத்தறி முறை (deductive method); மற்றொன்று தொகுத்தறி முறை (inductive method).

பகுத்தறி முறையாவது, எடுத்துக்கொண்ட ஆராய்ச்சிப் பொருளிலிருந்து அதன் காரணகாரியத்தை ஆராய்ந்து அவை மூலம் முடிபுகளைக் கொணர்தலாகும். பகுத்தறி முறைக்குச் சான்றாகக் கணக்கியலைக் (mathematics) கூறலாம். கற்பித சம்பந்தங்களைக் கொண்டு அரிய விதிகள் கண்டுபிடிக்கப்படுகின்றன. ஒரு கருதுகோளை (hypothesis) உண்மையெனக்கொண்டு, அதன் முடிவை வைத்துக்கொண்டு அதனை மற்றவைகட்கும் கையாண்டு முடிவுகள் கொணரப்படுகின்றன. உதாரணமாக, பொருள்களை உற்பத்தி செய்யும் உற்பத்தியாளர்கள் எப்போதும் இயன்ற அளவு அதிகமான இலாபத்தை அடையும் நோக்கத்துடன்தான் தங்கள் உற்பத்தியைச் செய்வர் என்னும் கருதுகோள் கையாளப்பட்டால், அதனின்றும் சில குறிப்பிட்ட முடிவுகளை (உண்மையில் அம்

முடிவுகள் அக் கருதுகோளிலேயே அடங்கியிருக்கின்றன) நாம் பெறக்கூடும். அம் முடிவுகள் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் அவ்வுற்பத்தியாளர்கள் எவ்வளவு பொருள்களை என்ன விலைக்கு விற்பார்கள் என்பனவாகும். மேலும், ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். ஒரு மனிதன் ஒரு பொருளை நிறைய நுகர நுகர, கூடுதலாக அவன் நுகரும் அப் பொருளின் ஒவ்வோர் அலகிலும் (unit) குறைவான இன்பத்தினையே அடைகிறான் என்ற கருதுகோளை வைத்து ஆராயும்போது, தேவையின் தன்மை (nature of demand) பற்றிய சில முடிவுகள் நமக்குக் கிடைக்கப் பெறும்.

பொருளாதாரத்தின் பெருவாரியான கோட்பாடுகள் இம் முறையை அடிப்படையாகக்கொண்டவைகளாகவே உள்ளன. எனினும், இம் முறையைப் பின்பற்றி அடையும் முடிவுகள் மூன்று விஷயங்களைப் பொறுத்தே இருக்கும் என நாம் தெளிவாகப் புரிந்துகொள்ளவேண்டும். அவையாவன: ஒன்று, தருக்க ரீதியாகப் பகுத்தறியும் முறையானது கையாளப்படுதல் சரியானதாக இருப்பதைப் பொறுத்தது; இரண்டாவது, அடிப்படையாகக் கையாளப்படும் கருதுகோளின் (hypothesis) உண்மைத் தன்மையைப் பொறுத்தது; மூன்றாவது, சம்பந்தப்பட்ட சூழ்நிலையில் மனிதன் எத்துணை தருக்க ரீதியாக (logically) நடந்துகொள்கிறான் என்பதையும் பொறுத்ததாகும். இம் மூன்றனுள் முதலாவதாகச் சொல்லப்பட்டதில் அதிகச் சிக்கல் ஒன்றுமில்லை. 'அ' என்பது உண்மையாக இருக்கிறது; அதனால் 'ஆ' என்பது இப்படித்தான் நிகழும் என்று நான் கருதுவேனாகில், என்னுடைய கருத்து உண்மையில் தவறானதாகும். அத்தகையதொரு கருதுகோளை வைத்து நான் அடைய முற்படும் முடிவுகளும் தவறானவையாகவே இருக்கும். எனினும், வளரும் அறிவியல் (science) எதிலும் அடிக்கடி நிகழ்த்தப்படும் வாதங்களினாலும்(discussions) அறிவியலின் வளர்ச்சியினாலும் இத்தகைய தவறுகள் கண்டுபிடிக்கப்பட்டுக் களையப்படுகின்றன. இந் நூலின் அடிப்படையான கோட்பாட்டின் பெரும்பகுதியும் பல தலைமுறைகளாக வாழ்ந்த கல்விமான்களின் ஆராய்ச்சியாலும் திறனாய்வாலும் எழுந்ததேயாகும். ஆகவே, இம் முறையில் தருக்கரீதியான அடிப்படைத் தவறுகள் இருக்க வழியில்லை.

இம் முறையினுக்குள்ள இன்னும் இரண்டு வரையறைகள் (limitations) தீவிரமானவையாக இருக்கின்றன. கணக்கிலடங்காப் பல்வகைப்பட்ட பண்பாடுகளையுடைய மனிதத் தன்மையைத் தழுவியுள்ள ஓர் அறிவியலுக்குப் பொது நியதியாகவுள்ள ஒரு

கருதுகோளை (hypothesis) அடிப்படையாக வைத்துக்கொண்டு முடிவு காண்பது ஒரு சிக்கலான பிரச்சினையாகும். உதாரணமாக, உற்பத்தியாளர்களனைவரும் மிக அதிகமான இலாபத்தையே நாடுகின்றனர் என்ற கருதுகோள், அதிக இலாபத்திலேயே நாட்டம் கொள்ளாது தொழிலாளர்கள் அல்லது சமூகம் அல்லது தொன்றுதொட்டுக் கடைப்பிடிக்கப்பட்டுவரும் நற்பழக்கம் இவைகளில் அக்கறை கொண்டுள்ள உற்பத்தியாளர்களால் பொய்ப்பிக்கப்பட்டுவருகிறது. மேலும், தவறற்ற கருதுகோளின் அடிப்படையில் வைத்துக் காணப்படும் முடிவுதான் தவறற்றதாகவும் உள்ளது.

இதுபோன்றே, தவறற்ற கருதுகோள் ஒன்று கையாளப்பட்டு, அதன் அடிப்படையில் தீவிரமான தருக்க ரீதியான முடிவுகள் கொணரப்படுகின்றன என வைத்துக்கொள்வோம். மனித இனமும் அத்தகைய தருக்க ரீதியான முடிவை நடைமுறையில் கையாண்டால் தவிர முடிவுகள் தவறுனவைகளாகப் போகக்கூடும். உதாரணத்திற்கு ஒரு கருதுகோளைப் பார்ப்போம். ஒரு தொழிலாளி எப்போதும் குறைந்த கூலியைவிட உயர்ந்த கூலியையே விரும்புவான் என்ற கருதுகோளைப் பார்ப்போம். இக் கருதுகோளின்படி ஒரு தொழிலாளிக்கு X என்னும் தொழிற்சாலையில் £10 கூலி கொடுக்கப்படுகிறதென்று வைத்துக்கொள்வோம். அதே தொழிலாளிக்கு £12 கூலி Y என்னும் தொழிற்சாலை கொடுக்கத் தயாராக இருந்தால், அவன் X என்னும் தொழிற்சாலையைவிட்டு நீங்கி Y என்னும் தொழிற்சாலைக்கே சென்று வேலைக்கமர்வான். இது கருதுகோள். அத்தொழிலாளி மேற்சொன்னவாறு விவேகத்துடன் நடக்காமற் போவானெனில்—அவனுக்கு X தொழிற்சாலையில் வேலை செய்வதே மனத்திற்கு மிகவும் பிடித்தமானதாக இருக்கலாம; அல்லது ஒரு தொழிற்சாலையைவிட்டு மற்றொரு தொழிற்சாலைக்குச் சென்று வேலைக்கமர்வதில் அவனுக்குச் சோம்பல் முதலியவை மேலிடலாம்—கருதுகோள் பொய்ப்பிக்கப்பட்டுவிடும். பண்டங்களை வாங்குவதில் நுகர்வோர்களாகிய நம்மில் எத்தனை பேர் விவேகமுடன் நடந்துகொள்கிறோம்? முற்றிலும் விவேகமின்றிக் 'கணப்பொழுதில் மனம் தூண்டப்பட்டமை காரணமாக' (on the spur of the moment) ஏதாவதொரு பொருளை இதுகாறும் வாங்கியிராதவர்கள் யாராவது உண்டா? இல்லை அல்லவா?

இவ்வாறு கருத்தியலான ஆராய்ச்சியில் உள்ள குறைபாடுகளால், பொருளாதார விற்பன்னர்கள் அடிக்கடி இரண்டாவது முறையான 'தொகுத்தறி முறை' (inductive method) அல்லது

'அனுபவ முறை' (empirical method) என்னும் முறையினைப் பெரும்பாலும் கையாளத் தலைப்படுகின்றனர். இம் முறையில் நிகழ்ச்சிகள் (facts) ஆராயப்படுகின்றன. பகுத்தறி முறையைப் போன்று காரண காரியங்கள் ஆராயப்படுவதில்லை. அன்றாட வாழ்க்கையில் தெரிந்த விவரங்களினின்றும் முடிவுகளைக் கொணர் வதே இம் முறையாகும். உதாரணமாக, பொருளாதார வரலாற்று நிபுணர்கள் வரலாற்று நிகழ்ச்சிக் குறிப்பேட்டை (record) வைத்துக் கொண்டு, முக்கியப் பொருளாதார நிகழ்ச்சிகளுக்கும் வளர்ச்சிக்கும் காரணம் காண்கின்றனர். புள்ளி இயல் அறிஞர்கள் (statisticians), உற்பத்தி (production), விலைகள் (prices), கூலிகள் (wages), வேலை (employment) ஆகியவைகளைப்பற்றிய புள்ளிவிவரங்களைச் சேகரித்து, அவற்றை ஆராய்ந்து, அவைகளின் முக்கியப் போக்கை யும் (significant trends) அவைகளுக்குள்ளேயுள்ள ஒப்பீடான தொடர்பையும்(inter-relationships)கண்டுபிடிக்கின்றனர். இத்தகைய தொகுத்தறி முறையே பொதுமைகளைக் (generalisations) காண வழி செய்யும். உதாரணமாக, சமுதாயத்தின் பலதிறப்பட்ட வகுப்பினரின் (various classes in the community) வீட்டுச் செலவின் (household expenditure) புள்ளிவிவரங்களைச் சேகரித்தால் அதன்மூலம் செலவிற்கும் வருமானத்திற்குமுள்ள தொடர்பையும், அல்லது செல விற்கும் குறிப்பிட்ட வகுப்பிற்கும் உள்ள தொடர்பையும், அல்லது செலவழிக்கும் வழக்கத்தையும் தெரிந்துகொள்ளலாம். இவற்றைத் தருக்க ரீதியான விவாதத்தால் (logical argument)மட்டும் தெரிந்து கொள்ள இயலாது.

எனினும், இம் முறை பகுத்தறி முறையோடும் (deductive method) சேர்த்துக் கையாளப்படும்போதுதான் மிகவும் பயனுள்ள தாக இருக்கிறது. இதன்மூலம் அனுபவ வாயிலாக இன்றித் தருக்க ரீதியாகப் பகுத்தறியப்பட்ட ஒரு கோட்பாட்டை, அதன் தவற்றைக் களைந்து செம்மைப்படுத்த முடிகிறது. இம் முறையைக் கடைப் பிடிப்பதால், கருதுகோள்களின் உண்மைக்குப் புறம்பான நிலை, அல்லது அக் கருதுகோள்களில் உள்ள தவறான கருத்துகள் விலக்கப் படுகின்றன. அனுபவவாயிலான ஆராய்ச்சியினால் (empirical analysis) ஒரு கோட்பாட்டினை எண்பிப்பது இயலாது. உலகம் பலவகைப்பட்டதாக உள்ளதால் புள்ளிவிவரங்களும் பலவகைப் பட்டனவாகவே இருக்கக்கூடும். இவைகளால் ஒரு தனித்த விளக்கத்தை, யாதொரு நிகழ்ச்சிக்கும் கூறுதல் என்பது இயலாது. நிகழ்ச்சிகள் (facts) விளக்கத்தைத் தருவனவாக எப்போதும் இருப்ப தில்லை ; அவைகள் ஒருமித்த விளக்கத்தைத் தருவனவாக இருப்பது மில்லை. ஒரு கோட்பாடு நிகழ்ச்சிகளுக்குப் புறம்பானதாக (inconsistent) இருப்பதாக எண்பிக்கப்படலாம் ; அவ்வாறு அக் கோட்பா

டிருக்குமானால், அது தவறான கோட்பாடாகும். மற்றொரு வகையில் ஆராயுமிடத்து, தொகுத்தறி முறைக்குப் பகுத்தறிமுறையே மூலாதாரமாக இருந்துவருகிறது. அனுபவவாயிலான முறையில் (empirical method) எண்ணற்ற புள்ளிவிவரங்கள் ஆராயப்படுகின்றன. இப் புள்ளிவிவரங்களிலிருந்து முடிவான கருத்துக் கைக்கொள்ளப்படுகிறது. இப்படி, ஒரு கருத்தானது தெரிந்தெடுக்கப்படுதலும் ஒரு கோட்பாட்டை மனத்தில் வைத்துக்கொண்டு முடிவைக் கொணரும் வகைக்கு ஒப்பானதாகவே இருக்கிறது. உதாரணமாக, கடந்த பத்தாண்டுகளில் முட்டைக்கு என்ன தேவையிருந்தது என்று நான் ஆராய்கிறேன் என்று வைத்துக்கொள்வோம். முட்டையின் விலை, அதன் உற்பத்தி, இதனால் பன்றி இறைச்சியின் உற்பத்தியின் விளைவு—இவை சம்பந்தமான புள்ளிவிவரங்களை நான் ஆராய்வேன். இவற்றை நான் ஆராய்ச்சி செய்வேனேயாகில், மேற்சொன்ன காரணிகளுக்கும் (factors) முட்டையின் தேவைக்கும் உள்ள தொடர்பை விளக்கும் ஒரு கோட்பாட்டினைத் தெளிந்து முடிவு செய்வேன். பின்னர் அம் முடிவை எந்த அளவிற்கு மேற்சொன்ன காரணிகள் பொருத்தமெனை எண்பிக்கக்கூடும் என்று ஆராயத் தலைப்படுவேன். எனவே, பகுத்தறி முறை, தொகுத்தறி முறை ஆகிய இரு முறைகளுமே ஒன்றை ஒன்று தழுவியிருப்பனவாக இருக்கின்றன. ஒவ்வொரு முறையுமே உயர்ந்ததும் தேவையானதுமாகவே உள்ளது.

ஈண்டு, தெளிவான ஒரு வேறுபாட்டினை விளக்குதல் நலம். தற்காலத்தில் பொருளாதார ஆய்வினை, நுட்பப் பொருளாதாரம் (micro-economics) என்றும், பெரும் பொருளாதாரம் (macro-economics) என்றும் இருவகையாகப் பாகுபடுத்திக் கூறுவது மரபாக இருந்துவருகிறது. முன்னர்க் கூறப்பட்ட பிரிவு ஒரு தனிப்பட்ட அலகு (பொருள் அல்லது மனிதன்) அல்லது குறிப்பிட்ட பொருளாதாரப் பிரிரிவுகளைப் பற்றியது—ஒரு குறிப்பிட்ட பொருளுக்கான தேவை அல்லது அதன் ஒப்பீடான மதிப்பு (relative value), அல்லது குறிப்பிட்ட நிறுவனங்களின் (firms) அல்லது தொழில்களின் (industries) மொத்த உற்பத்தி பற்றியது. பெரும் பொருளாதாரம் (macro-economics) என்பது பொருளாதாரமுறை முழுவதையும்பற்றி ஆராய்வதாகும். பரந்த கூட்டுத் தொகுதிகளை (broad aggregates) ஆராய்ந்து அவைகளுக்கும் பொருளாதார முறைக்கும் (economic system) உள்ள தொடர்பினை (relationship) விளக்கும் முறை இதுவாகும். பொதுவான விலைமட்டம் (general price level), முதலீட்டின் வீதம் (rate of investment), தொழில் உற்பத்தி முழுமையிலுமுள்ள மாறுதல்கள் ஆகியவைபோன்ற பரந்த கூட்டுத் தொகுதிகளை ஆராய்வதாக உள்ளது. உற்பத்தியாளர்களின்

அல்லது நுகர்வோர்களின் தனித்தனியான பிரிவுகளை (individual groups of producers and consumers) ஆராய்ந்து, அவைகள் பொருளாதார முறை முழுவதையும் எவ்வாறு பாதிப்பனவாகவுள்ளன என்பதையும் ஆராய்வதாக இம் முறை உள்ளது. பொதுவாக நோக்குமிடத்து, இந் நூலின் 2 முதல் 5 பிரிவுகள் முடிய நுட்பப் பொருளாதாரத்தைப்பற்றியும், 7ஆம் பிரிவு பெரும் பொருளாதாரத்தினுக்கு ஓர் அறிமுகம் (an introduction) போன்றும் உள்ளது.

## 4. பொருளாதார ஆய்வின் நோக்கங்கள் (The Objectives of Economic Analysis)

தற்போது, இரண்டாவதாக உள்ள மற்றொரு பிரச்சினையைப் பற்றி ஆராய்வோம். பொருளாதாரத்தைக் கற்றலின் நோக்கமென்ன ? சில இயல்களை அந்த இயல்களுக்காகவே (subjects) படிப்பது வழக்கம். அவ்வியல்களைப் படிப்பதனால் அறிவு வளர்ச்சி ஏற்படுகிறதென்பது ஒன்று, அல்லது தேவையான உடற்பாங்கான அல்லது உளப்பாங்கான பண்புகளை அடைய அவைகள் துணை செய்வனவாக இருப்பது மற்றொன்று—ஆகிய இரு காரணங்களுக்காகவும் இயல்கள் கற்கப்படுகின்றன. உதாரணமாக, கணித மேதைகளில் சிலர் ‘பினுமியல் கோட்பாட்டை’க் (binomial theorem) கூறிய மாத்திரத்திலேயே, அச் சித்தாந்தத்தின் கருத்தழகினில் மனம் வசப்பட்டு மெய்சிலிர்த்துக் கண்ணீர் வடிப்பர். பொருளாதாரத்திலும் சில கோட்பாடுகள் அறிவுப் பயிற்சிக்கான (intellectual exercise) வகையில் அமைந்துள்ளனவென்றாலும், இந்தக் காரணத்திற்காகவே யாரும் பொருளாதாரத்தினைக் கற்பதில்லை.

பொருளாதாரம் முதன்மையாகப் பயன்பாடு கருதும் இயலாகவே (utilitarian) இருக்கிறது. சமூகத்தில் உள்ள பொருளாதார வாழ்க்கையில் இயங்கிவரும் சக்திகளைப் (forces) பற்றித் தெரிந்து கொள்ள இந்த இயல் பயன்படுவதால் அவ்வாறு கருதப்படுகிறது. பொருளாதாரத்தைத் தங்களது தொழிலுக்குரியதாக அமைத்துக் கொண்டுள்ள பொருளாதார விற்பன்னர்களும் (professional economists), அரசியல்வாதிகளும் (politicians), ஆட்சியாளர்களும் (administrators), அல்லது குடிமக்களும் அல்லது வாக்காளர்களும் (voters) சரி, இந்த இயலை நன்கு புரிந்துகொள்வார்களேயாகில், அறிவுத்திறம்படைத்த பொருளாதாரக் கைக்கோளினை அமைக்க இயலும். தொழிலாளர்களுடைய நடவடிக்கைகளுக்கும், மற்றும் சமூகத்திலுள்ள ஏனையோரின் நடவடிக்கைகளுக்கும், அல்லது நுகர்வோரின் நடவடிக்கைகளுக்கும் சமூகத்திலுள்ள மற்றும் பிறருடைய நடவடிக்கைகளுக்கும் இடையேயுள்ள தொடர்பை (inter-relationship) அவர்களால் நன்கு தெளிய முடியும்.

இன்னும் சற்று ஒருபடி சென்று ஆராய்வோம். பொருளாதாரக் கைக்கோளில் அப்படி என்ன ஆராயப்படுகிறது? ஆண்டு வரவுசெலவுத் திட்டங்கள் (annual budgets), பணவியல், பாங்கியல் கைக்கோள்கள் (monetary and banking measures), முதலீட்டுத் திட்டங்கள், கூலிக் கைக்கோள்கள் போன்ற பொருளாதாரக் கைக்கோள்கள் ஆராயப்படுகின்றனவா என்று பார்ப்போம். சுருங்கக் கூறின், பொருளாதாரக் கைக்கோளிற்கு (economic policy)—அது பொது அல்லது தனிப்பட்ட கைக்கோளாயினும் சரி, அல்லது தனியான அல்லது பரந்த கைக்கோள்களில் ஒரு பகுதியாயினும் சரி—மூன்று நோக்கங்கள் உண்டு. முதலாவதும் அடிப்படையானதுமான நோக்கம் பரந்த கருத்தில் 'திறமை' (efficiency) என்பதை நாடுவதாகும். பொருளாதாரம் என்பது கிடைப்பருமையை (scarcity) வெல்ல முயலும் ஓர் இயல் என்பதனை இங்கே மனத்தில் கொள்ளவேண்டும்—அதாவது, குறைந்த அளவாகவும் பற்றாக்குறையாகவும் (limited and inadequate) உள்ள சாதனங்களை மிகச் செம்மையாகப் பயன்படுத்திக்கொள்வது பற்றியது. குறிப்பிட்ட சமூக, பொருளாதார அமைப்பொன்றில் (social and economic structure) சமூகம் எந்தத் தேவைகளுக்கு முதலிடம் அளிக்கின்றதென்பது அடங்கிய ஓர் ஆராய்ச்சித் திட்டத்தை ஒரு பொருளாதார விற்பன்னருக்குக் கொடுத்தால், எவ்வாறு அந்தச் சமூகத்தின் குறைவாக உள்ள சாதனங்கள் மிகச் செம்மையாகப் பயன்படுத்தப்படலாம் என்பதனைத்தான் முதலில் ஆராய்வார்.

இரண்டாவதாக, பொருளாதாரக் கைக்கோள் பொருளாதார வாழ்வில் நிலைபேற்றினை (stability) அதிகரிக்க முயலுவதாக உள்ளது. கடந்த காலங்களிலெல்லாம், பிரிட்டன் போன்ற நாடுகள் அவ்வப்போது ஏற்படும் பொருளாதார மந்தங்களினாலும் (slumps) நெருக்கடிகளினாலும் (crises) பெரிதும் பாதிக்கப்பட்டு வந்தன. இவைகளினால் அந் நாடுகளில் வேலையின்மை அல்லது உற்பத்தித்திறன் விரயம் (wastage of productive capacity) ஏற்படும். இவற்றின் விளைவால் பொருள்சார் (material) தீமைகளும் ஒழுக்கக்கேடுகளும் (moral evils) விளையும். இவைகள் மீண்டும் ஏற்படாமல் தடுப்பதே தற்காலப் பொருளாதாரக் கைக்கோளாக இருந்துவருகிறது. இத்தகைய கைக்கோளைக் கையாளுவதற்கு முன்னர், சிக்கலான இப் பொருளாதார முறை எவ்வாறு இயங்குகிறது? கடந்தகாலத்தில் சுமுகமும் சீரானதுமான வளர்ச்சியைச் சமூகத்திற்கு அளிக்க இம் முறை ஏன் தவறியது என்பனவற்றையெல்லாம் தெளிவாகத் தெரிந்துகொள்ளுவது இன்றியமையாதது.

கடைசியாக வாழ்க்கைக்கு வேண்டிய தேவைப் பொருள்கள் (necessities), வசதிப் பொருள்கள் (comforts) பொறுத்தவரையில், தற்காலப் பொருளாதாரக் கைக்கோள் பொருளாதாரச் சமத்து வத்தைக் (equity) கடைப்பிடிப்பது இன்றியமையாததாக இருக்கிறது. செல்வத்தில் சமத்துவமின்றி ஏற்றத்தாழ்வுகள் உள்ள நிலை நீடிக்குமானல், அது சமூக, பொருளாதார அமைப்பிற்கு விரும்பத் தகாத நிலையென்று தற்காலத்தில் யாவராலும் ஒப்புக்கொள்ளப் படுகிறது. இத்தகையதொரு நிலையைத் தடுப்பதற்குத் தனிச் சட்டம் (special provision) ஒன்றுமில்லையெனில், அந் நிலையால் துன்புறும் ஏழை மக்களை அந் நிலையினின்றும் காப்பாற்றும் கடமை சமுதாயம் முழுமைக்கும் உண்டு. இவ்வகையில், பொருளாதாரக் கைக்கோளின் நோக்கம் இக் குறிக்கோளை எத்துணைத் திறம்பட நிறைவேற்ற இயலும் என்பதைப் பொறுத்தும் அக் குறிக்கோளைப் பொருளாதாரக் கைக்கோளின் ஏனைய நோக்கங்களுடன் எவ்வாறு பொருந்துமாறு அமைத்தல்கூடும் என்பதுமாக உள்ளது—இத்தகைய நோக்கத்தை நிறைவேற்றுவதும் அத்துணை எளிதான செயலன்று.

## 5. பொருளாதாரத்திற்கும் பிற இயல்களுக்குமுள்ள தொடர்பு (Relations to Other Sciences)

பொருளாதார இயலின் தன்மையையும் (nature of economics), பொருளாதாரக் கைக்கோளின் நோக்கங்களையும் நாம் இதுவரையில் கூறியதிலிருந்து, பொருளாதார விற்பன்னர் (economist) மற்ற இயல்களின் எல்லைகளின்மீதும், கோட்பாடுகளின் எல்லைகளின்மீதும் மோதிக்கொள்ள நேரிடும் என்பது தெரிகிறது. உதாரணமாக, அரசாங்கத்தின் பொருளாதாரக் கைக்கோள் (Government Econmic Policy)—இக் கைக்கோள்களை உருவாக்கும் பணியில் வேண்டுமானல் பொருளாதாரம் பயில்வோர் பங்கெடுத்துக்கொள்ள முடியும் அல்லது குறைந்தபட்சம் கைக்கோள்களைப்பற்றித் தெரிந்துகொள்ள முயற்சி செய்யலாம்—சட்டசபைகளில் நிறைவேற்றப்பட்டுச் சட்டங்களாக இயற்றப்படுகின்றன. அரசாங்க வரவுசெலவுத் திட்டம் (budget) அல்லது உள்ளாட்சிச் செலவுத் திட்டத்தைக் கட்டுப்படுத்துதல் (control over local government expenditure) போன்ற சட்டங்கள் இவ்வாறுதான் உருவாக்கப்படுகின்றன. இதுபோன்ற அரசாங்கக் கைக்கோள்களில் பொருளாதாரம் அரசியலோடு (politics) தவிர்க்க முடியாதபடி கலந்துவிடுகிறது. ஆயினும், பொருளாதார விற்பன்னர், தன்னுடைய சமூகத்தின் அரசியல் செயல்முறைகளி னின்றும் (political mechanisms) விலகியே இருக்கவேண்டும். தனது திறனறிவின் (expertise) எல்லைக்குப் புறம்பானவையாக அவைகளைக் கருதுதல் வேண்டும். பொருளாதாரக் கைக்கோளினைச்

செயற்படுத்துகின்ற அரசியல் துறையை (political machinery) ஆராய்வதையோ அல்லது அதனைச் செம்மைப்படுத்தும் முயற்சியையோ அரசியல்வாதிக்கு விட்டுவிடவேண்டும்.

முக்கியமான மற்றொன்று, பொருளாதார வழிமுறைகள் (economic measures) அல்லது பிரச்சினைகள் (problems) அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக இருத்தல்கூடும் என்பது. அதாவது, பொருளாதார முடிவுகள் அரசாங்கத்தின் எல்லைக்குட்பட்ட விஷயங்களைப்பற்றியதாக இருத்தல்கூடும் என்பதாம். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட பொருளாதாரச் சூழ்நிலையில் அரசாங்கத்தின் மொத்த வருமானத்தை அதிகரிக்கத் தேவை ஏற்படலாம். இவ் வருமான அதிகரிப்பை, அதிக வருமானங்களின்மீதோ (high incomes) அல்லது சற்றுக் குறைந்த வருமானங்களின்மீதோ வருமான வரியை அதிகரித்துப் பெறுதல் கூடும் என்ற நிலை உள்ளதென்று வைத்துக்கொள்வோம். இந்த இரு முறைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் வேலை பொருளாதார விற்பன்னரைச் சாராது. ஏனெனில், இப் பிரச்சினை, கூடுதலான வரிவிதிப்புச் சுமையை சமுதாயத்தின் எந்தப் பிரிவு தாங்குவது என்பது பற்றியதாகலின், வாக்காளர்களுக்குப் பதில் சொல்லும் அரசாங்கம் முடிவுகட்டவேண்டியதாகும். இத்தகைய பிரச்சினைகளில் பொருளாதார விற்பன்னரின் பங்கு என்னவெனில், இருக்கின்ற மாற்று வழிமுறைகளைச் (alternative causes) சமர்ப்பித்து அவைகளினால் ஏற்படக்கூடிய பல்வேறு விளைவுகளையும் (effects) நிர்ணயித்தலேயாகும். எந்த வழியினைப் பின்பற்றுவது என்னும் தீர்மானமான முடிவு, அரசியலைச் சார்ந்ததாகையால், அதனை அரசாங்கத்திற்கு—சமுதாயம் முழுமைக்கும்—விட்டு விடல் வேண்டும். அரசியல் முடிவுகள், நேர்மை (fairness), நியாயம் (justice), நெறி (morality) போன்ற அடிப்படையான பிரச்சினைகளைத் தழுவியே இருக்கும். இத்தகைய முடிவுகளுக்குத் தராதர முடிவுகள் (value judgments) என்று பெயர். இம் முடிவுகளை எடுக்க அரசியல்வாதிகளுக்கே உரிமையுண்டு. இதில் பொருளாதார விற்பன்னர்களுக்கு எவ்வித உரிமையுமில்லை. சாதனங்களை (means) சமர்ப்பிப்பதுதான் பொருளாதார விற்பன்னரின் வேலையே தவிர முடிவுகளை (ends) எடுப்பது அன்று. முடிவுகள் சமூகத்தினால்—அதன் பிரதிநிதியாகிய அரசாங்கத்தினால்—முடிவு செய்யப்படுதவால், முடிவுகள் தனக்குக் கொடுக்கப்பட்டு அவற்றிற்கான சாதனங்களைச் சமர்ப்பிப்பதே தனது வேலையாகப் பொருளாதார விற்பன்னர் கொள்ளுதல் வேண்டும்.

இதுபோன்றே, பொருளாதார விவகாரங்கள் பல சமயங்களில் அறவியலோடு (ethics) சம்பந்தப்பட்டவையாக உள்ளன.

அறவியல் பிரச்சினைகளை முடிவுகட்டப் பொருளாதார விற்பன்னருக்கு எந்தவிதத் தனித்தன்மையான அதிகாரமும் (special right) கிடையாது. குறிப்பிட்ட செயல்களைச் சரியானவை என்றோ, முறையற்றவை என்றோ கூறுவது, பொருளாதார விற்பன்னர் என்ற முறையில், அவருடைய வேலையன்று. அச் செயல்களின் பொருளாதார விளைவுகளைப்பற்றியே அவர் கவனம் செலுத்துவார். அவர், தனிப்பட்ட மனிதர் என்ற முறையில் வேண்டுமானால், ஏனையவர்களைப்போன்று மனித நடவடிக்கைகளை (human actions) இவை முறையானவை, முறையற்றவை என்பதைக் கூறலாமே தவிர, பொருளாதார விற்பன்னர் என்ற தோரணையில் இவ் விஷயங்களில் அவ்விதக் கருத்துகளைக் கூற இயலாது. மேலும், நாம் ஏற்கெனவே பார்த்தது போல், நுகர்ச்சி (consumption), உற்பத்தி (production) போன்ற பொருளாதார நடவடிக்கைகள் உலகத்திலுள்ள ஒவ்வொரு சிறப்பு இயல்களுடனும் தொடர்பு கொண்டவையாக இருக்கின்றன. உதாரணமாக, உளவியல் (psychology), உடற்கூற்று இயல் (physiology) ஆகிய இயல்கள் முதல் இயைபியல் (chemistry), அணு பௌதிகம் (nuclear physics) ஆகிய இயல்கள் ஈறான தனித்தன்மையான இயல்களுடன் நுகர்ச்சி (consumption), உற்பத்தி (production) ஆகிய பொருளாதார நடவடிக்கைகள் (economic activities) பெரும்பாலும் சம்பந்தப்பட்டே இருக்கக்கூடும். அதன் காரணமாகப் பொருளாதார விற்பன்னர் இத்தகைய தனிச்சிறப்பு இயல்களின் எல்லையில் எல்லைமீறி நுழையலாம் (trespass) என்று கருதுதல் கூடாது. ஒரு நாட்டில் அதன் மக்கள் ஏன் தேநீரை நுகர்கின்றனர், மற்றொரு நாட்டில் அதன் மக்கள் ஏன் காப்பியை நுகர்கின்றனர், அல்லது இணைக்கப்பட்ட அறுவடைப் பொறி (combine harvester), ஏன் குதிரையினால் இழுக்கப்படும் அரிவாளைக் (horse-drawn reaper) காட்டிலும் மிகக் குறைந்த நேரத்தில் ஓர் ஏக்கர் சாகுபடியை அறுவடை செய்கின்றது என்பனபோன்ற பிரச்சினைகளை ஆராய்வது அவர் வேலையன்று. இப் பிரச்சினைகளை ஆராயும் பொறுப்பை அவர் ஏனைய பிற வல்லுநர்களுக்கு விட்டுவிடுகிறார். இப் பிரச்சினைகளை அவர் பருவச் சூழ்நிலைகள் (climatic conditions) அல்லது இனப் பண்பாடுகள்போன்ற சூழ்நிலை நிகழ்ச்சிகளாகவே (facts of the situation) கருதித் தன் பொருளாதார ஆராய்ச்சியினைத் தொடங்குவார். இந் நிகழ்ச்சிகளுக்கும் உற்பத்தி (production), மாற்றுச் செய்தல் (exchange) ஆகியவைகளுக்குமிடையே ஏற்படும் வினை வெதிர் வினைவுகளைப் (interactions) பற்றியே அவரின் நாட்டமிருக்கும். அவருடைய எல்லை என்னவோ குறுகியதுதான்; ஆயினும், அவர் மேற்கொள்ளும் அவ்வாராய்ச்சி எல்லை சிக்கலானதாகவும் நெடிது சென்று ஆராயத்தக்கதாகவும் உள்ளது.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Sir Dennis Robertson, *Lectures on Economic Principles* (Staples Press, London, 1957), Vol., Chs. I—II.

A. Marshall, *Principles of Economics* (8th ed., Macmillan, London, 1920), Book I, Ch. I—II.

J. N. Keynes, *The Scope and Method of Political Economy* (4th ed., Macmillan, London, 1930), Chs. I—IV.

A. C. Pigon, *The Economics of Welfare* (3rd ed., Macmillan, London, 1950), Ch. I.

Sir H. Henderson, *Supply and Demand* (Cambridge University Press, London, 1932), Ch. I.

L. Robbins, *An Essay on the Nature and Significance of Economic Science* (Macmillan, London, 1932), Chs. I—II.

# 2. சில அடிப்படைக் கருத்துகள்
# (Some Basic Concepts)

## 1. பயன்பாடு (Utility)

பல சமயங்களில் சொற்கள் தவருகவும், ஏன் சில சமயங்களில் ஆபத்தாகவும்கூடப் பொருளுணர்த்திவிடுகின்றன. எந்தச் சரியான கருத்தில் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றனவோ, அந்தக் கருத்தை அச் சொற்கள் உணர்த்தத் தவறும்போது பெருங் குழப்பம் மேலிடு கிறது. இதன் காரணமாகவும், பொருளாதார ஆய்வின் முதற் பயணமாகவுள்ள இந் நூலில் பின்னர் அடிக்கடி கூறப்போகும் சில கருத்துகள் எதனை உணர்த்தும் என்பதை முன்கூட்டியே அறிவிக் கவும், இந்தச் சொற்களுக்கு இன்னவைதாம் பொருள் என்பதைப் பின்னர் ஆங்காங்கே தனியான விளக்கங் கூறிக்கொண்டிருப்பதைத் தவிர்க்கவும் ஈண்டுச் சில சொற்களுக்கான பொருள் விளக்கம்தருதல் நலம்.

எந்தப் பண்டமாயினும் சரி, அது பொருளாதாரத்தின் எல்லைக்குள் இடம் பெறுவதற்கு முன்னர், அது கிடைப்பருமை யானதாக (scarce) இருத்தல்வேண்டும்—அதாவது, அப் பண்டத்தின் மீது நமக்குள்ள விருப்பத்திற்கு ஒப்பீடாக (in relation to our desire for it) அது கிடைப்பருமையானதாக இருக்கவேண்டும். நிலநடுக் கங்கள் (earthquakes) அரியவைதாம். ஆனல், அவைகள் கிடைப்பருமையாக உள்ளவை என்று கூற முடியாது. மக்கள் அவைகளை விரும்புவதில்லை அல்லவா? பண்டங்களும் (commodities) பணிகளும் (services) பயன்பாட்டைத் (utility) தருகின்றன. ஒரு பொருளாதார பேரத்திற்கு (an economic transaction) இன்றியமை யாததாகவுள்ள விருப்பம் என்னும் முதற்பொருள் (element) மேற் சொன்ன நிகழ்ச்சியில்தான் தோன்றுகிறது. பண்டங்கள் அல்லது பணிகள் ஆகியவற்றிலிருந்து, அவற்றை நுகர்வோர் ஓரளவிற்கு இன்பம் (pleasure) அல்லது நிறைவு (satisfaction) அல்லது நன்மை (benefit) ஆகியவற்றைப் பெறுகின்றனர். இப்படிப் பண்டங்களி

விருந்தும் பணிகளிலிருந்தும் நுகர்வோர் பெறுகின்ற நிறைவை (satisfaction) உணர்த்தப் 'பயன்பாடு' (utility) என்னும் சொல் பொருளாதாரத்தில்ஆளப்பட்டிருத்தல் சிறப்பற்றதொருநிலையாகவே உள்ளது. சாதாரண வழக்கில் 'பயன்பாடு' (utility) என்னும் சொல் 'பயனுடைமை' (usefulness) என்ற பொருளை உணர்த்துவதாகவே கொள்ளப்படுகிறது. பொதுவாக, பயனுக்கிய பொருள்கள் என்று நாம் கூறுவது முற்றிலும் பயன்தரவல்ல பொருள்கள் அல்லது உறுதியாகச் செய்யப்பட்ட பொருள்கள் ஆகியவைகளையே. அப் பொருள்கள் வீணான அல்லது ஆடம்பரமான பொருள்களாகமாட்டா. ஆனால், பொருளாதாரத்தில், 'பயனுடைமை' என்னும் இச் சொல் மேற்சொல்லப்பட்ட வரையறுக்கப்பட்ட கருத்தில் (limited sense) ஆளப்படுவதில்லை. உதாரணமாக, ஒரு மண்வெட்டி அல்லது ஓர் ஊற்றுப் பேனா (fountain pen) போன்றதொரு பொருளில் நுகர்வோரொருவர் (consumer) 'பயன்பாட்டை' (utility) அடைவார். ஆனால், பொருளாதாரக் கருத்தின்படி 'பயன்பாடு' (utility) என்பதைச் சாதாரணக் கருத்தில் பயனுடையதாக இல்லாத பொருள்களினின்றும் அடையக்கூடும். இவைகட்கு உதாரணம் கூறுவோமாயின், எல்லாவகையான ஆடம்பரப் பொருள்களையும் (luxuries) கூறலாம். பொருளாதாரத்தில், 'ஒரு பண்டம் பயன்பாட்டைத் தரவல்லது' என்பதானது, அப் பண்டத்தைச் சிலர் விரும்புகின்றனர் என்னும் கருத்தையே தெரிவிக்கும். அப் பண்டத்தை ஏன் அவர்கள் விரும்புகின்றனரென்பதனை ஆராய்வது, நாம் ஏற்கெனவே கண்டவாறு பொருளாதார விற்பன்னர்களின் வேலையன்று.

ஆகவே, ஒரு பண்டத்தின் நுகர்ச்சியானது சமூகத்திற்குப் பயனற்றதாக அல்லது விரும்பத்தகாததாக இருப்பினும், பொருளாதார விற்பன்னர்களைப் பொறுத்தவரையில், அப் பண்டத்தை நுகர்வோர் பயனடைவாரேயாகில் அது பயன்பாடுடைய பொருள் எனவே கூறுவர். தற்போது பெரும்பாலான நாடுகளில் கஞ்சா புகைப்பது தீய பழக்கம் எனக் கருதப்படுகிறது. ஆனால், முட்டாள் தனமாக அல்லது துர்ப்பாக்கிய வசமாகச் சிலர் கஞ்சாவை விரும்புகின்றனர். அதனை இன்றியமையாத ஒரு பொருளாகக் கொள்வோருமுண்டு. இவர்கள் அதற்கு விலை கொடுத்து வாங்கத் தயாராக இருக்கின்றனர். ஆகவே, கஞ்சாவின் நுகர்ச்சி ஏத்துணைத் தீமை தரவல்லதாயினும், மக்கள் அதனின்றும் பயன்பாட்டைப் (utility) பெறுவதாகவே கூறவேண்டியுள்ளது.

பயன்பாடின்மை (disutility) என்னும் சொல் பயன்பாடு (utility) என்னும் சொல்லுக்கு எதிர்மறையாகும்—இந்தச் சொல் பொதுவாக ஆளப்படுவதில்லையாதலால் இதில் குழப்பம் ஏதுமில்லை. ஏதாவ

தொரு பண்டம் அல்லது நடவடிக்கை பயன்பாட்டிற்கு எதிர் மறையான விளைவைத் தருமாயின், மக்கள் அதனைக் கொள்ளவோ அல்லது துய்க்கவோ முன்வரமாட்டார்கள். மக்கள் வேலை செய்யும் போது தாங்கள் உழைப்பதனின்றும் எதிர்மறையான பயன்பாட்டை அடைகிறார்களென்று கூறப்படுகிறது. இதன் பொருள் என்ன வெனில், அவர்கள் வேலை செய்வதை விரும்பவில்லை என்றும், அத்தகைய உணர்ச்சியைப் போக்கும்பொருட்டு ஏதாவதொரு வழியில் அவர்களுக்கு ஊதியம் (reward) தரப்படவேண்டும் என்றும் கூறப்படுகிறது. (பொருளாதாரத்தில் வேலையினின்றும் மக்கள் எதிர்மறைப் பயன்பாட்டைப் பெறுகின்றனரென்று பொருளா தாரத்தில் உள்ள இத்தகைய பொதுவான எடுகோள் (assumption) பெரும்பாலும் பொய்ப்பிக்கப்பட்டுவிடுகிறது. ஏனெனில், மக்களில் பலர் அவர்களின் வேலையை விரும்புகின்றனர். மனித நடவடிக்கை களில் அடிப்படையில் உள்ள சிக்கலான பிரச்சினைகளைப்பற்றிய கருதுகோள் வெகுவாக எளிதுபடுத்தலில் (over-simplify) ஏற்படும் தவற்றுக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

## 2. செல்வமும் நலமும் (Wealth and Welfare)

ஒரு பண்டமோ அல்லது பணியோ மாற்றுச் செய்யப்படுவதன் கீழ் வரவேண்டுமேயானால் (enter into exchange), அதன்மூலம் பொருளாதாரத்தின் எல்லைக்குக்கீழ் வரவேண்டுமெனில், அது கிடைப்பருமையானதாயும் (scarce) பயன்பாடு தரவல்லதாயும் இருக்க வேண்டும். அது கிடைப்பருமையான பொருளாக இராவிட்டால்—அதாவது, ஒவ்வொருவரும் அதை விரும்புகின்ற அளவுக்கும் மேலாக அது கிடைக்கின்றதெனில்,—அதற்கு மாற்றாகப் பிற பொருளைக் கொடுக்கவேண்டிய அவசியமே இருக்காது. அதனின்றும் பயன்பாடு (utility) கிடைக்கப்பெறாவிட்டால், யாரொருவரும் பிற பொருளை மாற்றாகக் கொடுத்து அதனைப் பெற விரும்ப மாட்டார்கள். மூன்றாவதான தகுதியும் ஒன்றுண்டு. அதாவது, சம்பந்தப்பட்ட பண்டம் ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குப் பருப்பொருளியலாக (physically) மாற்றுச் செய்யப்படத்தக்கதாக இருக்கவேண்டும். எடுத்துக்காட்டாக இங்கே ஒன்றை நோக்குவோம். என்னுடைய உடல்நலம் (health) எனக்கு உண்மையானதொரு சொத்துதான். என் உடல்நலத்தில் ஒரு பகுதியை அல்லது முழுவதையும் உடல்நலம் குன்றிய மக்களுக்கு அவர்களின் குன்றிய நலத்திற்கு மாற்றாகக் (in exchange) கொடுக்க முடியுமானால், அவ்வாறு உடல்நலம் குன்றியுள்ள பலபேர் எவ்வளவு அதிக விலை கொடுத்தேனும் அதனைப் பெற்றுக்கொள்வார்களல்லவா? ஆனால், இது நடக்கமுடியாத செயல். ஆகவேதான், என் உடல்

நலம் அளவிடமுடியாத அளவு மதிப்பை உடையதாக இருப்பினும் அதற்கு மாற்று மதிப்பு (exchange value) இல்லை—அதாவது, மாற்று முறையில் (process of exchange) அதனைக் கொடுத்துவிட்டுப் பண்டங்களை அல்லது பணிகளை வாங்கமுடியாது. பல்வேறு பயன்களைத் தரவல்ல சாதனங்களை (resources) அப் பயன்களுக்கிடையே பகிர்வு செய்தலில்தான் பொருளாதாரப் பிரச்சினையே (economic problem) அடங்கியுள்ளது. எனவே, இடமாற்றம் (transfer) செய்யப்படவொண்ணுத அல்லது மாற்றுச் செய்யப்படத்தகாத பொருள்களில் பொருளாதாரப் பிரச்சினையே ஏற்பட வழியில்லை. பொருளாதாரமானது மாற்று சம்பந்தமான அனைத்தையும் பற்றிய தாகையால், பொருளாதார விற்பன்னரைப் பொறுத்தமட்டில், 'மதிப்பு' (value) என்ருல் 'மாற்று மதிப்பு' (exchange value) என்றே பொருள். எனவே, இந் நூலில் பின்னர் மதிப்பு என்று வரும் சொல் யாவையும் மாற்று மதிப்பையே உணர்த்தும். ஒருவருக்கு ஒரு பொருள் பாதுகாத்துவைக்கத்தக்க அரியதொரு பொருளாக இருக்கலாம். உதாரணமாக, ஒரு நினைவு மலர் (Souvenir), பண்பு (quality), செயலறிவு (experience) போன்றவை, அப் பொருள் மாற்றுச் செய்யப்பட இயலாததாக இருப்பின், பொருளாதார விற்பன்னரைப் பொறுத்தமட்டில் அதற்கு மதிப்பு இல்லை.

பொருளாதாரத்தில் செல்வம் (wealth) என்னும் சொல் ஒரு மனிதன் அல்லது மனிதர்களின் ஒரு தொகுதிக்குச் (group of persons) சொந்தமான பொருள்களின் மொத்த மதிப்பைக் குறிக்கும். அப் பொருள்கள், வீடுகள், தொழிற்சாலைகள், நிலம் அல்லது நெய்யாவி வண்டிகள் (cars) போன்ற தொட்டறியக்கூடிய (tangible) பொருள்களாக இருக்கலாம். இல்லையெனில், திறமை (skill) அல்லது வணிக நன்மதிப்பு (business goodwill) அல்லது பணத்தின் கூட்டுத்தொகைகள் (sums of money) போன்ற தொட்டறியக்கூடாத (intangible) சொத்துகளாக (assets) இருக்கலாம். அவைகள் மதிப்புடையனவாக இருக்கும்பட்சத்தில்—அதாவது, மாற்று மதிப்புடையனவாக—அவைகளைச் செல்வம் (wealth) எனக் கொள்ளலாம். பொருளாதார விற்பன்னர்கள், தனி மனிதர் செல்வம் (individual wealth), அல்லது, தனிப்பட்ட செல்வம் (private wealth), ஒரு நாட்டின் செல்வம் (wealth of a country), அல்லது பல நாடுகளைக்கொண்ட ஒரு தொகுதியின் (group of countries) செல்வம் எனப் பாகுபடுத்திக் கூறுவர். செல்வம் என்பது எந்த ஒரு நேரத்திலும் (at any one moment) இருக்கின்ற பொருள்களின் மொத்த இருப்பு (total stock) என்றும், ஒரு குறிப்பிட்ட கால அளவில் பெறப்பட்டு நுகரப்படும் பொருள்களின் நடமாட்டம் (flow) என்றும் சற்றுப் பின்னதாக நோக்குவோம்.

செல்வமும் (wealth) நலமும் (welfare) ஒன்றல்ல என்பதை ஆராய்வது கடினமன்று. நலம் என்பது ஒரு தனிமனிதன் அல்லது ஒரு கூட்டத்தினர் நலமாயிருத்தற்குரிய (wellbeing) ஒரு பொது வான நிலையைக் குறிக்கும். இந் நிலை அவர்களின் மன நலம் (mental welfare), நெறிநலம் (moral welfare), பொருள்சார் நலமுடைமை (material well-being) ஆகியவைகளையும் குறிக்கும். சமூகத்தின் பொதுப்படையான நலத்தைக் (general social welfare) கணக்கிட வேண்டுமெனில், அச் சமூகத்தின் மனநிறைவு (contentment), அதன் பண்பாட்டு நிலை (cultural level), சட்டம், ஒழுங்குமுறை இவைகளின் நிலை, அல்லது மக்களின் கல்வி, உடல்நலம் இவை களையும் சேர்த்துதான் கணக்கிடவேண்டும். பொருளாதார நலமென்பது (economic welfare) சமுதாயத்தின் செல்வ உற்பத்தி (wealth producing) நடவடிக்கைகள், நுகர்ச்சி நடவடிக்கைகள் (consumption activities) ஆகியவைகளினின்றும் தோன்றும் சமூக நலத்தின் (social welfare) ஒரு பகுதியேயாகும். பொதுவாக, பொருளாதார நலத்தில் உயர்வு ஏற்பட்டால்,—அதாவது, மக்கள் சுபிட்சமாக இருக்கும்போது—எல்லா நலத்திலுமே (welfare as a whole) உயர்வு ஏற்படும். இதனைப் பொதுப்படையாகத்தான் கூறலாமே தவிர, எல்லா நலத்திலும் உயர்வு எற்பட்டே தீரும் என்று கூற இயலாது. எடுத்துக்காட்டாக, ஒரு வல்லாட்சி அரசாங்கமொன்றில் (a despotic government) மக்கள் அதிக மணி நேரம் வேலைசெய்து, அதிகமான பொருள்களை உற்பத்தி செய்யக் கட்டாயப்படுத்தப்படுகின்றனரெனக் கொள்வோம். அந் நாட்டு மக்கள், அவர்களின் உரிமை (liberty) பறிபோதலை (அல்லது அவர்களின் ஓய்வு பறிபோதலைக்கூட) அவர்களுக்குக் கிடைக்கும் அதிக அளவு பொருள்களின் அளிப்பினால் (supply of goods) ஈடுசெய்ய முடியாது எனக் கருதக்கூடும்.

## 3. மூலதனமும் வருமானமும் (Capital and Income)

செல்வம் என்னும் இத் தலைப்பில் இரண்டாவதாகவுள்ள ஒரு முக்கிய வேறுபாட்டினைக் (distinction) கவனிக்கவேண்டும். இது சமுதாயச் செல்வத்தைக் (community's wealth) கணக்கிடுவது பற்றியது. அதாவது, அவ்வாறு கணக்கிடும்போது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் (particular moment of time) சமுதாயத்தில் எத்துணை அளவு செல்வம் உள்ளது என்று கணக்கிடுவது ஒருவகை. ஒரு குறிப்பிட்ட கால அளவில் (particular period of time) சமுதாயம் (community) எத்துணை அளவு செல்வத்தை உற்பத்தி செய்யும் அல்லது செய்துள்ளது என்று கணக்கிடுவது மற்றொரு வகை. இம் முறைகளில் கணக்கிடும்போது, ஒரு மின் இமை விளக்கு (flash light)

பொருத்தப்பட்ட புகைப்படப் பொறியினுல் புகைப்படம் ஒன்று அத்தகைய நேரத்தில் எடுத்துக்கொண்டிருக்கப்படுமேயாளுலும், அல்லது ஒரு பேசும்படம் எடுக்கப்பட்டுக்கொண்டிருக்குமேயாளுலும், அவைகளும் இக் கணக்கில் சேரும். மேற்சொன்ன இரு வகையான கணக்கீட்டு முறைகளுள் முன்னர்ச் சொன்ன முறையில், செல்வம் எனப்படுவது இருக்கின்றதும் (exist) எண்ணப்படக்கூடியதுமான ஒரு குறிப்பிட்ட சரக்கிருப்பு (stock) என்பதாகிறது. இச் சரக்கிருப்பு (stock) முதல் (capital) என அழைக்கப்படுகிறது. இம் முதல் நிலையான முதல் (fixed capital) என்றும் (தொழிற்சாலைகள், வீடுகள், வீதிகள், இயந்திரங்கள்போன்றவைகளைக் கொண்டது), அல்லது நடைமுறை முதல் (working capital) என்றும் (கச்சாப் பொருள்கள், உற்பத்தியில் இருந்துகொண்டிருக்கும் அரைகுறை யாகச் செய்யப்பட்டுள்ள பொருள்கள் அல்லது பூரணமாக உற்பத்தி செய்யப்பட்டுவிட்ட பொருள்களின் சரக்கிருப்புகள் போன்றவைகளைக் கொண்டது) இருவகைப்படும். நுகரப்படப் போகும் முதல் அத்தனையும் செல்வமே; நடைமுறை முதலுக்கும் நிலையான முதலுக்குமுள்ள வேறுபாடு யாதெனில், முன்னர்ச் சொல்லப்பட்டது ஒரே ஒரு முறைதான் நுகரப்படத்தக்கது. அதன் துணைகொண்டு உற்பத்தி செய்யப்படும் பண்டங்கள் உற்பத்தி செய்யப்படும்போதோ அல்லது அவைகள் விற்கப்படும்போதோதான் அது நுகரப்படுகிறது. பின்னதாகச் சொல்லப்பட்ட முதல் மறைமுக மாகவே (indirectly) நுகரப்படுகிறது. இவ்வகை முதல் பல ஆண்டு களுக்குத் தொடர்ச்சியாகப் பண்டங்களை உற்பத்தி செய்துகொண் டிருக்கவோ அல்லது நெடுங்காலத்திற்குத் தொடர்ந்து பணிகளை (services) அளித்துக்கொண்டிருக்கவோ பயன்பட்டுவிட்டு நிதான மாகச் சிறிதுசிறிதாகத் தேய்வடையும்.

முன்னர்க் கூறியபடி, செல்வத்தைக் கணக்கிடுவதில் இரண்டாவது வகையின்படி, ஒரு குறிப்பிட்ட கால அளவின்போது உற்பத்திசெய்யப்படும் செல்வத்தைக் கணக்கிடினும், வருமானம் கணிக்கப்படுகிறது. முதலைக் கணக்கிடுவதுபோல், வருமானத்தின் மொத்த அளவை ஒரு குறிப்பிட்ட நேரத்தின்போது உள்ள பேரளவு வருவாய் என்று கணக்கிட்டுவிட முடியாது. ஏனெனில், வருமானம் என்பது நீரோட்டம் (flow) போன்றது. இவ்வோட்டம் நுகர்ச்சியில் வந்து பாய்கின்றது அல்லது முதலினுல் உற்பத்தி செய்யப்படும் பொருள்களில் வந்து பாய்கின்றது. பொருளாதார முறையை (economic system) ஒரு குழாயின் வழியாக நீர்த்தேக்கத்திற்குப் (reservoir) பாய்ந்து, பின்னர் நுகர்ச்சியாளர்களின் வீடுகளுக்கென்று பயன்படும் ஓர் ஆற்றுக்கு ஒப்பிடலாம். முதலை அளப்பதென்பது, நீர்த்தேக்கத்தில் ஒரு குறிப்பிட்ட நாளில் உள்ள தண்ணீரின்

அளவை அளப்பதாகும். வருமானத்தை அளப்பதென்பது, ஒரு குறிப்பிட்ட வாரம் அல்லது மாதம் அல்லது ஆண்டில் குழாயின் வழியாகச் சென்ற தண்ணீரின் அளவைக் கணக்கிடுவதையொக்கும். நீர்த்தேக்கத்தில் ஒரு குறிப்பிட்ட வாரத்தில் வந்து பாய்ந்த தண்ணீரின் அளவும், தேக்கத்தினின்றும் நீரை வெளியேற்றும் குழாய் வழியாக நுகர்வோருக்குச் சென்ற நீரின் அளவும் ஒன்றாக இருக்கலாம். அப்படியிருக்குமானால், தேக்கத்தில் ஒரு வாரத்தின் இறுதியில் (end of the week) உள்ள தண்ணீரின் அளவு, அவ் வாரத்தின் ஆரம்பத்தில் உள்ள தண்ணீரின் அளவாகும். இடையில், நீர் ஒழுகுதல் அல்லது வெப்பத்தினால் ஆவியாதல் (evaporation) காரணமாக வேண்டுமானால் சிறிதளவு இழப்பு ஏற்படலாமே தவிர, மற்றபடி சமமாகவே இருக்கும். குழாய் வழியாக வெளிச்செல்லும் தண்ணீரைவிட நீர்த்தேக்கத்தில் உள்நுழையும் தண்ணீர் அதிகமாக இருக்குமானால், நீர்த்தேக்கத்தில் நீர்மட்ட அளவு உயரும். இத்தகைய நிகழ்ச்சியே பொருளாதாரத்திலும் ஏற்படுகிறது. உட்புகுதலும் (inflow—வருமானம்) வெளியேற்றமும் (outflow—நுகர்வோர் செய்யும் செலவு) சமமாக இருக்குமானால் (பொருளாதார விற்பன்னர்கள் 'தேய்மானம்' என்று கூறுகிற விரயம் தவிர்த்து), முதல் இருப்பில் (capital stock) எவ்வித மாற்றமும் இருக்காது. (இதனைப் பிறிதோர் இடத்தில் விரிவாக ஆராய்வோம்.) நுகர்வோரின் செலவைவிட (consumer expenditure) வருமானம் (income) அதிகமானால், எச்சமாக உள்ள தொகை அதிகமான முதலிருப்பை (capital stock) ஏற்படுத்துகிறது—பொருளாதார விற்பன்னர்கள் இதனை முதல் ஆக்கம் ஏற்படுதல் (capital formation) என்றழைக்கின்றனர். நுகர்வோர் தாங்கள் ஈட்டுவதைவிட (earn) அதிகமாகச் செலவிடுவார்களேயானால், சமூகத்தின் முதல் குறைந்துகொண்டே போகும்—இத்தகைய தொன்று கால வரையறையின்றி நிகழ்ந்து கொண்டிருக்க முடியாது. நீர்த்தேக்கத்தில் உட்புகும் தண்ணீரின் அளவிற்குமேல் அதிகமான தண்ணீரை எவ்வாறு வெளியே எடுப்பது இயலாதோ, அவ்வாறே ஈட்டுவதைவிட அதிகமாகச் செலவிடுவதும் இயலாது.

## 4. உற்பத்திக் காரணிகள் (Factors of Production)

ஒரு சமூகமானது (community) தன்னிடமுள்ள சாதனங்களை அறிவுத்திறனுடன் பயன்படுத்துவதன்மூலமே வருமானத்தைப் பெறுகின்றது. வானுலகம் (Heavens) பொருள்களைப் பொழிந்து தள்ளுவதில்லையே. சமூகம் உற்பத்தி செய்து நுகர்கின்ற அல்லது தன் முதல் இருப்பில் (capital) கூடுதலாகப் பெறுகின்ற யாவையும், உற்பத்தி செய்யப்படவே வேண்டும். இவ்வுற்பத்தியில் சமூகம் பயன்

படுத்துகிற சாதனங்களை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். பரந்த கருத்தில் ஒவ்வொரு பிரிவிலும் அடங்கியுள்ள சாதனங்களின் தன்மை ஒருமித்ததாக இருக்கும். மேற்சொன்ன பிரிவுகளை உற்பத்திக் காரணிகளென (factors of production) அழைக்கப்படுகின்றன. சொல்லுக்குச் சொல் சரியாக (literally) பொருள் கொள்ளவேண்டுமானால், உற்பத்திக் காரணிகள் என்றால் செல்வத்தை (wealth) உற்பத்தி செய்யக்கூடிய காரணிகள் என்று பொருள்கொள்ளலாம். இக் காரணிகள் யாவை என நோக்குவோம்.

நிலம்:—நிலமானது வயல்களையும் (fields) மலைகளையும் குறிப்பதோடல்லாது, இயற்கை வழங்கியுள்ள ஏனைய சாதனங்களையும் (other resources) குறிக்கும்; வெயில், காற்று, மழை, நீர்ச் சக்தி (water-power), கனிப்பொருட் செல்வம் (mineral wealth) ஆகியவைகளையும் குறிக்கும். நிலத்தின் தன்மை (quality of land), நில இயலின் (geological) தன்மைகளுக்கு ஏற்பவும், அதன் அமைப்பிற்கு ஏற்பவும், சூழ்ந்துள்ள தட்பவெப்ப நிலைக்கு ஏற்பவும் மாறுபடுகிறது.

முதல் (Capital):—முதல் என்பதைச் சுருக்கமாக விளக்கவேண்டுமெனில், எந்த ஒரு நேரத்திலும் இருக்கின்ற செல்வத்தின் இருப்பு (stock of wealth) என்று கூறலாம். எந்தப் பொருள்களெல்லாம் அவைகளின் சொந்தக்காரர்களால் வேண்டப்படுகின்றனவோ (அவைகள் உற்பத்திக்கு அல்லது எதிர்கால நுகர்ச்சிக்குத் தேவைப்படுகின்றன), அவைகளனைத்தும் முதல் என்பதன்பாற்படும். செய்பொருள் உற்பத்தியாளர்கள் (manufacturers) அல்லது மொத்த விற்பனையாளர்கள் (wholesalers) வைத்திருக்கும் உற்பத்தி முடிவடைந்த சரக்குகளின் (finished goods) இருப்பும் இதில் அடங்கும்.

உழைப்பு (Labour):—செல்வத்தைத் தோற்றுவிப்பதில் செலுத்தப்படும் மனித உடல் அல்லது உளச் (mental) சக்திகள் உழைப்பென்று கூறப்படும். செல்வத்தைத் தோற்றுவிப்பதில் உழைப்பின் பங்கு மறைமுகமானதாக இருக்கலாம். உதாரணமாக, ஒரு சிக்கலான உற்பத்தி செய்யப்பட்ட பொருளின் ஓர் இணைப்புப் பாகத்தை (component) மட்டில் உற்பத்தி செய்ய அது பயன்படுத்தப்படலாம்; அல்லது, உழைப்பானது, தொட்டுணரக்கூடிய (tangible) பொருள்களை உற்பத்தி செய்வதில் செலுத்தப்படாது, தனிப்பட்ட முறையில் அளிக்கவல்ல பணிகளுக்குச் [உதாரணமாக, ஆசிரியர் அல்லது தாதி (nurse) அல்லது வழக்கறிஞர் ஆகியோரது பணிகள்] செலுத்தப்படலாம்.

தொழிலமைத்தல் (Enterprise) :—பொருளாதார முறையில் (economic system) சிறப்பாகப் பங்குபெறும், சிறப்பான குணங்களை யுடையதொரு சிறப்புவகை உழைப்பிற்குத் தொழிலமைத்தல் என்று பெயர். இவ்வுழைப்பை ஒரு தனிக் காரணியாகக் (seperate factor) கூறுவதே பொருத்தமானது. மற்றக் காரணிகளை இணைத்து ஆளுதல் செய்யும் முனைப்பாற்றல் (initiative), தொழிலமைத்தலுக்கு வழிவகை செய்தல், புதிய முறைகள், பொருள்கள் அல்லது கண்டு பிடிப்புகள் (inventions), யாவற்றிற்கும் மேலாகத் தொழில் ஆபத்து (risk) அல்லது எதிர்பாராமல் நேரிடக்கூடிய விபத்து (uncertainty) இவற்றைத் தாங்குதல் ஆகிய பணிகளைக் காலத்திற்கேற்றாற்போல் மாற்றமடைந்துகொண்டு செல்லும் (dynamic) உலகப் பணிக ளுடனும் இணைத்துச் செய்தல்ஆகியவை இச் சிறப்புவகை (special form) உழைப்பில் அடங்கும்.

செல்வத்தின் உற்பத்தி, மேற்கூறிய நான்கு காரணிகளும் ஒன்றியைந்து செயற்படுவதைப் பொறுத்தேயுள்ளது. பல்வேறு சங்கங்கள் அல்லது பல தலைமுறைகள் மேற்கூறிய நான்கு காரணிகள் ஒவ்வொன்றையும் ஒவ்வோர் அளவில் வைத்துக் கொண்டிருக்கின்றன. இக் காரணிகள் இயன்ற அளவு அதிகமாகப் பயன்படுத்தப்படும்போதும், மிகவும் தகுந்த விகிதங்களில் அவைகள் இணைக்கப்படும்போதும் சமூகத்தின் செல்வ உற்பத்தி (production of wealth) உச்சமாக இருக்கும்.

## 5. இறுதிநிலை (Margin)

அநேகமாகத் தற்காலப் பொருளாதாரக் கோட்பாடுகளனைத்தும் இறுதி நிலைக் கருத்திற்கு (concept of the margin) அதிக முக்கியத் துவம் கொடுத்துவருகின்றன. இக் கருத்து நெருங்கிய பழக்க மில்லாததொன்றாக இருப்பினும், மாணவர்கள் இக் கருத்தினைப் புரிந்துகொள்வது இன்றியமையாததாகும். பொருளாதார உலகத்தில் உற்பத்தியாளர்களாலும் நுகர்வோராலும் சரிசெய்தல்கள் (adjust-ments) அடிக்கடி செய்யப்படுவதுண்டு. உற்பத்தியாளர்கள் தேவைக்கேற்பத் தங்களது மொத்த உற்பத்தியை அதிகரிக்கவோ அல்லது குறைக்கவோ செய்கின்றனர்; அல்லது புதிய உற்பத்தி முறைகளுக்கேற்ப உழைப்பு அல்லது முதலை அதிகரிக்கவோ அல்லது குறைக்கவோ செய்வர். இதைப்போன்றே நுகர்வோரும், சில பண்டங் களின் விலை மற்றப் பண்டங்களுக்கொப்பீடாக மாறும்போதும், அல்லது குறிப்பிட்ட நாகரிகம் வழக்கற்றுப் போகும்போது அல்லது தோன்றும்போதும் தங்களின் செலவுப் பாணியை (patterns of expenditure) அடிக்கடி மாற்றிக்கொண்டிருப்பர். பொருளாதார

ஆய்வின் பெரும்பகுதியும் இத்தகைய சரிசெய்தல்களின் (adjustments) விளைவுகளைப்பற்றியதாகவே இருக்கிறது. இவ்வாறு உற்பத்தியில் அல்லது நுகர்ச்சியில் சரிசெய்தல்களை அடிக்கடி செய்வதால் பொருளாதார நிலைமை நிலையானதாக இல்லாமலிருப்பினும், மாற்றமடைவது (process of change) என்னவோ நிதானமாகவே இருந்துவருகிறது. ஒரு தொழில், முழுமையாகத் (en bloc) தோன்றுவதோ அல்லது தொழிலினின்றும் விலகிச் சென்றுவிடுவதோ ஓர் இரவில் நடந்துவிடுவதில்லை. நிறுவனங்கள் (firms) சீராகவே தங்களது உற்பத்தியை அதிகரிக்கவோ அல்லது குறைக்கவோ செய்கின்றன. ஓரிரண்டு நிறுவனங்கள் புதியனவாக ஏற்படுத்தப்படலாம் அல்லது ஏற்கெனவே உள்ள ஓரிரண்டு நிறுவனங்கள் வேறு பண்டங்களை உற்பத்தி செய்வதில் முனையக்கூடும். எனவே, தனிப்பட்டதொரு நிறுவனத்திற்கும் (individual firm), அந் நிறுவனம் சார்ந்துள்ள தொழிலுக்கும் உற்பத்தி செய்யவேண்டுமா அல்லது வேண்டாமா என்ற பிரச்சினை இருப்பதில்லை. இவ்வாறுள ஒரு தெரிதல் (choice) ஒருசில அதிகமான அலகுகளை (a few extra units) உற்பத்தி செய்வதா அல்லது ஒருசில அலகுகள் குறைவாக உற்பத்தி செய்வதா என்பதில்தான் அடங்கியுள்ளது.

நுகர்வோரைப் பொறுத்த அளவிலும் இது உண்மையாகத்தான் இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட பண்டத்தை நுகர்வதை மக்கள் உடனடியாகக் கைவிட்டுவிடுவதில்லை; ஒரு பண்டத்தை அதிகமாக வாங்குவதா அல்லது குறைத்து வாங்குவதா என்றுதான் ஒரு மனிதன் சிந்தித்து முடிவு செய்வது வழக்கம். பொருளாதார விற்பன்னர் பொருள்களுக்கான மொத்தத் (total) தேவையில் (தனி நபரின் தேவையை அன்று) நாட்டம் செலுத்துவது வழக்கமாதலால் இவ்வுண்மை தெளிவாக விளங்குகிறது. ஆயிரக்கணக்கில் அல்லது பத்தாயிரக்கணக்கில் நுகர்வோரைக் கொண்ட ஓர் அங்காடியில் மாறுதல்கள் (changes) சீரானவையாகவே இருக்கும். அந்த அங்காடியில் ஒருசில நபர்கள் ஒரு பண்டத்தை நுகர்வதை அடியோடு கைவிட்டபோதிலும், அல்லது ஏற்கெனவே ஒரு பண்டத்தையும் வாங்காத புதிய வாங்குவோர்கள் (buyers) அங்காடிக்கு வந்தபோதிலும், மொத்தத் தேவையில் (total demand) இவைகளால் ஏற்படும் விகித விளைவு (proportionate effect) குறைவாக இருந்தேயாகவேண்டும். நுகர்வோரின் தேவையில் சில சமயங்களில் வெகுவாக அதிகரிப்பு அல்லது குறைவடைதல் போன்ற கடுமையான மாற்றங்கள் (violent changes) நிகழ்வதுண்டு. ஆனால், இத்தகைய மாற்றங்கள் விதிவிலக்கானவைகளே.

இவ்வாறு வெவ்வேறான பெருவாரித் தனி நபர்களின் முடிவுகளைப் (decisions) பொறுத்தே உற்பத்தியும் நுகர்ச்சியும் இருக்கின்றதும்,

மேற்சொன்ன உட்கிடையான பண்புகளைப் பெற்றுள்ளதுமான நடைமுறை உலகத்தில், பொருளாதார ஆய்வு எந்த இடங்களில் மாற்றங்கள் ஏற்படுகின்றனவோ, அந்த இடங்களில்தான் இயற்கையாக ஆழ்ந்து கவனம் செலுத்துகிறது. இன்று 99 மனிதர்கள் நேற்று 100 மனிதர்கள் எத்தனை ஆப்பிள் பழங்களை நுகர்ந்தனரோ அத்தனை பழங்களை நுகர்கின்றனரெனினும், ஒரு மனிதன் ஆப்பிள் பழத்தைச் சாப்பிடுவதை விட்டுவிடுகின்றானெனில், ஆப்பிள் பழங்களின் விலையில் ஏற்படும் எந்த விளைவுகளும் யாது காரணத்தாலோ தனது நுகர்ச்சியை மாற்றிக்கொண்ட அந்த ஒரு மனிதனால்தான் ஏற்பட்டன என்று அம் மனிதனுடன் தொடர்புபடுத்திக் கூற இயலும். பொருளாதாரம் இந்த மாற்றத்தில்தான் அதிகக் கவனம் செலுத்தும். மாற்றமடைந்திராத கூறுகளைப்பற்றி (elements) பொருளாதார ஆய்வு பொருட்படுத்துவதில்லை. உற்பத்தியாளர்களில் ஒன்பது பேர் நிலையான உற்பத்தியைச் செய்துகொண்டிருக்கும்போது பத்தாவது உற்பத்தியாளர் தனது உற்பத்தியை 50 சதவீதம் அதிகரிக்கின்றாரென்றால், இத்தகையதொரு சூழ்நிலையில் மாறிச் சென்றுகொண்டிருக்கும் காரணியைப்பற்றியே (changing factor) பொருளாதார ஆய்வு ஆழ்ந்து கவனத்தைச் செலுத்தும்.

இப்படி மாற்றங்களும் (changes) சரிசெய்தல்களும் (adjustments) ஏற்படக்கூடும் எல்லையைத்தான் (frontier) பொருளாதாரத்தில் இறுதிநிலை (margin) என்றழைக்கின்றனர். சிலர் நுகர ஆரம்பிக்கத் தொடங்கும் அல்லது நுகர்வதை விட்டுவிடுகின்ற குறிப்பிட்ட பண்டங்கள்தாம் இறுதிநிலை அலகுகள் (marginal units) என்றழைக்கப்படுகின்றன. இறுதிநிலை ஆப்பிள் (marginal apple) என்பது ஏனைய ஆப்பிள்களினின்றும் பொருளளவில் வேறுபட்டதன்று. அது, தேவையில் சிறிதளவே (infinitesimally) மாற்றம் ஏற்படினும், வாங்கப்படமாட்டாத ஆப்பிளாகும். இதனால் நுகர்வோர் தாங்கள் முன்பு வாங்கிய ஆப்பிள்களைக் காட்டிலும் ஓர் ஆப்பிள் குறைத்து வாங்குவர் என்று பொருளாகிறது. அந்த ஆப்பிளை வாங்காமலிருக்கும் மனிதன் இறுதிநிலை நுகர்வோர் (marginal consumer) என்றழைக்கப்படுவான். உதாரணமாக, ஆப்பிள்களின் விலை மிகச் சிறிதளவே உயர்ந்தபோதிலும், இம் மனிதன் தான் நுகரும் ஆப்பிள்களில் ஒன்றைக் குறைத்துக் கொள்வான்.

இது போன்றே, இறுதிநிலை உற்பத்தியாளரை (marginal) பொருளாதார நிபுணர்கள் உணர்த்துகின்றனர். நிலவுகின்றதோர் இலாப மட்டத்தில் (profit level) ஒரு குறிப்பிட்ட பண்டத்தை (அந்த இலாபத்தை அப் பண்டத்திலிருந்து பெறுவான்வேண்டி)

உற்பத்தி செய்யத் தூண்டப்படுகிறவர், ஆனால், இலாபம் சிறிதளவேனும் குறையுமானாலும் தன் உற்பத்தியைக் கைவிடுபவர் என்று இறுதிநிலை உற்பத்தியாளருக்கு இலக்கணம் கூறலாம். செருப்புகளை உற்பத்தி செய்யும் ஒருவர், தற்போது உள்ள விலையில், ஒரு குறிப்பிட்ட கால அளவில் 100 சோடி செருப்புகளை உற்பத்தி செய்கின்றாரென வைத்துக்கொள்வோம்; அப்படியானால் 100ஆவது சோடி செருப்புகளே இறுதிநிலை அலகாகும் (marginal unit). இந்த இறுதிநிலைச் சோடி செருப்புகள் மற்றச் சோடி செருப்புகளினின்றும் வேறுபட்டனவல்ல. உற்பத்தியில் இவற்றை வேறுபடுத்தித் தனியே பிரித்தெடுத்தலும் இயலாது. எனினும், விலைகள் சிறிதளவே குறையுமானாலும், அவற்றை உற்பத்தி செய்பவர் அச் சோடியை உற்பத்தி செய்யமாட்டார்—இதுவே இறுதிநிலைச்சோடியாகும் (marginal pair).

இறுதிநிலை என்னும் இக் கருத்து இந் நூலில் திரும்பத்திரும்பப் பல இடங்களில் இடம்பெறுவதைக் காணலாம். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இக் கருத்து எந்த ஒரு தனிச்சிறப்பான (special) நோக்கத்திற்காகக் கையாளப்படுகிறதோ அதற்குத் தக்கவாறு விளக்கம் கூறப்படுவதாகத் தெரிகின்றது. ஆனால், கருத்தின் (concept) இன்றியமையாத் தன்மை (essential nature) என்னவோ எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மாறாமல் அவ்வாறே உள்ளது. இறுதிநிலை என்பது எப்போதுமே மொத்த அளிப்பிலுள்ள கடைசித் தனி அலகைத்தான் (last single unit) குறிக்கிறது. இந்த அலகானது எது என்று பார்ப்போம். ஒரு மனிதன் இவ் அலகினைப் பரிவர்த்தனை செய்வது இலாபமென உத்தேசிக்கும் அலகாகும். அதனுடைய விலையில் அல்லது உற்பத்திச் செலவில் (cost) ஏதாவது சிறிதளவேனும் மாற்றம் ஏற்படினும், இவ்வலகு பரிவர்த்தனைக்கு வாராததாகும்.

## 6. சமநிலை (Equilibrium)

பொருளாதார ஆய்வில் மற்றோர் அடிப்படையான கருத்து சமநிலை (equilibrium) என்பதாகும். சாதாரண வழக்கில் இச் சொல் ஒரு சமன நிலையை (state of balance) உணர்த்தும். பொருளாதாரத்தில் இக் கருத்து ஏறக்குறைய இப் பொருளையே உணர்த்துகிறது. ஒரு குறிப்பிட்ட சூழ்நிலை, அதில் சம்பந்தப்பட்டுள்ள காரணிகள் (fators involved in it) யாதொரு சக்தியாலும் பாதிக்கப்பட்டு மாற்றமடையாமலிருக்குமானால், சமநிலையான சூழ்நிலை என அழைக்கப்படும். உதாரணமாக, ஒரு நிறுவனத்தில் (firm), அதன் முதலாளிக்குக் கிடைத்துவரும் இலாப வீதமானது உற்பத்தியில் அதிகரிப்போ குறைவோ இன்றித் தொடர்ந்து உற்பத்தியைச் செய்து கொண்டு செல்லுமளவுக்கே இருக்குமானால், அந் நிறுவனம் சம

நிலையில் (equilibrium) இருப்பதாகக் கூறப்படும். ஒரு தொழிலில் புதிய நிறுவனங்கள் நுழைவதற்கு மனமின்றியும், அதேபோன்று ஏற்கெனவே அத் தொழிலில் உள்ள நிறுவனங்கள் அத் தொழிலினை விட்டேக மனமின்றியும் இருக்குமாஞல், அத்தகைய சூழ்நிலை அத் தொழிலின் சமநிலையை (equilibrium) உணர்த்தும். அமலில் உள்ள விலைமட்டத்தில் (ruling price) விலைக்கு விற்கப்படும் பண்டத்தின் அளவு, நுகர்வோர் வாங்குதற்கு விழையும் அளவிற்கே சமமாக இருக்குமாஞல், அத்தகையதோர் அங்காடியைச் (market) சம நிலையில் உள்ள அங்காடியெனக் கூறலாம்.

ஈண்டு இருவகையான சமநிலைச் சூழ்நிலைகளை வேறுபடுத்திக் கூறுவோம். ஒருவகையான சமநிலை நிலையான சமநிலை (stable equilibrium) எனப்படும். இத்தகையதொரு சமநிலையில், சம்பந்தப் பட்ட காரணிகளில் (factors) வெளியே உள்ள காரணங்களால் ஏற்படும் எத்தகைய தாற்காலிக மாறுதலும், இதற்கு எதிரிடையான தொரு விளைவால் ஆரம்ப நிலைக்கே கொண்டுவரப்பட்டுச் சரிசெய்யப் படுகிறது. இத்தகையதொரு சூழ்நிலை நிலையான பண்புகளைத் தன்னகத்தே பெற்றிருப்பதால், இவை ஆரம்பத்திலிருந்த நிலைக்கே மீண்டும் மீண்டும் கொண்டுவந்து நிறுத்தத் துணைசெய்கின்றன. இதற்கு மாருகச் சில சூழ்நிலைகள் நிலையற்ற சமநிலையை உடை யனவாக உள்ளன. அதாவது, இச் சூழ்நிலைகளில், சம்பந்தப்பட்ட காரணிகளில் மாற்றம் ஏற்படும்போது, நிலைமை (situation) ஆரம்பத் திலிருந்த நிலையினின்றும் பெரிதும் வேறுபட்டிருப்பதோடு, மீண்டும் பழைய நிலைக்குத் திரும்புகின்றவாறு யாதோர் அறிகுறியும் ஏற் படாது. இதற்கு எதிராக, முற்றிலும் வேருனதொரு நிலையில் சூழ்நிலையானது சென்று நிலைபெறும் (settle).

இத்தகைய இருதிறப்பட்ட சமநிலைகளுக்கான உதாரணங்களைத் தனிப்பட்ட பண்டங்களின் அங்காடிகளிலும் (markets for individual commodities), பொருளாதார முறை முழுவதிலும் காணலாம். இத்தகைய சமநிலைகளை உதாரணத்துடன் விளக்கவேண்டுமாயின், வழக்கமாக முட்டையைத்தான் உதாரணமாகக் கூறுவர். ஒரு முட்டை சமமான மேற்பரப்பையுடையதொரு மேசையின்மீது படு கிடை அச்சாக வைக்கப்பட்டால், அது ஒரு நிலையான நிலையில் நிலை கொள்ளும். அதனுடைய ஒரு முனையைச் செங்குத்தாகச் சற்று அழுத்திஞல், முட்டை தனது பழைய நிலையினின்றும் அகன்று வேறு பக்கம் செல்லும். ஆஞல், அதன் முனை அழுத்தப்படுவது விடுபட் டதும், முட்டை இயல்பாகத் தன் பழைய நிலைக்கு (ஒரு கடிகாரத்தின் ஊசலியைப்போன்று) வந்துவிடும். இந் நிலை, முட்டை நிலையான சமநிலையிலுள்ளதைக் குறிக்கும். மாருக, முட்டையானது செங்குத்

தான அச்சில் (vertical axis) நேராக நிறுத்தப்பட்டு (இம்மாதிரி நிறுத்துவதற்கு முட்டையின் ஒரு முனையைச் சார்மானமாகச் சற்றுப் பிடித்துக்கொண்டிருக்க நேரிடும்), பின்னர் ஒரு பக்கமாகச் சற்று முட்டையை அசைத்தால், மீண்டும் செங்குத்தான அச்சாகிய பழைய நிலைக்கே முட்டை வருவதற்கான போக்கு ஏற்படாது. மாறாக, அது, புதியதொரு நிலையான இடத்தை அடைகின்றவரையில் பழைய நிலையினின்றும் விலகி விலகிச் சென்றுகொண்டேயிருக்கும். இந் நிலை, நிலையற்றதொரு சமநிலையைக் (unstable equilibrium) குறிக்கும்.

7. பொருளாதார விதிகள் (Economic Laws)

பகுத்தறிமுறை, தொகுத்தறிமுறை போன்ற முறையான பொருளாதார ஆய்வின் விளைவாகப் 'பொருளாதார விதி' என்பது கண்டுபிடிக்கப்படுகிறது. குறைந்துசெல் பயன்பாட்டு விதி (the law of diminishing utility), குறைந்துசெல் விளைவு விதி (the law of decreasing returns), இன்னும் மற்றப் பொதுமைகளை (generalisations) இவ்விதிகளுக்கு உதாரணமாகக் கூறலாம். பொருளாதாரத்தில், பௌதிகம் (physics), இரசாயனவியல் (chemistry) ஆகிய அறிவியல்களைப்போன்று மாறுதலையாயும் ஒருமைப்பாடானவைகளாயுமான உண்மைகளைக் (immutable and universal truths) கூற இயலாது. இயற்கையின் ஆட்சி (natural order) உள்ளவரையில் புவி ஈர்ப்பு விதி (law of gravity) அல்லது பாயில் அவர்களின் விதிகள் (Boyle's Laws) எப்போதும் ஏற்கத்தக்கவைகளாக இருக்கும். ஆனால், பொருளாதாரமோ மனிதர்களைப்பற்றிய அறிவியல். உயிரற்றவைகளைப் போலல்லாது, மனிதர்களுக்கு உள்ளங்களும் (mind) எண்ணங்களும் (wills) வெவ்வேறாக இருக்கின்றன. இதன் விளைவாக, ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் அவர்கள் எவ்வாறு செயலாற்றுவர் என்று ஒருவராலும் நிச்சயித்துக் (certain) கூறமுடியாது. பொருளாதாரம் செய்யவல்லதெல்லாம் அல்லது செய்ய முயல்வதெல்லாம் பகுத்தறி முறையினாலும் தொகுத்தறி முறையினாலும் மனிதக் கூட்டத்தினருக்கு (human-beings in the mass) நெடுங்காலத்தில் பொருந்தக்கூடிய (likley) பொதுமைகளை (generalisations) உணர்த்துவதேயாகும். இவ்வாறு கொணரப்பட்ட விதிகளை, வேறு சொற்களில்• சொல்லப்போனால், சில குறிப்பிட்ட காரணகாரியங்களின் விளைவாக ஏற்படக்கூடிய போக்குகளின் கூற்றுகள் (statement of tendencies) எனக் கூறலாம்.

எடுத்துக்காட்டாக, தேவை விதியை (the law of demand) எடுத்துக்கொள்வோம். பொதுவாகத் தேவை விதியானது ஒரு

பண்டத்தின் விலையானது குறையக் குறைய அது அதிகமாக நுகரப்படும் என்று கூறுகிறது. தனிப்பட்ட ஒரு மனிதரைப் பொறுத்தவரையில் இவ் விதி உண்மையானது என்று தெளிய முடியாது. உதாரணமாக, மக்களில் சிலர் விலை குறைந்து சென்று கொண்டிருக்கும் பண்டங்களை ஏற்கெனவே அதிகமாக நுகர்ந்திருப்பார்களேயானால், அப் பண்டங்கள் என்னதான் விலை மலிந்த போதிலும் அதன் நுகர்ச்சியை அதிகரிக்கமாட்டார்கள். ஆயினும், நுகர்வோர் முழுமைக்கும் நாம் கணக்கிட்டால் இவ்விதி உண்மையாக இருப்பது சாத்தியமாகும். ஏனெனில், அறிவு வாயிலாகவும் அநுபவ வாயிலாகவும் பார்க்கும்போது, பண்டம் விலை மலியும்போது உடனடியாகவோ அல்லது சற்றுக் காலங்கடத்தியோ சில மக்கள் தாங்கள் அப் பண்டத்தை அதிகமாகவே நுகர்கின்றனர்.

பொருளாதார விதிகள் இயற்கை விதிகளைப்போன்று (physical laws) அத்துணை ஒருமைப்பாடானவையென்றும் (universal) நிச்சயமானவையென்றும் (certain) கருத இயலாதெனினும், அவைகளின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிடுவதற்கில்லை. அவ் விதிகள் பெருவாரியான மக்கள் தொகையின் நடவடிக்கையின்மீது அமைக்கப்பட்டிருப்பதால், பொருளாதார நிகழ்ச்சிகளுக்கு அவர்களின் இயல்பானதும் இயற்கையானதுமான (normal and natural) செயல் விளைவையே (reaction) உணர்த்துகின்றன. இவ் விதிகளின் ஒரு குறை, மனிதரின் கூட்டம் எவ்வாறு நடந்துகொள்கிறதோ அதைப்போன்றே தனி மனிதனும் நடப்பான் என்று சரிநுட்பமாகக் கூறுவதற்கில்லை. குறை இருப்பதுபோன்றே ஒரு சிறப்பும் இருக்கிறது. தனி மனிதன் எவ்வாறு நடந்துகொள்வான் என்று சரிநுட்பமாகக் கூறமுடியாதெனினும், சமுதாயம் முழுவதும் எவ்வாறு நடந்துகொள்ளும் என்னும் அடிப்படையில் பொருளாதார விதிகள் அமைக்கப்பட்டுள்ளமையால் விதிகள் வலிமையுடையனவாகவேயுள்ளன. பாராளுமன்றத்தினுல் நிறைவேற்றப்படும் சட்டமொன்று பொருளாதார விதிக்குப் புறம்பானதாக இருக்குமானுல் (உதாரணமாகத் தங்களின் பொருளாதார நலம்பற்றிய விவகாரங்களில் சாதாரண மக்களின் இயற்கையான பற்றுக்கு விரோதமாக) அப் பாராளுமன்றத்தின் சட்டம் நீடித்து நிலைப்பது ஐயப்பாடேயாகும். உதாரணமாக, போர்க்காலத்தில் கொண்டுவரப்பட்ட பங்கீட்டு முறைகளும் (rationing) விலைக் கட்டுப்பாடுகளும் (price regulations) எதனைக் குறிக்கின்றன ? இம் முறைகள் உறுதியுடன் அமலாக்கப்பட்டமையாலும், சமுதாயத்தில் ஒரு சமூக ஒழுக்கம் நிலவியதாலுமே பொருளாதார விதிகள், கள்ளச் சந்தைகள் போன்றவற்றை உருவாக்குவதைத் தடுத்து நிறுத்த முடிந்தது. பல நாடுகளில் மேற்சொன்ன சட்டங்கள் இருப்பினும், பொருளாதார

விதிகள் அவ்வாறு கள்ளச் சந்தைகளை (black markets) ஏற்பட வழி செய்தன. இவ்வாறான சட்டத்திற்குப் புறம்பான செயல்கள் பல நாடுகளில் தடுத்து ஒடுக்கப்பட்டாலும் நாளடைவில் பொருளாதார விதிகளால் ஏற்படும் போக்குகளே வலிமைபெற்றுத் தலைதூக்கின. பொருளாதார விதிகள் ஒருமைப்பாடாகச் செல்லத்தக்கவையாக (validity) இல்லாமற்போயினும், அவ் விதிகள் மனிதரின் தன்மை (human nature), அநுபவம் (experience) ஆகியவற்றில் ஆழ்ந்து ஒன்றிப்போய்விட்டன. மனிதரின் தன்மையைக் கட்டுப்படுத்தவும், சில சமயங்களில் அதனை மாற்றியமைக்கவும் இயலுமென்ற போதிலும், செயல்படுத்துவதென்னவோ கடினமே.

மேலும் படித்தற்குரிய நூல்கள்

Marshall, *Principles of Economics,* Bk. I, Ch. III, Bk. II, Chs. I-IV.

Henderson, *Supply and Demand,* Ch. II.

Robbins, *An Essay on the Nature and Significance of Economic Science*, Chs. IV-V.

Keynes, *The Scope and Method of Political Economy,* Ch. IX, Note A.

P. H. Wicksteed, *The Common Sense of Political Economy* (Routledge, London, 1933), Vol. 1, Bk. I, Ch. II.

# 3. தனி நபரின் தேவை
# (Individual Demand)

## 1. மொத்தப் பயன்பாடும் இறுதிநிலைப் பயன்பாடும்

சென்ற அத்தியாயத்தில் பயன்பாடு என்னும் சொல்லிற்கு விளக்கம் கண்டோம். பொருளாதார ஆய்வு முறைக்குப் 'பயன்பாடு' (utility) என்னும் சொல், ஒரு மனிதர் செல்வ நுகர்ச்சியினின்றும் பெறுகின்ற 'மன நிறைவு' (satisfaction) அல்லது 'இன்பம்' (pleasure) அல்லது 'நன்மை' (benefit) என்னும் பொருளை உணர்த்துவதாகக் கொள்ளப்படுகிறது. இச் சொற்களை ஒரு கணப்பொழுது நோட்டமிட்டால் அவைகள் எத்தகைய தெளிவற்ற சொற்களாயும், குழப்பந் தரத்தக்கனவாயும் இருப்பதைக் காண முடியும். இச் சொற்கள், குறிப்பாக, உள்நோக்கிய (introspective) சொற்களாக இருக்கின்றன—அதாவது, அவைகள் உள்ளடங்கிய மன உணர்ச்சிகளையும் (inner sentiments), மனவெழுச்சிகளையும் (emotions) குறிக்கின்றனவேயல்லாது ஒரு குறிப்பிட்ட தன்மையுள்ள பொருள்களை அல்லது பருப்பொருளியலான பொருள்களை உணர்த்துவதில்லை. ஆனால், அவைகள் உணர்த்தும் நிகழ்ச்சிகள் என்னவோ உண்மையாகவே இருக்கின்றன. உதாரணமாக, 'டை' (tie) அணிதல் ஸ்மித் என்பவருக்குப் பேரின்பமாக இருக்கலாம்; அதே சமயத்தில் பிரௌன் (Brown) என்பவருக்கு அதை அணிவதென்றால் பெருந் தொல்லையாக இருக்கக்கூடும். ஒருவருக்கு அமிர்தமெனத் தோன்றும் ஒன்று மற்றவருக்கு விஷமாக இருக்கக்கூடும். எனவே, பயன்பாடென்பது மனிதனைப் பொறுத்ததாக உள்ளது; அவன் அனுபவிக்கும் பருப்பொருளியலான பண்டத்தைப் பொறுத்ததன்று.

இத்தகையதோர் உள்நோக்கிய தன்மையைப் (introspective nature) பெற்றுள்ள காரணத்தால் மொத்தப் பயன்பாட்டை (total utility)—அதாவது, ஒரு நபர் ஒரு பண்டத்தினின்றும் பெறுகின்ற

மொத்த மன நிறைவு—அளவிடுவதற்கு வழியின்றியுள்ளது. மனித மன உணர்ச்சியை அல்லது மனவெழுச்சியை (sentiment or emotion) அளவிடுவது எவ்வாறு இயலாதோ அதுபோன்றே இதனை அளவிடுவதியலாது. என்னுடைய சொத்தைப்பல்லானது உங்களுடைய சொத்தைப்பல்லைக் காட்டிலும் அதிக வலியைத் தருவதாக நான் கருதலாம். என்னுடைய இந்த நம்பிக்கை சரியானதுதானா என்பதைப் பரிசோதனை செய்து அறிவது இயலாது. அதுபோன்றே ஒரு குறிப்பிட்ட திரைப்படத்தை (film) நீங்கள் என்னைவிட அதிகமாக ரசித்து மகிழ்ந்ததாக நம்பக்கூடும்—ஆனால், இதனை நிரூபிக்க யாதொரு வழியுமில்லை !

இதே நிலை இறுதிநிலைப் பயன்பாட்டில் (marginal utility) இல்லை. இறுதிநிலைப் பயன்பாடென்பது ஒருவர் தாம் நுகருகின்ற பண்டத்தின் கடைசி அலகினால் அவருடைய மொத்தப் பயன்பாட்டிற்கு (total utility) ஏற்படும் கூடுதலான பயன்பாடாகும். நான் ஒரு வாரத்திற்கு மூன்று காலன் கல்லெண்ணெயைப் (petrol) பயன் படுத்துகிறேன் என்று வைத்துக்கொள்வோம். அப்படியானால் நான் அடையும் இறுதிநிலைப் பயன்பாடானது (marginal utility), மூன்று காலன் கல்லெண்ணெயிலிருந்து நான் பெறுகின்ற மொத்தப் பயன்பாட்டிற்கும் (total utility), நான் இரண்டு காலன் கல்லெண்ணெயே பயன்படுத்தியிருப்பேனேயாகில்அதில் கிடைக்கும் மொத்தப் பயன்பாட்டிற்கு மிடையேயுள்ள வேறுபாடாகும். நான் ஒவ்வொரு மாதமும் ஆறு தடவை படக்காட்சிகளுக்குச் (cinema) செல்கிறேன் என்று வைத்துக்கொண்டால், படக்காட்சியைப் பார்ப்பதினின்றும் நான் பெறுகின்ற இறுதிநிலைப் பயன்பாடானது நான் ஆறு படங்களைப் பார்த்ததனின்றும் பெற்ற மொத்தப் பயன் பாட்டிற்கும், நான் ஐந்து படங்களையே பார்த்திருந்தால் அதனின்றும் எனக்குக் கிடைக்கும் மொத்தப் பயன்பாட்டிற்கும் உள்ள வேறுபாடாகும். ஒரு பண்டத்தின் இறுதிநிலைப் பயன்பாடும் ஒருவர் அப் பண்டத்தினின்றும் பெறுகின்ற மொத்தப் பயன் பாட்டை (total utility) அவர் நுகருகின்ற அப் பண்டத்தின் அலகு களின் எண்ணால் (number of units) வகுத்து அதன்மூலம் வருகின்ற பயன்பாடும் ஒன்றே யாகாது.

மொத்தப் பயன்பாட்டிற்கும் (total utility) இறுதிநிலைப் பயன் பாட்டிற்கும் முக்கியமான வேறுபாடொன்றுண்டு. பயன்பாட்டை அளக்கமுடியாதுதான். ஆனால், நுகர்வோர் ஒருவர் தன்னுடைய செலவுப் பட்டியலில் இடம்பெறும் தாம் நுகருகின்ற ஒவ்வொரு பண்டத்தின் கடைசி அலகிலும் (last unit) ஒரே அளவு இறுதி நிலைப் பயன்பாட்டினையே பெறுவார் என்று சொல்லுவதற்கு இயலும்.

இவ்வாறு கூறுவது சற்று விநோதமாக இருக்கக்கூடும். பயன்பாடு என்பதனையே அளவிடமுடியாதெனில், எவ்வாறு இறுதிநிலைப் பயன்பாடுகளத்தனையும் சமம் என்று கூறுவது? இதற்கு விடையளிப்போம். ஒரு மனிதன் தனது வருமானத்தைச் (income) செலவிடும் தன்மையானது தான் நுகரும் ஒரு பண்டத்தின் கடைசி அலகிற்கு (last unit) எவ்வளவு செலவிடத் தயாராக இருக்கின்றான் என்பதனை உணர்த்துகிறது. இதில் ஓர் எடுகோள் (assumption) ஒன்றினையும் கொள்ளுதல்வேண்டும். இவ்வாறு செலவிடும் அம் மனிதன் தனது வரையறுக்கப்பட்ட வருமானத்தில் இயன்றமட்டும் உச்சமான அளவு மனநிறைவை (maximum possible satisfaction) அடைய முயல்கிறான் என்றும், செலவிடும் வகையில் இத்தகையதோர் அறிவுத்திறனுடன் (rationally) நடந்துகொள்ளுகிறான் என்றதுமான எடுகோளை (assumption) மனத்தில் கொள்ளவேண்டும். அம் மனிதன் தான் செலவிடத் தயாராக இருக்கின்ற தொகை பண்டத்தின் கடைசி அலகு அவனுக்குக் கொடுக்கும் அதிகப்படியான மனநிறைவை (extra satisfaction) உணர்த்துவதால் இத் தொகை ஓர் ஒப்புமையான (comparative) அளவை உணர்த்துகின்றதெனக் கொள்ளலாம். கடைசி அலகினை வாங்க அவன் செலவிடும் அதே பணத்தைக் கொண்டு வேறு வகையானதொரு பண்டத்தை வாங்கி அதனின்றும் அவன் அடைந்திருக்கக்கூடும் மன நிறைவுடன் ஒப்புமையைக் காட்டுகின்றது. உதாரணமாக, ஒரு குறிப்பிட்டவகை சாக்லெட்டு மிட்டாய் ஒரு துண்டு (bar) 6 பென்சிற்கு விற்கும்போது ஒருவர் வாரத்திற்கு 3 துண்டுகள் வாங்குகின்றாரென வைத்துக்கொள்வோம். அப்படியானால் இந்த மனிதருக்குச் சாக்லெட்டின் இறுதி நிலைப் பயன்பாடு, அம் மனிதர் 6 பென்ஸ் கொடுத்து வாங்கியிருக்கக் கூடிய மற்றப் பண்டங்களின் பயன்பாட்டிற்குத் தோராயமாகச் சமமாக இருக்கலாமென்று நாம் முடிவு செய்யலாம். அப்படி சாக்லெட்டின் இறுதிநிலைப் பயன்பாடானது அவர் ஆறு பென்ஸைக் கொண்டு வாங்கியிருக்கக்கூடும் மற்றப் பண்டங்களின் இறுதிநிலைப் பயன்பாட்டைவிடக் குறைவாக இருப்பின், அவர் மூன்றாவது துண்டு சாக்லெட்டை வாங்கியிராமல் (இன்னும் கூறப்போனால், இரண்டாவது துண்டு சாக்லெட்டையும் வாங்காமல் இருந்திருப்பார்) ஏனைய மற்றப் பண்டங்களின்மீது பணத்தைச் செலவழித்திருப்பார். சாக்லெட்டிலிருந்து கிடைக்கப்பெறும் இறுதிநிலைப் பயன்பாடு 6 பென்ஸ் கொடுத்து வாங்கப்பெறும் மற்றப் பண்டங்களின் இறுதிநிலைப் பயன்பாட்டைவிட அதிகமாக இருப்பின், அவர் மூன்று சாக்லெட் துண்டுகளுக்கு மேலும் வாங்குவார். அதே சமயத்தில் மற்றப் பண்டங்களை வாங்குவதில் 6 பென்ஸ் குறைத்துக்கொள்வார். அம் மனிதர் மூன்று துண்டுகளை வாங்குவதானது—ஆனால், மூன்று துண்டுகளுக்கு மேல், வாங்காமலிருப்பதானது—எதனைத் தெரிவிக்கிறதெனில், அவர்

அடைகின்ற இறுதிநிலைப் பயன்பாடானது, அவர் 6 பென்சுகளைக் கொண்டு தான் வாங்கியிருக்கக்கூடும் ஏனைய பண்டங்களை வாங்காதொழிந்த தியாகத்திற்குச் (sacrifice) சமமென்பதனை உணர்த்துகின்றது.

அப்படியானால் ஒரு பண்டத்தினின்றும் கிடைக்கப்பெறுகிற மொத்தப் பயன்பாட்டை (total utility) அப் பண்டத்திற்குச் செலவிடப்படும் பணத்தின் மொத்த அளவைக்கொண்டு அளவிட முடியும் என்பது பொருளாகுமா ? மேற்சொன்ன சாக்லெட்டை வாங்குகின்ற மனிதரின் உதாரணத்தில் அம் மனிதர் வாரம் ஒன்றுக்கு 1 ஷில்லிங் 6 பென்சு சாக்லெட் வாங்குவதில் செலவிடுகின்ருரெனில், அவர் சாக்லெட்டிலிருந்து அடையப்பெறுகின்ற மொத்தப் பயன்பாடு 1 ஷில்லிங் 6 பென்சுக்குச் சமமாக இருக்கும் எனக் கூற இயலுமா ? துரதிருஷ்டவசமாக அவ்வாறு கூற இயலாது. அங்காடி விலை (market price) ஒப்புமையான இறுதிநிலைப் பயன்பாட்டினை (comparative marginal utility) உணர்த்துகிறது எனக் கொள்ளலாம். ஆனால், நுகர்வோர் இந்த விலைக்கு விற்கப்படும் எந்தப் பண்டத்தின் எல்லா அலகுகளையும் வாங்குகின்ருர்; அவரின் மொத்தச் செலவு (total expenditure) மொத்தப் பயன்பாட்டைப் (total utility) பிரதிபலிக்கிறது. பண்டத்தின் ஒவ்வோர் அலகினின்றும் பெறப்படுகிற பயன்பாடும், அதன் இறுதிநிலைப் பயன்பாடும் ஒன்ருக இருந்தால்மட்டுமே மேற்சொன்னவாறு மொத்தச் செலவு மொத்தப் பயன்பாட்டைப் பிரதிபலிப்பதாக இருக்கும். இவ்வாறு நாம் கருதுவதற்கு எந்தவிதமான ஆதாரமும் இல்லை. இன்னும் கூறப்போனல், இது உண்மையற்றது என்று கருதுவதற்கு வேண்டுமானல் தகுந்த காரணங்கள் இருக்கின்றன. இத்தகையதொரு வரையறையானது (limitation) அதாவது, இறுதிநிலைப் பயன்பாடு மட்டுமே ஒருவர் நுகர்வோர் தான் கொடுப்பதற்குத் தயாராக உள்ள விலையில் (the price a consumer is willing to pay) பிரதிபலிக்கிறது என்பதும், மொத்தப் பயன்பாடு அவ்வாறு பிரதிபலிப்பதில்லை என்பதும் கருத்து—குறிப்பாக, இந்த நூல் சம்பந்தப்பட்ட ஆய்வுமுறைக்குத் தடையானதாக இல்லை. விலைக்கும் உற்பத்திக்குமிடையே (price and output) சமநிலை நிலவுவதற்கான அடிப்படையான நிபந்தனைகளை இறுதிநிலைப் பயன்பாட்டைக்கொண்டு கூறிவிடலாம். இதில் மொத்தப் பயன்பாடு எடுத்து ஆராயப்படுவதில்லை.

பயன்பாடு சம்பந்தமான கருத்தின் (concept of utility) மிக முக்கியமான குறைபாடு மொத்தப் பயன்பாட்டையும் இறுதிநிலைப் பயன்பாட்டையும் ஒப்புமை செய்வதில் இல்லை; மொத்தப் பயன்

பாட்டையும் பல்வேறு மனிதர்களின் இறுதிநிலைப் பயன்பாடுகளையும் ஒப்புமை செய்வதில்தான் ஏற்படுகிறது. ஒரு பண்டத்தின் ஒப்புமை யான இறுதிநிலைப் பயன்பாடானது (comparative marginal utility) அதை நுகர்வோர் அப் பண்டத்திற்கு எவ்வளவு விலையைக் கொடுப் பதற்குத் தயாராக இருக்கின்றார் என்று கூறலாம் எனினும், ஒரு பண்டத்திற்கு இருவர் ஒரே விலையைக் கொடுத்தபோதிலும், அப் பண்டத்தினின்றும் ஒவ்வொருவரும் பெறுகின்ற இறுதிநிலைப் பயன் பாடு ஒன்றாக இருக்கும் என்பதாகாது. நான் ஒரு துண்டு சாக்லெட்டி லிருந்து அடையும் இறுதிநிலைப் பயன்பாடு 6 பென்சு என்று கூறுகிறேனென்றால், அது நான் அந்த 6 பென்சுக்கு வாங்கியிருக்கக் கூடும் மற்றப் பொருள்களிலிருந்தும் கிடைக்கப்பெறும் இறுதிநிலைப் பயன்பாட்டிற்குச் சமம் என்று கூறுவதாகப் பொருள். ஆனால், 6 பென்சு என்னும் மதிப்பளவில் உணர்த்தப்படும் நான் அடையும் இறுதிநிலைப் பயன்பாடும், அதே 6 பென்சு என்னும் மதிப்பளவில் வேறு பிறர் அடையும் இறுதிநிலைப் பயன்பாடும் ஒன்று என்று கூறி விட முடியாது. ஓர் ஏழைக்கு 6 பென்சு என்பது பெரிதாகத் தோன்ற லாம்; அதே சமயத்தில் ஒரு பணக்காரருக்கு அது மிக அலட்சிய மானதொரு தொகையாகத் தோன்றும். மேலும், ஞானமும் கலை ஆர்வமும் நிரம்பப்பெற்ற சிலர் சில பண்டங்களிலிருந்து அதிக மான அளவு பயன்பாட்டைப் பெறக்கூடும்; அதே சமயத்தில் மற்ற மக்கள் அப் பண்டங்களை ரசிக்க இயலாதவர்களாக இருக்கலாம். இதைப்போன்றே மற்ற மக்களுக்குப் பயன்பாட்டினை அதிக அளவு அளிக்கும் சில பண்டங்கள் கல்வியும் கலை ஆர்வமும் நிரம்பப் பெற்ற ஒருவருக்கு அத்துணைப் பயன்பாட்டை நல்காமல் இருக்கலாம். இத்தகைய காரணங்களால் பல்வேறு மக்கள் அனுபவிக்கும் பயன் பாடுகளைத் தீவிரமான நெறிமுறையில் ஒற்றுமைப்படுத்துதல் என்பது இயலாது; பொது அறிவின் வழி முறையில்தான் ஒப்புமைப்படுத்த இயலும். அங்காடியின் சமநிலையைப் (market equilibrium) பொறுத்தவரையில், இந்தப் பிரச்சினை அடிப்படையான முக்கியத் துவம் வாய்ந்த தொன்றாக இல்லை. எனினும், ஒரு குறிப்பிட்ட பொருளாதாரக் கைக்கோளைக் (economic policy) கடைப்பிடிப்பதன் மூலம் ஒரு சமூகம் ‘ நலம் பெறுகின்றதா ’ (better off) அல்லது ‘தீமை அடைகிறதா’ (worse off) என்று முடிவு கூறுவதில் இது முக்கியத்துவம் வாய்ந்ததாகவே இருக்கிறது. இவ்வாறு சமூகத்தின் மொத்த நலம் (total welfare of the society) அல்லது சமூகத்தின் பல்வேறு பிரிவுகளின் நலம் இவைபற்றித் தீர்ப்புக் கூறுதல் அரசியல் கட்சிகளின் கருத்துகளின்மீது அமையவேண்டுமே தவிர, பொருள் வழிநெறி ஆய்வின்மீது (objective scientific analysis) அமைய வேண்டிய நியதியில்லை.

2. குறைந்துசெல் பயன்பாட்டு விதி (The Law of Diminishing Utility)

அனுபவ வாயிலாக நோக்குதலாலும், பிறருடைய பழக்கவழக்கங்களைக் கூர்ந்து கவனித்தலாலும் தேவையின் தன்மையில் (nature of demand) ஒரு மனித இயல்பு (human characteristic) அடங்கியிருப்பதைக் காணலாம். பொதுவாக, இத்தகைய இயல்பு யாதெனில், மற்றவைகள் மாருமல் அப்படியே இருக்கும் ஒரு சூழ்நிலையில், எந்த ஒரு பண்டத்தின் கூடுதலான அலகுகளை (additional units) நுகர்வதனுல் கிடைக்கக்கூடிய கூடுதலான மனநிறைவானது அப் பண்டத்தை நுகருவது அதிகமாகிக்கொண்டு செல்லச் செல்லக் குறைந்துகொண்டு வரும். என்னுடைய சாப்பாட்டு அறையில் (dining room) உள்ள இரண்டாவது நாற்காலி முதல் நாற்காலியைப்போன்று அத்துணை இன்றியமையாததாக இருப்பதில்லை. அதைப்போன்றே மூன்ருவது நாற்காலி இரண்டாவது நாற்காலியை விடப் பயன் சற்றுக் குறைந்தே காணப்படும். இப்படி நாற்காலிகள் அதிகமாகிக்கொண்டு செல்லச்செல்லப் பயன் குறைந்துகொண்டே செல்லும். நான் பத்தாவது நாற்காலியை வாங்க எண்ணும்போது அந்த இடத்தில் இத்தனை நாற்காலிகளையும் அடைத்துவைத்திருப்பதில் ஏதேனும் பொருள் இருக்கிறதா என்று சிந்திக்கத் தலைப்படுவேன்.

அன்ருட வாழ்க்கையின் இந்தச் சாதாரண உண்மையே பொருளாதார நிபுணர்களால் 'குறைந்துசெல் பயன்பாட்டு விதி' (law of diminishing utility) என்னும் விதியாக அமைக்கப்பட்டுள்ளது. இவ் விதியானது கூறுவது என்னவெனில், மற்றவைகள் சமமாக இருக்கும்போது (other things being equal) ஒரு குறிப்பிட்ட கால அளவில் (over any specified period) ஒரு பண்டத்தை நுகருவதனின்றும் ஒருவர் பெறுகின்ற பயன்பாடானது அவர் அப் பண்டத்தை நுகருவது அதிகமாகிச் செல்லச் செல்ல அதிகரித்துச் செல்லும்; ஆனுல், பயன்பாடு அதிகரித்துச் செல்வதானது பண்டத்தை நுகருவது அதிகமாவதற்குத் தக்கவாறு விரைவாக அதிகரித்துச் செல்வதில்லை. வேறு வழியில் சொல்லப்போனுல் ஒருவர் ஒரு பண்டத்தை நிறைய வைத்திருப்பாரானுல் அதனின்றும் அவருக்குக் கிடைக்கும் இறுதிநிலைப் பயன்பாடு குறைந்துகொண்டே செல்லும். ஆயினும், இங்கே முக்கியமாக ஒன்றனைக் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். 'மற்றச் சூழ்நிலைகள் சமமாக இருக்குமானுல்' (other being equal) என்னும் தகுதியை (qualification) முக்கியமாகக் கவனிக்கவேண்டும். ஏனெனில், நுகர்ச்சி வீதத்தைத் (rate of consumption) தவிர்த்த ஏனைய காரணிகள் (other factors)

மாற்றமடையுமானல் இவ் விதி செயல்படாது. அப்படியானல், இந்தத் தகுதியில் அடங்கியுள்ளவற்றை ஆராய்வோம்.

முதன்மையானதும் மிக முக்கியமானதுமான ஒன்று, வருமானம் நிலையானதாக இருக்கிறது (income is constant) என்பதைக் கருத்தில் கொள்வதாகும். ஒரு பண்டத்தினின்றும் பெறப்படுகின்ற மனநிறைவு (satisfaction) நுகர்வோர் தன்னிடம் வைத்துள்ள மற்றப் பண்டங்களின் (other commodities) எண்ணிக்கை, தரம் இவற்றைப் பொறுத்ததாகும். எனவே, எந்த ஒரு குறிப்பிட்ட காலத்திலும் ஒருவரின் வருமானம் அதிகமானலோ அல்லது குறைந்தாலோ அதன் விளைவாக அவர் ஒரு பண்டத்தினின்றும் பெறுகின்ற இறுதிநிலைப் பயன்பாடும் மாற்றமடையும். அந்த நபர் அந்த ஒரு குறிப்பிட்ட காலத்தின் ஆரம்பத்தில் இருந்ததைவிட அப் பண்டத்தின் ஓர் அலகினின்றும் தான் பெற்ற இறுதிநிலைப் பயன்பாடானது அதிகரித்திருப்பதையோ அல்லது குறைந்திருப்பதையோ காணக்கூடும்.

இரண்டாவதாக, நுகரப்படுகின்ற அடுத்தடுத்த அலகுகளின் (successive units) தன்மை (nature) நிலையானதாக இருக்கிறதெனவும் கருதப்படுகிறது. அதாவது, அந்த அலகுகள் உருவ அமைப்பு ஒரே மாதிரியாக (உதாரணமாக, ஒரு துண்டு சாக்லெட்டானது மற்றச் சாக்லெட் துண்டுகளைப்போலவே சுவை, தரம் முதலியவற்றில் ஒரே மாதிரியாக இருக்கவேண்டும்) இருப்பதோடல்லாமல் அடுத்தடுத்த அலகுகளின் நுகர்ச்சியானது அவைகளின்மீது நுகர்வோர் கொண்டுள்ள அடிப்படையான நோக்கத்தைப் பாதிப்பதாக இருத்தல் கூடாது. உதாரணமாக, சில மருந்துகள் அவைகளையே தொடர்ந்து சாப்பிடும் பழக்கத்தை உண்டுபண்ணத் தக்கவையாக இருக்கின்றன. அவைகளை நுகர்வது அதிகமாகச் செல்லச்செல்ல ஒருவர் அம் மருந்திற்கு அடிமையாகிவிடுகிருர். இத்தகைய சூழ்நிலைகளில் அவருடைய இறுதிநிலைப் பயன்பாடானது குறையாது. இதைப்போன்ற ஒரு பண்டத்தை நுகர்வது ஒருவருக்கு அப்பண்டத்தில் ஒரு தனிப்பட்ட சுவையை உண்டுபண்ணக்கூடும். அப் பண்டத்தை அவர் நுகர்வது அதிகரிக்க அதிகரிக்க அவர் பெறும் இன்பமும் அதிகரிக்கக்கூடும். சில சமயங்களில் பண்டத்தின் முதன்மையான நோக்கம் அல்லது வேலையின் தன்மையில் மாற்றம் ஏற்படலாம். உதாரணமாக, ஒருவர் குறிப்பிட்ட வகையான அரிதான அஞ்சல் தலைகளை (rare stamps) சேகரிக்கின்ருரென வைத்துக்கொள்வோம். இவ்வாறு அவர் அஞ்சல் தலைகளை அதிகமாகச் சேகரித்துச் செல்கிருரென்று கொள்வோம். மேலும் மேலும் அவர் சேகரித்துச் செல்லும் அதிகமான அஞ்சல் தலைகள்

வெறும் அஞ்சல் தலைகளாக மட்டுமல்லாமல் உலகத்தின் ஒரு பெரிய சேகரிப்புக்கான (worlds biggest collection) சாதனங்களாக அமையும். கடைசியாக, பண்டத்தின் ஓர் அலகை நுகருவதற்கும் மற்ற அலகை நுகருவதற்குமிடையேயுள்ள கால அளவானது அதிகமாக இருந்தால் அடுத்தடுத்த அலகுகளில் ஓர் அலகிற்கும் மற்றோர் அலகிற்குமுள்ள தொடர்பு பிரிக்கப்படுவதும் உண்டு.

சுருக்கமாகக் கூறவேண்டுமெனில், குறைந்துசெல் இறுதி நிலைப் பயன்பாட்டு விதியானது, வருமானங்களும் (incomes), சுவைத்திறன்களும் (tastes) நிலையானவைகளாக (constant) இருந்தால்தான் செயல்படும். இவை இரண்டனுள் ஒன்று மாற்ற மடைந்தாலும் விதி செயல்படாது. எனினும், இது விதிக்கு ஒரு தாற்காலிக செயலிழப்பையே (invalidity) உண்டுபண்ணும்; வருமானங்களிலும், சுவைத்திறன்களில் ஏற்பட்ட மாற்றம் மறைந்து அவற்றில் புதிய அமைப்பு ஏற்பட்டவுடன் விதி மீண்டும் செயல்படும்.

### 3. சமநோக்குக் கோடுகள் (Indifference Curves)

பயன்பாடு (utility) என்னும் கருத்தினை (concept) நாம் ஆராயும்போது நடைமுறை உலகத்தில் (real world) அதனுடைய பயனுக்கு (usefulness) தீவிரமான வரையறைகள் (serious limitations) இருப்பது தெளிவாகியது. இக் கருத்து ஓர் உள் நோக்கிய (introspective) கருத்தானதால், அதனை அளவிடுவது இயலாததாக உள்ளது. எனவே, ஒருவர் பல்வேறு பண்டங்களின் ஒப்பீடான இறுதிநிலைப் பயன்பாடுகளைத் (relative marginal utilities) தானே மதிப்பீடு செய்ய இயலுமென்றும், அவர் அவ்வாறு பல்வேறு பண்டங்களுக்குக் கொடுக்க இசையும் விலையானது அவர் அவைகளினின்றும் எவ்வளவு இறுதிநிலைப் பயன்பாட்டைப் பெறுகின்றார் என்பதனை விளக்குகின்றதொரு வழிகாட்டி (guide) எனவும் நியாயமாகக் கருத இயலும். ஆனால், நடைமுறையில் உண்மை வேறாக இருக்கின்றது. இரு நபர்கள் ஒரு பண்டத்தை ஒரே விலைகொடுத்து வாங்குகிறார்களெனக் கொள்வோம். அவ்வாறு ஒரே விலை கொடுத்து வாங்கிய பண்டத்தினின்றும் அவர்கள் பெறுகின்ற பயன்பாடு ஒரேமாதிரியாக இல்லாமல் அதிக அளவில் வேறுபட்டதாக இருக்கக்கூடும். எனவே, பயன்பாடு சம்பந்தமான கருத்துத் தவிர்க்க முடியாத வகையில் தெளிவற்றதாகவும் சிக்கலான தாகவுமே இருக்கிறது.

முக்கியமாக நுகர்வோரின் (consumer) நாட்டம் சம்பந்தமான கோட்பாட்டை (theory of consumer behaviour) அல்லது தேவை

சம்பந்தமான கோட்பாட்டை, சற்றுக் குழப்பம் தவிர்த்து விளக்கும் பொருட்டே, சமநோக்குக் கோடுகளின் (indifference curves) ஆய்வு முறை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இந்த ஆய்வுமுறை எதனைக் கூறுகிறதெனக் காண்போம். பயன்பாடென்பது அளவிட இயலாம லிருக்கும்போது, அனுபவ வாயிலாகவும் சோதனை வாயிலாகவும் மக்கள் பல்வகைப்பட்ட பண்டங்களுக்கிடையே தேர்ந்தெடுக்கும் போது காட்டும் விருப்பத்தரங்கள் (preferences) அளவிட்டுவிட முடியும். புகைவண்டி நிலையத்திலுள்ள சிற்றுண்டிச் சாலையில் (railway refreshment room) ஒருவர் அப்பம் (sandwich) வாங்கு கின்றாரென வைத்துக்கொள்வோம். அந்தச் சிற்றுண்டிச் சாலையில் பாலடைக்கட்டி சேர்த்து செய்யப்பட்ட அப்பங்களும் (cheese sandwiches) தக்காளி சேர்த்துச் செய்யப்பட்ட அப்பங்களும் ஒரே விலைக்கு விற்கப்படுகிறதெனக் கொள்வோம். அப்பம் வாங்குகின்ற அந்த நபர் ஒரு பாலடைக்கட்டி அப்பத்தையே வாங்குவதென முடிவு செய்கிறார். இதனால் எந்த முடிவுக்கு நாம் வரக்கூடும்? பாலடைக் கட்டி அப்பத்தினின்றும் அவர் பெறுகின்ற மனநிறைவின், பூரண மனநிறைவு இவ்வளவு என்று கூறுவது இயலாது. ஏனெனில், அது அளக்கவொண்ணாததாக இருக்கிறது. ஆனால், எது எப்படியிருப் பினும், தக்காளி சேர்த்துச் செய்யப்பட்ட அப்பத்தினின்றும் பெறக் கூடிய மனநிறைவைக் காட்டிலும் பாலடைக்கட்டி சேர்த்துச்செய்யப் பட்ட அப்பத்தினின்றும் பெறுகின்ற மனநிறைவு அதிகமாக இருக் கின்றதென்பதை மட்டும் கூற இயலும். தக்காளி அப்பத்தைவிட்டு பாலடைக் கட்டி அப்பத்தை அவர் தேர்ந்தெடுப்பதற்கு வேறு பிற காரணங்கள் என்ன? மக்கள் எப்போதும் விவேகத்துடன் (rationally) நடந்துகொள்கின்றனரென்றும், இயன்றவரை மிக அதிகமான பயனை அடையும்பொருட்டே தங்களுடைய சாதனங் களைப் பயன்படுத்துகின்றனரென்றும் கருத்துக் கொள்ளப்படுகிறது. இத்தகையதோர் எடுகோளைக் (assumption) கொண்டால், ஒருவர் தனது குறிப்பிட்ட அளவு செல்வத்தை (a certain amount of wealth) 'அ' என்னும் பண்டத்தின் ஓர் அலகை ('ஆ' என்னும் பண்டமும் அதே விலைக்குக் கிடைக்கும்போது) வாங்குவதற்குப் பயன் படுத்துகிறாரென்றால் 'ஆ'வைக் காட்டிலும் 'அ'விலிருந்து அவர் அதிகமான மனநிறைவைப் பெறுவதாக இருக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட பண்டத்தினின்றும் ஒருவர் எவ்வளவு பயன் பாட்டினை அடைகின்றாரென்பதைக் கூற இயலாதாயினும், சமமான அளவு பணத்தைச் செலவழித்து அவர் வாங்கக்கூடிய, ஆனால், வாங்காத பண்டத்தின் பயன்பாட்டைக்காட்டிலும் அதிகமான பயன்பாடு அல்லது குறைவான பயன்பாடு அப் பண்டத்திற்கு உள்ளதென்பதைக் கூற இயலும்.

அன்ருட வாழ்க்கையில் இத்தகைய விருப்பத் தரங்களே (preferences) ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவரால் வெளிக்காட்டப் படுகின்றன. ஒரு பெண்மணி தனது ஆடைக்கான பணத்தை ஒரு கழுத்துக்குட்டையை (scarf) வாங்குவதைக்காட்டிலும் ஒரு தொப்பியை வாங்குவதில் செலவழிக்கின்ருர்; ஒரு மனிதன் ஒரு புதிய நூலை வாங்குவதற்குப் பதிலாக ஒரு புதிய இசைத்தட்டை வாங்குகின்ருன். கடையில் வாங்கப்படுகின்ற ஒவ்வொன்றும் பல்வேறு பண்டங்களுக்கிடையே ஒரு விருப்பத்தரத்தை வெளியிடுகின்றது. வாங்கப்படுகின்ற பண்டங்களில் அதிகமான மனநிறைவு (greater satisfaction) பெறப்படுகின்றதென்பதை இது உணர்த்துகிறது. அதுமட்டுமன்று, வாங்கியிருந்திருக்கக்கூடிய, ஆனல், வாங்க மாட்டாத பண்டங்களைவிட அதிகமான மனநிறைவு பெறப்படுகின்றதென்பதனையும் உணர்த்துகிறது. இத்தகையதோர் ஒப்புமை (comparism) ஒரே விலைக்கு விற்கக்கூடிய பண்டங்களுக்கிடையே இருக்கவேண்டுமென்பதில்லை. நான் இரண்டு படக்காட்சிகளுக்குப் போகக்கூடிய பணத்தைச் செலவழித்து ஒரு நாடகம் பார்க்கிறேனென்ருல், இருதடவை படக்காட்சிகளைக் காண்பதனின்றும் எனக்குக் கிடைப்பதைவிட அதிகமான மனநிறைவு நான் ஒரு நாடகம் பார்ப்பதில் கிடைக்கிறதென்பதே பொருள். (ஆனல், எவ்வளவு அதிகம் என்பதனைமட்டும் யாவராலும் கூறமுடியாது.)

மக்கள் விவேகமுடன் செயலாற்றும்போது, அவர்களுடைய சரியான செலவிடும் தன்மையை (expenditure behaviour) பல்வேறுபட்ட பண்டங்களுக்கிடையே அவர்கள் அளிக்கும் விருப்பத்தரக் கோல்களைக் (scales of preference) கொண்டு விளக்கலாம். இது, இரு ஒப்பீடான செலவுகளில் (comparable expenditure) எது அதிகமான மனநிறைவைத் தருகிறதென்பதை விளக்குகிறது. இன்னும் ஒருபடி மேற்சென்று விளக்குவோமாயின், அவர்கள் வாங்குகின்ற பொருள்களின்மூலம் விளங்குகின்ற அவர்களின் விருப்பத்தரங்கள் (preferences) எந்த இருவேறு பண்டங்களை வாங்குவதில் சமமான மனநிறைவை அடையக்கூடும் என்பதைக் கண்டுபிடிக்கப் பயன் படுகின்றன. மீண்டும், ஒருவர் அப்பங்களைத் தெரிந்தெடுக்கும் உதாரணத்திற்கே வருவோம். அம் மனிதர் பாலடைக்கட்டி அப்பம், தக்காளி அப்பம் ஆகிய இவற்றில் எந்தக் குறிப்பிட்ட ஒன்றுக்கும் விருப்பத்தரம் காட்டாது, அவ் வுணவுச்சாலையில் பணிபுரியும் பெண் இரண்டில் எதையாவது கொடுக்கட்டுமென்று, அவளுடைய விருப்பத்திற்கே விட்டுவிடுகின்ருரெனக் கொள்வோம். அப்படியாயின், அம் மனிதர் அவ்விருவகையான அப்பங்களினின்றும் சமமான மனநிறைவையே (equal satisfaction) அடைகிருர் என்று முடிவு செய்யலாம். ஆனல் ஒன்று; ஏற்கெனவே கூறியதுபோன்றே

இங்கேயும் மனநிறைவின் அளவைப் பூரணமாகக் கூற இயலாது. இதைப்போன்றே, நான் இருமுறை படக்காட்சிகளுக்குச் செல்வதைக் காட்டிலும் ஒருமுறை நாடகம் பார்க்கச் செல்வதற்கே விருப்பத்தரமளிக்கலாம்; ஒருதடவை நாடகத்திற்குச் செல்லுதல் அல்லது மூன்றுமுறை படக்காட்சிகளுக்குச் செல்லுதல் ஆகிய இரண்டனுள் வேறுபடுத்திஎவ்விதக் குறிப்பிட்ட விருப்பத்தரத்தையும் ஒன்றன்மீது செலுத்தாமலிருக்கலாம்; நான்கு தடவைகள் படக்காட்சிக்குச் செல்லுதல், ஒரு தடவை நாடகத்திற்குச் செல்லுதல் ஆகிய இரண்டனுள் படக்காட்சிக்கு நான்கு தடவைகள் செல்லுதலையே விரும்பலாம். நான் விவேகமுடன் செயல்படுகிறேன் என்ற கருத்துகொண்டு நோக்கினால் நான் இரு முறை படக்காட்சிக்குச் செல்வதனின்றும் பெறுவதைவிட அதிகமான மனநிறைவை (more satisfaction) ஒரு தடவை நாடகம் பார்க்கச் செல்வதில் அடைகிறேன் என்றும், நான்கு முறை படக்காட்சிகளுக்குச் செல்வதனின்றும் பெறுவதைவிடக் குறைவான மனநிறைவை ஒரு தடவை நாடகம் பார்க்கச் செல்வதில் பெறுகிறேனென்றும், மூன்று தடவைகள் படக்காட்சிக்குச் செல்லுதல், ஒரு தடவை நாடகம் பார்க்கச் செல்லுதல் ஆகிய இரண்டனுள் சமமான மனநிறைவைப் (equal satisfaction) பெறுகிறேனென்றும் விளங்குகிறது. இவையெல்லாம், இவ்விருவகையான கேளிக்கைகளில் (entertainments) ஒவ்வொன்றிலும் நான் பெறுகின்ற மனநிறைவின் அளவு அல்லது நான் அவைகளுக்குக் கொடுக்கும் விலைக்கும் பெறும் மனநிறைவுக்கும் உள்ள சரிநுட்பமான தொடர்பு ஆகிய இவைகள் தெரிந்துகொள்ளப்படவேண்டிய தேவையில்லாமலேயே முடிவு செய்யப்படுகின்றன.

பின்னர்ச் சொல்லப்பட்டதாகிய உண்மையைத்தான் சமநோக்குக் கோடுகள் (indifference curves) அடிப்படையாகக் கொண்டுள்ளன. அதாவது, குறிப்பிட்ட அளவு ஒரு பண்டத்திற்கும், குறிப்பிட்ட அளவு மற்றொரு பண்டத்திற்கும் இடையே ஒருவர் எந்தப் பண்டத்திற்குமே தனி வகையான விருப்பத்தரத்தைக் காட்டவில்லையெனில்— அதாவது, இவ் விருவகையான மாற்றுப் பண்டங்களில் (alternative) எதைப் பயன்படுத்துவது என்று சமநோக்குடன் இருக்கும்போது— இவ்விருவகைப் பண்டங்களிலிருந்தும் அவர் சமமான அளவு மனநிறைவைப் (equal degree of satisfaction) பெறுகின்றாரெனப் பொருள். செயலாய்வின் (experiment) மூலம் ஒரு குறிப்பிட்ட மனிதருக்கு இரு பண்டங்களின் சேர்க்கைகளில் (combinations) எந்த ஒன்று இத்தகைய தன்மையைப் பெற்றுள்ளதெனக் கண்டு பிடித்துவிடலாம். அம் மனிதரைப் பார்த்து "நீங்கள் 'அ' பண்டத்தில் 10ஐ விரும்புகின்றீர்களா அல்லது 'ஆ' பண்டத்தில் ஒன்றை

விரும்புகின்றீர்களா?'' ''நீங்கள் 'அ' பண்டத்தில் 10ஐ விரும்புகிறீர்களா அல்லது 'ஆ' பண்டத்தில் 2ஐ விரும்புகிறீர்களா?'' என்று எளிதாக அவரைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம். இப்படியே அவரைக் கேட்டுக்கொண்டே போகலாம். 'ஆ' பண்டத்தில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையையும் 'அ' பண்டத்தில் 10ஐயும் கூறினமட்டில் அம் மனிதருக்கு இரண்டையுமே சமநோக்குடன் நோக்கத் தோன்றுகிற நிலை வருகிற வரையில் இவ்வாறு கேள்விகளைக் கேட்டுக்கொண்டே போகலாம். சமநோக்கு நிலை வந்ததும் மீண்டும் கீழ்க்கண்டவாறு கேள்விகளைக் கேட்கத் தொடங்குவோம். முன்னர்க் கேட்டதற்கு மாற்று எண்களாக 'அ' பண்டத்தில் 9ஐயும் 'ஆ' பண்டத்தில் பல்வேறு எண்களையும் ஒப்பிட்டுக் கேள்விகளைக் கேட்டுக்கொண்டே வருவோம். ஒரு நிலையில் 'ஆ' பண்டத்தின் கணியம் 'அ' பண்டத்தின்மீது அவர் கொண்டுள்ள விருப்பத்தைச் சமமாக அளிக்கக்கூடியதாக இருக்கும். இந்நிலை வரும்வரை கேள்விகளைக் கேட்டுக்கொண்டுபோவோம். இம் முறையில் 'அ' பண்டத்தில் இயன்றவரை எத்தனை கணியத்தை (possible quantity) எடுத்து ஒப்பிட முடியுமோ அத்தனைக்கும் கேள்விகளை மீண்டும் மீண்டும் கேட்டுக்கொண்டே போகலாம். 'அ' பண்டத்தின் கணியங்கள் (quantities of *A*) வரைகட்டத்தின் (graph) ஓர் அச்சில் (axis) குறிக்கப்பட்டால் 'ஆ' பண்டத்தின் கணியங்கள் (quantities of *B*) மற்றோர் அச்சில் குறிக்கப்படவேண்டும். நுகர்வோரைச் சமநோக்குடன் பார்க்கச் செய்யும் 'அ', 'ஆ' பண்டங்களின் எல்லாச் சேர்க்கைகளும் (அதாவது, அவர் சம மனநிறைவைப் பெறுகின்ற எல்லா சோடி கணியங்களும்) வரைகட்டத்தில் புள்ளிகளாகக் குறிக்கப்பட வேண்டும். இப் புள்ளிகளனைத்தையும் இப்போது இணைத்துப் பார்த்தால் ஒரு வளைகோடு (curve) தென்படும். இதுவே சமநோக்குக் கோடு (indifference curve) என்றழைக்கப்படுகிறது. இக் கோடு, கொடுக்கப்பட்டுள்ள இரு பண்டங்களின் கணியங்களைக் குறிப்பதோடு, நுகர்வோர் எந்த ஒரு பண்டத்தின் கணியங்களுக்கும் தனியான விருப்பத்தரத்தைக் காட்டுவதில்லை.

எளிதான ஓர் உதாரணம் இதனை இன்னும் தெளிவுபடுத்தும். ஒரு மனிதருக்குப் பத்து ஆப்பிள் பழங்கள் மாறாத ஒரு வருமானமாக (fixed income) உள்ளதென வைத்துக்கொள்வோம். ஆப்பிள் பழங்கள், ஆரஞ்சுப் பழங்கள் ஆகிய இரு பண்டங்களே உள்ளதென வைத்துக்கொள்வோம். அந்த நபரைப் பார்த்து ஓர் ஆரஞ்சுப் பழத்தைப் பெறுவதற்கு எத்தனை ஆப்பிள்களை மாற்றாகக் கொடுப்பதற்கு அவர் தயாராக இருக்கின்றாரெனக் கேட்போம்—அதாவது, எத்தனை ஆப்பிள்களும் ஓர் ஆரஞ்சும் சேர்ந்து பத்து ஆப்பிள்களும் ஆரஞ்சுப்பழம் ஒன்றுகூட இல்லாததும் சேர்ந்து கொடுக்கக்கூடிய

மன நிறைவைப்போல் சமமான மன நிறைவை அளிக்கக்கூடும் என்று கேட்போம். மீண்டும் அவரை மற்றோர் ஆரஞ்சுப் பழத்திற்கு எத்தனை ஆப்பிள் பழங்களைத் தியாகம் செய்யத் தயாராக இருக்கின்றாரெனக் கேட்போம்—அதாவது, எத்தனை ஆப்பிள் பழங்கள் இரண்டு ஆரஞ்சுப் பழங்களுடன் சேர்ந்து, பத்து ஆப்பிள் பழங்களும் ஆரஞ்சுப்பழம் ஒன்றுகூட இல்லாததும் சேர்ந்து அளிக்கக்கூடிய அதே மன நிறைவை (same satisfaction) அளிக்கக்கூடும் என்று கேட்போம். அவர் தன்னிடமுள்ள எல்லா ஆப்பிள் பழங்களையும் கொடுக்கத் தயாராக இருக்கும்படி தூண்ட எத்தனை ஆரஞ்சுப் பழங்கள் தேவைப்படுகின்றனவோ அதுவரையில் மேற்சொன்னவாறு கேள்விகளைத் தொடர்ந்து கேட்டுக்கொண்டே செல்ல வேண்டும். இந்த நுகர்வோருக்கு, சம மன நிறைவை (equal satisfaction) உண்டுபண்ணக்கூடிய ஆப்பிள் பழங்கள் ஆரஞ்சுப் பழங்களின் பல்வேறு சேர்க்கைகள் (different combinations) கொண்டதோர் அட்டவணையை (schedule) அமைக்க இயலும். அவ்வட்டவணை கீழ்க்கண்டவாறு இருத்தல்கூடும்:

| ஆப்பிள் பழங்களின் எண்ணிக்கை | ஆரஞ்சுப் பழங்களின் எண்ணிக்கை |
|---|---|
| 10 | 0 |
| 9 | 1 |
| 8 | 2 |
| 7 | 3 |
| 6 | 5 |
| 5 | 7 |
| 4 | 10 |
| 3 | 13 |
| 2 | 17 |
| 1 | 22 |
| 0 | 27 |

இத்தகைய இயலுகின்ற சேர்க்கைகளுக்கிடையே (possible combinations) நுகர்வோர் சமநோக்குடன் (indifferent) இருப்பார்—எந்தச் சேர்க்கையை அவர் பெற்றபோதிலும் அதனால் அவருக்கு இலாபமோ அல்லது நஷ்டமோ இல்லாமலிருப்பதை உணர்வார். இந்தப் புள்ளிகளெல்லாம் வரைகட்டத்தில் (graph) குறிக்கப்பட்டு—ஆப்பிள்கள் செங்குத்தான அச்சிலும்(vertical axis)ஆரஞ்சுப் பழங்கள் படுகிடை அச்சிலும் (horizontal axis) கணக்கிடப்படுகின்றன—அப் புள்ளிகளை ஒன்று சேர்த்தால் கிடைப்பது ஒரு சமநோக்குக் கோடாகும். படம் 1-ல் 1, 1′ என்பது இத்தகைய சமநோக்குக்

கோடாகும். இக் கோடு நுகர்வோருக்குச் சமமான மனநிறைவை அளிக்கின்ற, பண்டங்களின் பல்வேறு சேர்க்கைகளின் (various combinations of commodities) அட்டவணையாகும்.

இதுவரையில், ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரே சமநோக்குக் கோடு இருப்பதுபோலவே கூறிவந்துள்ளோம். ஆனல், உண்மையில், நுகர்வோரின் இயன்ற மட்டத்திற்குத் (possible level) தக்கவாறு அவைகள் கணக்கற்று ஏராளமாயுள்ளன. சென்ற உதாரணத்தில் நுகர்வோர் ஒருவர்10 ஆப்பிள் பழங்களையும் ஆரஞ்சுப் பழங்கள் ஒன்று கூட இல்லாததொரு சேர்க்கையில் (combination) ஒரு பக்கமும், மற்றொரு பக்கம் ஓர் ஆப்பிள்கூட இல்லாமலும் 27 ஆரஞ்சுகளையும் உடையதொரு சேர்க்கையிலுமாக மனநிறைவை அடைவது எடுத்துக் காட்டப்பட்டது.



படம் 1

இம்முறையில் அந் நுகர்வோர் 10 ஆப்பிள் பழங்களை நுகர ஆரம்பிப்பதற்குப் பதிலாக 11 ஆப்பிள் பழங்களை நுகர ஆரம்பிக்கின்ருர் என்ற எடுகோளிலும் (assumption), பிறகு 12 ஆப்பிள்களில் ஆரம்பிக்கின்ருர் என்றும், 20 ஆப்பிள்களில் ஆரம்பிக்கின்ருர் என்ற எடுகோளிலும் மீண்டும் மீண்டும் வைத்துக் கணக்கிடலாம். ஒவ்வொரு சமயத்திலும் சமமான மனநிறைவை அளிக்கக்கூடிய சேர்க்கைகளை (equally-satisfactory combination) கொண்டதொரு புதிய அட்டவணை நமக்குக் கிடைக்கும். இந்த அட்டவணை ஒவ்வொன்றையும் அடிப்படையாக வைத்து ஒரு சமநோக்குக் கோட்டினை வரைதல் கூடும். முடிவில் இரண்டாவது படத்தில் காட்டியுள்ளதுபோல் ஒரு சமநோக்குக் கோட்டுப் 'படம்' அமையும். இப் படம் ஒவ்வொருவகை மொத்த வருமானத்திலும் சம மனநிறைவை அளிக்கவல்ல சேர்க்கைகளைக் (equally satisfactory combination) காட்டுகின்றது. படத்தில் சமநோக்குக் கோடுகளாகிய $1_1$ $1'_1$, $1_2$ $1'_2$, ஆகிய கோடுகள் இவற்றை உணர்த்துகின்றன.

வலப்பக்கமாகவுள்ள சமநோக்குக் கோடானது உணர்த்துகின்ற சேர்க்கைகள் ஒவ்வொன்றும், இடப்பக்கமாகவுள்ள சமநோக்குக் கோடு உணர்த்துகின்ற எந்தச் சேர்க்கையைக் காட்டிலும் அதிகமான மொத்த மனநிறைவை (higher total satisfaction)

அளிக்கவல்லதாக இருப்பதை உணர்த்துகிறது. உதாரணமாக, $1_3$, $1'_3$ சமநோக்குக் கோடானது ON ஆப்பிள்களும் $OM_2$ ஆரஞ்சுப் பழங்களும் கொடுக்கவல்ல அதே மனநிறைவையே அக் கோட்டின் சேர்க்கைகள் அளிக்கின்றனவென்பதை உணர்த்துகிறது. இதே




படம் 2.

போன்று $1_2$ $1'_2$ என்னும் சமநோக்குக் கோட்டின் ஒவ்வொரு புள்ளியும் (every point) ON ஆப்பிள்கள் $OM_1$ ஆரஞ்சுகளினின்றும் பெறத்தக்க அதே அளவு மனநிறைவை உணர்த்துகின்றது. நுகர்வோர் (consumer), கொடுக்கப்பட்டுள்ள எண்ணிக்கை ஆப்பிள் களுடன் அதைவிட அதிகமான எண்ணிக்கையையுடைய ஆரஞ்சுப் பழங்களுடன் ($OM_2$) சேர்ந்த சேர்க்கையை நுகரும்போது, தான் ஏற்கெனவே அதே எண்ணிக்கையுள்ள ஆப்பிள் பழங்களுடனும், அதைவிடக் குறைந்த எண்ணிக்கையுள்ள ஆரஞ்சுப் பழங்கள் ($OM_1$) சேர்ந்த சேர்க்கையினின்றும் அதிகமான மனநிறைவை அடைய வேண்டும். எனவே, $1_3$, $1'_3$ ஆகிய கோட்டில் உள்ள ஒவ்வொரு புள்ளியும் $1_2$, $1'_2$ கோட்டில் உள்ள ஒவ்வொரு புள்ளியைக்காட்டி லும் அதிகமான மனநிறைவை (greater satisfaction) அளிக்கும்.

இதைப்போன்றே மற்றுமொன்றை முக்கியமாகக் கவனித்தல் வேண்டும். சமநோக்குக் கோடுகள் ஒன்றையொன்று வெட்டிச் (intersect) செல்வதில்லை. அப்படிச் செல்லுமானால், நுகர்வோர் ஒருவர் உயர்ந்த சமநோக்குக் கோட்டிலுள்ள (high indifference curve) ஒரு புள்ளிக்கும், தாழ்ந்த சமநோக்குக் (lower indifference curve) கோட்டிலுள்ள ஒரு புள்ளிக்குமிடையே சமநோக்குடன் (indifferent) இருக்கவேண்டும் என்று பொருள்படுகிறது. ஏனெனில், சமநோக்குக் கோடுகள் ஒன்றையொன்று வெட்டிச் செல்லும் புள்ளி ஒவ்வொரு கோட்டிலும் பண்டங்களின் ஒரேவிதமான சேர்க்கையையே

உணர்த்தும். இது, நாம் ஏற்கெனவே கண்டறிந்த உண்மையான ஒரு சமநோக்குக் கோடானது அதன் ஒவ்வொரு புள்ளியிலும், அதற்கு இடப்புறமாக உள்ள சமநோக்குக் கோட்டிலுள்ள ஒவ்வொரு புள்ளியைக் காட்டிலும் அதிக அளவு மனநிறைவை அளிக்கவல்லதென்பதற்கு முரணானதாகும். எனவே, சமநோக்குக் கோடுகள் ஒன்றையொன்று வெட்டிச் செல்வதென்பது இயலாத தொன்ருகும்.

சமநோக்குக் கோடுகளின் வடிவத்தைப்பற்றிய மற்ருெரு பொதுமையைக் (generalisation) காண்போம். 1ஆவது படத்திலும், 2ஆவது படத்திலுமுள்ள சமநோக்குக் கோடுகளைப் பார்த்தால், கோடுகளின் வடிவம் ஆரம்பத்திலிருந்து குவிந்து செல்வதைக் காணலாம். இவ்வாறு குவிந்துள்ளமை எதனைக் குறிக்கிறது? நுகர்வோரின் ஒரு பண்டத்தின் இருப்பு (stock) குறைந்துகொண்டு வரும்போது அவர் மற்றப் பண்டத்தின் அதிகமான கணியங்களைத் (greater quantities) தேவைப்படுகிருர் என்பதை உணர்த்துகிறது. ஒரு பண்டத்தின் அலகுகளைத் தியாகம் செய்துகொண்டே செல்லச்செல்ல, அதனை ஈடு செய்யும்பொருட்டு இவ்வாறு மற்றப் பண்டத்தின் அதிகமான கணியங்களை அவர் தேவைப்படுகிருர். இந்த நிலை குறைந்துசெல் இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் (diminishing marginal rate of substitution) என்றழைக்கப்படுகிறது. இது வேருென்றுமில்லை; குறைந்து செல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதிக்கு (law of diminishing marginal utility) சமநோக்குக் கோட்டு வடிவத்தில் விளக்கம் தருவதேயாகும். இத்தகையதொரு நிலையை இரு பண்டங்களிலிருந்து எல்லாப் பண்டங்களுக்குமே வைத்து விளக்க விரும்பினுல், எல்லா மற்றப் பண்டங்களையும் (all other commodities), அதாவது, மொத்த வருமானத்தை—படுகிடை அச்சில், அல்லது இன்னும் அதிக வழக்கத்தில் உள்ளதுபோல் செங்குத்தான அச்சில் (vertical) உள்ள பண்டங்களில் ஒன்றுக்குப் பதிலீடாக வைத்துக்கொள்ளலாம்.

சமநோக்குக் கோடு (indifference curve) என்னும் சாதனம் நுகர்வோர் (consumer) ஒரே ஒரு பண்டத்தை நுகர்வதைக் காட்டிலும் பண்டங்களைப் பரிவர்த்தனை செய்துகொள்வதுமூலந் தான் அதிக நன்மையை அடைகிருர் என்பதை எடுத்துக்காட்ட வல்லதாக இருக்கிறது. நுகர்வோருக்கு ON ஆப்பிள்கள் வருமானமாக இருக்கிறதெனக் கொள்வோம். அவருடைய சமநோக்குப் ‘படம்’ (indifference map) படம் 3-ல் காட்டப்பட்டுள்ளது. அவருடைய மனநிறைவு எப்போது மிக உச்சமாக இருக்குமெனில், மிக உயரத்தில் இருக்கக்கூடிய சமநோக்குக் கோட்டில் உள்ள ஆப்பிள்கள் ஆரஞ்சுகளின் சேர்க்கையின்மூலந்தான் கிடைக்கும். உதாரணமாக,

நடைமுறை உலகத்தில் ON : OM என்னும் நடப்பு வீதத்தில் ஆப்பிள்களும் ஆரஞ்சுகளும் மாற்றுச் செய்துகொள்ளப்படுவதை— அதாவது, அங்காடியில் ON ஆப்பிள்களை OM ஆரஞ்சுகளுக்கு மாற்றுச் செய்ய இயலுகின்றதை—நுகர்வோர் அறிகின்றாரெனக் கொள்வோம். இந்த மாற்று வீதத்தை (exchange rate) ஒரு வரை கட்டம் (graph) மூலம் காட்டமுடியும். ON ஆப்பிள்களை உணர்த்தும் செங்குத்து அச்சில் (vertical axis) உள்ள புள்ளியையும், OM ஆப்பிள்களை உணர்த்தும் படுகிடை அச்சில் (horizontal axis) உள்ள புள்ளியையும் சேர்ப்போம். இந்தக் கோடு (இது வரவு செலவுத் திட்டக்கோடு—budget line—என அழைக்கப்படுகிறது) நுகர்வோரின் (consumer) வருமானம் வாங்கக்கூடிய பண்டங்களின் ஒவ்வோர் இயலும் சேர்க்கையையும் (possible combination) உணர்த்துகிறது. இக் கோடு ஏதாவது ஓர் இடத்தில் ஒரு சமநோக்குக் கோட்டினைத் தொட்டுச் (tangent) செல்லும். (நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல், ஒரு சமநோக்குப் படத்தில் கணக்கற்ற கோடுகள் இருப்பதால், வரவு செலவுத் திட்டக் கோடு அவற்றில் ஒன்றை அவசியம் தொட்டுச் செல்லும்படியாகவே இருக்கும்.) இவ்வாறு தொட்டுச் செல்லும் புள்ளியை P என அழைப்போம். இந்தப் புள்ளியானது, நுகர்வோர் தனக்குக் கொடுக்கப்பட்டுள்ள ஆப்பிள்கள், ஆரஞ்சுகள் இவற்றிலும்




படம் 3.

நடப்பு மாற்று வீதத்திலும் (current exchange rate) ஆப்பிள்கள், ஆரஞ்சுகளைக் கொண்ட எந்தச் சேர்க்கையைத் (combination) தேர்ந்தெடுக்கின்றார் என்பதனை உணர்த்துகிறது. மூன்றாம் படம் விளக்குவதுபோன்று, இது, நுகர்வோர் $NN_1$ ஆப்பிள்களை $OM_1$ ஆரஞ்சுகளுக்கு மாற்றுச் செய்வாரென்றும், தனது மொத்த ஆப்பிள் வாங்கும் சக்தியாகிய ON ஆப்பிள்களில் $ON_1$ ஆப்பிள்களையே நுகர்

கிருரென்றும், எச்சமாக உள்ள வருமானத்தை (rest of his income) ஆரஞ்சுகளாகப் பெற்றுக்கொள்வாரென்றும் உணர்த்துகின்றது.

இப்படி நுகர்வோர் செய்யக் காரணம் என்ன ? மாற்றுச் செய்யும் போது நுகர்வோர் $1_4$ $1'_4$ என்னும் சமநோக்குக் கோட்டில் ஒரு புள்ளியை அடைய முடிகின்றது. கொடுக்கப்பட்டுள்ள அவருடைய ஆப்பிள்களின் ஆரம்ப இருப்பிலும், நடப்பு ஆப்பிள் ஆரஞ்சு மாற்று வீதத்திலும் NM என்னும் வரவுசெலவுத் திட்டக் கோடு (budget line) அவருக்குள்ள வருமானத்தை நுகருவதற்கான எல்லா வழிகளையும் (all possible ways of consuming) உணர்த்துகிறது. நுகர்வோருக்கு $1_4'$, $1'_4$ ஆகிய சமநோக்குக் கோட்டைவிட அதிகமான உயரத்திலுள்ள (அதாவது, வலப்பக்கத்திலுள்ள) ஒரு சமநோக்குக் கோட்டில் ஒரு புள்ளியை அடைந்துவிட முடியாது. ஆனல், அவரால் $1_4$, $1'_4$ என்னும் சமநோக்குக் கோட்டில் ஒரு புள்ளியை அடைய முடியும். இந்தக் கோட்டில் ஒரு சேர்க்கையை அவர் பெறுவதன் மூலமே, மற்றபடி கீழே உள்ள கோடுகளில் கிடக்கும் எந்தச் சேர்க்கையைக் காட்டிலும், அதிகமான மனநிறைவை அடைதல் கூடும். எனவே, P என்னும் புள்ளியானது—வரவுசெலவுத் திட்டக் கோடானது சமநோக்குக் கோட்டைத் தொட்டுச் செல்லும் புள்ளி—நுகர்வோர் அதிகபட்ச (maximum) மனநிறைவை (கொடுக்கப்பட்டுள்ள அவருடைய ஆரம்ப வருமானத்திலும், ஆப்பிள், ஆரஞ்சுகளுக்கிடையேயுள்ள மாற்று வீதத்திலும்) அவர் அடையக்கூடும் என்பதனை உணர்த்துகின்றது.

இந்த முடிவை ஒரு வெகு முக்கியமான உண்மையாகிய நுகர்வோர்-செயல்முறைக் கோட்பாடு (consumer-behaviour theory) அல்லது நுகர்வோர்-தேவைக் கோட்பாடாக அமைக்கலாம். ஒரு சமநோக்குக் கோட்டின் சரிவிலுள்ள (slope) எந்த ஒரு புள்ளியும் நுகர்வோர் எந்த வீதத்தில் ஒரு பண்டத்தை மற்றொரு பண்டத்திற்கு மாற்றுச் செய்வதற்குத் தயாராக இருக்கின்ருர் என்பதைத் தெரிவிக்கும். படம் 4 ஒரு சமநோக்குக் கோட்டினைப் பெரிது செய்து அதன் ஒரு பிரிவை விளக்குவதாக உள்ளது. AB பிரிவின் (section AB) சரிவானது, நுகர்வோர் தான் 10 ஆப்பிள்களைத் தியாகம் செய்வதற்குப் பதிலாக (தனக்குக் கொடுக்கப்பட்டுள்ள



படம் 4.

ஆரம்ப இருப்பாகிய 70 ஆப்பிள்களில்) அதிகப்படியாக 30 ஆரஞ்சுப் பழங்களை அவர் வேண்டுவார் (தான் இலாபமடைந்ததாகவோ அல்லது நஷ்டமடைந்ததாகவோ அவர் நினைக்காமலிருக்க வேண்டுமாயின்) என அறிவிக்கின்றது. சமநோக்குக் கோட்டின் மிகச் சிறிய பிரிவினை எடுத்து அதன்மூலம் ஒவ்வொரு பண்டத்தின் சிறிய எண்ணிக்கையை ஆராய்ந்தோமானல், ஒரு புள்ளியிலுள்ள சரிவை (the slope at one point) நாம் கண்டுபிடிக்கலாம். இது, நுகர்வோர் ஒரு பண்டத்தின் ஓர் அலகை (one unit of one commodity) மற்றொரு பண்டத்தின் ஓர் அலகிற்கு எந்த வீதத்தில் மாற்றுச் செய்யத் தயாராக இருக்கின்றாரென்பதை உணர்த்துகின்றது. அதாவது, ஆரஞ்சுகளைக் கொடுத்துவிட்டு ஆப்பிள்களைப் பெறுகின்ற அவருடைய இறுதிநிலை மாற்று வீதத்தைக் (marginal rate of exchange) குறிக்கின்றது. இதனை ஆப்பிள்களுக்குப் பதிலாக ஆரஞ்சுகளைப் பெறுவதற்கு அவருடைய இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் (marginal rate of substitution) எனவும் வழக்கமாக அழைப்பதுண்டு. வரவுசெலவுத் திட்டக் கோடானது (budget line) சமநோக்குக் கோட்டினைத் தொட்டுச் செல்லுமாயின், இது இரண்டு கோடுகளும் தொடுகின்ற புள்ளியில் நிச்சயமாக ஒருமித்த சரிவை (same slope) உடையனவாக இருக்கின்றனவென்று பொருள் படும். அதாவது, இறுதிநிலைப் பதிலீட்டு வீதமானது (marginal rate of substitution) இரண்டு பண்டங்களின் ஒப்பீடான விலைகளுக்குச் (relative prices of the two commodities) சமமாக (equal) இருக்குமென்று பொருள். [இது கீழ்க்காணும் கருத்தாகிய சமமான சூழ்நிலையில்—(in equilibrium) தனது செலவை எவ்வாறு பகிர்ந்து செலவிடுகின்றாரெனில், இறுதிநிலைப் பயன்பாடானது எங்கேயும் விலைக்கு ஏற்றவாறு ஒரேவீதத்தில் (same proportion to price)—இருக்கும்படி செலவு செய்கிறார் என்பதற்கு இணையான கூற்றாக இருக்கிறது.] இரு கோடுகளும் தொடுகின்ற இந்தப் புள்ளியில் (point of tangency) நுகர்வோர் தன்னுடைய வருமானத்தினின்றும் அதிகபட்ச மொத்த மனநிறைவை (maximum total satisfaction) அடைகின்றாரென்பது சற்று முன்பு எண்பிக்கப்பட்டதால், எந்த ஒரு நுகர்வோரும் இரு பண்டங்களுக்கிடையே தனது இறுதிநிலைப் பதிலீட்டு வீதத்தை அவைகளின் ஒப்பீடான விலைகளுக்குச் சமமாகக் கொண்டுவந்தால், தனது வருமானத்தினின்றும் மிக அதிகமான மனநிறைவை அடையக்கூடும் என்பது புலனாகிறது. இந்த வாதமானது இரண்டு பண்டங்களை மட்டிலுமே பொறுத்ததாக இருப்பினும், எந்த இரண்டு பண்டங்களைப்பற்றியும் இருக்கலாமாதலால் நுகர்வோரின் செலவு (consumer expenditure) முழுமைக்குமே பொருந்தும்.

4. சம இறுதிநிலை விளைவுகள் (Equi-marginal Returns) என்னும் கருத்து

இது ஓர் அடிப்படையான கோட்பாடாகும். வரையறுக்கப்பட்ட சாதனங்களை (அதாவது, அளவான வருமானத்தை) உடைய நுகர்வோர்கள் (consumers), அவர்கள் இன்பம் பெறக்கூடிய கணக்கற்ற எண்ணிக்கையுள்ள பல்வேறு பண்டங்கள், பணிகள் ஆகியவைகளுக்கிடையே எவ்வாறு தங்களின் செலவைப் பகிர்ந்து செலவிடுகின்றனர் என்பது பற்றியதாகும். இந்தக் கோட்பாடானது நுகர்வோர்கள் தங்களது வரையறுக்கப்பட்ட வருமானத்தினின்றும் அதிகபட்சப் பயன்பாட்டினை (maximum utility) அடைய விழைகின்றனரென்பதும், இந்தக் குறிக்கோளை அடைய அவர்கள் விவேகமுடன் (rationally) நடந்துகொள்கின்றனரென்பதுமான ஓர் எண்பிக்கப்படாத கருத்தினைக் கொள்ளும்போதுதான் செயற்படுகிறது. மக்கள் நடைமுறை வாழ்க்கையில் (real life) அவர்களுக்குக் கிடைக்கின்ற சடப்பொருள்களில் (material things) அதிகபட்ச இன்பத்தை (greatest enjoyment) அனுபவிக்கவேண்டுமென்ற குறிக்கோளை எப்போதுமே வைத்துக்கொண்டிருப்பதில்லை என்றும் வாதிடலாம். அவர்கள் பல சமயங்களில், தங்களது பொருள்சார் நலன்களுக்குப் (material interests) புறம்பாகவே நடந்துகொள்கின்றனர். உதாரணமாக, சமய அல்லது அரசியல் நம்பிக்கைகளால் அவ்வாறு நடந்துகொள்கின்றனர். இதைப்போன்றே, மக்கள் தங்கள் நடத்தையில் எப்போதும் விவேகமுடன் நடந்துகொள்வதில்லை என வாதிடலாம். அவர்களின் முடிவானது விவேகமற்ற சக்திகளால் (மூடநம்பிக்கைகள் அல்லது முரட்டு மனப்போக்குகள் ஆகியவற்ருல்) அல்லது கருத்தியலான (logical) வழிகள் இருப்பினும் அவைகளைத் தெரியாத காரணத்தால் பாதிக்கப்படுகின்றது.

இந்த வாதங்களில் கணிசமான அளவிற்கு உண்மை இருக்கவே செய்கின்றது. ஆனுல், பொருளாதார விற்பன்னரோ (economist) தனது அடிப்படையான முற்கோளாகிய (basic postulate) ‘பயன்பாட்டினை அதிகபட்சமாக்குதல்’ (utility-maximisation) என்பதை இரண்டு காரணங்களுக்காகக் கடைப்பிடிப்பது நியாயம் என்று கூறுவார். முதலாவது காரணம், பொருளாதார நடவடிக்கைகளைப் பொறுத்தமட்டில் மக்கள் தங்களது நோக்கங்களில் (motives) அல்லது செயல்களில் (actions) எப்போதுமே தீவிரமான விவேகத்துடன் நடந்துகொள்ளமாட்டார்களெனினும், பொருளாதார ஆய்வின் பெரும்பகுதி, கருத்தியலான பகுத்தறி முறையால்தான் மேற்கொள்ளப்படுகிறது. விவேகத்துடன் நடந்துகொள்ளுதல் என்னும் எடுகோள் (assumption) கைவிடப்பட்டால், பிறகு முறையான ஆய்வு என்பது (systematic analysis) இயலாத காரிய

மாகிவிடும். இந் நிலை பொருளாதார விற்பன்னர்களைக் கொடுக்கப் பட்டுள்ளதொரு சூழ்நிலையில் கணக்கற்ற நடைமுறைச் சாத்தியங்கள் (infinite possibilities) இருக்கின்றன என்று கூறுகின்றவர்களாக்கி விடும். இத்தகைய முடிவை அவர்கள் கூறுவார்களாயின் எந்த ஒரு பயனுமில்லை. இரண்டாவதாக, மனிதர் ஒவ்வொருவரும் எல்லா நேரத்திலும் விவேகத்துடன் நடந்துகொள்கின்றனரென்ற எடுகோள் (assumption) எப்போதுமே உண்மையானதாக இருப்ப தில்லையென்றாலும், பெரும்பாலான மக்கள் (most people) பெரும்பா லான சமயங்களில் (most of the time) விவேகமுடன் நடந்து கொள்வது உண்மையானதாகவேயிருக்கிறது. மனிதச் செயற் பாங் கின் பொதுமைகள் எல்லா மக்களிடையேயும் எல்லா நேரங்களிலும் உண்மையானவையாக இருப்பதில்லை. பொருளாதார விற்பன்னர், தனி மனிதர்களை ஆராயாமல் சமூகம் முழுமையையுமே ஆராயும் பணியில் ஈடுபட்டிருப்பதால், மனிதரின் பொருளாதார செயற்பாங்கு (human economic behaviour) பற்றிய தனது எடுகோளானது (assumption) மிகவும் உண்மையானதொரு பொதுமையெனக் கருதுகிறார்.

மக்கள் பொதுவாகத் தங்களது பயன்பாட்டை (utility) அதிக பட்சமாகத் (maximum) பெறுவதையே விழைகின்றனரென்பதும், இந்தக் குறிக்கோளை நோக்கியே அவர்கள் விவேகமுடன் செயலாற்று கின்றனரென்பதுமான எடுகோளை (assumption) வைத்துக்கொண்டு நோக்குமிடத்து, சமநோக்குக் கோட்டின் ஆய்வானது (indifference curve analysis), மக்கள் தங்கள் செலவைப் (expenditure) பல்வேறு பண்டங்களுக்கிடையே எவ்வாறு பகிர்ந்து செலவிடுகின்றனரெனில் அவர்கள் வாங்குகின்ற ஒவ்வொரு பண்டத்திலிருந்தும் கிடைக்கக் கூடிய இறுதிநிலைப் பயன்பாடானது (marginal utility) அதன் விலைக்கு ஒப்பீடாக (same relationship) இருக்கும்படி செலவிடு கின்றனர் என்னும் பொதுமையை (generalisation) ஏற்படுத்து கின்றது. இதுவே பொதுவாக, சம இறுதிநிலை விளைவுகள் விதி (law of equi-marginal returns) என அழைக்கப்படுகின்றது. இதற்கு முன் பிரிவில் இப் பொதுமை சமநோக்குக் கோடுகளால் விளக்கப்பட்டது. ஆனால், அட்டவணை 1-ல் கொடுக்கப்பட்டுள்ள கணக்கியல் உதாரணம் (arithmetical example) பொதுமையை இன்னும் தெளிவுபடுத்துகின்றது. இந்த உதாரணத்தில் ஒருவர் தன்னுடைய வருமானமாகிய 46 ஷில்லிங்குகளை ஆட்டுக்கறி (meat), மீன் (fish), பாலடைக்கட்டி (cheese) ஆகியவற்றில் எவ்வாறு பகிர்ந்து செலவழிப்பது என்பதை முடிவு செய்ய முயல்கிறார் என்ற எடுகோள் கொள்ளப்படுகிறது.

அட்டவணை 1: சம இறுதிநிலை விளைவுகள்
ஒவ்வொரு பவுண்டிலிருந்தும் பெற்ற இறுதிநிலைப் பயன்பாடு

| நுகர்ந்த பவுண்டுகள் (Pounds consumed) | ஆட்டுக்கறி (ஒருபவுண்டு: 6 ஷில்.) | மீன் (ஒரு பவுண்டு: 4 ஷில்.) | பாலடைக்கட்டி (ஒரு பவுண்டு: 2 ஷில்.) |
|---|---|---|---|
| 1 | 25 | 20 | 21 |
| 2 | 18 | 15 | 17 |
| 3 | 12 | 11 | 14 |
| 4 | 10 | 8 | 10 |
| 5 | 9 | 6 | 7 |
| 6 | 8 | 5 | 4 |
| 7 | 5 | 2 | 3 |
| 8 | 3 | 1 | 2 |

மேலும், ஒவ்வொரு பண்டத்தின் அடுத்தடுத்த அலகினின்றும் பெறப்படுகின்ற இறுதிநிலைப் பயன்பாடானது (marginal utility derived from successive unit) சம்பந்தப்பட்ட நபரால் ஏதோ ஒரு விளக்கப்படாத அலகினுல் (undefined unit) மனத்தால் மதிப்பீடு (mentally assessed) செய்யப்படுகிறதென்ற எடுகோளும்—உதாரணத்திற்குமட்டும் கொள்ளப்படுகிறது. மேற்கண்ட உதாரணத்தில், அவர் 3 பவுண்டுகள் மாமிசமும், 4 பவுண்டுகள் மீனும், 6 பவுண்டுகள் பாலடைக்கட்டியும் வாங்குவார். காரணம், இந்த வகையில்தான் ஒவ்வொரு பண்டத்தினின்றும் பெறுகின்ற இறுதிநிலைப் பயன்பாட்டு விகிதமும் (ratio) அதன் விலைக்கேற்ப எங்கும் சமமாக இருக்கும் (2-க்கு 1 என்ற விகிதத்தில்)—மாமிசத்திற்கு 12 ஷில்லிங்கிற்கு 6 ஷில்லிங் என்ற விகிதத்திலும், மீனுக்கு 8 ஷில்லிங்கிற்கு 4 ஷில்லிங் என்ற விகிதத்திலும், பாலடைக்கட்டிக்கு 4 ஷில்லிங்கிற்கு 2 ஷில்லிங் என்ற விகிதத்திலும் இருக்கும். இத்தகையதொரு செலவீட்டின் பகிர்வில் (distribution of expenditure) என்ன முக்கியத்துவம் இருக்கிறதெனில், அது ஒவ்வொரு சோடி பண்டங்களினுடைய இறுதிநிலைப் பயன்பாட்டினையும் (marginal rate of substitution of each pair of commodities) அவைகளின் ஒப்பீடான விலைகளுக்குச் (relative prices) சமமாக இருக்கும்படி செய்கின்றது. நுகர்வோர் (consumer) மூன்ருவது பவுண்டு மாமிசத்திலிருந்து பெறும் பயன்பாடு 12 அலகுகளாகும். அதே சமயத்தில் 4ஆவது பவுண்டு மீனினின்றும் பெறுவது 8 அலகுகளாகும். இவையிரண்டுக்குமிடையேயுள்ள வீதம் (அதாவது, இவையிரண்டுக்கு

மிடையே உள்ள இறுதிநிலைப் பதிலீட்டு வீதம்) 12-க்கு 8 என்ற விகிதத்தில் இருக்கும்—இது அவைகளின் விலைகளின் விகிதத்திற்குச் (6 ஷில்லிங்கிற்கு 4 ஷில்லிங்) சமமாக இருக்கும். இதைப் போன்றே மாமிசத்திற்கும் பாலடைக்கட்டிக்குமிடையேயுள்ள பதிலீட்டு வீதம் 12 : 4 என்னும் விகிதத்தில் உள்ளது. இது மாமிசத்திற்கும் பாலடைக்கட்டி ஆகிய இவைகளின் ஒப்பீடான விலைகளுக்குச் (relative prices)—அதாவது, 6 ஷில்லிங் : 2 ஷில்லிங்—சமமாக உள்ளது. கடைசியாக, மீனுக்கும் பாலடைக்கட்டிக்கு மிடையேயுள்ள இறுதிநிலைப் பதிலீட்டு வீதமானது 8: 4 என்னும் விகிதத்தில் உள்ளது. இதுவும் அவைகளின் ஒப்பீடான விலைகளுக்குச் (4 ஷில்லிங் : 2 ஷில்லிங்) சமமாக உள்ளது.

அட்டவணையை நோக்குமிடத்து, இதற்குச் சமமான அதிக மட்ட மன நிறைவை (high level satisfaction) நுகர்வோருக்கு வேறு இயலும்படியான எந்த விதச் செலவின் பகிர்வும் (no other possible distribution of expenditure) அளித்துவிட முடியாது என்பது விளங்கும். உதாரணமாக, அட்டவணை 1-ல் நுகர்வோர். ஒரு பவுண்டு மாமிசத்தை அதிகம் வாங்குவதன் மூலமும், ஒரு பவுண்டு மீன், பாலடைக்கட்டி இவற்றைக் குறைத்து வாங்குவதன் மூலமும் அவர் அதிகமான பவுண்டு மாமிசத்தினின்றும் எவ்வளவு இலாபம் அடையக்கூடுமோ (10 அலகுகள்) அதைவிட அதிகமான நஷ்டத்தை, அவர் தியாகம் செய்கின்ற மீன், பாலடைக்கட்டி இவற்றால் நேரும் பயன்பாடு இழப்பால் (முன்னர்ச் சொல்லப்பட்டதில் 8 அலகுகளும், பின்னர்ச் சொல்லப்பட்டதில் 4 அலகுகளும்) பெறுவார். உண்மையில், குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதி செயற்படும்போது அதிகபட்சப் பயன்பாட்டினைப் (maximum utility) பெறவேண்டுமேயாகில், இறுதிநிலைப் பதிலீட்டு வீதங்கள் எங்கிலும் அவைகளுக்கு ஒப்பீடான விலைகளுக்குச் (relative prices) சமமாக இருக்கவேண்டுமென்னும் நிபந்தனை நிறைவேற்றப்படவேண்டும். இந்த நிலையை எய்திய பிறகு (after this point has been reached) ஒரு பண்டத்தை நுகராதொழிந்து மற்றொரு பண்டத்தைக் கூடுதலாக நுகர்வதானது, ஒரு பண்டத்தின்மீது கூடுதலாகச் செலவழிக்கும் ஒவ்வொரு ஷில்லிங்கினின்றும் பெறுகின்ற இறுதிநிலைப் பயன்பாடானது மற்றொரு பண்டத்தின்மீது 1 ஷில்லிங் குறைத்துச் செலவழிப்பதால் செய்யப்படும் தியாகத்தைக் (sacrifice) காட்டிலும் குறைவாகவே யிருக்கும். பயன்பாட்டினை நம்மால் அளக்க (measure) இயலாதென்பதானது, இப் பொதுமை (generalisation) செல்லுபடியாக (valid) இருப்பதை எவ்விதத்திலும் பாதிக்காது. ஒரு பொருளானது அதனின்றும் ஒரே சமயத்தில் நீக்கப்படுகின்ற அலகுகளைக் காட்டிலும் சிறிய அலகுகள் (small units) அதனுடன் சேர்க்

கப்படும்போது, அந்த முறையின்மூலம் அது குறைக்கப்படுகின்ற அளவு இவ்வளவு என்பது நமக்குத் தெரிந்திருக்க வேண்டுமென்பதில்லை.

5. விலைகளின் விளைவுகளைப்பற்றிய ஆய்வு (The Analysis of Price Effects)

சமநோக்குக் கோடுகளின்மூலம் இந்த ஆய்வினை (analysis) ஒருபடி மேற்சென்று ஆராய முடிவதோடுகூட, இரண்டு பண்டங்களின் ஒப்பீடான விலைகளில் ஏற்படும் மாற்றத்தால் ஒரு நுகர்வோரது செலவுத் தன்மையில் (expenditure pattern) ஏற்படும் விளைவுகளை ஆராயவும் இயலும். எப்போதுமே ஒரு நுகர்வோரின் உண்மை வருமானம் (real income) படம் 5-ல் காட்டியுள்ள




படம் 5.

சமநோக்குக் கோடு உணர்த்தும் மனநிறைவின் மட்டத்தை (level of satisfaction) அடையத் துணைசெய்வதற்கே போதுமானதாக இருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். ஆரஞ்சுப் பழங்களின் ஒப்பீடான விலைகள் (relative prices of oranges), OA கணிய (quantity) ஆரஞ்சுகள் OP கணிய ஆப்பிள்களைக் கொடுத்து வாங்கும்படியாக இருக்கும்போது, வரவுசெலவுத் திட்டக் கோடு

(budget line) PA ஆக இருக்கும். இந்தக் கோடு மிக உயரத்தில் பெறக்கூடிய சமநோக்குக் கோட்டினை $X_1$ என்னும் புள்ளியில் தொடுகின்றது. எனவே, நுகர்வோர் $OM_1$ ஆரஞ்சுகளையும் $ON_1$ ஆப்பிள்களையும் வாங்குவார்.

தற்போது ஆரஞ்சுகள் விலை, OQ ஆப்பிள்களைக் கொடுத்துவிட்டு OB ஆரஞ்சுகளை வாங்கக்கூடிய அளவிற்கு மலிவாகிவிட்டதெனக் கொள்வோம். வரவு செலவுத் திட்டக் கோடானது QB-க்குக் குறுக்கே செல்லுகிறது. இது சமநோக்குக் கோட்டை $X_2$ என்னுமிடத்தில் தொடுகிறது. இந்தப் புள்ளியில்தான் நுகர்வோர் $OM_2$ ஆரஞ்சுகளையும், $ON_2$ ஆப்பிள்களையும் வாங்குவார். இதைப் போலவே, ஆரஞ்சுகள் இன்னும் விலை நயமாக விற்கும்போது, அதாவது, OR ஆப்பிள்களைக்கொண்டு OC ஆரஞ்சுகளை வாங்க முடியும் என்ற நிலை ஏற்படும்போது, நுகர்வோர் $OM_3$ ஆரஞ்சுகளையும் $ON_2$ ஆப்பிள்களையும் வாங்குவார்.

எனவே, செலவழிக்கும் தன்மையின் போக்கு இவ்வாறு தெளிவாகவே நமக்கு விளங்குகிறது. மற்றப் பண்டத்திற்கு ஒப்பீடாக ஒரு பண்டத்தின் விலை இறங்கும்போது நுகர்வோர் தனது செலவழிக்கும் தன்மையை மாற்றிக்கொள்கிருர். விலை மலிவாயுள்ள பண்டத்தை அதிகமாகவும், இதற்கு ஒப்பீடாக அதிகமான பண்டத்தைக் குறைவாகவும் நுகருவதற்கு ஏற்ருற்போல் தனது செலவழிக்கும் தன்மையை மாற்றியமைத்துக்கொள்வார். இது உண்மையில் சம இறுதிநிலை விளைவுகளின் கோட்பாட்டை வேறுவிதமாகக் கூறுவதாகும். ஒரு நுகர்வோர், ஏற்கெனவே விவரிக்கப்பட்ட சமநிலையிலிருந்து ஆரம்பிக்கும்போது—அதாவது, எந்த இரண்டு பண்டங்களுக்குமிடையேயுள்ள இறுதிநிலைப் பதிலீட்டு வீதமானது (marginal rate of substitution) அவைகளின் விலைகளுக்குச் சமமான விகிதத்தில் (ratio) இருக்கும்போது—மற்றவைகள் மாருமல் அப்படியேயிருக்கும்போது—ஒரு பண்டத்தின் விலை இறக்கமானது (a fall in price of one commodity) அதனுடைய இறுதிநிலைப் பதிலீட்டு வீதத்தை அதன் ஒப்பீடான விலைக்குமேல் (relative price) அதிகமாக இருக்கும்படி செய்யும். எனவே, நுகர்வோர் விலை குறைக்கப்பட்ட பண்டத்தை அதிகமாக வாங்கியும், விலை குறைக்கப்படாத பொருள்களைக் குறைவாக வாங்கியும் தனது மொத்த மனநிறைவை (total satisfaction) அதிகப்படுத்த முடிகின்றது. குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதியானது செயற்படும்போது, மலிவான (ஒப்பீடான) பண்டத்தின் கூடுதலான அலகுகளினின்றும் (additional units) பெறப்படுகின்ற இறுதிநிலை மனநிறைவு (marginal satisfaction) குறைந்துகொண்டே செல்லும்;

அதே சமயத்தில் நுகர்ச்சியானது குறைக்கப்பட்டுள்ள பண்டங்களினின்றும் பெறப்படும் இறுதிநிலை மனநிறைவு (marginal satisfaction) அதிகமாக இருக்கும். இது எதுவரையில் அதிகமாக இருக்குமெனில், ஒப்பீடான விலைகளுக்கும் (relative price), ஒப்பீடான இறுதிநிலைப் பயன்பாடுகளுக்கும் (relative marginal utilities) இடையே சமநிலை மீண்டும் கொணரப்படுவதுவரை இருக்கும். அப்படியாயின், அப்போது நுகர்வோர் மீண்டும் சம நிலையை வந்தடைவார். இந்தச் சமநிலை ஓர் அதிகமட்ட மொத்த மன நிறைவைக் குறிக்கும்.

இதுவே ஒரு பொருளின் ஒப்பீடான விலை (relative price) இறங்கும்போது ஏற்படும் இயல்பான (normal) அல்லது வழக்கமான விளைவாகும். மற்றவைகள் யாவும் சமமாக இருக்கும்போது (all other things remaining equal) ஒரு பண்டத்தின் விலை மலிவாக இருப்பின் அதன் நுகர்ச்சி அதிகமாகும்; அதன் விலை அதிகமானல் அதன் நுகர்ச்சி குறையும். இதுவே முதலாவதும் அடிப்படையானதுமான தேவை விதியாகும். மற்றவைகள் யாவும் சமமாக இருக்கும்போது என்னும் தகுதி (qualification) மிக முக்கியமானதாகவே இருக்கிறது—பொருளாதார ஆய்வில் அடிக்கடி இத் தகுதியினை நாம் சந்திக்க நேரிடுகிறது. தற்போது இந்த உதாரணத்தில் சிக்கலானவைகளில் ஒன்று யாதெனில், நுகர்வோரின் (consumer's) மொத்த வருமானம் (total income) மாருமல் நிலையாக (constant) உள்ளதெனக் கருதப்படுவதே; இந்த எடுகோள் (assumption) சரியானதாக இல்லையெனில், விலைகளின் போக்கின் விளைவுகள் இந்த அடிப்படைத் தேவை விதி (basic law of demand) கூறும் விளைவுகளினின்றும் வேறுபடும். தற்போது வருமானத்தில் ஏற்படும் மாற்றங்களால் (changes in income) நுகர்ச்சியின் தன்மைகளில் (consumption patterns) ஏற்படும் விளைவுகள் ஆராயப்பட வேண்டும்.

### 6. வருமானத்தின் விளைவுகள்பற்றிய ஆய்வு

எல்லாப் பண்டங்களின் ஒப்பீடான விலைகளும் மாருமல் அப்படியே இருக்க, நுகர்வோரின் வருமானம் அதிகரித்துச் செல்லுமானல், அவருடைய செலவுத் தன்மையில் எவ்வித மாற்றங்கள் ஏற்படும்? வருமானத்தில் அதிகரிப்பு இரு வழிகளில் ஏதாவதொன்றினுலும் ஏற்படலாம்; நுகர்வோரின் பணவருமானமானது அதிகரித்துப் பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் விலை அதிகரிக்கவில்லையெனில் ஏற்படலாம்; அல்லது, மற்றொரு வழியாலும் ஏற்படலாம். பொதுவான விலைமட்டம் இறங்கியிருக்கும்போது அதற்குச் சமமாக நுகர்வோரின் பண வருமானத்தில் இறக்கம் ஏற்படவில்லை

யென்ருலும் வருமானத்தில் அதிகரிப்பு ஏற்படலாம். மேற்சொன்ன நிகழ்ச்சிகளில் எந்த ஒன்றினுலும் நுகர்வோரின் பண்டங்கள், பணிகள் இவற்றை வாங்குந் திறன் அதிகரிக்கப்படும்; இவ்வாறு அதிகரித்துள்ள வாங்கும் சக்தியை அவர் எவ்வாறு பயன்படுத்துவாரென்பதைப் பார்ப்போம்.

இந்த ஆய்வினைப் (analysis) பொதுமைப்படுத்தப் படம் 6-ல் காட்டியுள்ள சமநோக்குக் கோடுகள் துணைபுரிகின்றன. இந்த சமநோக்குக் கோடுகள் நுகர்வோர் ஒவ்வொரு வாரமும் நுகரும் பாலையும், (வேறு ஏதாவது ஒரு பொருளைக் காட்டுவதற்குப் பதிலாக) அவரது அன்ருடச் சராசரி வருமானத்தை ஷில்லிங்கிலும் காட்டுகின்றன வேறு வழியில் சொல்லப்போனல், பாலின் நுகர்ச்சி ஏனைய மற்றப் பண்டங்கள், பணிகள் இவற்றை நுகர்வதையே உணர்த்துகின்றன. மேலும், மொத்த வருமானத்தின் பொதுவான் வாங்குந் திறனல் இந் நுகர்ச்சி சாத்தியப்படுவதாகவும் காட்டப்பட்டுள்ளது. தற்போது, ஆரம்பத்தில், நுகர்வோருக்கு 20 ஷில்லிங்குகளுக்குச் சமமான அல்லது 30 பின்ட்டுகள் [pints—பின்ட் என்னும் அளவு ஒரு காலனில் (gallon) எட்டில் ஒரு பங்கு] பாலுக்குச் சமமான வருமானம் வருவதாகக் கொள்வோம். ஒரு பின்ட் பால் 9 பென்சு விலைக்கு விற்பதாகவும் கொள்வோம். படம் 6-ல் காட்டப்பட்டுள்ள




படம் 6.

சமநோக்குக் கோடு இதனை நன்கு விளக்குகின்றது. படத்திலிருந்து கீழ்க்கண்டவற்றைத் தொகுத்தறிய முடிகின்றது. ஆரம்பத்தில் ஒரு வாரத்திற்கு 10 ஷில்லிங்குகளைச் செலவழித்து 15 பின்ட்டு பாலை வாங்குகின்ருர். நுகர்வோரின் தின வருமானம் 26 ஷில்லிங்குகளாக அதிகரிக்கும்போது, பாலின் விலையில் மாற்றம் ஏதும் இல்லை

யென்ற எடுகோள் கொள்ளப்படுவதால், வரவு செலவுத் திட்டக் கோடானது மாற்றமேதுமில்லாத ஒரு சாய்வுக் கோடாக இருக்கிறது; ஆனல், தனது இடம் பெயர்ந்து வலப்புறமாக மேல் நோக்கித் தள்ளிக் காணப்படுகிறது. இப்போது அது $1_2$ $1'_2$ என்னும் சமநோக்குக் கோட்டினைத் தொடுகின்றது. இந்தப் புள்ளியில் நுகர்வோர் 21 பின்ட்டுகள் பாலுக்கு வாரத்திற்கு 14 ஷில்லிங்குகளைச் செலவிடுவார். மேலும், அவருடைய தின வருமானம் 30 ஷில்லிங்குகளாக உயருகின்றதெனக் கொள்வோம் (=40 பின்டுகள் பால்). இப்போது அவர் $1_3$ $1'_3$ என்னும் சமநோக்குக் கோட்டினை அடைவார். அப்போது அவர் 16 ஷில்லிங்குகளை 24 பின்ட்டுகள் பாலுக்குச் செலவிடுவார்.

படத்தில் காணப்படும் விளைவுகளைத் தொகுத்துக் கீழ்க்காணும் அட்டவணையில் குறிக்கலாம்:

| தினவருமானம் (ஷில்லிங்குகளில்) | ஒரு வாரத்தில் நுகரப்படும் பால் (பின்ட்டுகளில்) |
|---|---|
| 20 | 15 |
| 26 | 21 |
| 30 | 24 |

இப்படி ஒப்பீடான விலைகளின் மட்டம் (level of relative prices) மாருமல் நிலையாயிருக்கும்போது வருமானத்தில் ஏற்படும் மாறுதல்கள் தேவையில் ஏற்படுத்தும் விளைவுகளைத் தொடர்ந்து ஆராயலாம்.

வருமானத்தில் அதிகரிப்புகள் ஏற்பட்டால் (மற்றவைகள் சமமாக இருக்கும்போது) நுகர்ச்சியும் அதிகமாகும். இது வழக்கமாக நடைபெறுவதாகும். ஆனல், சிலவகையான பண்டங்களில்—வழக்கமாக ஒப்பீடாகத் தாழ்ந்த ரகப் பண்டங்களில்—வருமானம் அதிகரிக்க அதிகரிக்க நுகர்ச்சி குறையும். இதற்குச் சரிநுட்பமான காரணம் என்னவெனில், நுகர்வோர் தன் நிதிநிலை தேவையான அளவுக்குக் காணப்படும் காரணத்தால் இன்னும் உயர்ந்த ரகப் பண்டத்தைத் தான் வாங்கவேண்டுமென்று நினைப்பதே. எனவே, இவ்வகைப் பண்டங்களைப் பொருளாதார நிபுணர்கள் தாங்குறைந்த பண்டங்கள் என்று அழைக்கின்றனர். படம் 7-ல் விளக்கப்பட்டுள்ள சமநோக்குக் கோட்டுப் படம் (indifference map) செயற்கை வெண்ணெக்கும் (margaine) ஏனைய மற்றப் பண்டங்கள், பணிகள் ஆகியவைகளுக்குமிடையே ஒரு நுகர்வோரின் விருப்பத்தரம் மொத்த வருமானத்தினல் உணர்த்தப்படுகின்றது—காணப்படுகிறது.

நுகர்வோரின் மொத்த வருமானம் அதிகரித்துச் செல்லச் செல்ல அவர் $I_1 I'_1$ சமநோக்குக் கோட்டிலிருந்து $I_2, I'_2$ கோட்டிற்கும், பிறகு $I_3, I'_3$ கோட்டிற்குமாகச் செல்லுகிருர். தான் வசதியாக இருப்பதை நினைவுகூரும்போதெல்லாம் தான் ஏற்கெனவே நுகர்ந்த செயற்கை வெண்ணெயில் ஓரளவு விடுத்து, அதற்குப் பதிலாக வேறு கவர்ச்சிமிக்க பதிலிப் பொருளை அவ்விடத்தில் நிரப்ப எண்ணுகிருர்—இவ்வுதாரணத்தில் வெண்ணெயே சிறந்த பதிலிப் பொருளாகும். எனவேதான், செயற்கை வெண்ணெய்க்கான அவரது தேவையில் தவருன் வருமான விளைவு காணப்படுகிறது; அதனை அவர் நுகர்வதானது $OX_1$-லிருந்து $OX_2$ ஆகக் குறைகின்றது; பிறகு $OX_2$-லிருந்து $OX_3$ ஆகக் குறைகின்றது.




படம் 7.

எந்தச் சமயத்திலும் ஒரு நுகர்வோர் ஒரு குறிப்பிட்ட பண்டத்தைத் தான் நுகர்வதை அதிகரிப்பதையோ அல்லது குறைப்பதையோ செய்யும்படி பாதிக்கத்தக்க இரண்டு பெரிய சக்திகள் உண்டென்பது தெரியவருகிறது—அவைகளாவன, அந்தப் பண்டத்தின் ஒப்பீடான விலையில் ஏற்படும் மாற்றம் (விலை அல்லது பதிலீட்டு விளைவு); அல்லது அவரது உண்மை வருமானத்தில் ஏற்படும் மாற்றம் (வருமான விளைவு) ஆகியவைகளாம். நடைமுறை உலகத்தில் ஒரு பண்டத்தின் விலையில் ஏற்படும் மாற்றமானது நுகர்வோரின் உண்மை வருமானத்திலும் அதன் காரணமாக (ipso facto) மாற்றத்தை உண்டுபண்ணுகிறதாகையால், நிலைமை சிக்கலானதாக ஆகின்றது. பண்டத்தின் விலை அதிகமாக இருக்கும்போது, அவருடைய உண்மை வருமானம் குறைவாக ஆகும்படி நேரிடுகின்றது. ஏனெனில், எந்த ஒரு கொடுக்கப்பட்ட வருமானத்தாலும், அவர் மிகக் குறைவான அளவே பண்டங்களையும் பணிகளையும் வாங்க முடிகின்றது; பண்டம் விலை மலிவாக இருக்கும்போது, நுகர்வோர்

வசதிபடைத்தவராகக் (ஏனெனில், உண்மை வருமானம் அதிகரிக்கப்படுகிறது) காணப்படுகிறார். ஏனெனில், கொடுக்கப்பட்ட பண வருமானம் தற்போது அதிகமான அளவு பண்டங்களையும் பணிகளையும் வாங்கும். ஆகவே, விலை விளைவுகளும் வருமான விளைவுகளும் ஒரே சமயத்தில் செயற்படுகின்றன என்பது தெளிவாகிறது.

படம் 8ஐப் பார்த்தால், ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியில் இந்த இரு விளைவுகளின் அளவு எவ்வளவு என்பது தெரியவரும். இங்கே கல்லெண்ணெயின் (petrol) விலை மாற்றத்தால் ஏற்படும் விளைவு ஆராயப்பட்டுள்ளது. ஆரம்ப நிலையில் கல்லெண்ணெயின் விலை P A என்னும் கோட்டால் காட்டப்பட்டுள்ளது; அப்போது நுகர்வோர் $1_1$ $1'_1$ என்னும் சமநோக்குக் கோட்டினை அடைய முடிகின்றது; O $M_1$ அளவு கல்லெண்ணெயை அவர் அப்போது நுகர்கின்றார். இப்போது விலை குறையும்போது, வரவு செலவுத் திட்டக் கோடு மேல்நோக்கியுள்ள PB என்னும் கோடாக உள்ளது. இப்போது நுகர்வோர் தனது நுகர்ச்சியை $OM_2$ ஆக அதிகரித்துக்




படம் 8.

கொள்கிறார்; சமநோக்குக் கோடான $1_2$ $1'_2$ஐ (அதாவது, அவரது உண்மை வருமானம் அதிகரித்துவிட்டபடியால்) அவர் அடைவார். இவ்வாறு நுகர்ச்சியின் அதிகரிப்பானது, கல்லெண்ணெயின் விலை குறைவால் எவ்வளவு ஏற்பட்டது? நுகர்வோரின் உண்மை வருமானம் அதிகரித்தமையால் எவ்வளவு ஏற்பட்டது? இந்தக் கேள்விகளுக்கு விடையளிக்க வேண்டுமாயின், ஒரு புதிய வரவு செலவுத் திட்டக் கோட்டினை வரையவேண்டும்.

இக் கோடு கல்லெண்ணெயின் புதிய விலையை உணர்த்துவதோடு, பழைய சமநோக்குக் கோட்டினைத் தொடுவதாக இருக்கும்.

இது நுகர்வோரின் உண்மை வருமானம் அதிகரிக்கப்படாமல் இருந்திருந்தால், அந்த விலையில் எவ்வளவு கல்லெண்ணெயை அவர் வாங்கியிருப்பாரோ அதனைக் குறிக்கின்றது. அந்த அளவே OX கணியமாகும் (quantity). எஞ்சியுள்ள அதிகரிப்பானது—அதாவது, $XM_2$ கணியம்—வருமான விளைவால் ஏற்பட்டதாகும்.

பொது விதியாக இந்த இரு விளைவுகளும் ஒரு பக்கம் நோக்கியே செயற்படும். அதாவது, விலையில் ஏற்படும் இறக்கமானது ஒரு பண்டத்தின் நுகர்ச்சியை இயல்பாக அதிகப்படுத்தும். இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. மற்றப் பண்டங்களுக் கொப்பீடாக அந்தப் பண்டம் தற்போது விலை குறைந்திருப்பது ஒன்று; மற்றொன்று நுகர்வோர் உண்மை வகையில் (in real terms) தற்போது வசதி அதிகமுள்ளவராக இருப்பதும், அதன் காரணமாகத் தனது நுகர்ச்சியைப் பொதுவாக அதிகப்படுத்த வல்லவராக இருப்பதுமாகும். எனினும், சில சமயங்களில் இவ்விரு விளைவுகளும் எதிரிடையான திசைகள் நோக்கிச் செயற்படுவதும் உண்டு; ஒரு விளைவு மற்றொரு விளைவின் பலனை ஓரளவிற்குக் குறைப்பதும் உண்டு. அதிதீவிரமான சில நிகழ்ச்சிகளில் வருமான விளைவு மிகப் பலமாகச் செயற்படுவதன் மூலம் விலை விளைவின் பலனைப் போக்கிவிடுவதுண்டு. இத்தகைய நிகழ்ச்சி கிஃபன் பண்டங்கள் (Giffen goods) என்றழைக்கப்படுகிற பண்டங்களில் நிகழ்கிறது. சர் ராபர்ட் கிஃபன் (Sir Robert Giffen) என்பவர், அவரது காலத்தில் இங்கிலாந்திலிருந்த ஏழை மக்கள் ரொட்டி விலை மலிவாக இருந்ததைவிட விலை அதிகமாக இருந்தபோதே அதிகமான ரொட்டியை நுகர்ந்தனர் என்னும் விறுவிறுப்பான உண்மையை எடுத்துக்கூறியதன்மூலம், பொதுமக்களின் கவனத்தை ஈர்த்தார். கிஃபன் பண்டங்கள் என்பன ஏழை மக்களின் செலவில் முக்கியமாக இடம்பெறுகின்ற தாழ்ந்த ரகப் பண்டங்களாகும். உணவின் முக்கியப் பொருள்களாகிய (staple goods) ரொட்டி, உருளைக்கிழங்கு போன்றவைகளே இவற்றிற்கு உதாரணங்கள். குறைந்த விலைக்கு அவைகளை அதிகமாக வாங்க முடிவதால் அத்தகைய உணவுப் பொருள்கள் ஏழை மக்களின் உணவில் முக்கியத்துவம் பெற்றுள்ளன. மக்கள் செல்வர்களாக வளரவளர அவர்கள் விலை அதிகமானவும் கவர்ச்சியானவுமான உணவுப் பொருள்களையே (உதாரணமாக, பால், தயிர், வெண்ணெய் ஆகிய பண்டங்களை அல்லது மிட்டாய் தினுசுகளை) விரும்புகின்றனர். இதனால் விலை உயர்ந்தனவாக இல்லாத சாதாரண உணவுப் பொருள்களின் நுகர்ச்சியைக் குறைத்துக்கொள்வர். இத்தகைய பண்டங்கள் ஒரு மனிதரின் செலவினத்தில் முக்கியப் பங்கு பெறுமானால், அவைகளின் விலை அதிகமாகும்போது அவருடைய

உண்மை வருமானத்தில் ஒரு வெகு முக்கியமான குறைவு (a significant reduction) ஏற்படும். உதாரணமாக, குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள ரொட்டித் துண்டுகள் (அவைகள் இன்றியமையாதவையாகவும் வாங்கியே தீரவேண்டுமென்றுமிருப்பன) தற்போது விலையதிகமாக இருப்பதால், மற்றப் பண்டங்களின்மீது செலவழிக்க அவரிடம் பணம் மிகக் குறைவாகவே இருக்கும். இதனால் அவர், ஒப்பீடான ஆடம்பரப் பொருள்களின்மீது செலவழிப்பதைக் குறைத்துக்கொள்ள நேரிடுகிறது. உதாரணமாக, இனிப்பு ரொட்டி அப்பங்கள் (cakes), மாமிசம் முதலியவற்றை வாங்குவதைக் குறைத்துக்கொள்வர். இதனால் ஏற்படும் ஊட்டவளக் குறைவை (nutritional gap) ஈடு செய்வதற்கு அதிகமான ரொட்டியை வாங்கும்படியுள்ளது. ஆகவே, ரொட்டியின் விலையில் ஏற்படும் அதிகரிப்பானது நுகரப்படுகின்ற ரொட்டியின் கணியத்தில் அதிகரிப்பை ஏற்படுத்துகின்றது.




படம் 9.

இத்தகையதொரு நிகழ்ச்சியே படம் 9-ல் விளக்கப்பட்டுள்ளது. இதில் சம்பந்தப்படுத்தப்பட்டுள்ள பண்டம் ரொட்டி. ஆரம்ப நிலையில், PA என்னும் வரவுசெலவுத் திட்டக் கோட்டினால் உணர்த்தப்படுகின்ற ரொட்டியினது விலையில் நுகர்வோரால் $1_1, 1'_1$ என்னும் சமநோக்குக் கோட்டினை அடையமுடிகிறது. அவர் $OM_1$ அளவு ரொட்டியை நுகர்வார். ரொட்டியின் விலையில் ஏற்படும் இறக்கமானது வரவுசெலவுத் திட்டக் கோட்டினை PB-க்கு மேலாக இருக்கும்படி மாற்றி அமைக்கின்றது. தற்போது நுகர்வோர் உயரத்தில் உள்ள சமநோக்குக் கோடான (higher indiffence curve) $1_3 1'_3$ கோட்டை (அவருடைய உண்மை வருமானம் அதிகரித்து

விட்டபடியால்) அடைய முடிகின்றது. ரொட்டிக்குப் பதிலாக, தற்போது, கவர்ச்சியான உணவுப் பொருள்கள் (attractive foods) பதிலிப் பொருள்களாகப் பயன்படுத்தப்படுவதால், ரொட்டியின் நுகர்ச்சி $OM_2$ ஆகக் குறைகின்றது. இதைப்போன்றே, ரொட்டியின் விலை இன்னும் இறங்கும்போது, வரவுசெலவுத் திட்டக் கோடு PC-க்கும் மேலாகச் செல்லுகின்றது. அப்போது அவரது ரொட்டியின் நுகர்ச்சி $OM_3$ ஆக இன்னும் குறைக்கப்படும்.

சுருக்கமாகக் கூறுமிடத்து, நுகர்வோர் எல்லையின்றிக் கிடக்கும் பலதிறப்பட்ட பண்டங்களில், தனது வரையறுக்கப்பட்ட வருமானத்தைப் பகிர்ந்து செலவிடும் தன்மையை ஆளுகின்ற கோட்பாடுகளின் சில பொதுமைகள் தோன்றுகின்றன எனலாம். முதலாவதாக, அவருடைய செலவை, அவர் நுகருகின்ற எல்லாப் பண்டங்களின் ஒப்பீடான இறுதிநிலைப் பயன்பாடுகளும்—அவைகளின் இறுதிநிலைப் பதிலீட்டு வீதங்கள் விலைகளும், அவைகளின் ஒப்பீடான விலைகளும் எங்கும் ஒரே விகிதத்தில் (same proportion) இருக்கும்படி அமைத்துக் கொள்வார். இரண்டாவதாக, மற்றவைகள் சமமாக இருக்கும்போது, ஒரு பண்டத்தின் விலை இறக்கமானது அதன் நுகர்ச்சியை அதிகப்படுத்தும்; அதேபோன்று அதன் விலை அதிகரித்தலானது அதன் நுகர்ச்சியைக் குறைத்துவிடும். கடைசியாக, நுகர்வோரின் உண்மை வருமானத்தின் அதிகரிப்பானது—அது விலை குறைவினாலோ அல்லது வேறு காரணத்தாலோ ஏற்படின்—இயல்பாகப் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் நுகர்ச்சியை அதிகப்படுத்தும்; ஆனால், சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் நுகர்ச்சியைக் குறைக்கவும் செய்யக்கூடும். இதைப்போன்றே உண்மை வருமானத்தில் ஏற்படும் இறக்கமானது இதற்கு எதிரிடையான விளைவைத் தரவல்லதாகும்.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles, Vol. 1 Chs. IV–V.*

W L. J. Ryan, *Price Theory (Macmillan, London, 1960), Ch.I.*

J. R. Hicks, *Value and Capital* (2nd ed., Oxford University Press, London, 1946) Part I, Chs. I–III.

# 4. அங்காடித் தேவை
# (Market Demand)

## 1. தேவைக் கோடுகள் (Demand Curves)

மக்கள் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றை விரும்பக் காரணம் என்ன? அவர்கள் அவைகளினின்றும் பயன்பாட்டினைப் பெறுகின்றமையே காரணம். நுகர்ச்சியினின்றும் பெறுகின்ற பான்பாடானது (utility derived from consumption) பல்வேறு பண்டங்களுக்கிடையேயும், பல்வேறு மக்களுக்கிடையேயும் வேறுபடுகின்றது. பொதுவாக ஒருவர் எந்த ஒரு பண்டத்தினின்றும் கூடுதலாகப் பெறுகின்ற பயன்பாடானது, அவர் அந்தப் பண்டத்தை நுகர்வதானது அதிகரிக்க அதிகரிக்க அதே வீதத்தில் குறைந்துகொண்டே செல்லும். இவற்றையெல்லாம் முன்பு பார்த்தோம். பொருளாதார ஆய்வில் இவற்றையெல்லாம் ஒரு தேவைக்கோடு (demand curve) (ஒவ்வொரு பண்டத்திற்கும் ஒரு தேவைக்கோடு) வாயிலாக உணர்த்துவது எளிதே. படம் 10-ல் இத்தகையதொரு தேவைக்கோடு காட்டப்பட்டுள்ளது.



படம் 10.

இந்தக் கோடானது, பண்டத்திற்கு விதிக்கப்படும் பல்வேறு விலைகளையும் (செங்குத்தான அச்சில் இது கணக்கிடப்பட்டுள்ளது), ஒவ்வொரு வேறுபட்ட விலையிலும் மக்கள் எவ்வளவு பண்டங்களை வாங்கத் தயாராக இருக்கின்றனரென்பதையும் இணைக்கின்றது. விலையானது $OP_1$ ஆக இருக்கும்போது, நுகர்வோர் $OM_1$ கணியத்தை வாங்குவர். இதைப்போன்றே விலையானது $OP_2$ ஆகக் குறையும்போது நுகர்வோர்கள் $OM_2$ என்னும் மொத்தக் கணியத்தை வாங்குவர்.

இந்தக் கோடுகள் பெரும்பாலும் சமநோக்குப் பண்டங்களி னின்றே தொகுக்கப்படுவன என்ற கருத்தை நாம் மனத்தில் கொண்டால், தெளிவாக இவை நமக்கு விளங்கும். சம்பந்தப்பட்ட பண்டத்தை வாங்கும்பொருட்டு அங்காடிக்குச் செல்லும் தனி நபர் களின் சமநோக்குக் கோடுகளின்றியே இக் கோடுகள் பெறப்படு கின்றன என்ற கருத்தைக் கொள்ளுதல்வேண்டும். முன் அத்தி யாயத்தில் கூறப்பட்டுள்ள சமநோக்குக் கோடுகள் தனி நபரைப் பொறுத்தவை. விலைகளிலும் வருமானங்களிலும் ஏற்படும் மாறுதல் கள் தனி நபரிடம் ஏற்படுத்தும் எதிர்விளைவுகளைச் சென்ற அத்தியாயம் விளக்கியது. ஏற்கெனவே குறிப்பிட்டவாறு, பொருளாதார விற்பன்னர் வழக்கமாகத் தனிநபரின் நடவடிக்கைகளைக் காட்டிலும் மக்களின் ஒரு கூட்டத்தினரின் (group) நடவடிக்கைகளையே ஆராய் வது வழக்கம். ஒரு பொருளுக்குத் தனி நபரின் தேவையைக் காட்டி லும் மொத்தத் தேவையினையே அவர் ஆராய்வது வழக்கம். ஆகவே, கோட்பாட்டளவில் சமநோக்குக் கோடுகளிலிருந்து தேவைக் கோடுகளுக்குச் செல்வதில் அத்துணை இடர்ப்பாடொன்றுமில்லை. பின்னர்ச் சொல்லப்பட்டது முன்னர்ச் சொல்லப்பட்டதன் கூட்டுத் தொகுப்பே (aggregate) ஆகும். ஒரு பண்டமானது ஒவ்வொரு விலையிலும் பல்வேறு நபர்களால் எவ்வளவு தேவைப்படுகிற தென்பதைத்தான் சுருக்கமாக 'ஒவ்வொரு விலையிலும் அங்காடித் தேவை' (market demand at each price) என்று கூறப்படுகிறது. இதனை விளக்கும் கோடு, படம் 10-ல் உள்ளதுபோல் இயல்பாகக் கீழ்நோக்கி இடமிருந்து வலமாகச் சரிகின்றது. இந்தக் கோடு குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாட்டு விதியையும், சென்ற அத்தியாயத்தில் சுருக்கமாக விவரித்த நுகர்வோரின் தன்மையின் அடிப்படையான பண்புகளையும் பிரதிபலிக்கிறது.

இருந்தபோதிலும், நடைமுறையில் ஒவ்வொரு நோக்க விலை யிலும் (conceivable price) எவ்வளவு அளவு பண்டங்கள் வாங்கப் படுகின்றன என்பதைக் குறிக்கும் (அதாவது, தேவை) அட்டவணை ஒன்றினை அமைப்பது இயலாததாகவே இருக்கிறது. ஏனெனில், நடைமுறை உலகத்தில் விலைகளின் வரிசை வரையறுக்கப்பட்டதாக இருப்பதையே வழக்கமாக நாம் காண்கிறோம். இருப்பினும், சோதனை நிகழ்த்துவதன்மூலமும், அல்லது பல்வேறு அங்காடிகளிலிருந்து பெறப்படும் புள்ளி விவரங்களிலிருந்தும் விலைகளின் ஒரு மிக வரையறுக்கப்பட்ட அட்டவணையையும், அந்த விலைகளில் எவ்வளவு கணியங்கள் தேவைப்படுகின்றன என்பதையும் அமைக்க இயலும். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட வகை மோட்டார் கார்கள் சமீபத்தி லிருந்த விலைகளில் எவ்வளவு அளவு தேவைப்பட்டனவென்பதைக் பின்வரும் அட்டவணை விளக்குகின்றது.

| விலை (£) | எவ்வளவு கணியம் தேவைப்பட்டது (நூறுகள்) |
|---|---|
| 650 | 150 |
| 600 | 300 |
| 550 | 400 |
| 500 | 550 |

இந்தப் புள்ளி விவரங்களின் மூலம் ஒரு தேவைப்பட்டியலைப் படம் 11-ல் உள்ளவாறு வரையக்கூடும். ஈண்டு ஒன்றைக் கவனித்தல் வேண்டும். நான்கு புள்ளிகளையும் இணைக்கும் கோடானது மழமழப்பானதாக உள்ளதென்ற எடுகோளினைக் கொள்ளுவது அவசியமாகிறது. விலை £ 600-க்கும் £ 550-க்குமிடையே எவ்வளவு கணியம் தேவைப்பட்டது என்பது நமக்குத் தெரியவில்லையாயினும், £ 600 விலையில் 300,000 கார்களும், £ 550 விலையில் 400,000 கார்களும் தேவைப்பட்டமையால், தேவைப்படுகின்ற கணியம் அதிகரித்தலானது சீராகவும் தொடர்ந்தும் இருக்கும் என்ற எடுகோளைக் கொள்ளுதல் வேண்டும்.




படம் 11.

இதைப்போன்றதொரு தேவைக்கோட்டினைப் புள்ளிவிவரம் வாயிலாக அமைப்பது சாத்தியமேயாயினும், அதனைக் குறைந்துசெல் பயன்பாட்டு விதியின் அடிப்படைக்கான எடுகோள்களின்மீதே (assumptions which underlay the law of diminishing utility) வரைய இயலும் (இயல்பான தேவைக்கோடு—normal demand curve—அந்த விதி வரைபடம் வாயிலாக விளக்கப்படுவதுபோன்றே யுள்ளது). அதாவது, வருமானமும் சுவைகளும் நிலையானவை என்ற எடுகோளின்மீதே அமைக்கப்படுகின்றது.

உதாரணமாக, படம் 12-ல் $D_1 D'_1$ என்னும் கோடு ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஆரஞ்சுப் பழங்களுக்கான தேவைப்பட்டியலை உணர்த்துவதாகக் கொள்வோம். தற்போது, பொதுமக்கள் ஆரஞ்சுப் பழங்களில் நிறைய உணவுச் சத்து இருக்கிறதென்று திடீரென முடிவுக்கு வருகின்றனரெனக் கொள்வோம்; இதற்கேற்பத் தனி நபர்களின் சமநோக்குக் கோடுகளிலும்(individual indifference-maps) மாற்றம் ஏற்படும். முற்றிலும் புதிய தேவைக்கோடான $D_2D'_2$ஐ வரையவேண்டிவரும். இதைப் போன்றதொரு மாறுதலே, மக்கள் பொதுவாகச் செல்வமிக்கவர்களாக மாறும்போதும், வருமான விளைவானது மக்களை ஒரு குறிப்பிட்ட விலையில் அதிகமான ஆரஞ்சுகளை வாங்கத் துணை செய்யும்போதும் ஏற்படும்.




படம் 12.

தேவைக் கோடுகளை அமைக்கும்போது மற்றுமொன்றை எடுகோளாகக் கொள்ளுதல் வேண்டும். அதாவது, சம்பந்தப்பட்டுள்ள பண்டத்தின் மிக நெருங்கிய பதிலிப் பொருள்கள் அல்லது மிக நெருங்கிப் போட்டியிடும் பொருள்களின் விலை நிலையானதாக உள்ளதெனக் கொள்ளவேண்டும். இந்த அத்தியாயத்தின் பிறிதொரு பிரிவில் நாம் காணப்போவது போன்று, சில பண்டங்கள் ஒன்றுக்கொன்று தனிச் சிறப்புடன் மிக நெருங்கிய தொடர்புள்ளவைகளாக உள்ளன. இதனுல் ஒரு பண்டத்தின் விலையில் ஏற்படும் மாற்றமானது மற்றப் பண்டத்தின் தேவைப் பட்டியலையே மாற்றியமைப்பதாக உள்ளது.

சுருக்கமாகக் கூறுமிடத்து, ஒரு தேவைக்கோடானது (demand curve) கீழ்க்கண்ட எடுகோள்களைக் கொண்டு வரையப்படுகிறதெனலாம். அவைகள், நுகர்வோர்களின் வருமானங்கள் நிலையானவையென்பவும், அவர்களின் சுவைகள் நிலையானவையென்பவும், நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள பண்டங்களின் விலைகள் நிலையானவையென்பனவுமான எடுகோள்களாம். எனவே, ஒரு பண்டத்தின் விலையானது மாற்றமடைவதால் அதன் நுகர்ச்சியில் ஏற்படும் மாற்றத்தையும் நிலையானவை என்று கருதப்படுகிற மேற்கூறிய காரணிகளில் ஒன்று மாறுதலடைவதால் (change), அப்பொருளின் நுகர்ச்சியில் ஏற்படும் மாற்றத்தையும் வேறுபடுத்திக்

காட்டுவது அவசியமாகும். முன்னர்க் கூறியதில் நுகர்ச்சியில் ஏற்படும் மாறுதல்கள் ஒரே ஒரு தேவைக் கோட்டால் விளக்கப்படு கிறது. தேவைக் கோட்டின் வழியே சென்று நோக்கினுல், நுகர்ச்சியை அளத்தல் சாத்தியப்படும்; விலையின் அதிகரிப்பால் நுகர்ச்சியின் கணியம் குறைக்கப்படும்போது தேவைச் சுருக்கம் (contraction) என்றும், விலையிறக்கத்தால் ஏற்படும் நுகர்ச்சியின் கணியம் அதிகரிப்பிற்குப் பெருக்கம் எனவும் அழைப்பது வழக்கம்; பின்னர்க் கூறியதில் முற்றிலும் புதிதானதொரு தேவைக்கோடே வரையவேண்டியுள்ளது. இதனைப் பொருளாதார விற்பன்னர்கள் தேவையில் மாற்றம் (a shift in demand) அல்லது தேவையில் அதிகரிப்பு அல்லது இறக்கம் எனக் கூறுகின்றனர்.

இந்த விவாதங்களனைத்திலும் நுகர்வோர்கள் வாங்கும் கணிய மானது ஒரு பணத்தொகையுடன்—அதாவது, விலை (price) தொடர்பு படுத்திக் கூறப்பட்டது. இது ஒரு வசதியான எளிய முறை யாயினும், இதனை உள்ளடக்கிய உண்மை நிலையை மறைத்துவிடும் படியாகக் கையாளுதல் கூடாது. சென்ற அத்தியாயத்தில் சமநோக்குக் கோடுகள் சம்பந்தமாக அடிக்கடி கூறியதுபோல், நுகர் வோர்கள் ஒரு பண்டத்தின் இறுதிநிலைப் பயன்பாட்டினைத் தங்களுக்குக் கிடைத்துள்ள சாதனங்களைக்கொண்டு தாங்கள் வாங்கவல்ல மற்றப் பண்டங்களின் இறுதிநிலைப் பயன்பாட்டுடன் எப்போதும் ஒப்புமை செய்துகொண்டே யிருப்பர். பணமானது, பின்னர் இந் நூலில் கூறப்பட்டுள்ளதைப்போன்று, பண்டங்களை மிக வசதியுடன் பரிவர்த்தனை செய்துகொள்ளும் ஒரு மத்திமமாகவே (medium) இருந்துவருகிறது. நுகர்வோர் எப்போதும், தான் வாங்க நினைக்கும் பண்டங்களின் ஒப்பீடான கவர்ச்சித் தன்மையை மதிப்பீடு செய்துகொண்டே யிருப்பார். செங்குத்தான அச்சில் (vertical axis) பணத்தை அளக்கக்கூடாது; நுகர்வோர், தான் ஒரு குறிப்பிட்ட பண்டத்தை நுகருவதற்குத் தியாகம் செய்கின்ற பயன்பாடுகளை அளப்பதே சிறந்ததாகும். ஆனுல், இவ்வாறு செய்வது சாத்தியமற்றதாகும்; ஏனெனில், பயன்பாடுகளை மக்களுக் கிடையே அளவிடுதலோ கூட்டிக் கணக்குப்பார்த்தலோ இயலாது. இது சாத்தியப்படுவதாக இருந்தால், கீழ்க்கண்டதொரு முக்கிய உண்மையை மிகத் தெளிவாக விளக்கியிருக்கும். நுகர்வோர்கள் ஒவ்வொரு பண்டத்தினின்றும் தாங்கள் பெறுகின்ற இறுதிநிலைப் பயன்பாடும், வேறு சில பண்டங்களை வாங்குவதைக் காட்டிலும் அந்தப் பண்டத்தை வாங்குவதன்மூலம் அவர்கள் செய்யும் தியாகத்தின் இறுதிநிலைப் பயன்பாடும் (marginal utility they sacrifice) சமமாக இருக்கும்படி செய்யவே எப்போதும் முயல்கின்றனர்.

## 2. பிறழ்நிலைத் தேவைக் கோடுகள் (Perverse Demand Curves)

தேவைக் கோடுகள் இயல்பாக இடமிருந்து வலமாகக் கீழ்நோக்கிச் சரிகின்றனவென்பதையும், பண்டத்தின் விலை இறக்கமானது வழக்கமாக அதன் நுகர்ச்சியை அதிகரிக்குமென்றதும், அதனுடைய விலை இறக்கமானது வழக்கமாக நுகர்ச்சியைக் குறைக்குமென்றதுமான உண்மையைப் பிரதிபலிப்பதாக உள்ளதென்பதையும் ஏற்கெனவே பார்த்தோம். பிறழ்நிலைத் தேவைக் கோடுகள் இருப்பதற்குச் சாத்தியமேதும் உண்டா என்பதனைப் பார்க்கவேண்டும்—அதாவது, இயல்பான இந்த விலை—கணியத் தொடர்பு தலைகீழாக மாற்றி அமைக்கப்படுமா? இத்தகைய நிகழ்ச்சிகளை யெல்லாம் ஆராய்ந்தறிய முடியும். ஆனால், இவைகளைப் 'பிறழ்நிலை'க் கோடுகளில் (perverse)—விதிகள் யாவற்றையும் புறக்கணிக்கின்ற பிறழ்நிலைக் கோடுகள்—ஏற்படுகின்றன என்று கருதுவதைவிட 'இயல்பான' தேவைக் கோட்டில் ஏற்படும் இடமாற்றங்கள் எனக் கருதுவதே அதிகமான பயனுள்ளதாயும் பொருளுணர்த்தக்கூடியதாயும் (more useful and revealing) இருக்கிறது.

முதலாவதும் முக்கியமானதுமான கிஃபன் பண்டங்கள் என்ற உதாரணத்தை ஆராய்வோம். சென்ற அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளவாறு இவ்வகைப் பண்டத்தின் விலை மாற்றங்களால் ஏற்பட்ட வருமான விளைவு (the income effect associated with the type of commodity), அத்தகைய விலை மாற்றங்களால் ஏற்படும் பதிலீட்டு விளைவுகளைச் (substitution effects of such price changes) சரிக்கட்டுமளவிற்கும் மேலாக, அதிகமாக சக்தி வாய்ந்ததாகவுள்ளது. தனிநபர்களின் விருப்பத் தேர்வுப் படங்களில் உண்மை வருமான மாற்றங்களால் ஏற்படும் இடப்பெயர்ச்சிகள், மறுவரிசைப் படுத்தல் (re-aligning) ஆகியவை கிஃபன் பண்டங்களில் (Giffen goods) ஏற்படுவதில்லை. ஆகவே, அவைகளின் விருப்பத் தேர்வுப் படங்களினின்றும் பெறப்படுகின்ற தேவைக் கோடுகள் பிறழ்நிலையாக—அதாவது, விலை அதிகரித்தால் நுகர்ச்சி குறையும் என்பதை விட்டு விலை அதிகரித்தால் நுகர்ச்சி அதிகரிக்கும் என்ற நிலை—இருக்குமென்று முடிவு செய்வது நியாயமானதே. மற்றொருபுறம், தேவைக் கோடுகளின் அடிப்படையான எடுகோளைக் கடைப்பிடித்தற்கும்—அதாவது, உண்மை வருமானமானது அதன் ஆளுகைக்குட்பட்ட விலைவீச்சுகள் (price ranges) முழுமையும் நிலையானதாக இருக்கின்றதென்னும் எடுகோள்—இத்தகைய கிஃபன் பண்டங்களின் விஷயத்தைத் தேவைக் கோட்டின் இடமாற்றம் (shift of the demand curve) (விலை அதிகரிக்கும்போது உண்மை வருமானம் குறைவதால்) என்று கூறுவதற்கும் நிறைய விளக்கம் தேவைப்

படுகிறது. படம் 13 (a)-ல் $D_1$ $D'_1$ முதல் $D_2$ $D'_2$ வரையிலும் $D_2$ $D'_2$ முதல் $D'_3$ $D'_3$வரை இத்தகைய இடமாற்றத்தைக் குறிக்கின்றன. படம் 13 (b)-ல் காட்டப்பட்டுள்ள DD′ என்னும் மேல் நோக்கிச் சரியும் தேவைக்கோடானது பல்வேறு விலைகளில் வாங்கப் பட்ட பல்வேறு கணியங்களை இணைத்ததனுல் ஏற்பட்டதாகும்.




படம் 13.

இத்தகைய கருத்துகள் பிறழ்நிலைத் தேவைக் கோடுகளையுடைய இன்னும் இரண்டு சூழ்நிலைகளிலும் காணப்படுகின்றன. ஒன்று, ஒரு பொருளின் விலை ஏற்றமானது, இன்னும் அந்தப் பொருளானது மேலும் விலை ஏறக்கூடும் என்ற எண்ணத்தை நுகர்வோர்களது மனத்தில் உண்டுபண்ணுவதால், அவ்வாறு விலை ஏறுமுன்னர் நுகர்வோர் அப் பொருளினை வாங்கத் தலைப்படுவர். கடன் பத்திரங்களில் (securities), பங்குமாற்றுச் சந்தையின் பேரங்களில் (stock exchange transactions) இத்தகையதொரு நிலை காணப்படுவதை அறியலாம். இந்தச் சூழ்நிலையில், மேலெழுந்தவாரியாகக் கண்ணுறும் போது, குறைந்த விலையில் பண்டங்கள் விற்றதைவிட அதிக விலையில் விற்கும்போது அவைகள் அதிகமாக வாங்கப்படுவது தோன்றுகிறது. எனினும், உண்மையில் பார்க்கப்போனுல், இந்தச் சான்றில் தேவையின் நிலை முழுவதுமே மாற்றமடைகிறது— இவ்வாறு மாற்றமடைவதற்குக் காரணமாக இருப்பது நுகர்வோர்கள் அப் பொருள்கள் எதிர்காலத்தில் இன்னும் அதிக விலையில் விற்கப் படக்கூடுமோ என்று எண்ணுவதுதான். இத்தகைய சூழ்நிலைகளை மேல்நோக்கிச் செல்லுகின்ற ஒரே ஒரு தேவைக்கோடு விளக்குவதை விட—வலமும் இடமும் இடம் மாறுகின்ற பல தேவைக்கோடுகள் விளக்குவதே சாலப்பொருத்தமுடைத்தாம்.

மற்றொரு நிலையைப் பார்ப்போம். சில பண்டங்கள் அவைகள் அதிக விலைக்கு விற்கப்படுவதாலும், அதன் காரணமாக ஒரு தனிச்

சிறப்பினைப் பெற்றிருப்பதாலுமே தேவைப்படுகின்றன—குறிப்பாக, விலையுயர்ந்த வைரக்கற்களையும், மனிதர்களின் பகட்டுக்கான ஏனைய பொருள்களையும் கூறலாம். இப் பண்டங்களின் விலை குறையுமானால், அதிகமான மக்கள் அவைகளை வாங்கு மளவிற்கு நிலைமை வந்துவிடும். இதன் காரணமாக அந்தப் பண்டங்களின் தனித்த சிறப்பும் (exclusive character) கவர்ச்சியும் (appeal) போய்விடும். எனவே, இப் பண்டங்களில் ஏற்படும் விலை குறைவானது அவைகள் தேவைப்படுகின்ற கணியத்திலும் இறக்கத்தை உண்டுபண்ணும். இந்த நிலை இத்தகைய பேதப் பண்டங்களில்தான் ஏற்படும்; விலை மாற்றத்தால் பண்டம் எந்தகைய மாற்றத்தையும் அடையவில்லையெனினும், நுகர்வோரைப் பொறுத்த அளவில் அதன் தன்மையில் (character) மாற்றம் ஏற்பட்டு இருந்திருக்கிறது. எனவே, பொருளாதார விற்பன்னரின் கருத்தில் இது ஒரு பேதப்பண்டமாகத் தோன்றுகிறது. மற்றப் பண்டங்களில் தனித்த பிறழ்நிலைக் கோட்டைவிடப் புதிய தேவைக் கோடுகளே (இயல்பான சரிவை உடைய) தோன்றும்.

## 3. தேவையின் பரிமாற்றத் தொடர்புகள் (Inter-relationships of Demand)

தேவைக் கோட்டின் (demand curve) அடிப்படையான தன்மைகளின் ஆய்வினை முடிக்கு முன்னர்ச் சில பருப்பொருளியலான பண்டங்களுக்கான தேவைகளுக்கிடையே நிகழும் வினைவெதிர்வினைவுகளைப்பற்றி (interactions) ஒரு வார்த்தை சொல்லியாகவேண்டும். ஏற்கெனவே குறிப்பிட்டவாறு, எந்தப்பண்டத்தின் தேவையைப்பற்றி நாம் ஆராய்கின்றோமோ அந்தப் பண்டத்தின் விலையில் மாற்றம் ஏற்படும்போது ஏனைய மற்றப் பண்டங்களின் விலைகள் மாருமல் நிலைத்து நிற்கின்றன என்ற எடுகோளின்மீதுதான் தேவைக்கோடு வரையப்படுகிறது. ஆனால், நடைமுறையில் அப்படி நிகழ்வதில்லை; மற்றப் பண்டங்களின் விலைகளும் அடிக்கடி மாற்றமடையவே செய்கின்றன. எனவே, எடுகோளின்படி ஒன்றும் நடைமுறையில் நடப்பதில்லையாதலின் எடுகோள் தவருனதாகிவிடுகிறது. எல்லாப் பண்டங்களும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவையாக இருக்குமேயாஞல் இதனுல் ஒன்றும் பாதகமில்லை. (ஒன்றுக்கொன்று தொடர்புடையன என்பது எல்லாப் பண்டங்களும் நுகர்வோர்களின் வரையறுக்கப்பட்ட வருமானத்தை ஒன்றுக்கொன்று போட்டியிடுகின்றன என்ற கருத்தில்). நான் நூல்களை வாங்குவதற்காகச் செலவிடுவதில் £1 கூடுதலாகச் செலவு செய்கிறேனெனில், மற்றப் பண்டங்களுக்கான எனது தேவையும் பாதிக்கும்படியாகவே இருக்கும். ஏனெனில், நான் மற்றப் பண்டங்களுக்குச் செலவிடுவதில்

£ 1 குறைத்தே தற்போது செலவிடுவேன். ஆனால், பண்டங்களுக்கிடையே தனிச் சிறப்பான (special) தொடர்பு ஒன்றுமில்லையெனில், ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் தேவையில் ஏற்படும் மாற்றமானது பொதுவாகப் பண்டங்களுக்கானதேவையில்உண்டுபண்ணும் மாற்றத்தை ஒரு பொருட்டாகக் கருதாது புறக்கணித்துவிடலாம். அப்படியே அப் பண்டத்தின் தேவையில் ஏற்படும் மாற்றமானது பெரிதாக இருப்பினும் (அதன்மீது செலவிடும் தொகை இரட்டிப்பாக இருக்கிறதென வைத்துக்கொள்வோம்) மற்றப் பண்டங்களின் அளவு கணக்கிலடங்காமல் அதிகமாக உள்ளதாலும், அப்படி அந்தப் பண்டத்தின் தேவையில் ஏற்படும் மாற்றம் விளைவிக்கின்ற விளைவுகளானது அப் பண்டம் விற்கப்படும் பல்வேறு அங்காடிகளிலும் பரவியிருக்குமாதலால், மற்றப் பண்டங்களில் யாதொன்றிலும் எந்த முக்கிய விளைவையும் ஏற்படுத்திவிடாது.

எனினும், சில சமயங்களில் பரிமாற்றத் தொடர்புகள் இத்தகைய மாற்றங்களை சமமாக மற்றப் பண்டங்களின்மீது பரவியிருக்குமாறு செய்வதில்லை ; இதனால் தனியாக உள்ள சில பண்டங்கள் ஒன்றுக்கொன்று மிக நெருங்கிய தொடர்புள்ளனவாக ஆகின்றன. மூன்று முக்கியப் பரிமாற்றத் தொடர்புகள் ஈண்டு ஆராய்த்தகுந்தவையாயுள்ளன. அவற்றுள் முதலாவது இணைப்புத் தேவை (joint demand) என்பதாகும். இணைப்புத் தேவை என்பது விருப்பத்தைப் பூர்த்தி செய்வதற்கு ஒன்ருகப் பயன்படுத்தப்படும். இரண்டு அல்லது அதற்கும் அதிகமான தனிப்பட்ட பண்டங்களின் தேவையைக் குறிக்கும்—உதாரணமாக, கல்லெண்ணெயின் (petrol) தேவையானது மோட்டார் கார்களின் தேவையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. இதைப்போன்ற தொடர்பே புகைபிடிக்கும் குழாய்களுக்கும் குழாய்ப் புகையிலைக்கும் (pipe-tobacco), பேனுக்களுக்கும், மைக்கும், கத்திகளுக்கும் முட்கரண்டிகளுக்கும் இடையே உள்ள தேவையிலுள்ளது. இவைகளுக்கிடையேயுள்ள பரிமாற்றத் தொடர்பின் விளைவுகளை நன்கு காணமுடியும். ஒரு பண்டத்தின் தேவையில் ஏற்படும் மாற்றமானது, அல்லது அதன் விலையின் மாற்றத்தால் அதன் தேவைக்கோட்டில் ஏற்படும் மாற்றமானது அதனுடன் தொடர்புகொண்டுள்ள பண்டத்தின் தேவையையும் (அப் பண்டத்தின் விலையில் எந்த மாறுதலும் இன்றியும்) அதே திசையில் மாற்றியமைக்கக் காரணமாக இருக்கிறது. இத்தகைய தொடர்புகொண்டுள்ள பண்டங்களுக்கு நிரப்புப் பொருள்கள் (complementary goods) என்று பெயர். இந்த நிலைக்குஎதிரிடையான ஒரு நிலையும் உண்டு. அந் நிலை நேரிடையான போட்டிப் பொருள்களில் எற்படுகிறது. மின்சார அடுப்புகளும் (electric cookers), வாயு அடுப்புகளும் (gas cookers), சிகரெட்டுகளும்,குழாய்ப்புகையிலை

யும், ரயில் பயணமும், மோட்டார் கோச்சுப் பயணமும் ஒன்றுக்கொன்று போட்டிப் பொருள்களாம். இங்கே ஒரு பண்டத்தின் விலை மாற்றத்தால் அதன் தேவையில் ஏற்படும் மாற்றமானது அதனுடைய பதிலிப் பொருளின் தேவையில் (அதனுடைய விலையில் எந்த மாற்றத்தையும் விளைவிக்காமல்) எதிரிடையான மாறுதலை உண்டுபண்ணும்.

இரண்டாவதாக, வழிவந்த தேவை (derived demand) என்பதனைப் பார்ப்போம். ஒரு பண்டமானது அதன் காரணமாகத் தேவைப்படாமல் அது மற்றப் பொருளைச் செய்வதற்குப் பயன்படுவதால் தேவைப்படும்போது அத்தகைய தேவைக்கு வழிவந்த தேவையென்று பெயர். உதாரணமாக, எஃகு (steel) யாவருக்கும் தேவைப்படுவதில்லை. அதற்கான தேவை வழிவந்த தேவையே (derived demand) ஆகும். எஃகினுல் செய்யப்பட்ட பொருள்களான கார்கள், சலவைப் பொறிகள் (washing machines), இருப்புப் பாதைகள் இவைகளின் தேவையினின்றே எஃகின் தேவை உண்டாகிறது. இதைப் போன்றே செங்கற்களுக்கான தேவையானது, வீடுகள், தொழிற்சாலைகள் இவைகளுக்கான தேவையினின்றும் பிறக்கின்றது. இதைப்போன்றே கச்சாப் பருத்திக்கான தேவையானது, உடைகள், சட்டைகள் ஆகியவைகளின் தேவையினின்றும் உண்டாகிறது. இத்தகைய தொடர்பானது அடிப்படையில் இணைப்புத் தேவைக்குச் சமமானதாகவுள்ளது; சம்பந்தப்பட்ட அங்காடிகளுக்கிடையேயும் இதைப்போன்றதொரு தொடர்பு இருக்கும்.

கடைசி வகையான பரிமாற்றத் தொடர்பு (inter-relationship) கலப்புத் தேவையாகும் (composite demand). ஒரு பொருளானது பல்வேறு பயன்களுக்காகத் தேவைப்படும்போது அப் பொருளினது தேவையைக் கலப்புத் தேவை என அழைக்கிரேம். இணைப்புத் தேவைக்கும் கலப்புத் தேவைக்கும் வேறுபாடு உண்டு. இணைப்புத் தேவையில் பல பொருள்கள் ஒரு பயனுக்காகத் தேவைப்படுகின்றன. கலப்புத் தேவைக்கு சர்க்கரையை உதாரணமாகக் கூறலாம். சர்க்கரை நேரடியான நுகர்ச்சிக்கும் பயன்படுத்தப்படுகிறது. இத்துடன் ரொட்டி தயார் செய்தல் அல்லது இன்பழ ஊறல் (jam) தயார் செய்தல் அல்லது நெருப்பு உண்டுபண்ணுதலுக்கும் கூடப் பயன்படுத்தப்படுகிறது. இதைப்போன்றே செம்மறி ஆடுகள் கம்பளி (wool) அல்லது மாமிசம் அல்லது தோல் முதலியவற்றை அடையப் பயன்படுகின்றன; நிலக்கரியானது வீட்டுத் தேவைகளுக்கும், நிலக்கரி வாயு உண்டுபண்ணுதற்கும், மின்சாரம் உண்டுபண்ணுவதற்கும், கப்பல்களுக்கும் பயன்படுகிறது. இத்தகைய பொருள்களின்

பல்வேறு அங்காடிகளுக்கிடையே ஏற்படும் விளைவெதிர்விளைவுகள் (interactions) தேவையைவிட அளிப்பின்மூலமாகவே நிகழ்கின்றன. ஒரு பொருளின் ஒருவகையான பயனுக்கான தேவை (demand for one type of use) அதிகரிக்கும்போது, அது மற்றப் பயன்களுக்கு அப் பொருள் பயன்படுத்தப்படுவதைத் திருப்பி, அத் தேவைக்கு அளிக்கிறது. இதனால், மற்ற அங்காடிகளில் அப் பொருளுக்கு ஓர் ஒப்பீடான கிடைப்பருமை (a relative scarcity) ஏற்படும். இதனால், அந்த அங்காடிகளில் அந்தப் பொருளின் விலையும் நுகர்ச்சியும் பாதிக்கப்படும்.

இவ்வாறு பலவகையான தேவையைப்பற்றி ஆராயும்போது—இத்தகைய தேவைகள் பொருளாதாரமுறைமுழுவதிலும் ஒரு பெரும் பகுதியில் இடம்பெறுகின்றன—ஒன்றை மனத்தில் கொள்ள வேண்டும். தேவைக் கோடுகள் தற்காப்புடையனவாக இருக்கின்றன என்னும் எடுகோள் எப்போதுமே செல்லுபடியாகத்தகுந்ததாக இருப்பதில்லை என்பதை மனத்தில் கொள்ளவேண்டும். எந்த ஒரு பண்டத்தின் தேவையும் அதன் விலையைப் பொறுத்துள்ளது; ஆனால், அது மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது, கண்ணில் படாத பல்வேறு பண்டங்களின் விலைகள், அளிப்பு, அவைகளுக்கான தேவை இவற்றையும் பொறுத்துள்ளது.

### 4. விலை நெகிழ்ச்சி (Price Elasticity)

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் ஓர் 'இயல்பான' (normal) தேவைக்கோடு, ஏன் இடமிருந்து வலமாகக் கீழ்நோக்கிச் சரிவதாக வரையப்பட்டுள்ளதென்பதையும், இவ்வாறு சரிவதால் அடிப்படையான தேவை விதியை (basic law of demand) அது பிரதிபலிக்கிறதென்பதும், அத் தேவை விதியாவது யாதெனில், ஒரு பண்டமானது குறைந்த விலையில் விற்கப்படும்போது, மற்றவைகள் சமமாக இருக்கும்போது அது அதிக விலையில் வாங்கப்பட்டதைக் காட்டிலும் அதிகமான அளவு குறைந்த விலையில் விற்கப்படும் போது வாங்கப்படும் என்பதுமாகும். இவை யாவற்றையும் இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் பார்த்தோம். தற்போது அந்தக் கோடு கீழ்நோக்கிச் சரிந்து செல்லும் வீதம் (the rate at which a curve slopes downward) என்ன பொருளை உணர்த்துகிறது? அது எத்தகைய முக்கியத்துவத்தையுடையது என்று தீர்மானிக்கும் பொருட்டு வாதத்தைத் தொடருவது—அதாவது, ஏன் சில தேவைக் கோடுகள் செங்குத்தானவையாக இருக்கின்றன, ஏன் சில தேவைக் கோடுகள் கிட்டத்தட்ட படுகிடைக் (horizontal) கோடுகளாக இருக்கின்றன என்பதனை ஆராய்வது—அவசியமாகின்றது.

ஒரு குறிப்பிட்ட புள்ளியில் தேவைக் கோடானது செங்குத்தாக இருப்பதானது, ஒரு குறிப்பிட்ட பண்டத்ினது தேவையின் விலை நெகிழ்ச்சி என்பதைக் காட்டுகிறது. நெகிழ்ச்சி (elasticity) என்பது விலைக்கேற்பத் தேவை அடைகின்ற மாற்றத்தின் அளவாகும். 14 (a), 14 (b) ஆகிய படங்களில் காட்டப்பட்டுள்ள தேவைக்கோடுகளை நோக்குவோம். படம் 14 (a)-ல் உள்ள கோடு ஏறக்குறைய செங்குத்தாக இருக்கிறது. விலையானது $P_1$-லிருந்து $P_2$ ஆகக் குறைதலானது அப் பண்டம் வாங்கப்படும் கணியத்தை $OM_1$-லிருந்து $OM_2$ ஆக அமைக்கின்றது. இது ஓர் ஒப்பீடான குறைந்த அதிகரிப்பே. படம் 14 (b)-ல் காட்டப்பட்டுள்ள கோடு இதற்கு நேர்மாறாக உள்ளது. இக் கோடு மிகக் குறைவான செங்குத்தாகச் (much less steeply) சரிந்துள்ளது. சென்ற கோட்டின் விலை இறக்கத்தைப்போலவே அதே அளவு விலை இறக்கமானது(அதாவது, விலை $P_1$-லிருந்து $P_2$ ஆகக் குறைந்துள்ளது) இருந்தபோதிலும் ஒப்பீடாகப் பண்டம் வாங்கப்படும் கணியம் அதிகமாக உள்ளதை $OM_1$-க்கும், $OM_2$-க்கும் உள்ள இடைவெளி உணர்த்துகின்றது.







படம் 14.

இக் கருத்தினை இன்னும் சற்றுச் சரிநுட்பமாக விளக்குதல் கூடும். ‘ஒப்பீடான குறைந்த அளவு’ (relatively small) ‘ஒப்பீடான அதிக அளவு’ (relatively large) என்பன கருத்தினைச் சரியாக உணர்த்தக் கூடியனவாக இல்லை. மிக எளிதாக, குழப்பமேதுமின்றித் தேவையின் விலை நெகிழ்ச்சியை (price elasticity of demand) அளவிடக்கூடிய முறையொன்றுள்ளது. கொடுக்கப்பட்டுள்ள எந்தப் பண்டமாயினும், அப் பண்டத்தின் பல்வேறு விலைகளில் நுகர்வோர்கள் செலவிடும் பணத்தின் மொத்த அளவைக்கொண்டு இதனை எளிதாக அளவிட்டு விடலாம். இந்த மொத்த அளவானது, வாங்கப்பட்ட அலகுகளின் மொத்த எண்ணிக்கையையும், அப் பண்டங்கள் விற்கப்பட்ட

விலையையும் பெருக்கி, அதன்மூலம் கிடைத்த மொத்தமாகும். ஒரு பண்டத்தின் விலையானது இறங்கினால் அது விற்கப்படும் மொத்த அளவானது இயல்பாக அதிகரிக்கும். விலை இறக்கத்தைச் சரிக்கட்டு வதற்குப் போதுமான அளவிற்கும் மேலாக விற்பனையின் அதிகரிப்பு இருக்குமானால், அந்தப் பண்டத்தின்மீது செலவழிக்கப்படும் பணத்தின் அளவும் அதிகரிக்கும்; அப்படியானால் தேவையானது நெகிழ்ச்சியுடையதாகக் கூறப்படும்.

விற்பனையின் அதிகரிப்பு ஒப்பீடாகக் குறைவாக இருந்து, அது விலை குறைந்துள்ளமையைச் சரிக்கட்டப் போதுமானதாக இல்லாம லிருக்குமானால், விலை குறைக்கப்படும்போது நுகர்வோர்கள் செலவிடும் மொத்தச் செலவானது குறையும். அப்போது தேவை யானது நெகிழ்வற்றதாக (inelastic) உள்ளதென்று கூறப்படு கிறது. கடைசியாக, விற்பனையின் அதிகரிப்பானது விலைக்குறைவைச் (reduction) சரிக்கட்டும் அளவிற்கே போதுமானதாக இருந்து (just sufficient to offset the reduction in price), விலை குறையும் போது பண்டத்தின்மீது செலவழிக்கப்படும் பணத்தின் மொத்த அளவு (total amount of money spent on the commodity) மாறாமல் நிலையானதாக இருக்குமானால், தேவையின் நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமமானதாக (equal to unity) இருப்பதாகச் சொல்லப் படும். பண்டத்தின் கணியங்கள் கீழ்க்கண்ட பல்வேறு விலைகளில் விற்கப்படுவதாகக் கொள்வோம்:

| விலை (ஷில்லிங்குகளில்) | விற்பனை (ஆயிரத்தில்) | செலவழித்த மொத்த அளவு (ஆயிரத்தில்) |
|---|---|---|
| 10 | 10 | 100 |
| 9 | 12 | 108 |
| 8 | 14 | 112 |
| 7 | 16 | 112 |
| 6 | 17 | 102 |

10 ஷில்லிங் விலையிலும் 9 ஷில்லிங் விலையிலும் தேவையின் நெகிழ்ச்சி ஒன்றுக்கு அதிகமாக உள்ளதெனவும், 8 ஷில்லிங் விலையில் ஒன்றுக்குச் சமமாகவும், 7 ஷில்லிங் விலையில் ஒன்றுக்குக் குறைவானதாகவும் உள்ளதெனக் கூறப்படும்.

இதைப்போன்றே மற்றொரு முறையுமுண்டு. இது இன்னும் சற்று நயமான (refined) முறையாகும். வாங்கப்படும் கணியத்தில் ஏற்படும் மாறுதலை இன்ன விகிதம் (proportion) என்றும், இதைப்போலவே விலையில் ஏற்படும் மாற்றத்தையும் இன்ன

விகிதம் என்று கூறுவதுமே அம் முறையாகும். தேவை நெகிழ்ச்சியை (elasticity of demand) இவ்வாறு விகிதங்களில் தெளிவாக விளக்கலாம். இந்த இரண்டு விகிதங்களும் சமமாக இருக்குமானால்—உதாரணமாக, விலையில் 10 சதவீத இறக்கமானது வாங்கப்படும் கணியத்தில் 10 சதவீத அதிகரிப்பை உண்டுபண்ணுமானால்—கணியத்தில் ஏற்படும் ஒப்பீடான மாற்றத்தை விலையில் ஏற்படும் ஒப்பீடான மாற்றத்தால் வகுத்துவரும் எண் 1 ஆக இருக்கும். இதில் ஏற்படும் நெகிழ்ச்சியை ஒன்றுக்குச் சமமானதென்று கூறப்படும். வாங்கப்படும் கணியமானது விலையில் ஏற்படும் குறைவைக்காட்டிலும் குறைவான வீதத்தில் (உதாரணமாக, விலை 10 சதவீதமாக இறங்கும்போது வாங்கப்படும் கணியம் 5 சதவீதமே அதிகரிக்கும்போது) நெகிழ்ச்சியானது ஒன்றுக்கும் குறைவானதாகக் கூறப்படுகிறது. இதில், கணியத்தில் ஏற்படும் வீதமாற்றத்தை விலையில் ஏற்படும் வீதமாற்றத்தால் வகுத்தால் அதனுடைய மதிப்பெண் 0. 5ஆக இருக்கும். இவ்வகையில், இம்முறை மொத்தச் செலவீட்டு முறையைக்காட்டிலும் (total outlay method) சிறந்த முறையாகும். ஏனெனில், மொத்தச் செலவீட்டு முறையானது, தேவையானது ஒன்றைக் காட்டிலும் குறைவாக இருக்கிறதா அல்லது அதிகமாக இருக்கிறதா என்பதை மட்டுமே உணர்த்துகின்றது. எவ்வளவு அதிகம் அல்லது குறைவு என்பதை அது உணர்த்தாது. இதைப்போலவே வாங்கப்படும் கணியத்தின் விகித மாற்றமானது (proportionate change in quantity purchased) விலையின் விகித மாற்றத்தைக்காட்டிலும் அதிகமாக இருக்கும்போது, ஒன்றுக்கும் அதிகமான நெகிழ்ச்சி இருப்பதாகக் கூறப்படுகிறது. (விலை மாற்றமானது—price change—மிகச்சிறிய அளவாக—infinitesimally small—இருக்கிறதென்று கருதப்படும்போதுதான் இந்த இருமுறைகளும் தேவை நெகிழ்ச்சியை எடுத்து விளக்கவல்லனவாக உள்ளன என்பதனை ஈண்டு வலியுறுத்திக் கூறியாகவேண்டும்) கண்டிப்பாகச் சொல்லப்போனால் இவ்வாறு கணக்கிடப்பட்ட நெகிழ்ச்சிகள் (elasticities calculated in this way) எதிர்க்கணியப் பயன்களை (negative values) உணர்த்துவதாகவே உள்ளன; ஏனெனில், விலை மாற்றங்களும் கணிய மாற்றங்களும் இயல்பாக ஒன்றுக்கொன்று எதிரிடையாகவே இருக்கின்றன. நடைமுறையில் எதிர்கணியக்குறி (negative sign) வழக்கமாகப் போடப்படுவதில்லை. எனவே, நெகிழ்ச்சி 2 ஆக இருக்கிறதென்பது, விலையின் போக்கினால் (price movement) தூண்டப்படுகிற கணியமாற்றமானது அவ் விலையின் போக்கைப் போல் இரு மடங்கு அதிகமென்பதையும், அம் மாற்றம் எதிர்த் திசையை நோக்கி உள்ளதென்பதையும் உணர்த்தும்.

இவற்றிலிருந்து என்ன விளங்குகிறதெனில், தேவைக் கோடானது சீரான சரிவை (constant slope) உடைத்ததாக உள்ளதென்பதானது, அக் கோட்டின் நீளம் முழுவதிலுமே தேவையின் நெகிழ்ச்சி ஒரேவிதமானதென்பதை உணர்த்தாது என்பதாகும்; தேவை நெகிழ்ச்சியின் அளவு, ஆரம்ப விலை, வாங்கப்படும் கணியம் இவை ஒவ்வொன்றிலும் ஏற்படும் மாற்றங்கள் ஆகிய இவைகளுடன் சம்பந்தப்பட்டிருப்பதே இதற்குக் காரணம். உதாரணமாக, தேவை அட்டவணையானது நேர்க்கோடாகவுள்ள ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் விலையானது 10 ஷில்லிங்கிலிருந்து 9 ஷில்லிங்காகக் குறைகிறதென்றும், அந்தப் பண்டம் வாங்கப்படும் கணியமானது 50 அலகுகளிலிருந்து 100 அலகுகளாக அதிகரிக்கின்றதென்றும் வைத்துக்கொள்வோம் (படம் 15 (a)யைப் பார்க்கவும்).

$$\frac{\text{வாங்கப்படும் கணியத்தில் ஏற்படும் விகித மாற்றம்}}{\text{விலையில் ஏற்படும் விகித மாற்றம்}}$$

என்னும் வாய்பாடு (formula) $50/50 \div 1/10$ அதாவது, 10 என்னும் நெகிழ்ச்சியின் அளவை உணர்ந்துகொள்ளத் துணை செய்கிறது. தற்போது விலையானது 1 ஷில்லிங்காகக் குறையுமானல், வாங்கப்படும் கணியம் 100லிருந்து 150 ஆக அதிகரிக்கும். இந்த விலையில் தேவை நெகிழ்ச்சியானது $50/100 \div 1/9 = 4\frac{1}{2}$ ஆக இருக்கும். இவ்வாறு பார்த்துக்கொண்டே







படம் 15.

சென்ருல் கோட்டின் ஒவ்வொரு புள்ளியிலும் தேவை நெகிழ்ச்சியானது வெவ்வேருக இருப்பதைக் காணலாம்—உதாரணமாக, விலையானது 2 ஷில்லிங்கிலிருந்து 1 ஷில்லிங்காகக் குறையும்போது தேவை நெகிழ்ச்சி 0·22 ஆக மட்டுமே இருப்பது தெரியும். எனவே,

நெகிழ்ச்சி என்பது கோட்டின் ஒரு குறிப்பிட்ட புள்ளியில் உள்ள நெகிழ்ச்சியை (அதாவது, ஒரு குறிப்பிட்ட விலையில்) அல்லது ஒரு குறிப்பிட்ட விலைகளின் ஒரு குறிப்பிட்ட எல்லையில் உள்ள (over a specified range of prices) நெகிழ்ச்சியைக் குறிக்குமென்பதாகிறது.

இருப்பினும், தேவைக் கோடானது (demand curve) அதன் நீளம் முழுமையிலும் ஒரேவிதமான நெகிழ்ச்சியை யுடையதாக இருக்குமென்றும் கருத இடமுள்ளது. அத்தகைய ஒரு கோடு படம் 15 (b)-ல் உள்ளதைப் போன்ற வடிவத்தைக் கொண்டதாக இருக்கும். இத்தகைய வடிவத்தை வடிவ கணிதத்தினர் (geometers) நீள்சதுர அதிபர வளைவு (rectangular hyperbola) என்கின்றனர். இந்த நீள்சதுர அதிபர வளைவில் அச்சுகளிலிருந்து செங்குத்தாயும் இணையாயும் செல்கின்ற நேர்க்கோடுகள், எந்த ஒரு புள்ளியிலும் ஒன்றையொன்று வெட்டுமாயின் ஒரு நீள்சதுரப் பரப்பு உண்டாகும் (உதாரணமாக, $OP_1$ $Q_1$ $M_1$ அல்லது $OP_2$ $QM_2$). வளைவில் எந்தப் புள்ளியையும் இவ்வாறு வெட்டி அதன்மூலம் ஏற்படும் நீள்சதுரம் ஒவ்வொன்றும் சமமான பரப்பினை உடையனவாகும்.

இந்த நீள்சதுரத்தின் பரப்பளவானது பண்டத்தின் இரு நீளங்களின் பக்கங்களுக்குச் சமமானதாகவேயிருக்கும்—இரு பக்கங்களாவன, விலையை அளவிடும் பக்கமும், தேவைப்படுகின்ற கணியத்தை அளவிடும் பக்கமுமாகும். இப் பரப்பளவானது எந்த விலையிலும் அந்தப் பண்டத்தின்மீது செலவழிக்கப்பட்ட மொத்தத் தொகையைக் காட்டுகிறது—இந்தத் தொகையானது, ஒவ்வொரு விலையிலும் எத்தனை பண்டங்கள் வாங்கப்பட்டனவோ அந்த எண்ணிக்கையால் அவ் விலையைப் பெருக்கி அதன்மூலம் கிடைத்த தொகையாகும். எனவே, நீள்சதுர அதிபர வளைவென்பது, பண்டத்தின்மீது செலவழிக்கப்பட்ட மொத்தத் தொகையானது எந்த இடத்திலும் ஒரு விலை மாற்றத்தால் பாதிக்கப்படாத நிலையைக் காட்டும் ஒரு தேவைக் கோடாக இருக்கிறது. நாம் ஏற்கெனவே பார்த்தது போல், இது தேவை நெகிழ்ச்சியானது எந்த இடத்திலும் ஒன்றுக்குச் சமமானதாக இருப்பதை (equal to unity everywhere) உணர்த்தும்.

சுருக்கமாகக் கூறுமிடத்து, தேவையின் விலைநெகிழ்ச்சியென்னும் கருத்தானது (concept of price elasticity of demand), ஒரு பண்டத்தின் விலைகளின் மாற்றங்களுக்கேற்ப அப் பண்டத்தின் தேவை அடைகின்ற ஒப்பீடான ஈடு கொடுக்கும் மாற்றத்தையே உணர்த்துகிறதெனலாம். இதற்கு இரண்டு வரையறைகளைக் கூறலாம். வாங்கப்படும் கணியத்தில் (quantity purchased

விலைமாற்றமானது யாதொரு விளைவையும் உண்டுபண்ணவில்லையெனில், அப்போது தேவையானது அந்த விலையில் அளவின்றி நெகிழ்வற்றதாக (infinitely inelastic) இருக்கிறதென்று சொல்லப்படுகிறது. விலையில் ஒரு சிறிதளவு மாற்றமானது, வாங்கப்படும் கணியத்தில் (quantity purchased) அளவின்றி அதிகமான விளைவை (infinitely large effect) ஏற்படுத்துமானால், அப்போது தேவையானது அளவின்றி நெகிழ்வுடையதாக (infinitey elastic) இருப்பதாகக் கூறப்படுகிறது. இந்த அதிதீவிர நிலைகளை விளக்கிய ஒரு வரைகட்டப் படம் (graph) வரைவதும் பயன்தர வல்லதோர் பயிற்சியே.

**5. விலை நெகிழ்ச்சியை ஆளுகின்ற காரணிகள்** (Factors Governing Price Elasticity)

விலை நெகிழ்ச்சியை அளவிடக்கூடிய முறைகளை ஆராய்ந்த பின்னர், மற்றப் பண்டங்களின் தேவையைக் காட்டிலும் ஏன் ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் தேவைமட்டும் அதிகமாக அல்லது குறைவாக நெகிழ்ச்சியையுடையதாக இருக்கின்றதென்று ஆராய்வது அவசியமாகும். அங்காடியில் விற்கப்படுகின்ற ஒரு பண்டத்தின் கணியத்தில் மாற்றம் ஏற்படுவது ஒன்று, ஒவ்வொரு நுகர்வோரும் வாங்குகின்ற சராசரிக் கணியத்தில் ஏற்படும் மாற்றத்தால் ஏற்படவேண்டும், அல்லது நுகர்வோர்களின் எண்ணிக்கையில் ஏற்படும் மாற்றத்தால் ஏற்படவேண்டும். (இவ்விரண்டு விளைவுகளும் ஒரே சமயத்தில்—வழக்கமாக அப்படித்தான் நிகழ்கிறது—நிகழ்ந்தபோதிலும்), தற்போது உடனடியாக நாம் ஆராயவேண்டியது ஒன்றுள்ளது. ஏன் சிலவற்றில் மாத்திரம் ஒரு பண்டத்தின் விலையில் ஏற்படும் மாற்றமானது அப் பண்டம் நுகரப்படும் சராசரி அளவிலோ (average amount) அல்லது நுகருகின்றவர்களின் எண்ணிக்கையிலோ குறிப்பிடும்படியான விளைவை (market effect) உண்டுபண்ணுகிறதென்றும், மற்றவைகளில் விளைவு ஏன் மிகக் குறைவாக இருக்கிறதென்றும் உடனடியாக ஆராய்வது நலம்.

முதலாவதும் முக்கியமானதுமான ஒரு காரணி, ஒரு பண்டத்திற்கு எந்த அளவிற்கு, ஏறக்குறைய நெருங்கிய பதிலிப்பொருள்களைப் பெறக்கூடும் என்பதாகும். ஒரு பண்டமானது மிக எளிதாக மற்றப் பண்டங்களால் ஈடு செய்யப்படக்கூடும் என்றால், அப்போது, அப் பண்டத்தின் விலை சிறிதளவே அதிகரித்தாலும் அதன் நுகர்ச்சியில் ஒப்பீடான்து ஒரு பெரும் விளைவை (a relatively large effect) ஏற்படுத்தும். ஏனெனில், மக்கள் விலையில் மாற்றமடையாததும், ஏறக்குறைய ஒத்ததாயுமுள்ள மற்றப் பண்டங்களை நுகரத் தலைப்

படுவர். உதாரணமாக, பெரும்பாலோருக்குச் செம்மறி மாமிசமும் (lamb), மாட்டு மாமிசமும் (beef) நெருங்கிய பதிலிப் பொருள்களாக இருக்கின்றன. செம்மறி மாமிசம் விலையதிகமானல் செம்மறி மாமிசத்தை மட்டுமே புசிக்கின்றவர்களை அது குறைவாக அம் மாமிசத்தை வாங்கத் துண்டாது; ஞாயிற்றுக்கிழமை சாப்பாட்டில் (sunday table):செம்மறி மாமிசத்திற்குப் பதில் மாட்டு மாமிசத்தைப் பதிலிப்பொருளாக உண்பவர்களையே அவ்வாறு வாங்கத் தூண்டும்.

இதற்கு மாருக நெருங்கிய பதிலிப் பொருள்கள் யாவும் இல்லாத ஒரு பண்டத்திற்கு நெகிழ்வற்ற தேவையே (inelastic demand) இருக்கக்கூடும்; காரணம், ஒரு பண்டத்திலிருந்து மற்றப் பண்டங்களுக்கோ அல்லது மற்றப் பண்டங்களிலிருந்து ஒரு பண்டத்திற்கோ தேவையை கணிசமான அளவில் மாற்றிக்கொள்வது இயலாததாக இருக்கும். உதாரணமாக, அஞ்சல் (post) மூலமாக முடங்கல் அனுப்புதலில் விலை உயர்ந்துவிட்டதென்று வைத்துக்கொள்வோம். அப்போது முடங்கலுக்குப் பதிலாக மக்கள் ஓரளவிற்கே தந்திகளையும் தொலைபேசிகளையும் பயன்படுத்தத் தூண்டப்படுவர். ஏனெனில், இவைகள் முடங்கலுக்கு நெருங்கிய பதிலிப் பொருள்களல்ல; இத்தகைய ஒரு பதிலீட்டால் மொத்தத்தில் முக்கியமான விளைவு ஒன்றும் ஏற்பட்டுவிடாது.

அவசியப் பொருள்களுக்கான தேவையானது நெகிழ்வற்றதாக இருக்கும். அதே சமயத்தில் போகப்பொருள்களுக்கான தேவை பொதுவாக நெகிழ்ச்சியுடையதாக இருக்கும். இந்த எடுகோளின் அடிப்படையில்தான் பதிலீடு சாத்தியப்படுதல் அமைந்துள்ளது. அவசியப் பொருளை விளக்கவேண்டுமாயின் போதிய பதிலிப் பொருள் இல்லாத ஒரு பண்டம் எனலாம். இதுபோலவே போகப் பொருள் என்பதை வேறு ஏதாவதொரு பதிலிப் பொருளைக்கொண்டு உடனடியாக பதிலீடு செய்துகொள்ளத்தக்க ஒரு பொருள் என்று விளக்கம் கூறலாம். பதிலிப்பொருள்கள் உகந்தனவாக இருக்கின்றன அல்லது உகந்தனவாக இல்லாமலிருக்கின்றனவென்பது பண்டங்களுக்கிடையேயுள்ள பருப்பொருளியலான ஒப்புமை (physical similarity) அல்லது வேற்றுமை (dissimilarity) ஆகிய இவற்றைப் பொறுத்தது என்பதைவிட வளர்ப்பு (upbringing), பழக்கம் ஆகியவற்றைப் பொறுத்தது என்று கூறுவதே சாலப் பொருத்தமுடைத்தாகும். உதாரணமாக, சுமாரான வருமானத்தை யுடைய ஒருவர் பாலைப் பாலேட்டிற்கு (cream) நெருங்கிய பதிலிப் பொருளாகக் கருதலாம். பால், பாலேடு இவற்றில் ஏற்படும் ஒப்பீடான விலைமாற்றம் (relative price change) இவை ஒவ்வொன்றையும் அவர் நுகர்வதில் முக்கியமான மாறுதல்களை உண்டு

பண்ணக்கூடும். இதற்கு மாருக, ஒருவர் அல்லது ஒருத்தி பல ஆண்டுகளாகப் பாலேட்டைத் தனது காப்பியில் கலந்து குடித்துப் பழக்கப்பட்டுவிட்டார் எனில், அவருக்குப் பாலானது (இந்த நோக்கத் திற்கு மட்டும்) மிகவும் ஒரு நிறைகுறைவான (imperfect) பதிலிப் பொருளாகவே தோன்றுமாதலால், பாலேடு விலை உயர்ந்து விற்கப் படும்போது மிகவும் வேண்டாவெறுப்பாகவே (relectantly) பாலேட் டிற்குப் பதில் பாலினைப் பதிலிப்பொருளாகப் பயன்படுத்துவார். இதேபோன்று புகையிலை ஒரு போகப்பொருளாகும்; மனித வாழ் விற்கு இன்றியமையாததென்று அதனைக் கூற முடியாது. எனினும், புகையிலைப் பழக்கத்திற்கு இன்று பலர் அடிமையாகியுள்ளனர். சென்றகாலங்களிலெல்லாம் புகையிலையின் விலையில் அதிகமான மாறுதல்கள் ஏற்பட்டபோதும் அதன் நுகர்ச்சியில் மிகச் சிறு மாறுதல்களே ஏற்பட்டன. பொருள்களைப் போகப்பொருள்கள் அல்லது அவசியப் பொருள்கள் என்று கூறுவது அப் பொருள்களின் பருப்பொருளியலான தன்மையிலோ அல்லது அப் பண்டங்களின் தரத்திலோ இல்லை; அப் பண்டங்கள் போதிய பதிலிப்பொருள் களாகக் (adequate substitutes) கருதப்படும் எண்ணத்தைப் பொறுத்ததே யாகும்.

இக் காரணியின் மற்ரெரு தன்மையைப் பார்ப்போம். ஒரு பண்டமானது பல்வேறு பயன்களுக்குப் பயன்படுத்தப்படும்போது ஒரு விளைவையும், ஒரு குறிப்பிட்ட பயனுக்கே பயன்படுத்தப்படும்போது தலைகீழான விளைவையும் உடையதாக இருக்கிறது. பொதுவாகப் பல பயன்களையுடைய ஒரு பண்டம் ஓர் ஒப்பீடான நெகிழ்வுள்ள தேவையை உடையதாக இருக்கும்; அதன் அங்காடிகளின் எல்லை பெரியதாக இருப்பதால், அதன் விலை மாற்றம் நெகிழ்ச்சியை உண்டு பண்ணத் தக்கதாகவுள்ளது. உதாரணமாக, மின்சக்தியானது விளக்கெரிக்கவும், சமையல் செய்யவும், குளிரைப் போக்கி வெப்பம் உண்டுபண்ணவும், இயந்திரங்களை இயக்கவும் பயன்படுத்தப்படு கிறது. அதன் விலை இறக்கமானது அதன் ஒவ்வொரு நோக்கத்தின் நுகர்ச்சியையும் ஒரு சிறிதளவே பாதிக்கும். எனினும், ஒவ்வொரு நோக்கத்திலும் ஏற்படும் மொத்த விளைவு (aggregate effect) அதன் மொத்தத் தேவையில் கணிசமான அளவிற்கு மாற்றத்தை உண்டு பண்ணும். இதற்கு நேர்மாருன விளைவு கோதுமையில் ஏற்படு கிறது. கோதுமையில் ஒருவகை அல்லது மற்றவகையான மாவு தயாரிக்கலாமே தவிர, இது தவிர்த்து வேறு மற்றப் பயன் களுக்கு அதனைப் பயன்படுத்தமுடியாது; எனவே, அதனுடைய மொத்தத் தேவையில் முக்கிய மாற்றம் இருக்கவேண்டுமெனில், இதன் ஒரே ஒரு பயனில் (single use) விலைமாற்றமானது கணிச மான விளைவை (substantial effect) உண்டுபண்ணியாகவேண்டும்.

ஒரு பண்டமானது ஒரே ஒரு பயனுக்கே பயன்படுத்தப்படுமாயின்—அப்படியாயின், அப் பண்டத்திற்கு பதிலிப்பொருள்களே ஒரு சிறிதும் இல்லையென்று பொருள்—அது அப் பண்டத்தின் தேவை நெகிழ்ச்சியை வெகுவாகக் குறைத்துவிடும்.

இரண்டாவதாக உள்ள முக்கியக் காரணி ஒரு பண்டத்தின் நெடுவாழ்வுத்தன்மை (durability) ஆகும். நெடுவாழ்வுத்தன்மையானது, அப் பண்டத்தின் தேவையில் விலை ஏற்படுத்தும் நெகிழ்ச்சியைப் பெரிதும் பாதிப்பதாகவுள்ளது. பொதுவாகக் கூறுமிடத்து ஒரு பண்டத்தின் நெடுவாழ்வுத்தன்மை அதிகரிக்குமானால், அதன் விலை அதிகரிக்கும்போது, அதனை மாற்றி வேறு புதிதாக வாங்கவேண்டும் என்னும் எண்ணம் ஒத்திப்போடப்பட்டுக்கொண்டே வரும்; அதேபோன்று அப் பண்டத்தின் விலை வழக்கத்திற்குப் புறம்பாக (unusually) ஒரேயடியாகக் குறையுமானால் பண்டத்தை மாற்றி வேறு புதியதாக அதே பண்டத்தை வாங்கவேண்டும் என்னும் எண்ணம் அதிகமாகத் தூண்டப்படும். உதாரணமாக, ஒரு மின் விளக்குக் குமிழ் (electric bulb) சீக்கிரம் தீய்ந்துபோகவல்லதாகவுள்ளது. விலை அப்போது ஏறி விற்றபோதிலும் குமிழை உடனடியாக மாற்றிப் புதிய குமிழைப் பொருத்துகிறோம். மாறாகக் கார்களின் விலை அதிகரிக்கின்றதென வைத்துக்கொள்வோம்; இது, கார் வைத்துக்கொண்டிருப்பவர்களைத் தங்கள் பழைய கார்களையே இன்னும் அதிகமான காலத்திற்கு—விலை ஏறாமல் இருந்தால் வைத்துக்கொண்டிருக்கும் காலத்தைவிட—வைத்துக் கொண்டிருக்கும்படி தூண்டுவதன்மூலம் தேவையையும் குறையச் செய்யும். இதனை வேறுவழியில் கூறுவோம். ஒரு பண்டத்தின் நெடுவாழ்வு (durability) எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக உள்ளதோ அவ்வளவுக்கவ்வளவு நுகர்வோர்கள் அதன் பயன்படு காலத்தை (working life) அதன் விலையின் அதிகரிப்புகள் அல்லது குறைவுகளுக்கேற்ப அதிகப்படுத்தவோ அல்லது குறைக்கவோ செய்வர்.

நெகிழ்ச்சியை ஆளுகின்ற மூன்றாவது காரணி, ஒரு பண்டமானது நுகர்வோர்களின் (consumers) மொத்தச் செலவில் பங்கு பெறும் ஒப்பீடான முக்கியத்துவமாகும் (relative importance). ஒருவருடைய மொத்தச் செலவில் ஒரு பண்டத்தை வாங்குதல் முக்கிய இடத்தைப் பெறும்போது (அதனுடைய விலை அதிகமாக இருத்தலாலோ அல்லது அதனை நுகரும் அளவு அதிகமாக இருத்தலாலோ) அவருடைய அத் தேவையானது விலைகளுக்கேற்ப மாற்றமடையக் கூடிய அதிவுணர்வு (more sensitive) பெற்றதாக (அந்தப் பண்டத்தை வாங்குவதற்கான செலவு அவருடைய மொத்தச் செலவில் ஒரு சிறு கூறாக இருப்பதைவிட) இருக்கும். வாரத்தில் ஒவ்வோர்

இரவும் படக்காட்சிக்குச் செல்லும் வழக்கமுடைய ஒருவர், படக் காட்சியின் கட்டணம் 50 சதவீதம் அதிகமாக உயருமாஞல் வாரத்தில் ஒன்று இரண்டு படக்காட்சிகளுக்குச் செல்வதைக் குறைத்துக் கொள்ளக்கூடும்; ஏனெனில், இதனல் (கட்டணம் அதிகமானதால்) ஏற்படும் கூடுதலான செலவு கணிசமான அளவில் இருக்கிறது. இதற்கு மாருக ஆண்டொன்றுக்கு ஒருமுறை அல்லது இருமுறை படக் காட்சிக்குச் சென்றுகொண்டிருக்கும் ஒருவர் இத்தகைய விலைமாற்றத் தால், தான் படக்காட்சிக்குச் செல்வதில் எத்தகைய மாற்றத்தையும் செய்யமாட்டார். செய்தித்தாள்கள் அல்லது உப்பு ஆகியவற்றின் விலை இரு மடங்காக அதிகரித்தபோதிலும் அவற்றிற்கான தேவை எந்த விதத்தாலும் பாதிக்கப்படுவதில்லை. இந்தப் பண்டங்கள் அடிக்கடி வாங்கப்பட்டபோதிலும் அவைகளின் விலை மிகவும் குறைவாக இருப்பதால் ஒவ்வொரு மனிதரும் அவற்றின்மீது செலவழிக்கும் மொத்தத் தொகை ஒப்பீடாக மிகக் குறைவாகவே யிருக்கிறது. இதற்கு மாருக, இனிப்பு ரொட்டி அப்பங்களின் (cakes) விலை இரட்டிப்பாக ஆகும்போது அது வீட்டுச் செலவில் (houshold expenditure), அவற்றின் நுகர்ச்சி குறைக்கப்படவில்லையாயின், பெரும் விளைவை உண்டுபண்ணும்.

### 6. நெகிழ்ச்சியின் மற்ற வகைகள் (Other Tpyes of Elasticity)

இதுவரையிலும் தேவையின் விலை நெகிழ்ச்சியைப்பற்றி (price elasticity of demand) ஆராய்ந்தோம். பொருளாதார ஆய்வுக்கு (economic analysis) இது ஒரு வெகு முக்கியமான வகையான நெகிழ்ச்சியாகும். இன்னும் வேறுவகையான நெகிழ்ச்சிகளும் உண்டு; அவற்றில் இரண்டு அவசியம் விளக்கப்படவேண்டும். அவற்றுள் முதலாவது, தேவையின் வருமான நெகிழ்ச்சியாகும். விலை நெகிழ்ச்சி (price elasticity) யானது, சென்ற அத்தியா யத்தில் கூறப்பட்ட பதிலீட்டு விளைவை (substitutions effect) ஒத்து இருப்பதுபோல, வருமான நெகிழ்ச்சியானது (income elasticity) வருமான விளைவை (income effect) ஒத்து இருக்கும். சென்ற அத்தியாயத்தில், தேவையானது வருமானத்தாலும், ஒப்பீடான விலையிஞலும் ஆளப்படுகிறது (influenced) என்பதனைப் பார்த்தோம். வருமான நெகிழ்ச்சியென்பது, நுகர்வோர்களின் உண்மை வருமானத்தில் ஏற்படும் மாறுதல்களுக்கேற்ப (changes in the real income of consumers) ஒரு பொருளின் தேவையானது மாறுபடுவதைக் குறிக்கும். அதனுடைய அளவு விலை நெகிழ்ச்சியின் அளவிற்கு இணையாக இருக்கும்—அதாவது, தேவைப்படுகின்ற கணியத்தில் ஏற்படும் விகிதமாற்றத்தை (the proportionate change in quantity demanded)—அந்த மாற்றத்தை விளைவிக்கும்;

வருமானத்தில் ஏற்படும் விகித மாற்றத்தால் (by the proportionate change in income which gives rise to such change) வகுத்தால் கிடைக்கும் அளவாகும்.

விலை நெகிழ்ச்சியானது எப்போதும் எதிர்க்கணியத்தில் (negative) இருக்கும். இதைப்போலன்றி, வருமான நெகிழ்ச்சியானது (income elasticity), வருமான விளைவு பதிலீட்டு விளைவிற்கு வலிமையூட்டவோ (re-inforce) அல்லது அதனைச் சரிக்கட்டவோ (offset) கூடுமாதலின், நேர்க்கணியமாகவோ (positive) அல்லது எதிர்க்கணியமாகவோ (negative) இருக்கக்கூடும். உதாரணமாக, நுகர்வோர்களது வருமானத்தில் 10 சதவீத அதிகரிப்பிற்கு ஏற்ப மின் சலவைப் பெட்டிகளின் (electric iron) தேவையானது படம் 16 (a) யில் காட்டப்பட்டிருப்பதுபோல் மாற்றமடைகிறதென வைத்துக் கொள்வோம். அதாவது, தேவைக்கோடானது $D_1$ $D'_1$ லிருந்து $D_2$ $D'_2$ ஆக மாறுகிறது; நிலையான விலையில் அதன் வாரத் தேவை 40,000த்திலிருந்து 50,000 ஆக, அல்லது 25 சதவீதம் அதிகமாக அதிகரிக்கின்றது. எனவே, வருமான நெகிழ்ச்சியானது+25/10, அல்லது +2·5 ஆக இருக்கும். தற்போது, படம் 16 (b) யில்




படம் 16.

காட்டப்பட்டுள்ளதைப்போன்று, இதேபோன்ற வருமான அதிகரிப்பால் உருளைக்கிழங்குகளுக்கான தேவையில் ஏற்படும் மாற்றத்தைக் கவனிப்போம். படத்தில் இத் தேவைக்கோடு இடப்புறமாகப் பெயர்ந்து அமைந்துள்ளது. உருளைக்கிழங்கின் தேவையானது வாரமொன்றுக்கு 150,000 டன்களிலிருந்து (tons)120,000 டன்களாக, அல்லது 20 சதவீதம் குறைந்துள்ளமையைக் காணலாம். இதன்படி வருமான நெகிழ்ச்சி (income elasticity)—20/+10, அல்லது—2.0 ஆகும்.

மற்றொரு முக்கியமான நெகிழ்ச்சி பண்டங்களுக்கிடையேயுள்ள நெகிழ்ச்சியாகும்—இது பின்னிய நெகிழ்ச்சி (cross elasticity) எனப்படும். இவ்வத்தியாயத்தின் முன்னொரு பிரிவில் கூறப்பட்டது போல, பெரும்பாலான பண்டங்கள் ஒன்றுக்கொன்று பதிலிப் பொருள்களாக இருக்கின்றன. ஒரு பண்டத்தின் விலை குறையுமானால், அது விலையில் மாற்றமடையாத மற்றப் பண்டங்களின் தேவையைக் கீழ்நோக்கிப் பெயர்ந்து செல்லுமாறு (downward shift in the demand) செய்யும். பண்டங்கள் நிரப்புப் பண்டங்களாக (complementary goods) இருக்குமானால் இதற்கு எதிரிடையான விளைவு ஏற்படும். ஒரு பண்டத்தின் விலை குறைந்து அதன் நுகர்ச்சி யதிகரிக்குமானால் அதன் நிரப்புப் பொருளின் தேவையும் மேல்நோக்கி இடம் பெயரும் (shift upwards). எனவே, X பண்டத்திற்கும், Y பண்டத்திற்கும் இடையேயுள்ள பின்னிய நெகிழ்ச்சியை அறிய, X பண்டத்திற்கான தேவையில் ஏற்படும் விகிதமாற்றத்தை (proportionate change in the demand for X) Y பண்டத்தின் விலையில் ஏற்படும் விகித மாற்றத்தால் (proportionate change in the price of Y) வகுக்கவேண்டும் என்று கூறலாம். வருமான நெகிழ்ச்சியைப்போன்றே பின்னிய நெகிழ்ச்சியும் (cross elasticity) நேர்க்கணியமாகவோ (positive) அல்லது எதிர்க்கணியமாகவோ இருத்தல் கூடும்; பண்டங்கள் பதிலிப் பொருள்களாக இருக்குமானால் அவைகளின் பின்னிய நெகிழ்ச்சி நேர்க்கணியத்திலிருக்கும் (அதாவது, Y-ன் விலை இறக்கமானது X-ன் தேவையில் குறைவை உண்டு பண்ணும்), பண்டங்கள் நிரப்புப் பண்டங்களாக இருப்பின், பொதுவாக, நெகிழ்ச்சி எதிர்க்கணியத்தில் இருக்கும்.

## 7. நெகிழ்ச்சித் தத்துவத்தின் முக்கியத்துவம் (The Significance of Elasticity)

ஒரு பண்டத்தின் தேவையினது நெகிழ்ச்சியின் அளவை அறிந்து கொள்வதானது மிகவும் பயனுடையதாகும். செய்பொருள்களைச் செய்கின்ற ஒருவர் (manufacturer) தனது உற்பத்தியைப் பெருக்க முனையும்போது, அப் பொருளை எந்த அளவிற்கு விலை குறையும்படி செய்தால், அவர் எண்ணுகிற அளவிற்குக் கூடுதலான அளவு பொருள்களை விற்கக்கூடும் என்பதனை அவசியம் கணக்கிட்டாகவேண்டும். தேவையின் நெகிழ்ச்சி ஒன்றுக்கும் குறைவாக இருக்கும்போது, குறைவான விற்பனை மொத்த வருவாய்க்கு (total sales revenue) அதிகமான அளவு பண்டங்களை விற்கவேண்டியுள்ளதை அவர் உணர்வார். இத்தகைய ஒரு நிலையை அவர் விரும்பமாட்டார். இதற்கு எதிரிடையாக, அவருடைய பொருளின் தேவை நெகிழ்ச்சி ஒன்றைவிட அதிகமாக

இருக்குமானல் (grater than unity), விலையில் ஓர் ஒப்பீடான சிறு குறையைச் (relatively small reduction) செய்வதன்மூலம் அவர் தம் விற்பனையை அதிகமான அளவிற்கு அதிகரித்துக்கொள்ள முடியுமென்பதனை அது உணர்த்தும். அங்காடி ஆராய்ச்சி நிபுணர்கள் (market research specialists), 'தேவை நெகிழ்ச்சி' என்னும் கருத்தினைப்பற்றிப் பேசாதிருக்கலாம்; ஆனல், அவர்கள் அடிக்கடி முயன்று சரிநுட்பமாகத் தெரிந்துகொள்ள விழைவதெல்லாம் இத்தகைய தகவலையே யாகும்.

தேவை நெகிழ்ச்சியைப்பற்றி அறிந்துகொள்வதானது வேருெரு வகையிலும் முக்கியமானதாக இருக்கிறது. மறைமுகவரிகளை விதிப்பது சம்பந்தமான முடிவுகளை எடுக்கவும் இதனை அறிந்து வைத்துக்கொள்வது அவசியமாகிறது. உதாரணமாக, அரசாங்கத்தால் வரி விதிக்கப்படுகிற ஒரு பண்டத்தை எடுத்துக் கொள்வோம். வரி விதிப்பு வீதம் அப் பண்டத்தின்மீது அதிகரிக்கப்படுகிறதென்று வைத்துக்கொள்வோம். இதனல் மொத்த வரி வருமானம் (total tax revenue) அதிகரித்துவிடுமா? இது ஆளுகையில் இருக்கின்ற விலையில் (ruling price) அப் பண்டத்திற்கான தேவையின் நெகிழ்ச்சியைப் பொறுத்ததாகும். நெகிழ்ச்சி ஒன்றுக்கும் குறைவானதாக இருப்பின் (less than unity), வரி வீதம் (rate of tax) அதிகரிக்கப்படும் விகிதத்தின் அதிகமான அளவிற்கு ஏற்றாற்போல் நுகரப்படும் கணியம் (quantity consume) குறையாது. இதனல் வரியின் மொத்த வருமானம் (total tax revenue) அதிகரிக்கும். இதற்கு மாருக, தேவையானது மிகவும் அதிக நெகிழ்வுடையதாக இருக்குமாயின், வரி வீதத்தின் அதிகரிப்பு விகிதத்திற்கும் அதிகமாக (a greater proportions than the increase in the rate of tax) அப் பண்டம் வாங்கப்படுவது குறைக்கப்படக் கூடும். கடைசியில் விளைவைப் பார்க்கும்போது, அரசாங்கமானது குறைவான வரி வீதத்திலிருந்து பெறுவதைவிடக் குறைவான வருவாயினையே அதிகமான வரி வீதத்தின்மூலம் பெறுகின்றதாக இருக்கும். இது தெளிவாகக் கீழ்க்கண்ட படத்தில் விளக்கப் பட்டுள்ளது. படம் 17-ல் இரண்டு உதாரணங்கள் தரப்பட்டுள்ளன. முதல் உதாரணத்தில் தேயிலை மீது விதிக்கப்படும் வரியானது $P_1\ T_1$ லிருந்து $P'_1\ T_1$ ஆக அதிகரிக்கப்படுகிறது; இதில் தேவையானது நெகிழ்வற்றதாக இருக்கின்ற காரணத்தால் தேயிலை நுகரப்படும் கணியம் மிகக் குறைந்த அளவிற்கே குறைகின்றது (falls only slightly). எனவே, வரியின் மொத்த வருவாய் (total tax revenue) $P_1\ Q_1\ R_1\ T_1$ லிருந்து $P'_1\ Q'_1\ R'_1\ T'_1$ ஆக அதிகரிக்கின்றது. இரண்டாவது உதாரணத்தில் எண்ணெய் அடுப்புகளின்மீது (oil heaters) விதிக்கப்படும் வரியானது $P_2\ T_2$விலிருந்து $P'_2\ T_2$ ஆக

அதிகரிக்கப்படுகிறது. இதனால் ஏற்பட்ட விலை அதிகரிப்பானது விற்பனையில் கணிசமான இறக்கத்தை (a substantial drop in sales) உண்டுபண்ணுகின்றது. எண்ணெய் அடுப்புகளுக்கு ஏறக்குறைய நெருங்கிய பதிலிப் பொருள்கள் ஏராளமாக இருக்கின்ற காரணத்தால் தேவை அதிகமாக நெகிழ்ச்சியுடையதாக இருக்கிறது. எனவே, புதிய வரி வருமானமாகிய $P'_2\ Q'_2\ R'_2\ T'_2$ ஏற்கெனவே கிடைத்த வரி வருமானமாகிய $P_2\ Q_2\ R_2\ T_2$வைவிடக் குறைவானதாக இருக்கிறது.



(a) Tea



(b) Oil heaters

படம் 17.

இதன்படி பார்க்கும்போது, மற்றவைகள் சமமாக இருக்கும் போது ஒரே அரசாங்கம் நெகிழ்வற்ற தேவையுடைய பண்டங்களின் மீது மறைமுக வரிகளை (indirect taxes) விதித்தல் சிறந்ததென அறிவுறுத்தத் தோன்றுகிறது. நடைமுறையில் பார்க்கும்போது மற்றவைகள் எப்போதும் சமமாக இருப்பதேயில்லை. பல பண்டங்கள், அவைகள் ஒரு குறிப்பிட்ட தேவையான வாழ்க்கைத் தரத்திற்கு இன்றியமையாதனவாக இருப்பதாலேயே நெகிழ்ச்சியற்ற தேவையினை (inelastic demand) யுடையனவாக இருக்கின்றன. அப்பட்டமான இந்தக் காரணத்திற்காகவே, அரசாங்கமானது அப் பண்டங்களின்மீது வரி விதித்து அவைகளை விலை உயர்ந்தனவாகச் செய்துவிடத் தயங்கக்கூடும் (சமூக அல்லது அரசியல் காரணங்களின் அடிப்படையில்). இருப்பினும், நெகிழ்ச்சித் தத்துவமானது, எவ்வாறு அரசாங்கத்தின் மொத்த வருமானத்தில் (government's total revenue) புகையிலை, ஒயின் (wines), சாராயம் (spirits) இவைகளின்மீது விதிக்கப்படும் மறைமுக வரிகளால் பெரும்பங்கு பெறுகின்றதென்பதனை விளக்குகின்றது.

பல்வேறு பண்டங்களுக்கான தேவை நெகிழ்ச்சியைப்பற்றி அறிந்துகொள்வதன் பயனைப் பார்த்தோம். இத்தகைய நெகிழ்ச்சியை நடைமுறையில் அளக்க இயலுமா? அவ்வாறு அளப்பது என்பது கடினமே. பல்வேறு பண்டங்களின் உற்பத்தி, விற்பனை ஆகியவற்றின் புள்ளி விவரங்களிலிருந்து எவ்வாறு தேவையானது விலை மாற்றங்களுக்கு ஏற்ப மாற்றமடைந்துள்ளதென்பதை அறியக் கூடும். ஆனால், இப் புள்ளி விவரங்களைத் தேவைக் கோடாக வடித்தல் என்பது வேறான காரியம். விலை இறக்கத்தால் ஏற்படும் நுகர்ச்சியின் அதிகரிப்பானது அந்த விலை இறக்கத்தின் விளைவாகவே இருத்தல் கூடும். ஆனால், இவ்வாறு அதிகரித்தலானது சுவைகளின் மாற்றத்தாலும் நிகழ்ந்திருக்கக்கூடும். (இச் சுவைகளின் மாற்றத்தை அளக்க முடியாது); அல்லது மற்றப் பண்டங்களின் விலைகளின் மாற்றத்தாலும் இத்தகைய அதிகரித்தல் ஏற்பட்டிருக்கக்கூடும் (இவ்வாறு அடிக்கடி நிகழ்வதுண்டு); அல்லது நுகர்வோர்களின் வருமானத்தில் ஏற்படும் மாற்றங்களாலும் (இவைகளும் தவறாமல் நிகழ்வதுண்டு) ஏற்படுவதுண்டு. எனவே, கொடுக்கப்பட்டுள்ள ஒரு தேவைக் கோட்டின் போக்கின் வழியாகச் (along a demand curve) சென்று அதன்மூலம் நாம் தெரிந்துகொள்ளும் நுகர்ச்சியின் மாற்றங்களுக்கும் (தேவை நெகிழ்ச்சி என்பது இது சம்பந்தப்பட்டதே), தேவைக்கோட்டின் இடப்பெயர்ச்சிகளின் (shifts) மூலம் நாம் தெரிந்துகொள்ளும் நுகர்ச்சியின் மாற்றங்களுக்கும் இடையில் ஒரு தெளிவான வேறுபாட்டினை (distinction) வகுத்தலென்பது கடினமானதாகும். எனினும், புள்ளிவிவர நிபுணர்கள் (statisticians) இந்தப் பிரச்சினைகளுடன் போராடி முடிவுகளைக் கண்டுபிடித்திருக்கின்றனர். அவர்கள் பிரிட்டனில் உணவு, மது, புகையிலை, உடை ஆகியவற்றில் பொதுவாக விலை நெகிழ்ச்சிகள் (price elasticities) மிகவும் குறைவாகவும் (சுமார் 0·2 அளவு), வாகனங்கள் போன்றவைகளுக்கு (சுமார் 0·75 அளவு எனலாம்) அதிகமாயும் இருக்கின்றன என்பதனைக் கண்டுபிடித்திருக்கின்றனர். தனி நபரின் பண்டங்களில் ஒவ்வோர் இனத்திலும் விலை நெகிழ்ச்சிகள் நிச்சயமாக அதிகமாகவேயிருக்கின்றன. நுகர்வோர் நெடுவாழ்வுப் பண்டங்களைவிட இவற்றில் நெகிழ்ச்சிகள் கணிசமாக ஒன்றுக்கும் மேற்பட்டதாக இருக்கின்றன. குடும்ப வரவுசெலவுத் திட்ட புள்ளிவிவரங்களிலிருந்து வருமான நெகிழ்ச்சிகளை எளிதாக அளக்க முடியும். பிரிட்டனில் அவைகள் உணவுப் பொருள்களில் 0·5-ம், பொதுவாக, நுகர்வோர் நெடுவாழ்வுப் பண்டங்களில் (consumers durables) 2-க்கும் அதிகமாகவும், பயணம், விடுமுறை ஆகிய செலவுகளில் 2·5 அல்லது இதற்கு அதிகமாகவும் உள்ளன.

உற்பத்தியாளர்கள் தங்களுடைய பொருள்களின் தேவையினுடைய விலை நெகிழ்ச்சி சம்பந்தமான புள்ளிவிவரக் கணக்குகளை வைத்திராவிட்டாலும், பெரும்பாலான உற்பத்தியாளர்கள் அமலில் உள்ள விலையில் (current price) ஏற்படும் சிறு மாற்றமானது எவ்வளவு விளைவுகளை உண்டுபண்ணக்கூடியது என்பதுபற்றி மதிநுட்பமாகத் தெரிந்தே வைத்திருக்கின்றனர். ஆனால், அவர்களது கருத்துகள் வேண்டுமானால் புள்ளிவிவரங்களின் அடிப்படையில் அல்லது யூகத்தின்பேரில் அல்லது உள்ளுணர்வின் (instinct) அடிப்படையில் இருக்கும். எனினும், நெகிழ்ச்சியானது சரிநுட்பமாக அளவிடப்பட முடியாதது என்னும் காரணம், அது அங்காடியின் தன்மையை (market behaviour) அளவிடுவதற்கு முக்கியம் வாய்ந்துள்ளதைக் குறைத்துவிடுவதில்லை. பொருளாதார விற்பன்னர்கள் (economists), 'நெகிழ்ச்சி' என்பதனைக் கையாள்வதன்மூலம் உற்பத்தியாளர்களின் (producers) முடிவுகளிலும், அங்காடியின் விலை நிர்ணயத்திலும் முக்கியப் பங்கு பெறுகின்ற (அவ்வாறு முக்கியப் பங்கு பெறுவது தெளிவாக விளக்கப்படாவிட்டாலும்) தெளிவானதும் சரிநுட்பமானதுமான (clear and precies) ஒரு கருத்தினைப் பயன்படுத்துகின்றவர்களாகின்றனர்.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles*, Vol. 1, Ch. VI.

Ryan, *Price Theory*, Ch. 1. Marshall, *Principles of Economics*, Bk. III, Ch. IV.

H. Schultz, *The Theory and Measurement of Demand* (University of Chicago Press, Chicago, 1938), Ch. I.

மடல் III

# உற்பத்தி இயல்

## 5. உழைப்பு (Labour)

1. முகவுரை

பொருளாதார நடவடிக்கைகள் நுகர்ச்சி (consumption), உற்பத்தி (production), மாற்று (exchange) என்னும் பெரும் பிரிவுகளிலடங்கும். முன்னர்க் கூறிய மடல் ஒரு பண்டமானது மற்றப் பண்டங்களுக்கு ஒப்பீடாக நுகரப்படும் வீதத்திற்கு அடிப்படையாக உள்ள காரணிகளைப்பற்றிக் கூறியது. அடுத்து, செல்வத்தை (wealth) உண்டுபண்ணும் காரணிகளைப்பற்றி ஆராய்வோம். ஏற்கெனவே நாம் கண்டவாறு, செல்வமனைத்தும் உற்பத்திக் காரணிகளால் உண்டுபண்ணப்படுகின்றன. அக் காரணிகள் உழைப்பு (labour), நிலம் (land), முதல் (capital), தொழில் துணிவு (enterprise) என்பனவாகும். அவைகள் எவ்வாறு செல்வத்தை உண்டுபண்ணுகின்றன என்று ஆராய்வதற்கு முன்னர் அவை ஒவ்வொன்றினுடைய சில இன்றியமையாத தன்மைகளைப்பற்றிக் கூறியாகவேண்டும். நிலம், முதல் இவற்றைப்போலல்லாது, உழைப்பு தனித்தன்மை வாய்ந்ததொன்ருக இருக்கிறது. அதனை அளிக்கும் மனிதனினின்றும் அதனைத் தனியாகப் பிரித்தெடுக்க முடியாது. எந்த உற்பத்தியாளரும் தனது தொழிற்சாலை அல்லது அலுவலகத்தில் உழைப்பு என்ற ஒன்றை வேலைக்கமர்த்திக்கொள்வதில்லை; ஆண்கள், பெண்கள்—இவர்களையே வேலைக்கமர்த்திக்கொள்ளுகின்றனர். ஒரு தொழிலமைப்பில் சில சமயம் இத்தனை கைகள் வேலைக்கு அமர்த்திக்கொள்ளப்பட்டனர் எனச் சில சமயங்களில் கூறுவதுண்டு. மனிதர்கள் வெறும் கைகளல்லவே! உதாரணமாக, நிலமோ அல்லது முதலோ பயன்படுத்தப்படாமல் விடப்பட்டால் அவைகள் வீணுக இருப்பதையே அது குறிக்கும். ஆனல், உழைப்பு

அப்படியன்று. ஆண்களும் பெண்களும் வேலைக்கமர்த்திக்கொள்ளப் படவில்லையெனில், வேலையின்மை ஏற்படும்; இதனைச் சார்ந்து சமூகத் தீங்குகளும், நெறிக்குப் புறம்பான தீங்குகளும் (social and moral evils) ஏற்படும். பொருளாதார விற்பன்னர்கள், பல காரணங்களுக்காக, மனித உழைப்பினையும் உற்பத்திக் காரணிகளில் ஒன்றாக மனிதர்களை, வேலையில் ஈடுபடுத்தப்பட்டுள்ள தனித் தன்மை வாய்ந்ததோர் இயந்திரமாகக் கருதுதல் கூடாதென்பதனை இங்கு நினைவுகூர்தல் முக்கியமானதாகும். மனிதர்களின் உற்பத்தி நடவடிக்கைகளின் செறிவை (concentration of productive activities)—இதுவே உழைப்பு என அழைக்கப்படுகிறது—மனிதரின் பொருளாதார நடவடிக்கையின் ஒரு பகுதி என்றும் இதனையே பொருளாதார விற்பன்னர்கள் ஆராயவேண்டியவர்களாக இருக்கின்றனர் என்றும் கருதுதற்கு இடந்தரலாகாது.

## 2. உழைப்புப் பகுப்பு (Division of Labour)

உற்பத்தி முறையில் மனித இனத்தின் பங்கினை ஆராயுமுகத்துத் தற்காலப் பொருளாதாரத்தில் முதன்மையானதும், கவனத்தைப் பெருமளவு ஈர்க்கக்கூடியதுமாக நவீனப் பொருளாதாரத்தில் இருக்கக்கூடியது உழைப்புப் பகுப்பு (division of labour) அல்லது உழைப்பின் தனிச்சிறப்புத் திறன் (specialisation of labour) என்பதாகும். உழைப்புப் பகுப்பு அல்லது உழைப்பின் தனிச் சிறப்புத் திறன் என்பது யாது? குறுகிய எல்லையுள்ள குறிப்பிட்ட வேலைகளை அல்லது குறுகிய எல்லையுள்ள குறிப்பிட்ட இடப்பட்ட பணிகளைச் செய்யப் பெரும்பாலான மக்கள் தற்காலத்தில் வேலைக் கமர்த்திக்கொள்ளப்படுகின்றனர். மக்களில் பயிர்த்தொழில் செய்வோர், தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளர்கள், மருத்துவர், ஆசிரியர்கள், கார் ஓட்டுபவர்கள் (drivers) இன்னோரன்ன பல்வேறு தொழில்களைச் செய்பவர்கள் இருக்கின்றனர். இவர்களில் தங்களது பொருளாதாரத் தேவைகள் முழுமையையும், அல்லது அத் தேவைகளில் பெரும்பகுதியையும், தங்களது உழைப்பைக் கொண்டே பெறுபவர்கள் யாவரும் இருக்கமாட்டார்கள். மக்கள் (அநேகமாக யாவரும்) தங்களது சொந்த வீடுகளை, தங்களது சொந்த உணவை, தங்களது சொந்த ஆடைகளைத் தாங்களே தயாரிக்க முற்படுவதில்லை. குறிப்பிட்ட சில வேலைகளுக்குள்ளும் அவர்கள் தொழிற் சிறப்புத் திறனைக் காட்டுபவர்களாக இருக்கின்றனர். உதாரணமாக, ஒரு தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளி ஒரு குறிப்பிட்ட உற்பத்தி முறையில் அல்லது ஒரு குறிப்பிட்ட பொறியை இயக்குவதிலும் சிறப்புத் திறன் படைத்தவராக இருக்கின்றார். இதே போன்று விவசாயி பயிர்த்தொழிலின் குறிப்பிட்ட பிரிவுகளில்

தான் சிறப்புத்திறன் படைத்தவராக இருக்கின்றார்; ஆசிரியர் குறிப்பிட்ட சில இயல்களில்மாத்திரமும், மருத்துவர்கள் மருத்துவத்தின் சில குறிப்பிட்ட பிரிவுகளில் மாத்திரமுமே சிறப்புத் திறன் படைத்தவர்களாக இருக்கின்றனர்—இவர்களுக்கு மட்டுமே சாதாரணச் சொல் வழக்கில் 'சிறப்புத்திறன் படைத்தவர்கள்' என்னும் பெயர் வழங்கப் படுகிறது.

மனித உழைப்பானது, உற்பத்தியில் இவ்வாறு வினோதமான வகையில் அமைக்கப்படுவதற்குக் (இது மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது இயற்கைக்குப் புறம்பானதாகவேயிருக்கிறது) காரணம் என்ன? ஒரு குறிப்பிட்ட அளவு மக்கள் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் 'சிறப்புத்திறன் படைத்திருத்தலின்' காரணமாகப் பெருமளவு செல்வத்தை உற்பத்தி செய்யக்கூடும். நடைமுறையில் இதனைக் கண்கூடாகப் பார்க்கின்றோம். இதற்கு நிறையக் காரணங்கள் உள. முதலாவதும் மிக முக்கியமானதுமான காரணம் சிறப்புத்திறன் (specialisation) திறமையையும் (skill) கைத்திறனையும் (dexterity) வெகுவாக அதிகரிப்பதேயாகும். 'சித்திரமும் கைப் பழக்கம்' என்பதுபோலப் பழக்கம் எதனையும் செம்மைப்படுத்தும். ஒரு குறிப்பிட்ட வேலையைத் திரும்பத் திரும்பச் செய்யும்போது மனமும், தசைகளும், சம்பந்தப்பட்ட செய்முறையில் பழக்கப்பட்டு விடுகின்றன. இதனால் அப் பொருள்களை விரைவாகவும், குறைந்த உடலுழைப்பினாலும் செய்வது சாத்தியமாகிறது. கையச்சடிப்பதைத் (type-writing) தனது தொழிலாக வைத்துக்கொண்டிருக்கின்ற ஒருவர் கையச்சடிக்கும் வேகத்தையும், சரிநுட்பத்தையும் (accuracy) அதனைப் பொழுதுபோக்காக வைத்திருக்கும் ஒருவருடைய வேகத்திற்கும், சரிநுட்பத்திற்கும் ஒப்பிடுவோம்; இதேபோன்று நெடுநாள் பயிற்சி பெற்ற ஒரு போர்வீரர் கவாத்து (drill) செய்வதையும் படையில் புதியதாகச் சேர்க்கப்பட்ட ஒருவர் கவாத்து செய்வதையும், அல்லது அடிக்கடி டென்னிஸ் (tennis) பந்தாட்டம் பழகும் ஒருவரின் ஆட்டத்தையும், என்றோ ஒருநாள் சென்று அந்த ஆட்டத்தை ஆடும் ஒருவரின் ஆட்டத்தையும் ஒப்பிடுவோம். பொருளாதார வாழ்வில் திறமையும் கைத்திறனும் அதிகமான உற்பத்தியையும் அதிகமான செல்வத்தையும் நல்குவனவாகும்.

உழைப்புப் பகுப்பின் இரண்டாவது நலன், அது நேரத்தை விரயமாக்காமல் சேமிக்க உதவுவதே. ஒரு புறம், ஒரு மனிதன் ஒரு தொழிற்சாலைக்குள்ளேயே, ஒரு வேலையிலிருந்து மற்றொரு வேலைக்கு மாறிச் சென்று புதிய வேலையில் தன்னைப் பக்குவப் படுத்திக் கொள்வதில் நிறைய நேரம் வீணாகிறது. மற்றொரு புறம், பல பணிகளில் ஒருவனைத் திறமையாளனாகப் பயிற்று

வித்தலில், அவனை ஒரு குறிப்பிட்ட வேலையில் மட்டும் திறமையாள னுகப் பயிற்றுவித்தலைவிட நெடியநேரம் செலவிடவேண்டியதாக இருக்கிறது. பயிலாத் தொழிலாளி (unskilled labour) ஒருவருக்கு ஒரு சாதாரணத் தொழிற்சாலையில் ஒரு குறிப்பிட்ட பொறியினை (machine) கண்காணிக்கவும் இயக்கவும் ஒரு சில வாரங்களில் பயிற்சி அளித்துவிடலாம் ; ஒரு கடைசல் செய்பவனையோ (turner) அல்லது மின் துறைஞனையோ (electrician) அல்லது ஆயுதம் செய்பவனையோ (tool maker) பயில்விக்க ஆறு அல்லது ஏழு வாரங்கள் பிடிக்கும்.

மூன்ருவதாக, தனிச்சிறப்புத் திறனுனது (specialisation) மனி தர்களின் தனித்தனியான இயற்கைத்திறனை (aptitudes) நன்கு பயன்படுத்திக்கொள்ள வழி செய்கின்றது. சில மனிதர்களுக்கு இயற்கையில் திறமையான கைவேலை யிருக்கும்; சிலருக்கு இத்தகைய திறமை சற்றும் இருக்காது; சிலருக்கு அறைக்குள்ளேயே இருந்து பணியாற்றுவது மிகவும் பிடித்தமாக இருக்கும். ஆனுல், மற்றவர்களுக்கு அறைக்குள்ளேயே இருந்து பணிபுரிவது இயலாத தாக இருக்கலாம்; சிலரால் வெகுவேகமாகக் காரியங்களைச் செய்யவும் சிந்திக்கவும் கூடும்; சிலர் இயற்கையாக மந்தமாகவே காரியங்களைச் செய்யக்கூடியவர்களாக இருப்பார்கள்.

கடைசியாக, சிக்கலான பல்வேறு முறைகளைக் கொண்ட உற் பத்தி முறையைத் தனித்தனியான வேலையாகப் பிரித்தெடுத்தலின் மூலம் தனிச்சிறப்புத்திறன் (specialisation) சாத்தியப்படுகிறது. தனிச் சிறப்புத்திறன் அந்த வேலைகளுக்குப் பொறிகளைப் பயன் படுத்துவதற்கு வழி கோலுகின்றது. உற்பத்தி முறையைத் தனித் தனிப் பகுதிகளாகப் பிரித்தமைத்தலின்மூலம், ஒரு மனிதன் தனது முழு நேரத்தையும் அந்த வேலைக்குப் பயன்படுத்த வழியேற்படுவ தால் நிறையப் பொருள்களின் உறுப்புகளை (components) அவன் நிறைய உற்பத்தி செய்வான். தான் பொருள் முழுவதையும் செய்து கொண்டிருப்பதைவிடத் தற்போது நிறையப் பொருள் உறுப்புகளை அவனுல் உற்பத்தி செய்ய முடிகின்றது. இவ்வாறு ஓர் உற்பத்தி முறையானது தனித் தனியாக எளிதான முறையில் பிரித்தமைக்கப் படுவதன்மூலம் நிறையப் பொருள்களை உற்பத்தி செய்ய இயலு வதால், அது பொறிகளை அந்த இடங்களில் அமைக்க வழி வகையை அமைக்கின்றது. ஒரு பொறியை அதன் நலன்கள் யாவற்றையும் அடையும்படி பயன்படுத்துவதென்பது அப் பொறி எவ்வளவு அளவு பொருள்களை உற்பத்தி செய்யக்கூடுமோ, ஏறக்குறைய அவ்வளவு பொருள்களையும் அது உற்பத்தி செய்யு மளவிற்குப் பயன்படுத்துவதாகும். உற்பத்தியானது பல பகுதி களாகப் பிரிக்கப்படுவதில் அதிக உற்பத்தியானது ஒவ்வொரு

பகுதியிலும் சாத்தியப்படுவதால் அந்தந்தப் பகுதிகளுக்குப் பொறிகளைப் பயன்படுத்துவது சிக்கன நலனாக இருக்கும். ஒருவர் அடிபுதையரணத்தின் (shoe) ஒவ்வொரு பாகத்தையும் தானே செய்வதானால் ஒரு வாரத்தில் அவர் இரண்டு அல்லது மூன்று சோடி அடிபுதையரணங்களையே செய்தல் கூடும். இத்தகைய ஓர் உற்பத்தி மட்டத்தில் எந்த ஒரு பகுதியிலும் பொறியினைப் பயன் படுத்துதல் மதியீனமாகும். ஆனால், அதே மனிதர் அவ் அடி புதை யரணத்தின் அடிப்பகுதித்தோலை (sole) மட்டுமே நறுக்குவதில் தன் ஆழ்ந்த கவனத்தைச் செலுத்தி அதன் உற்பத்தியில் தனிச்சிறப்புத் திறனைக் காட்டுவாரானால், ஒரு வாரத்தில் அவர் பல நூறு அடிப் பகுதித் தோல்களைச் செய்தல் கூடும். இப்போது இந்த வேலைக்கு உதவியாகப் பொறியினை அமர்த்துதல் பொருத்தமுடையதாக இருக்கும். மேலும், ஒரு செய்முறையைப் பலபகுதிகளாகப் பிரித்துச்செய்யும் முறையில், ஒரு பொறியியலாளர் (engineer) அவ் வேலைப்பகுதிகள் ஒவ்வொன்றிலும் நெருங்கிய ஆழ்ந்த பழக்கத்தைப் பெற்றிருத்தலை விட அதிகமான பழக்கத்தை அப் பகுதியைத் தொடர்ந்து செய்கின்ற ஒருவன் அடைவான். இதனால், பொறியின் உதவிகொண்டு அப் பொருளின் பகுதியைச் செய்யத் தக்க வழிமுறைகளை அவன் ஆராயத் தொடங்குவான்—தனிச் சிறப்புத்திறனானது இத்தகைய செய் முறையைப் பகுதிகளாகப் பிரிப்பதற்குத் துணை செய்யவில்லையெனில் இது முடியாதல்லவா ?

உழைப்புப் பகுப்பில் பல நன்மைகள் உள. பிரிட்டனைப் போன்ற மக்களது உயர்ந்த வாழ்க்கைத் தரத்தையுடைய நாடுகள் அத்தகைய வாழ்க்கைத் தரத்தைத் துய்த்தலுக்கு மற்றக்காரணங்களை விட, உழைப் புப்பகுப்பே தலைசிறந்ததாகக் காணப்படுகிறது. ஆனால், அதனுடைய தீமைகளும் சமூகத்திற்கு நன்கு தெரிந்தே இருக்கிறது. முதலாவ தாக, ஒரு தொழிலில் மிக அதிகமான தனிச் சிறப்புத்திறனானது அதனைப் பெற்றிருப்பவனை அவனுக்கு முன்பின் தெரிந்திராதவர்களும் அவனுடைய கட்டுப்பாட்டில் இல்லாதவர்களுமான பல மில்லியன் மக்களை அவன் நம்பி வாழும்படி இருக்கிறது. உதாரணமாக, பிரிட்டன் செய்பொருளில் (manufacturing) தனிச் சிறப்புத் திறனைச் செலுத்துகிறது. இதன் காரணமாக, அது பல ஆயிரக்கணக்கான மைல்கள் தொலைவுள்ள நாடுகளைத் தனது உணவிற்காக எதிர் நோக்கிக்கொண்டிருக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. இத்தகைய நிலையி லுள்ள ஓர் இடர்ப்பாடு போர்க்காலத்தில்தான் நன்கு தெரிய வரும். இதுபோன்றே, ஒரு நாட்டில் மக்களின் ஒரு பகுதியினர் மட்டும் புகைவண்டிகளை ஓட்டுவதற்குத் தனிச்சிறப்புத் திறனுடைய வர்களாக இருக்கின்றனர் என்று வைத்துக்கொள்வோம். அவர்கள், ஏதோ சில காரணங்களால் அவைகளை ஓட்ட இயலவில்லை,

அல்லது ஓட்டவில்லை என்றால் அத்தகைய சூழ்நிலையில் நாட்டின் பொருளாதார வாழ்வில் எத்தகைய நிலைகுலைதல் (dislocation) ஏற்படும்! மேலும், சிறப்புத் திறனானது ஒருவருக்கு வேலையில்லாத் திண்டாட்டத்தையும் தரவல்லதாக இருக்கிறது; ஒரு குறுகிய துறையில் மட்டுமே இது பயிற்சியையும் திறமையையும் வளர்ப்பதாக உள்ளதால், அதனைப் பெற்றிருக்கும் ஒருவர் வேறு வேலைக்குச் செல்லும் நிர்ப்பந்தம் ஏற்படும்போது தனது திறனுக்கேற்ற வேறு வேலையினைத் தேடிக்கொள்வது மிகவும் கடினமானதாகப் போய் விடும்.

தனிச்சிறப்புத்திறனில், மற்றோர் ஆபத்தும் உளது. இது பெரும்பாலும், அதனைப் பெற்றிருக்கும் மக்களுக்குக் குறுகிய பண்பு களையும் மனப்பாங்கையும் தரவல்லதாக இருக்கிறது. ஓர் ஆணோ அல்லது பெண்ணோ, நாள் முழுவதும் எப்போதும் திரும்பத் திரும்ப ஒரே விதமான வேலையினைச் செய்யும்போது புத்தம் புதிய எண்ணங் களோ, அறிவுத் திறன் வளர்ச்சியோ ஏற்பட வழியில்லை. ஆலைகளில் இவ்வாறு திரும்பத் திரும்ப ஒரே மாதிரியான சலிப்பைத் தருகிற பணிகளைச் (mechanical and manotonous works) செய்கின்ற ஒரு சமுதாயம் எவ்வாறு தனது அறிவு, நெறி வயப்பட்ட பண்புகளில் வளர்ச்சியடைதல் கூடும்? இது ஒரு முக்கியமான கேள்வியாகும். இந்தக் கேள்வியினுக்கு விடையாகப் பலர், தற்போது எல்லையற்று உயர்ந்துள்ள வாழ்க்கைத் தரத்தையும் குறைந்த வேலை நேரத்தையும் (shorter working hours) சுட்டுகின்றனர். முன்னூறு ஆண்டுகட்கு முன் வாழ்ந்த மக்கள் தங்களது இன்றியமையாத தேவைகளைப் பெறவும் அல்லலுற்றனர்; தற்போதைய மக்கள் முழுமையானதும் வளமானதுமான மனித வாழ்க்கையினைப் பெற்றுள்ளனர் என்று அவர்கள் விடையிறுக்கின்றனர். தற்போதுள்ள சந்ததியினர் அவர் களது முன்னோர்களைக் காட்டிலும் எல்லையின்றிப் பல்திறப்பட்டதும் நிறைவானதுமான வாழ்க்கையினைச் சிறப்புத் திறனால் பெற்றிருக் கின்றனர் என அவர்கள் விளம்புகின்றனர். இத்தகைய ஒரு பிரச் சினையில் கருத்துகள் வேண்டுமானால் பலவாறாகக் கூறப்படலாம்; ஆனால், சமூகம் ஒன்றை மட்டும் நிச்சயமாகக் கவனித்தே ஆக வேண்டும். எந்த ஒரு துறையிலும் அதிகமான சிறப்புத் திறன் (over-specialisation) உண்டுபண்ணக்கூடிய ஆபத்துகளை நினைவு கூர்ந்து அவற்றினின்றும் தன்னைக் காத்துக்கொள்ளுதல்வேண்டும்.

### 3. உழைப்புத் திறமைக்கான மற்றக் காரணிகள் (Other Factors in Labour Efficiency)

ஒரு நாட்டின் உழைப்பாளிகளின் உற்பத்தித் திறமையை (productive efficiency) நிர்ணயிக்கும் காரணி சிறப்புத்திறன்

ஒன்றுதான் என்று கருதுதல் தவருகும். உழைப்பு ஈடுபட்டுள்ள முதல் அல்லது நிலத்தின் தன்மை (nature of land) ஆகிய இவையும் உற்பத்தித் திறமையை நிர்ணயிப்பதில் பெரும்பங்கு கொண்டுள்ளன. இவைகளின் முக்கியத்துவத்தை அவைகளைப் பற்றித் தனித்தனியே பின்னர் ஆராயும்போது கவனிப்போம்.

உழைப்புத் திறமையை இன்னும் பல காரணிகளும் நிர்ணயிப்பதாக உள்ளன. மக்களில் சில இனத்தினர் மற்றவர்களைக் காட்டிலும் சில குறிப்பிட்ட திறமைகளைப் பெற்றிருப்பதானது அவர்களுடைய பொருளாதார முன்னேற்றத்தை அளிப்பதாக உள்ளது—உதாரணமாக, சூழ்நிலைக்கேற்பத் தங்களைச் சரிப்படுத்திக் கொள்ளும் தன்மை (adaptability), புதியனவற்றைக் கண்டுபிடிக்கும் ஆற்றல் (inventiveness), முயற்சி (perseverance), ஆற்றல் (energy) ஆகியவற்றைக் கூறலாம். கடந்த காலங்களிலெல்லாம் உடல் வலிமை (physical strength) என்பது மிக முக்கியமான பங்கை நிறைவேற்றும் ஒன்ருக இருந்தது. தற்போது யாவும் பொறிமயமாக்கப்பட்டுள்ள (mechanisation) இக்காலத்தில் அதனுடைய முக்கியத்துவம் குறைந்துகொண்டே வருகிறது. நாட்டின் தட்பவெப்ப நிலையும் (climate) இதில் முக்கிய அங்கம் வகிக்கின்றது. மனித உழைப்பிற்கு மட்டான தட்பவெப்ப நிலையானது (temperature climate) வெப்ப மண்டலத் தட்பவெப்ப நிலையைவிட (tropical climate) மிகவும் உகந்ததாக உள்ளது.

ஒரு நாட்டின் உழைப்பாளிகள் வாழும் வாழ்க்கையின் பொதுவான நிலைகளும், அவர்களின் இயல்பான பண்புகளும் அவர்களின் திறமையைப் பாதிப்பனவாக உள்ளன. போதிய உணவும், குடியிருக்கப் போதிய வீடுகளும், உடுப்பதற்குப் போதிய உடைகளும் அற்ற ஒரு மக்கள்தொகை திறமையான உழைப்பாளர்களை நல்கிவிட முடியாது. உழைப்புத் திறனுக்கு வாழ்க்கைக்குத் தேவையான பருப்பொருளியலான தேவைகள் (physical requirements) இருந்துவிட்டால் மட்டும் போதாது. போதிய அளவு தன்னுரிமை, (freedom), பல்திறப்பட்ட பெருக்கத்தையுடைய வாழ்க்கை, உயர் உள்ளலுக்கேற்ற (ambition) சூழ்நிலை ஆகியவற்றில்தான் முதல்தரமான திறமையையுடைய உழைப்பாளர்கள் தோன்ற முடியும். ஓர் அடிமை திறமையான தொழிலாளியாக இருக்கவே முடியாது.

எனவே, ஒரு நாட்டின் உழைப்புச் சக்தியின் (labour force) திறமைக்குப் பல மூலப்பொருள்கள் (elements) காரணமாக இருக்கின்றன. அவற்றில் சில மனிதரின் கட்டுப்பாட்டிற்கப்பால் உள்ளன

வாக இருக்கின்றன—இயல்பான திறமைகள் அல்லது தட்பவெப்ப நிலை ஆகியவைகள். ஆனால், மற்றவைகள் போதிய சமூகநலச் சட்டங்கள், திட்டமிடப்பட்ட கல்வி, வாழ்க்கைத் தொழில்பயிற்சி ஆகியவைகளின்மூலம் உழைப்புத்திறன் உண்டுபண்ணக்கூடிய தாக, அல்லது குறைந்தபட்சம் ஊக்குவிக்கப்படுவதாகவே உள்ளது. இத்தகைய நலமுறைகளால் ஏற்படும் நன்மைகள் தனி மனிதனுக்கு அல்லது ஒரு நிறுவனத்திற்கு மட்டுமே செல்லாது அனைவருக்குமே சென்றடைவதால் இவற்றை ஏற்றுச் செயல்படுத்தும் பொறுப்பு சிறப்பாக அரசாங்கத்தினிடமே இருக்கவேண்டுமென்பது பொதுவாக யாவராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. நாட்டின் சாதனங்களை (resources) நன்கு பயன்படுத்திக்கொள்வதன்மூலம் அதன் சமூகத்தின் செல்வ உற்பத்தித் திறனை அதிகரிக்கலாம்; அதன் தொழில் முறையில் (technology) ஏற்படும் புரட்சிகரமான மாற்றங்கள் ஏற்படுத்துகிற வளர்ச்சி திடீரென நிகழாவிட்டாலும் வளர்ச்சி நிச்சயமானதே.

4. மக்கள் தொகையின் அளவு (The Size of the Population)

ஒரு சமுதாயத்தின் பயன்படு உழைப்பின் அளிப்பானது அதனுடைய சராசரி உழைப்பலகின் (average unit of labour) திறமையையும் ஓரளவிற்குப் பொறுத்தே இருக்கிறது. இது நிச்சயமாக அச் சமுதாயத்தில் உள்ள உழைப்பாளர்களின் அளவையும் பொறுத்துள்ளது. எந்த நாட்டிலும் மக்கள் தொகையில் பெரும்பாலும் வயதுவந்தவர்களே உழைப்பை அளிப்பவர்களாக இருக்கிறார்களாதலால், இது மக்கள் தொகையின் அளவைப் பொறுத்திருக்கும் என்று கூறுவதும் பொருத்தமுடையதாகும்.

பத்தொன்பதாவது நூற்றாண்டுப் பொருளாதார விற்பன்னர் ஒருவரிடம், ஒரு நாட்டின் மக்கள் தொகையை நிர்ணயிக்கும் காரணிகள் யாவை எனக் கேட்டால், அவர் உடனே தயங்காமல், 1798ஆம் ஆண்டில் தாமஸ் ராபர்ட் மால்தஸ் (Thomas Robert Malthus) என்னும் ஆங்கிலப் பாதிரியார் கூறிய காரணங்களையே கூறுவார். அவருடைய வாதங்களின் முக்கியக் கருத்து யாதெனில், ஒரு நாட்டில் மக்கள் தொகையானது நாளடைவில் பெருகி, அங்கு மக்கள் உயிர் பிழைத்திருத்தலுக்குப் போதுமான சாதனங்களையும் விஞ்சும்படி வளர்ச்சியடையக்கூடுமாதலால், போர்கள், பிணி ஆகிய இயல்புத் தடைகள் (positive checks) அந்நாட்டின் மக்கள் தொகையை (அந்த நாட்டின் மக்களே இத்தகைய அதிவேக மக்கள் தொகை வளர்ச்சியைக் கட்டுப்படுத்திக்கொள்ளாதவரையில்) அதனுடைய உணவு அளிப்பு (food supply) வரம்பிற்குட்பட்டு இருக்கும்படி

கட்டுப்படுத்துவதாக இருக்கவேண்டும். இந்த வாதத்தில் உள்ள உட்கருத்தானது, வாழ்க்கைத் தரத்தில் ஏற்படும் உயர்வானது மக்கள் தொகையின் அளவையும் அதிகரிக்குமென்பதும், வாழ்க்கைத் தரம் குறைந்தால் மக்கள் தொகையின் அளவும் குறையும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்துள்ளது.

மனித இனத்தின் தலைவிதியைப்பற்றிய இத்தகைய ஒரு பொருளாதாரக் கோட்பாடு எதிலும் கெடுதலையே காணும் கருத்தின் (pessimistic view) அடிப்படையில் அமைந்துள்ளதால் இதனைச் சீரிய கருத்தென்று கொள்வதற்கில்லை. உதாரணமாக, மால்தஸ் (Malthus) தனது கருத்துகளை எழுதியபோது இருந்ததைவிட ஏறக்குறைய ஐந்து மடங்கு மக்கள் தொகை தற்போது கிரேட் பிரிட்டனில் உளது; அப்படியிருந்தபோதிலும் அதன் பெரும்பகுதி மக்கள் 1800ஆம் ஆண்டில் இருந்ததைக்காட்டிலும் உயர்ந்த வாழ்க்கைத் தரத்தினை உடையவர்களாக இருக்கின்றனர். மால்தஸ் வாழ்ந்த காலத்தில் பிரிட்டனின் மக்களுக்குப் போதிய உணவு கிடைப்பதுபற்றிய ஆழ்ந்த சிந்தையில் இருந்தார்; ஆனால், தற்போதோ பிரிட்டன் உலகெங்கிலுமுள்ள வளர்ச்சியை முற்றிலும் அடையாத குடியேற்ற நாடுகள் (colonies) பலவற்றிலிருந்தும்— இந்நாடுகள் அப்படிப் பெரிய உணவு ஏற்றுமதி நாடுகளுமல்ல— பெறமுடிகின்றது. அதன் புதிய நிலங்கள் பயிரிடப்பட்டு அவற்றிலிருந்து நிறைய விளைபொருள்கள் பெறப்படுவதோடு பயிரிடும் முறைகளும் சாதனங்களும் நிறையப் புரட்சிகரமான மாறுதல்களைச் செய்யப்பெற்றுச் சென்ற பல தலைமுறையினர் நினைத்தும் பார்க்கவொண்ணாத அளவிற்கு விவசாய உற்பத்தி பெருகியுள்ளது. அதே நேரத்தில் வாழ்க்கைத்தரம் வளர வளரக் குறைந்த எண்ணிக்கைகளைக்கொண்ட குடும்பங்களையே வைத்துக்கொள்ளவேண்டும் என்னும் கருத்து மக்களிடையே தற்போது நிலவி வருகிறது (இதற்குப் பெரும்பகுதியான காரணம் வாழ்க்கைத்தரம் உயர உயரக் குழந்தைகளைப் பராமரிக்கும் சுமையும் அதிகரித்து வருவதாகும்).

இதனால் சமூகமானது அமித மக்கள் தொகையைக் (over-population) கண்டு, பொருளாதார நோக்குடன், வாளா இருக்கவேண்டுமென்று பொருளன்று. பொருளாதார விற்பன்னர்கள் உத்தம மக்கள் தொகை (optimun population) இன்னதென்று கண்டு பிடித்திருக்கின்றனர். உத்தம மக்கள் தொகை என்பது யாது? ஒரு நாட்டில் கொடுக்கப்பட்டுள்ள ஓர் அளவு நிலம், முதல், தொழில் துணிவு ஆகியவற்றில் மக்களின் சராசரி உற்பத்தி (output per head) அதிகபட்சமாக இருக்கத் துணை செய்கின்ற ஒரு மக்கள் தொகை அளவாகும். ஒரு நாட்டில் மக்கள் தொகை அதிகரிக்கும்போதெல்

லாம் சராசரி உற்பத்தியும் அதிகரிக்குமானல் அது அந்த நாடு போதா மக்கள்தொகையை (under population) உடையதென்று குறிக்கும். ஒரு நாட்டில் மக்கள் தொகை அதிகரிக்கும் போது மக்களின் சராசரி உற்பத்தி குறையுமானல் அது அந்த நாட்டில் அமித மக்கள் தொகை உள்ளதென்பதை உணர்த்தும். உத்தமஅளவு என்பது இத்தனை எண்ணுள்ள அளவு என்பதைக் குறிப்பதில்லை. அது மற்ற உற்பத்திக்காரணிகளின் அளிப்போடு (other factors of production) நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதாகும்; மற்றக் காரணிகள் பயன்படு அளிப்பு (effective supply of the other factors of production) அவ்வப்போது மாறுவதற்கேற்ப உத்தமஅளவும் மாறும்.

எனவே, இக் கருத்துகளின் வாயிலாக நோக்கும்போது உலகத்தின் பெரும்பகுதிகள் யாவும்—குறிப்பாக இந்தியா, சீன போன்ற நாடுகள், ஏன், கிழக்கு ஐரோப்பாவிலும் மேற்கு ஐரோப்பாவிலும் உள்ள சில நாடுகள் ஆகியவற்றில்—அமித மக்கள் தொகையே (உழைப்பின் அளவு அதிகரிப்பதற்கு ஒப்பீடாக மற்றக் காரணிகளின் அளவும் அதிகரிக்கப்படும்போது மக்களின் சராசரி உற்பத்தி அதிகரிக்கும் என்னும் கருத்தில்) இருக்கிறது என்பது விளங்கும். இத்தகைய சராசரி உற்பத்தி அளவை, மக்கள்தொகையின் அளவைக் குறைப்பதன்மூலமோ அல்லது இருக்கிற உழைப்பு சக்தியுடன் (labour force) கூடிய ஏனைய காரணிகளின் அளவை அதிகப்படுத்துவதன்மூலமோ அதிகரிக்க இயலும்.

பிரிட்டனிலும், இன்னும் பல மேற்கத்திய நாடுகளிலும் வேருெரு பிரச்சினையும் தற்போது எழுந்துள்ளது. அப் பிரச்சினையாவது, மக்கள்தொகை குறைந்துகொண்டே வருவதாகும். மக்கள்தொகை குறைந்துகொண்டு வருவதும் பிரச்சினைகளை எழுப்புவதாக உள்ளது. இது எவ்வாறு என்பதனை நோக்குவோம். குறைந்த அளவு மக்கள் தொகையால் ஒரு நாட்டிலுள்ள ஒவ்வொரு நபருக்கும் அதிகச் செல்வமும், உயர்ந்த வாழ்க்கைத்தரமும் கிடைக்குமென்பதென்னவோ நிச்சயந்தான். ஆனல், இத்தகைய ஒரு யூகம் அவ்வளவு நிச்சயமானதாக இருப்பதாகக் காணப்படவில்லை; குறைந்துகொண்டுவரும் மக்கள்தொகை பல பிரச்சினைகளைத் தோற்றுவிப்பதாகவே உள்ளது. மக்கள் தொகையின் அளவில் ஏற்படும் குறைவானது மக்களின் சராசரி உற்பத்தி அளவை அதிகரிக்கும் என்னும் கூற்று உண்மையே; ஆனல், அந் நாடு அமித மக்கள் தொகையைப் பெற்றிருந்தால்தான் (மேற்சொன்ன பொருளாதாரக் கருத்தில்) மேற்சொன்ன கூற்று உண்மையானதாக இருக்கும். இரண்டாவதாக, மக்கள் தொகையில் ஏற்படும் இறக்கமானது (fall

in population) நாட்டின் சராசரி வயதை (average age) அதிகரிக்கின்றது; இறப்பு வீதத்தைவிடப் பிறப்பு வீதம் குறைவாக இருக்குமாதலால் மக்கள் தொகையில் வயது முதிர்ந்தவர்கள் அதிகமாக இருப்பார்கள். இவ்வாறு வயது முதிர்ந்தவர்கள் அதிகமாக இருப்பதானது பல தீவிரமான விளைவுகளை உண்டுபண்ணுவதாக இருக்கும். இளைஞர்கள் சமூகத்தில் ஏற்படும் தொழிலியல் மாற்றங்களுக்கேற்றவாறு தங்களை மாற்றிக்கொள்வதுபோல் வயது முதிர்ந்தவர்களால் மாற்றிக்கொள்ள முடியாது. எனவே, வயது முதிர்ந்தவர்களைக் கொண்ட ஒரு பொருளாதார அமைப்பு, தொழிலியல் வளர்ச்சியில் ஏற்படும் மாற்றங்களையும் சரிசெய்து கொள்ளுதலையும் குறைவான அளவில்தான் வரவேற்க முடியும். மேலும், அத்தகைய ஒரு பொருளாதார அமைப்பில் தொழிலாளர் இடப்பெயர்ச்சி (mobility of labour) மிகக் குறைந்த அளவில்தான் இருக்கும். தொழிலாளர் இடப்பெயர்ச்சியானது, ஒரு துறையில் தொழிலாளர்கள் வேலைக் கமர்த்திக்கொள்ளப்படுதல் நிறுத்தப்பட்டு வேறொரு துறையில் நிறைய அளவு வேலைக்கமர்த்திக்கொள்ளப்படுதல் ஏற்படும்போது தான் நிகழும். இத்தகைய ஒரு நிகழ்ச்சி தொழிலில் ஈடுபடுகின்ற இளைஞர்களின் தொகை குறையுமானால் தடுத்து நிறுத்தப்படும்.

குறைந்து செல்கின்ற மக்கள்தொகையின் மூன்ருவது தீமையைப் பார்ப்போம். குறைவாக உள்ள மக்கள் தொகையினுல் அங்காடியின் (market) அளவும், உழைப்பின் அளிப்பும் (labour supply) சுருங்குகின்றன. இதனுல் பேரளவு உற்பத்தியினின்றும் கிடைக்கக்கூடிய இலாபங்கள் இழக்கப்படுகின்றன. (பிரிட்டனில் பதினெட்டு பத்தொன்பதாம் நூற்ருண்டுகளின் விரைவான பொருளாதார வளர்ச்சி அந் நாட்டின் மக்கள்தொகையின் வளர்ச்சியின்மூலந்தான் ஏற்பட்டது.) நான்காவதாக, ஒரு நாட்டின் மக்கள்தொகையில் 'செயல் ஈடுபாடு' உடைய வயது பிரிவினர் (age-groups) —அதாவது, வேலை செய்யக்கூடிய வயதினைப் பெற்றிருக்கும் மக்கள் விகிதம் குறைந்து வேலையிலிருந்து ஓய்வுபெற்ற அல்லது பிறரை எதிர்நோக்கியுள்ள (dependent) பிரிவினரின் விகிதம் அதிகமாகிக்கொண்டு செல்லுமானுல் அச் சமுதாயம் மக்கள் நலத் திட்டங்களை (welfare services) நிறைய அளவு இயற்றப்படவேண்டிய ஒரு சுமையைத் தாங்க நேரிடும். ஓய்வுச் சம்பளங்களை அளித்தல் (provision of pensions), உடல்நலப் பணிகள் (health in services), வயது முதிர்ந்தவர்களுக்கு வீடுகளை அளிக்கும் திட்டம் ஆகிய நலத் திட்டங்கள் பெரிதும் அந் நாட்டின் வேலை செய்யும் மக்கள் தொகையின் உற்பத்தித் திறனை எதிர்நோக்கியிருப்பனவாகும். வயது முதிர்ந்தவர்களின் தொகை அதிகரித்து, வேலையில் ஈடுபட்டுள்ள மக்களின் தொகை குறையுமானுல், மிகக் குறைந்த எண்ணிக்கை

யுள்ள உற்பத்தியாளர்கள் உற்பத்தி செய்யும் உற்பத்தியின்மீது நிறையத் தேவை (demand) ஏற்படும். மேலும், சமூக நலப் பணிகள் (social services) ஏராளமாகச் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படு மாதலால், இந்தச் சுமையானது சமூகத்தின் செயல் ஈடுபாடுடைய அங்கத்தினர்களின்மீதே சுமத்தப்படும்; இது அவர்களுடைய செயல்படு முயற்சிகளைப் (efforts) பெரிதும் பாதிக்கும்.

ஐந்தாவதாக, வயது முதிர்ந்தவரின் தேவைப் பாணியானது (pattern of demand) இளவயதினரின் தேவைப் பாணியினின்றும் வேறுபட்டேயிருக்கும். வீடுகள், குழந்தைகளின் ஆடைகள், பள்ளிகள் ஆகிய இவைகள் இளவயதினரின் தேவைகளாகும். இவர்களைக்காட்டிலும் சற்று வயது முதிர்ந்தவர்களின் தேவைகள் களியாட்டம், பயணம் ஆகியவற்றிற்கான பணிகள், நாகரிக உடைகள் போன்ற பணிகள், ஆடம்பர உணவு வகைகள், கார்கள் முதலியனவாக இருக்கும். இவைகளினின்று முற்றிலும் வேறு பட்டே, முதியோர்களின் தேவையிருக்கும். இவ்வாறு வேறுபாடான தேவைகளைச் சமாளிக்கப் பொருளாதார அமைப்பு முறையைப் பெரிதும் மாற்றியமைக்கும்படி நேரிடும். ஏனெனில், முதியோர் களின் தேவைகள் இளவயதினர்களின் தேவைகளினின்றும் சுவை (taste), நாகரிகம் ஆகியவற்றில் வேறுபட்டனவாக இருக்கும்.

கடைசியாக, முதலீடு சாதனங்களும் இவைகளுடன் பாதிக்கப் படுவதைக் குறிப்பிடலாம். குறைந்துகொண்டு செல்லும் மக்கள் தொகையானது, அங்காடியின் எல்லையைக் குறுக்குவதாகவும், உற்பத்தியின் அளவைக் குறைப்பதாகவுமிருப்பதால், தொழிற் சாலைகளில் முதலீடு செய்யப்படுவதும், தொழிற்சாலைக்கான சாதனங் களின் தேவையும் வெகுவாகக் குறைகின்றன. முக்கிய மான வேறொன்றையும் இங்குக் கூறவேண்டும். தற்காலத்தில், முதலீட்டின் பெரும்பகுதியும் சமூக மூலதனம் (social capital)—வீடுகள், வீதிகள், பள்ளிகள், மருத்துவ மனைகள் ஆகிய சொத்துகள்—என்றழைக்கப்படுகிற முதலீடுகளாகவேயுள்ளன. இவைகளனைத் தும் வளரும் மக்கள் தொகைக்கு அவசியமாகத் தேவைப்படுகின்றன. குறைந்து செல்லும் மக்கள் தொகைக்கு இத்தகைய புதிய முதலீடுகள் சற்றும் தேவையில்லை—ஏற்கெனவே அதிகமாக இருந்த மக்கள் தொகையினர் விட்டுவைத்துச் சென்ற சொத்துகளும் இதற்குக் காரணமாக இருக்கும். ஒப்பீடான ஒரு செல்வமிக்க நாடானது அதனுடைய சாதனங்களனைத்தையும் (resources) முழுமையாகப் பயன்படுத்தியாக வேண்டுமாதலால், முதலீட்டுச் சாதனங்களுக்கான வழிகளை மூடுவதானது, அந்நாட்டில் தீவிரமான பிரச்சினைகளை எழுப்பும்.

இக் காரணங்களுக்காகவே, மக்கள்தொகை குறைந்து செல்வதானது கவலைக்கிடமான ஒரு பிரச்சினையாகக் கருதப்படுகிறது. ஆனால், இது சில முக்கிய நன்மைகளையும் பயப்பதாக உள்ளதென்பதையும் மறுப்பதற்கில்லை. குறிப்பிட்ட ஒரு நாட்டில் மக்கள் தொகையானது ஏற்கெனவே உத்தம அளவிற்கும் (optimum level) அதிகமாக இருந்திருக்குமாயின், அந்நாட்டில் மக்கள் தொகை குறைந்து செல்வதானது, அந்நாட்டின் ஒவ்வொருவருக்கும் கிட்டுகின்ற சராசரி செல்வத்தை அதிகரிக்கும். ஒரு சிறிய எல்லையில் மிகப்பெரிய அளவு மக்கள் தொகை அடங்கியுள்ள பிரிட்டனைப்போன்ற ஒரு நாட்டில் மக்கள் தொகையில் ஏற்படும் குறைவானது, அந் நாட்டின் வீடுகள், நகரங்கள், பள்ளிகள். நாட்டுப்புற ஊர்கள் ஆகியவற்றில் மிதமிஞ்சியிருக்கும் மக்களின் நெருக்கடியைத் தவிர்ப்பதற்கான ஒரு வாய்ப்பினை நல்குவதாகும். இது பிரிட்டனின் அயல்நாட்டு வாணிப நிலையையும் உயர்த்த உதவும்; ஏனெனில், மக்கள் தொகை குறைந்து செல்வதானது உணவு, கச்சாப் பொருள்கள் (பிரிட்டன் வெளிநாடுகளினின்றும் பெரிய அளவில் இறக்குமதி செய்கின்ற) ஆகியவற்றின் தேவையைக் குறையச் செய்யுமாதலால், நாட்டில் உற்பத்தி செய்யப்படும் உற்பத்தியின் அளவு மாறுமலிருக்க இறக்குமதிகளை மட்டுமே வெகுவாகக் குறைக்கும். இவ்விதமாக இறக்குமதிகளில் ஏற்படும் குறைதல் (reduction in imports) விகிதமானது மக்கள் தொகையில் ஏற்படும் குறைதல் விகிதத்தைக்காட்டிலும் அதிகமாக இருக்கும். சான்ருக, ஐக்கிய அரசாங்கத்திலுள்ள நுகர்வோர்கள் (consumers) தற்போது உணவுப் பொருள்களின்மீது ஆண்டொன்றுக்கு £ 5,000 மில்லியனைச் செலவு செய்கின்றனர். இதில், ஆண்டொன்றுக்கு £1,400 மில்லியன் மதிப்புள்ள உணவுப் பொருள்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன. பிரிட்டனின் உணவுத் தேவையில் 10 சதவீதம் குறையுமாயின், ஆண்டொன்றுக்கு அதன் உணவுப் பொருள்களின் தேவை £ 4,500 ஆகக் குறையும்; ஆனல், அதனுடைய உள்நாட்டு உணவு உற்பத்தியில் மாற்றம் ஏதுவுமில்லையெனில், பிரிட்டனின் இறக்குமதித் தேவைகளில் ஆண்டொன்றுக்கு 900 பவுண்டு குறையும். எனவே, உணவுத்தேவையில் ஆண்டொன்றுக்கு 10 சதவீதம் குறைதலானது இறக்குமதித் தேவைகளில் மூன்றிலொரு பாகத்திற்குமேல் குறையச் செய்யும்.

இத்தகைய வாதங்கள் பொருளாதார அம்சங்களையே ஆராய்வதாக உள்ளன. மக்கள் தொகையில் ஏற்படும் மாறுதல்கள், போர், அரசியல் ஆகியவற்றின் காரணங்களுக்காகவும் முக்கியத்துவம் வாய்ந்தனவாக உள்ளன; மேலும், 'மக்கள் தொகை' என்னும் பிரச்சினை மனிதர்களைப்பற்றியதாகையால், இது நெறி (moral), சமூகம்

(social) ஆகியவற்றின் அடிப்படைப் பிரச்சினைகளையும் தழுவி நிற்பதாக உள்ளது. இவைகளைப்பற்றி ஆராய்வதன் காரணமாகப் பொருளாதார விற்பன்னர் தனக்கு இவற்றில் தனிச் சிறப்பான ஓர் உரிமையோ அல்லது திறனறிவோ இருப்பதாகக் கருதிவிடக் கூடாது. ஆயினும், இப் பிரச்சினைகளைப் புறக்கணித்தலும் கூடாது.

5. ஐக்கிய அரசாங்கத்தின் மக்கள் தொகை

தற்போது, பிரிட்டிஷ் மக்கள் தொகையினைப்பற்றி ஆராய்வதன் மூலம் இன்னும் பல விளக்கங்களைக் காண்போம். கீழே கொடுக்கப் பட்டுள்ள அட்டவணை 2-ன் மூலம் சென்ற நூற்றாண்டில் ஐக்கிய அரசாங்கத்தின் (United Kingdom) மொத்த மக்கள் தொகையின் போக்கு எவ்வாறு இருந்ததென்பதைத் தெரிந்துகொள்ள இயலும். 1851ஆம் ஆண்டு, 1911ஆம் ஆண்டு ஆகிய இரு ஆண்டுகளுக்கு மிடையே மொத்த மக்கள் தொகை வெகுவாக அதிகரித்துள்ளது—பத்தாண்டில் அதன் சராசரி அதிகரிப்பானது 11 சதவீதத்திற்கும் 14 சதவீதத்திற்குமிடையே இருந்தது (அதாவது, ஆண்டொன்றுக் குச் சராசரி 1·1 சதவீதத்திலிருந்து 1·4 சதவீதம் வரை இருந்தது). ஆயினும், 1911ஆம் ஆண்டிற்குப்பிறகு மக்கள் தொகையின் வளர்ச்சி கணிசமான அளவிற்குக் குறைந்துள்ளதையே அட்டவணை காட்டு கின்றது.

அட்டவணை 2: ஐக்கிய அரசாங்கத்தின்
மக்கள் தொகை 1851—1961 (மில்லியன்களில்)

| | |
|---|---|
| 1851 | 22·3 |
| 1871 | 27·4 |
| 1891 | 34·3 |
| 1911 | 42·1 |
| 1931 | 46·0 |
| 1951 | 50·2 |
| 1961 | 52·7 |

ஆதாரம்: 1962ஆம் ஆண்டின் புள்ளி விவர அறிக்கை (Abstract of Statistics, 1962) அட்டவணை 6. இவ்வறிக்கை 1962ஆம் ஆண்டு லண்டனிலுள்ள அரசாங்கப் புள்ளிவிவரத் துறையினரால் (H. M. S. O. London) வெளியிடப்பட்டதாகும்.

1911ஆம் ஆண்டிற்குப் பிறகு, பத்தாண்டுச் சராசரி (decennial average) 5 சதவீதத்திற்கும் குறைவாக இருந்திருப்பதை அட்டவணை உணர்த்துகிறது. ஆயினும், 1939ஆம் ஆண்டிற்குப் பிறகு அது 5 சதவீத மட்டத்தை (5 percent level) மீண்டும் திரும்பப் பெற்றது.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் மக்கள் தொகை விரைவாக அதிகரித்ததற்கும், தற்போதைய நூற்றுண்டின் முற்பகுதியில் மக்கள் தொகை குறைவாக அதிகரித்ததற்கும் முக்கியக் காரணிகளாக இருந்தவை பிறப்பு-இறப்பு வீதங்களேயாகும் (birth and death rates). 1871—1931 ஆகிய ஆண்டுகளுக்கிடையே உள்ள காலத்தில் ஐக்கிய அரசாங்கத்தில் குடியேறியவர்கள், அதனை விட்டு வெளியேறியவர்கள் ஆகிய இவர்களால் பிரிட்டனுக்கு நிகரமாக 4 மில்லியன் மக்கள் தொகை குறையலாயிற்று ; 1931-1951 ஆகிய ஆண்டுகளில் ஐக்கிய அரசாங்கத்தில் நிகரமாக 440,000 மக்கள் உட்புகுந்துள்ளனர். இறப்பு வீதமானது தொடர்ந்து குறைந்துகொண்டே வந்துள்ளது (1870ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளின் ஆரம்பத்தில் மொத்த மக்கள் தொகையில் ஆண்டு இறப்பு வீதமானது 1000-க்கு 22 ஆக இருந்தது; தற்போது 1000-க்கு 11·9 ஆக இருக்கிறது). சமீப ஆண்டுகளில் விரைவாகக் குறைந்துகொண்டு வந்த இறப்புவீதக் குறைதல் 19ஆம் நூற்றுண்டில் விரைவாக இருந்தது போலன்றிச் சற்று நிதானமாகவே இருந்து வருகிறது. இது ஒரு சிறிதளவிற்கு மக்கள் தொகையின் பெருக்கம் குறைந்து காணப்படுவதற்குக் காரணமாக இருக்கிறது. பிறப்பு வீதத்தில் ஏற்படும் குறைவும் இதனைப் பெரிதும் பாதித்து வந்துள்ளது—1870ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளில் (1870's) பிறப்பு வீதம் 1000-க்கு 35 ஆக இருந்தது, ஆனால், 1930ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளில் (1930's) ஆயிரத்திற்கு 16-க்கும் சற்று அதிகமாக இருந்தது. சமீப ஆண்டுகளில் பிறப்பு வீதமானது 1000-க்கு ஏறக்குறைய 17 ஆக இருக்கிறது.

ஐக்கிய அரசாங்கத்தின் மக்கள் தொகையின் எதிர்காலப் போக்கு சர்ச்சைக்குரியதாக இருக்கிறது. இப்பொழுதுள்ள பிறப்பு-இறப்பு வீதங்கள் தொடர்ந்து நீடிக்குமானல், ஒவ்வொரு பத்தாண்டுகளிலும் 5-லிருந்து 6 சதவீதம்வரை மக்கள் தொகையானது அதிகரித்துச் செல்லும். 1949ஆம் ஆண்டில் மக்கள் தொகையைப்பற்றி அறிக்கை வெளியிட்ட அரசாங்கக் குழு (Royal Commission), கிரேட் பிரிட்டனின் மக்கள் தொகை இந்த நூற்றுண்டின் இறுதியில் 41-லிருந்து 57 மில்லியனுக இருக்கக்கூடும் என்று மதிப்பீடு செய்துள்ளது. எதிர்காலத்தில் பிறப்பு-இறப்பு வீதம் எவ்வாறு இருக்கக்கூடும் என்னும் எடுகோளின்மீதே இத்தகைய ஒரு மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. ஆனல், மக்கள் தொகையைப்பற்றிய சமீபத்திய அனுபவமானது இத்தகைய முன்னறி கூற்றுகள் (forecasts) பெரிதும் மாற்றியமைக்கப்படல் வேண்டுமென்றே காட்டுகின்றது. பிரிட்டிஷ் அரசாங்க மக்கள் தொகை நிபுணர்கள் (Official British Demographers), பிரிட்டிஷ் மக்கள் தொகை நிதானமாக

வளர்ச்சியடைந்து இந்த நூற்றுண்டின் இறுதியில் 68 மில்லியனுக அதிகரிக்கக்கூடும் என்றும், அதற்குப் பின்னர் மக்கள் தொகை சற்றுக் குறையலாமென்றும் நம்புகின்றனர்.

அட்டவணை 3: 1901–61 ஆகிய ஆண்டுகளில் ஐக்கிய அரசாங்கத்தின் மக்கள் தொகையின் வயது அமைப்பும் ஆண் பெண் எண்ணிக்கையும்.

| வயது பிரிவு (ஆண்டுகளில்) | 1901 | | 1961 | |
|---|---|---|---|---|
| | ஆயிரத்தில் | மொத்தத் தொகையில் % | ஆயிரத்தில் | மொத்தத் தொகையில் % |
| 0—14 | 12,422 | 32·5 | 12,332 | 23.4 |
| 15—29 | 10,808 | 28·3 | 10,278 | 19·5 |
| 30—44 | 7,493 | 19·6 | 10,522 | 19.9 |
| 45—59 | 4,638 | 12·1 | 10,641 | 20·2 |
| 60—74 | 2,343 | 6·1 | 6,775 | 12.8 |
| 75+ | 531 | 1·4 | 2,228 | 4.2 |
| மொத்தம் ... | 38,237 | 100·0 | 52,777 | 100.0 |
| இவற்றில் ஆண்கள் | 18,492 | 48·4 | 25,529 | 48·4 |
| பெண்கள் | 19,745 | 51·6 | 27,248 | 51·6 |

ஆதாரம்: 1962ஆம் ஆண்டின் ஆண்டுப் புள்ளி விவர அறிக்கை, அட்டவணைகள் 6—8.

மூன்றும் அட்டவணையை நோக்கினுல், இந்த நூற்றுண்டில் பிரிட்டிஷ் மக்கள் தொகையின் வயது, பால் அமைப்பில் (age and sex structure) ஏற்பட்டுள்ள மாற்றம் காணப்படும். அட்டவணையைப் பார்த்தால், பிரிட்டிஷ் மக்கள்தொகையில் ஆண்களைவிடப் பெண்கள் அதிகமாக இருப்பதும், ஒவ்வோர் ஆண்டிலும் கணிசமான அளவில் பெண்குழந்தைகளைவிட ஆண் குழந்தைகளே அதிகமாகப்

பிறந்தும், பெண்களின் எண்ணிக்கையே தொடர்ந்து அதிகமாக இருப்பதும் தெரியவரும்.

பின்னதாகச் சொல்லப்பட்ட நிகழ்ச்சி சில 'செயற்கையான' (artificial) காரணங்களால்தான் ஏற்படுகின்றது. சான்ருக இரண்டு உலகப் போர்களும், பட்டாளத்தில் பணிபுரிந்த மனிதர்களின் பெருவாரியான இறப்புக்குக் காரணமாயிருந்தன. ஆண்களைவிடப் பெண்களே எண்ணிக்கையில் அதிகமாக இருப்பதற்கு மிக முக்கிய மான காரணம் ஆண்களைவிடப் பெண்களே நீண்ட வாழ்நாளைப் பெற்றிருப்பதாகும். தற்காலத்தில் பிரிட்டனில் புதிதாகப் பிறக்கும் குழந்தை அது ஆணுனல் சராசரி 68 ஆண்டுகள் வாழ்நாளைப் பெற்றிருக்குமென்றும், பெண்ணுனல் சராசரி 78 ஆண்டுகள் வாழ் நாளைப் பெற்றிருக்குமென்றும் கணக்கிடப்பட்டுள்ளது. (தொழிலில் ஏற்படும் களைப்பிற்கும் இடையூறுகளுக்கும் ஆண்கள் அதிகமாக இலக்காவது இதற்கு ஒரு காரணமெனினும், குழந்தை மரிப்பு வீதம் (rate of infantile mortality) ஆண்குழந்தைகளிடையே அதிகமாக இருப்பதற்கு முக்கியக் காரணம் முற்றிலும் உடற்கூறு சம்பந்தப் பட்ட தென்பதையே இது உணர்த்துகிறது.)

வயதுபிரிவு (age distribution) என்பது பொருளாதார முக்கியத்துவத்தை அதிகமாக உடையதாக இருக்கிறது. பிரிட்டிஷ் மக்கள் தொகையின் வயதுபிரிவுகளை அட்டவணை 3-ல் தெளிவாகக் காணலாம். 1901ஆம் ஆண்டில் மக்கள் தொகையில் கிட்டத்தட்ட 61 சதவீதம் 30 வயதுக்குக் கீழ்ப்பட்டவர்களேயிருந்தனர்; ஆனுல், 1961ஆம் ஆண்டில் இந்த விகிதமானது (proportion) 43 சதவீதத் திற்கும் சற்றுக் குறைவானதாகவே இருந்தது; இதற்கு எதிரிடையாக 1901ஆம் ஆண்டில் 60 வயதுக்கு மேற்பட்டவர்களின் விகிதம் ஒவ்வொரு 1000-த்திற்கும் 75 ஆக இருந்தது. ஆனுல், 1961ஆம் ஆண்டு இந்த விகிதம் ஒவ்வொரு 1000-த்திற்கும் 170 ஆக இருந்தது. இவ் அத்தியாயத்தின் முன் பிரிவில் இத்தகைய ஒரு போக்கின் முக்கியத்துவம் விளக்கப்பட்டது; இத்தகைய ஒரு போக்கானது, நிச்சயமாக, பிறப்பு வீதம், இறப்பு வீதம் இவைகளில் ஏற்படும் குறைதலினுல் (fall) தவிர்க்க முடியாத விளைவாகவே இருக்கிறது.

அட்டவணை 4-ல் மக்கள் தொகையின் நிலவாரிப் பகிர்வு (geographical distribution) காட்டப்பட்டுள்ளது. இந்த அட்டவணை யில் மிகவும் கூர்ந்து நோக்கத்தகுந்த அம்சமாக இருப்பது, ஐக்கிய அரசாங்கத்தின் அதிதீவிரப் பகுதிகளென (extremities) அழைக்கப் படுகின்ற ஸ்காட்லண்டு, இங்கிலாந்தின் வடக்குப் பகுதி, வேல்ஸ், அயர்லாந்து ஆகியவற்றிலிருந்து மக்கள் தொகையின் பகிர்வு இடம் பெயர்ந்து லண்டன், இங்கிலாந்தின் தெற்குப் பகுதி (South of

England), மிட்லண்ட்ஸ் (Midlands) ஆகியவை அடங்கிய 'மைய' எல்லையை (Central area) நோக்கிச் செல்வதாகும். இந்த மைய எல்லையில் 1911ஆம் ஆண்டில் மொத்த மக்கள் தொகையில் 51 சதவீதம் அடங்கியிருந்தது; 50 ஆண்டுகளுக்குப் பிறகு இந்த விகிதம் சுமார் 56 சதவீதமாக ஆகியது. இத்தகைய ஒரு போக்கு, பிரிட்டிஷ் மக்கள் நகர வாழ்வை விரும்பியதையும் ஓரளவிற்குச் சுட்டுவதாகவும், நாட்டுப்புற எல்லைகளினின்றும் மக்கள் தொகை தொடர்ந்து இடம்பெயர்ந்து நகரங்களுக்குச் சென்றதையும் சுட்டுவதாகவும் உள்ளது. 1911ஆம் ஆண்டில் மக்கள் தொகையில் 24 சதவிகிதத்தினர் நாட்டுப்புறங்களில் (rural areas) வாழ்ந்தனர்; 1961ஆம் ஆண்டில் இந்த விகிதம் (proportion) 22 சதவீதமாகக் குறைந்தது.

அட்டவணை 4 : 1911–61 ஆகிய ஆண்டுகளில்
ஐக்கிய அரசாங்கத்தின் மக்கள் தொகையின் நிலவாரிப் பகிர்வு
(Geographical Distribution of the Population of the United Kingdom, 1911-61)

| நிலப்பகுதி (Region) | 1911 | | 1961 | |
|---|---|---|---|---|
| | ஆயிரத்தில் | மொத்தத் தொகையில் % | ஆயிரத்தில் | மொத்தத் தொகையில் % |
| லண்டனும் கிழக்கு இங்கிலாந்தும்... | 11,206 | 26·6 | 14,835 | 28·1 |
| தெற்கும், தென்மேற்கு இங்கிலாந்தும் ... | 4,371 | 10·4 | 6,273 | 11·9 |
| மிட்லண்ட்ஸ் | 5,900 | 14·0 | 8,431 | 16·0 |
| வடக்கும், வடமேற்கு இங்கிலாந்தும் ... | 12,172 | 28·9 | 13,996 | 26·5 |
| ஸ்காட்லாந்து ... | 4,761 | 11·3 | 5,184 | 9·8 |
| வேல்ஸ் ... ... | 2,421 | 5·8 | 2,630 | 5·0 |
| வடக்கு அயர்லாந்து ... | 1,251 | 3·0 | 1,427 | 2·7 |
| மொத்தம் ... | 42,082 | 100·0 | 52,777 | 100·0 |

ஆதாரம்: 1962ஆம் ஆண்டின் ஆண்டுப் புள்ளிவிவர அறிக்கை (அரசாங்கப் புள்ளிவிவர அலுவலகம், லண்டன், 1962).

தற்போது 40 சதவீதத்திற்கும் குறைவில்லாத பிரிட்டிஷ் மக்கள் தொகையானது, கிரேட்டர் லண்டன், வெஸ்ட் மிட்லண்ட்ஸ், வெஸ்ட் யார்க்ஷயர், ஸௌத் ஈஸ்ட் லங்காஷையர், மெர்ஸிசைட் (Merscyside), டைன்சைட் (Tyneside), கிளேட்சைட் (Clydeside) ஆகிய ஏழு பெரிய பகுதிகளில் காணப்படுகிறது.

மக்கள் தொகையின் நிலவாரிப் பகிர்வில் ஏற்படும் மாற்றமானது, நாட்டின் பொருளாதார அமைப்பில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்றவாறு தோன்றும் பல்வேறு தொழில்களில் ஈடுபடும் மக்கள் தொகையின் மறுபகிர்வோடு (redistribution) நெருங்கிய தொடர்புகொண்டுள்ளதாக உள்ளது. பிரிட்டிஷ் மக்கள்தொகையின் தொழிலியற் பகிர்வில் (occupational distribution) சென்ற நூற்றுண்டில் ஏற்பட்ட குறிப்பிடும்படியான மாற்றங்களை அட்டவணை 5-ல் காணலாம். அட்டவணை 5 இங்கிலாந்திலும் வேல்ஸிலும் உள்ள தொழிலில் ஈடுபட்டுள்ள மக்கள்தொகையைக் காட்டுகிறது. அட்டவணையைப் பார்த்தால், தொன்றுதொட்டு வந்துள்ள சில தொழில்கள்—குறிப்பாக விவசாயமும் நெசவுத் தொழில்களும்—குறைந்துகொண்டுவருவது நன்கு விளங்கும்.

1951ஆம் ஆண்டில் இந்த இரு தொழில்களும், மொத்தத் தொழிலாளர்களில் 44 சதவீதத்தினருக்கு வேலைவாய்ப்பை நல்குவனவாக இருந்தன. ஆனால், 1951ஆம் ஆண்டில் இந்த விகிதம் 12 சதவீதமாகக் குறைந்தது. இவ்வாறு குறைந்ததற்குப் பெரிதும் காரணம், ஸ்காட்லாந்து, வடக்கு இங்கிலாந்து, வேல்ஸ், வடக்கு அயர்லாந்து ஆகிய பகுதிகள் பெரிதும் விவசாயமும் நெசவுத் தொழில்களும் அல்லது, விவசாயம் அல்லது நெசவுத் தொழில்களும் செய்துவந்தமையும், அத் தொழிகளில் ஏற்பட்ட சீர்கேடும் (decline) ஆகும்.

இத்தகைய தடைப்படுதலானது பிரிட்டிஷ் பொருளாதாரத்தில் பெரும் அங்கம் வகிக்கின்ற தொழில்கள் பலவற்றில் ஏராளமாக மக்கள் வேலைக்கு அமர்த்தப்படுவதால் சரிக்கட்டப்படுவதாக இருக்கின்றது. (குறிப்பாக, பொறியியல் தொழில்களிலும், உலோகங்கள் செய்யும் தொழில்களிலும் ஏராளமாக மக்கள் வேலைக்கமர்த்தப்பட்டுள்ளனர்). தற்போது பலர் 'உற்பத்தி நிருவாகம்' என அழைக்கப்படும் தொழில்களில் வேலைக்கமர்த்தப்பட்டுள்ளனர். மொத்த விற்பனை, சில்லறை விற்பனை ஆகிய தொழில்கள், நிதிய, வணிகப் பணிகள் (financial and commercial services) இவற்றில் அடங்கும். வேலை சம்பந்தமான புள்ளிவிவரங்களின் (occupational statistics) அறிக்கை, மத்திய அரசாங்கம் (Central Government), உள்ளாட்சி

## அட்டவணை 5

இங்கிலாந்திலும் வேல்ஸிலும் தொழிலில் ஈடுபட்டுள்ள மக்கள் தொகையின் பகிர்வு, 1851-1951
(மொத்தத்தில் இத்தனை சதவீதம்)

| தொழில் | 1851 | 1901 | 1951 |
|---|---|---|---|
| விவசாயமும், மீன் பிடித்தலும் ... | 21·4 | 8·5 | 4.7 |
| சுரங்கத் தொழிலும், கல் வெட்டி எடுத்தலும் | 3·9 | 5·5 | 4·4 |
| செய்பொருள் உற்பத்தி ... | 32·9 | 29·1 | 34·1 |
| இவற்றில் | | | |
| நெசவுத் தொழில்களும், ஆடைகள் செய்தலும் | 22·2 | 14·1 | 7·7 |
| உலோகங்கள், பொறிகள் செய்தல் | 6·1 | 9·1 | 17·5 |
| மற்றச் செய்பொருள்கள் உற்பத்தி | 4·6 | 5·9 | 8·9 |
| உணவு, மது, புகையிலை தயாரிப்பு | 1·7 | 2·2 | 3·3 |
| கட்டடம், அலங்கரிப்பு, ஒப்பந்தம் ஆகிய தொழில்கள் | 5·0 | 7·1 | 6·2 |
| போக்குவரத்து, செய்தித் தொடர்புத் தொழில்கள் | 5·4 | 9·7 | 7·7 |
| மத்திய அரசாங்க வேலைகளும் உள்ளாட்சி மன்றங்களின் வேலைகளும் | 1·5 | 2·6 | 8·2 |
| வாணிபம், நிதி, பகிர்வு சம்பந்தமான தொழில்கள் ... | 5·3 | 9·0 | 13·8 |
| தனிமுறைப் பணி (Personal service) | 14·6 | 14·6 | 7·5 |
| பிற தொழில்கள் ... ... | 8·3 | 11·7 | 10·1 |
| மொத்தம் ... | 100·0 | 100·0 | 100·0 |

ஆதாரம்: இ. ஏ. ஜி. ராபின்சன் அவர்கள் தந்துள்ள புள்ளிவிவரங்களிலிருந்தும் எடுக்கப்பட்டது. 'மாற்றம் அடைந்துகொண்டிருக்கும் பிரிட்டிஷ் பொருளாதார அமைப்பு' (The Changing Structure of the British Economy) என்னும் தலைப்பில் அவர் எழுதிய கட்டுரையிலிருந்தும் ('எக்கனமிக் ஜர்னல்' 54 ஆம் பிரிவு ஏடு, எண் 255, செப்டம்பர் 1954, பக்கம் 459, அட்டவணை 3) இப் புள்ளிவிவரங்கள் எடுக்கப்பட்டுள்ளன.

(Local Government) ஆகிய இரண்டும் அதிகமான முக்கியத்துவம் அடைந்துவருவதையும் ஒரு காரணமாகச் சுட்டுகிறது. இத்தகைய மாற்றங்கள், பழைய தொழில்களின் சீர்குலைவினால் மக்கள்தொகை நாட்டிற்கு வெளியே தள்ளிச் செல்லப்பட்ட நிலையை மாற்றியமைத்து, மக்கள்தொகையின் வளர்ச்சிக்கு ஒரு 'தூண்டுகோலாக' இருக்கின்றன.

கடந்த நூற்றாண்டில் ஐக்கிய அரசாங்கத்தின் மக்கள்தொகை இருமடங்கிற்கும் மேலாகப் பெருகியதோடு, தற்போது இன்னும் வளர்ச்சியடைந்துகொண்டே யிருக்கிறது. அதனுடைய மக்கள் நெருக்கம் ஒரு சதுர மைலுக்கு, அதனுடைய அளவுடன் ஒப்பிடக்கூடிய எந்த நாட்டையும்விட மிக அதிகமான மக்கள் நெருக்கத்தையுடைய நாடுகளுள் ஒன்றாக இருக்கிறது. அதனுடைய ஒரு சதுர மைலில் உள்ள சராசரி மக்கள் நெருக்கம் 527 ஆக இருக்கும்போது, ஃபிரான்சின் ஒரு சதுரமைலில் உள்ள சராசரி மக்கள் நெருக்கம் 200 ஆகவும், இத்தாலியில் 358 ஆகவும், ஐக்கிய அமெரிக்காவில் 50 ஆகவும், கானடாவில் 6 ஆகவுமே இருக்கிறது. ஆயினும், பிரிட்டனின் மக்கள்தொகை 'முதியோர்' மக்கள்தொகையாக (ageing population) இருப்பதால், பிரிட்டன் அத்தகையதொரு மக்கள் தொகையினின்றும் பிறக்கின்ற பிரச்சினைகளனைத்தையும் சமாளித்தாக வேண்டியிருக்கிறது. மேலும், பிரிட்டிஷ் மக்கள் தொகை பெரும்பாலும் நகரங்களில் வாழ் மக்களையுடையதாகவும் (urbanised), மிக அதிகமான தொழில் செய்யும் மக்களையுடையதாகவும் (industrialised) இருப்பதால், அதன் உணவுப் பொருள்களில் பெரும்பகுதியும் வெளிநாடுகளிலிருந்தே வரவேண்டியுள்ளது. இதன் காரணமாகவும், மிக முக்கியமானவும் கடினமானவுமான பல பிரச்சினைகள் எழுகின்றன. இவைகளைப் பிறிதோர் இடத்தில் காண்போம்.

## 6. தொழிலாளர் இடப்பெயர்ச்சி (Mobility of Labour)

நாட்டின் நல்ல பொருளாதார நிலைக்கு அந் நாட்டின் தொழிலாளர்களின் திறமையும் அளவும்மாத்திரமே முக்கியமல்ல; எங்கு தொழிலாளர்கள் இன்றியமையாமல் தேவைப்படுகின்றனரோ அங்கு அவர்கள் பயன்படுத்தப்படல் வேண்டும்; உற்பத்தி, தேவை இவைகளின் போக்கிற்கேற்ப, தொழிலாளர்கள் பரவலாக வேலைக்கமர்த்தப்படுதலில் சரளமான மாற்றம் (smooth change) ஏற்படவேண்டும். இது, எந்த அளவிற்குத் தொழிலாளர்கள் 'பெயர்ச்சி'ப் பண்பினைப் (quality of mobility) பெற்றிருக்கின்றனர் என்னும் பிரச்சினையை எழுப்புகின்றது. 'பெயர்ச்சிப் பண்பாவது, தொழிலாளர்கள்,

ஓரிடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்கோ அல்லது ஒரு தொழிலிலிருந்து மற்ருெரு தொழிலுக்கோ (அவர்களுடைய அத்தகையதொரு பெயர்ச்சி தேவைப்படும்போது) இடம் பெயர்ந்து செல்லுகின்ற திறனகும்.

பெயர்ச்சி (mobility) இருவகைப்படும். ஒன்று 'நிலவியல்' (geographic) பெயர்ச்சி அல்லது பக்கப் பெயர்ச்சி (lateral) எனப்படும்—அதாவது, ஓர் எல்லையிலிருந்து மற்ருேர் எல்லேக்கு இடம் பெயர்ந்து செல்லுதல். பொதுவாக இத்தகையதொரு பெயர்ச்சி பல காரணிகளால் (number of factors) தடைப்படுவதுண்டு. தங்களது சொந்த இடம், அண்டை இடங்கள் ஆகிய இவற்றின்மீது பற்றுள்ளம் (affection) வைத்திருப்பது மனித இனத்திற்கே இயல்பானதாகும். கழகங்கள் (clubs), சங்கங்கள் (societies), மன்றங்கள் (unions), கோவில்கள் இவைகளின்மூலம் அவர்கள் சமூகத் தொடர்புகளே ஏற்படுத்திக்கொள்கின்றனர். புதிய வேறு இடங்களுக்குச் சென்ருல் இத்தகைய உறவுகளேப் புதியதாக ஏற்படுத்திக் கொள்ளவேண்டுமாதலால், அவர்கள் புதிய இடங்களுக்குச் செல்வதற்குத் தயங்குகின்றனர். இடம்பெயர்ந்து செல்வதில் ஏற்படும் செலவு (costs), இடையூறு (inconvenience)—குறிப்பாக, வீடு கிடைக்காமலிருக்கும் இடையூறு—ஆகியவைகள் பெயர்ச்சிக்குத் தடையாக இருக்கின்றன. பெற்ருேர் தங்களது குழந்தைகளே ஒரு பள்ளியிலிருந்து மற்ருேர் இடத்திலுள்ள பள்ளிக்கு அனுப்பத் தயங்குவர். மேலும், பலருக்குத் தங்கள் மாவட்டத்திற்கு (district) வெளியேயுள்ள வேலேவாய்ப்புகள் தெரிந்திருப்பதில்லே. பல சமயங்களில் இடப்பெயர்ச்சிக்குச் சோம்பலே தடையாக இருக்கின்றது. முன்னர் ஒரு பிரிவில் கூறியதுபோல, மேற்கூறப்பட்ட காரணிகள் யாவும் சராசரி வயது அதிகரித்துள்ளதொரு மக்கள் தொகையில்தான் காணப்படுகின்றன. வயதின் விகிதத்திற்கேற்பவே, மாற்றத்திற்கு மறுப்புத் தெரிவித்தலும் அதிகரிக்கின்றது. மிகக் குறைவான அளவு இளேஞர்களே உடையதொரு மக்கள் தொகையானது, இதற்கொப்பீடாக அதிகமான வயதினர்களேக் குறைவாகப் பெற்றிருக்கும் மக்கள்தொகையைக்காட்டிலும், காலத்திற்கேற்றவாறு தன்னேச் சரிசெய்துகொள்ளும் திறமையைக் (adaptability) குறைவாகவே பெற்றிருக்கும். இன்னும் நாடுவிட்டு நாடு செல்லும் இடப்பெயர்ச்சிகளில் தடைகள் அதிகமாகவும் பலவாகவும் இருக்கின்றன. இவற்றில், வேறு மொழிகளேக் கற்கவேண்டிய பிரச்சினேகள் ஏற்படும்; வேலே நிபந்தனேகள் (working conditions), சமூக நல உறுதிச் சட்டங்கள் (social security systems) ஆகியவைகளில் பிற நாடுகளில் நிறைய வேறுபாடுகள் இருக்கக்கூடும். மேலும், இடம்பெயர்ந்து செல்வதற்கான செலவு அதிகமாக இருக்கக்கூடும்.

இத்தகைய தடைகள் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தன வென்று, அனுபவம் நமக்கு நன்கு கற்பித்திருக்கின்றது. 1930ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளில் இருந்த மந்தத்தின் (depression) போது, பிரிட்டனில், குறிப்பாக, மிகவும் தாக்கப்பட்ட பகுதிகளில் (தொழில் மந்தப் பகுதிகளில்) பலர் பல ஆண்டுகளுக்கு வேலையின்றி இருக்க நேரிட்டது. மந்தத்தின் இறுதி ஆண்டுகளில் அவர்கள் லண்டன் எல்லைக்கோ அல்லது மிட்லண்ட்ஸ் எல்லைக்கோ சென்றிருப்பார்களேயாயின் அவர்களுக்கு வேலைவாய்ப்புக் கிடைத்திருக்கக் கூடும் எனினும், அவ்வாறு செல்லாது வேலையின்றியே இருந்தனர். இதைப்போன்றே, போர்க்காலத்திற்குப் பிந்தியுள்ள பல ஆண்டுகளில் ஸ்காட்லாந்திலும் வடக்கு அயர்லாந்திலும் வேலையின்மையானது பிரிட்டனில் இருந்ததுபோல் குறைந்தபட்சம் இருமடங்காக இருந்தது. ஆனால், அதுசமயம் பிரிட்டனின் மத்திய நிலப்பகுதிகளில் பல வேலைகளுக்கு நியமிக்கப்பட ஆளில்லாமலிருந்தது.

இத்தகைய நாடுகளிடையே தொழிலாளர்கள் பெயர்ந்து செல்வதற்குள்ள இடையூறுகளை (பருப்பொருளியலானதும் உளப்பாங்கானதுமான) எடுத்து விளம்புவதற்கு ஒரு சான்ருக பிரிட்டன் விளங்குகிறது. 1959—61 ஆகிய ஆண்டுகளில் ஐக்கிய அரசாங்கத்தினுள் குடிபுகுந்த மக்கள்தொகையின் எண்ணிக்கை, ஆண்டொன்றுக்கு 90,000 முதல் 100,000 வரை அதிகரித்தது. இது ஓர் அதிகமான தொகைதான் என்ருலும், ஆண்டொன்றுக்கு 300,000 மக்கள்தொகை பெருக்கத்தையும், 53 மில்லியன் மொத்த மக்கள்தொகையையும் உடைய ஒரு நாட்டிற்கு இது ஒரு பெரிய எண்ணிக்கை என்று சொல்வதற்கில்லை. இருப்பினும், இவ்வாறு மக்களது உள்நுழைவினல் (inflow) ஏற்படும் பல பிரச்சினைகள், தற்போதுள்ள ஐக்கிய அரசாங்கத்தை, அத்தகைய உள்நுழைவை அனுமதிக்கும் நீண்டகாலமாக இருந்துவந்ததொரு கைக்கோளை (காமன்வெல்த் நாட்டைச் சேர்ந்த எவரும் ஐக்கிய அரசாங்கத்திற்குள் குடிபுகலாம் என்ற கைக்கோள்)—உள்நுழைவைக் (immigration) கட்டுப்படுத்தவேண்டுமென்ற நோக்கத்துடன் தற்போது கைவிட்டுவிடத் தீவிரமாகச் சிந்தனை செய்யத் தூண்டுகின்றன.

இரண்டாவது வகைப் பெயர்ச்சி தொழிலியற் பெயர்ச்சி (occupational mobility) அல்லது செங்குத்துப் பெயர்ச்சி (vertical mobility) எனப்படும்—அதாவது, ஒரு தொழில் அல்லது வேலையினின்றும் மற்ருெரு தொழில் அல்லது வேலைக்கு இடம் மாறிச் செல்வதாகும். சில சமயங்களில், சிறப்புத் திறனை ஒருவர் பெற்றிருப்பதானது, அவருடைய பயிற்சி, அனுபவம் முதலியவற்றைச் சில தொழில்களில் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குமேல் பயன்படுத்த

முடியாதுபோகின்றது. ஆனால், சில தொழில்கள் அப்படி அல்ல. அந்தத் தொழில்கள் நசித்துப்போகின்ற தறுவாயில், அத் தொழில்களில் பெற்ற சிறப்புத் திறனை வேறு பல தொழில்களுக்குச் சென்று பயன்படுத்திக்கொள்ள முடிகின்றது. சான்றாக, தட்டெழுத்தர்கள் (typists), கணக்கர்கள் (accountants) அல்லது லாரி ஓட்டுபவர்கள் (lorry drivers) தங்களது வேலைகளைப் பல தொழில்களின் பரந்த எல்லையில் தொடர்ந்து செய்யக்கூடும். மிக நுண்ணிய உழைப்புப் பகுப்பில் (extreme division of labour) உள்ள பல நன்மைகளில் ஒன்று, மக்கள் குறுகிய காலத்தில் பெற்ற தங்கள் திறமையை மிகவும் வரையறுக்கப்பட்ட எல்லைக்குட்பட்ட சில தொழில்களில் நன்கு பயன்படுத்திக்கொள்ள முடிகிறது. சான்றாக, ஒரு மணித்துளி (minute) நேரத்தில் பல தடவைகள் ஒரேவிதமான ஒரு செய்முறை வேலையைத் திரும்பத் திரும்பச் செய்துகொண்டிருக்கும் ஒரு பொறிவலவர் (machine-minder), சீராக அசைந்து செல்லுகின்றதொரு கோப்பு நாடாவில் (steadily moving assembly belt) ஐந்தாறு அசைவுகளைக் கொண்டதொரு வேலையைச் செய்யும் ஒருவர் ஆகிய இவர்கள் தங்களது திறமையையும் பயிற்சியையும் வரையறுக்கப்பட்ட எல்லைக்குட்பட்ட சில தொழில்களில்மட்டுமே தங்களது திறமையைச் செலுத்தித் தொழில் செய்ய முடியும். இவ்வாறு குறுகிய எல்லையில் தங்களது பயிற்சியையும் திறமையையும் காட்டியாகவேண்டும் என்னும் தடையானது அதனைப் பெற்றிருப்பவர்கள் அத் தொழில்கள் சீரழியுங்காலையில் வேறு தொழில்களை நாடிச் செல்லும்போதும், அல்லது தொழில்கள் பெருகி வளர்ச்சியடையும்போது பலதிறப்பட்ட அல்லது மிகவும் பொதுவான தன்மையுள்ள திறமை தேவைப்படும்போதும் கடினமான பிரச்சினைகள் தோன்றும்.

செங்குத்துப் பெயர்ச்சியிலும் (vertical mobility) சமூகம் வேண்டுமென்றே தடைகளை (restrictions) ஏற்படுத்துவது உண்டு. தொழிற் சங்கங்களும் (trade unions), வாழ்க்கைத் தொழிற் சங்கங்களும் (professional associations) இத்தகைய உள்நுழைவின்மீது அடிக்கடி தடைகளை விதிக்கின்றன. அதிகமான தொழிலாளர்கள் தங்களது வேலையில் நுழைவார்களேயானால், தொழிலாளர்களிடையே போட்டி ஏற்பட்டுக் கூலி அல்லது சம்பளக் குறைவு ஏற்படுவதை அவைகள் விரும்பாததே இதற்குக் காரணம். தொழிலைப் பயில்வதில் அதிகச் செலவு (high costs of apprenticeship) அல்லது தொழிலுக்கான கல்வி கற்பதில் ஏற்படும் அதிகச் செலவு (நேரத்திலும் பணத்திலும்) மக்களைத் தங்களுக்குப் பொருத்தமான தொழிலில் நுழைவதனின்றும் தடுக்கின்றன. ஒரு சமூகப் பிரிவினின்றும் (social class) மற்றொரு சமூகப் பிரிவினுக்கு இடம்பெயர்ந்து

செல்லுதல்—இவ்வாறு இடம்பெயர்ந்து செல்லுதல் என்பது பெரும்பாலும் தொழிற் பெயர்ச்சியுடன் சம்பந்தப்பட்டேயிருக்கும்—மிகவும் கடினமானதாக இருக்கிறது. அவ்வாறு இடம்பெயர்ந்து செல்லுதல் மக்கள்தொகையில் ஒரு சிறு பகுதியினரால்தான் இயலுகிறது.

கோட்பாட்டளவில் நிலவியற் பெயர்ச்சி, தொழிலியற் பெயர்ச்சி என்று வேறுபடுத்திக் கூற இயலுமாயினும், நடைமுறையில் இரண்டும் ஒன்ருகவே இயங்கக்கூடியதாக இருக்கிறது. பல இடங்களில் பல தொழில்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் செறிந்து காணப்படுகின்றன. இதற்கான காரணங்களை அடுத்த அத்தியாயத்தில் காணலாம். இவ்வாறு தொழில்கள் ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் செறிந்து காணப்படுவதில் தீமை ஒன்றுண்டு. ஒரு குறிப்பிட்ட தொழில் சீர்குலையுமானுல், அதனையொத்து அந் நிலப்பகுதி முழுவதிலுமுள்ள தொழில்கள் சீர்குலையும். தற்போது சீரழிந்து கொண்டிருக்கும் ஒரு தொழிலிலுள்ள தொழிலாளர்கள் ஒரு குறிப்பிட்ட துறையில்மட்டுமே பயிற்சியும் அனுபவமும் பெற்றிருப்பார்களாதலாலும், அவர்களுக்கு வேறு மாற்று வேலைகள் அவர்களின் அந்த நிலப்பகுதியில் கிடைக்காத காரணத்தாலும், அவர்களுடைய பெயர்ச்சி (movement) தடைப்படும். எனவே, அடுத்த அத்தியாயத்தில் 1930ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளில் ஏற்பட்ட மந்தத்தால் (depression) பீடிக்கப்பட்ட பகுதிகளில் ஏற்பட்ட பயங்கரப் பிரச்சினையும், போருக்குப் பிந்திய ஆண்டுகளின் தொழிலைப் பல்வகைப்படுத்தும் கைக்கோளும் (policy of industrial diversification) கூறப்பட்டுள்ளன.

தொழில்நுணுக்க வளர்ச்சியைக் கோருகின்றதும், நிலையில்லாத தேவையையுடைய உலக அங்காடிகளைக் கொண்டதுமாகிய ஒரு நாட்டிற்கு அதிகமான அளவில் தொழிற் பெயர்ச்சி விரும்பத்தக்கதாக இருக்கிறது. பெயர்ச்சியை ஊக்குவிப்பது எங்ஙனம்? ஒரு குறிப்பிட்ட திசையை நோக்கிப் பெயர்ச்சியை, திறமை மிக்கனவும், பல்வேறு அம்சங்களைக் கொண்டனவுமான வேலை தேடித்தரும் அலுவலகங்கள் (employment exchanges), தொழிலாளர்களின் பயிற்சிக்கும் குடியேறுதலுக்குமோ அல்லது பெயர்ச்சிக்கான செலவுகளுக்குமோ உதவி செய்வதற்காகவும் அரசாங்க மானியங்களை (government grants) அளித்தல், குடியேறுதலுக்கு வேண்டிய வீடுகளைக் கட்டிக் கொடுத்தல் ஆகியவற்றின்மூலம் ஊக்குவிக்கவும் முடியும். பிரிட்டனில் சில காலமாக இம் முறைகளில் அரசாங்கக் கைக்கோள் இயங்கிவருகிறது. இருப்பினும், மக்களுக்குத் தங்கள் வீடு, மனைவி, மக்களைவிட்டுப் பிரிந்திருப்பதில் ஏக்கம் இருக்கவே செய்கிறது. தொடர்ந்து வேலையின்மையால் பீடிக்கப்படினும்,

மக்கள் வேறு இடங்களுக்குப் பெயர்ந்து செல்வதற்குத் தயங்குகிறார்களென்பதையே நாம் அனுபவ வாயிலாகக் கண்டுள்ளோம். சட்டங்களின்மூலம் தொழிலாளர்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பெயர்ந்து செல்லச் செய்வதும் ஒரு பரிகாரமாக இருக்குமெனினும், குடியரசுத் தத்துவத்திற்கு இது புறம்பானதாகும்; வேண்டுமானால், போர் போன்ற இடர் நிறைந்த சூழ்நிலைகளில் இவ்வாறு செய்வது பொருத்தமுடையதாக இருக்கும்.

மற்றுமொரு பரிகாரமுண்டு. அதாவது, வேலையை நோக்கித் தொழிலாளி செல்வதைவிடத் தொழிலாளியை நோக்கி வேலை செல்லும்படியாகச் செய்வது. அதாவது, அரசாங்கத்தின் நிதிய உதவிகளாலும் (financial inducements), கட்டடங்கள் கட்டுப்பாடு (building control) ஆகியவற்றின் வாயிலாகவும் தொழிலிடச் செறிவை (location of industries) உண்டுபண்ணுவதாகும். இத்தகையதொரு கைக்கோளில் (policy) நன்மைகள் நிறைய இருக்கின்றன. கடந்த காலங்களில் குறைந்த மக்கள்தொகையினால் பயன்படுத்தப்படாமலிருந்த பருப்பொருளியலானவும் (physical) பருப்பொருளியல் அல்லாதனவுமான சமூக மூலதனங்களை—உதாரணமாக, வீரியமிக்க சமுதாயத்தை ஆக்கவல்ல வீடுகள், பள்ளிகள், இன்னும் மற்றத் தொட்டறிய இயலாத சொத்துகள்போன்றவை—விரயம் செய்யாமல் ஆக்கமாகப் பயன்படுத்த முடிவது ஒரு நன்மையாகும். தொழிலிடச் செறிவை உண்டுபண்ணுவதில் தீமைகளும் உண்டு. சில தொழில்களில் தொழிலிடச் செறிவை உண்டுபண்ணுவதில் சில வரையறைகள் உண்டு. உற்பத்திச் செலவை மிக அதிகமான அளவிற்குச் சில சமயங்களில் தொழிற் செறிவு ஏற்படுத்திவிடும். பன்னாட்டுத் தொழிற் பெயர்ச்சியில் பிரிட்டனுக்கேற்பட்ட சமீபத்திய அனுபவம், அத்தகையதொரு பெயர்ச்சிக்கு வீடுகள், சமூகநலப் பணிகள் (welfare services) முதலியன தேவையென்பதையும், பரந்த இணக்க மனப்பான்மையும் (social tolerence) ஒத்த மனப்பான்மையும் இன்றியமையாதனவென்பதையும் எடுத்துக்காட்டியது.

பிரிட்டனைப்போன்ற நாடுகளில், தொழில்துறையில், ஏழை பணக்காரர் என்ற பாகுபாடின்றி சமூகத்தின் எல்லாப் பிரிவினருக்கும் அளிக்கப்பட்டுள்ள புதிய கல்வி வாய்ப்புகளால் திட்டவட்டமான முன்னேற்றம் ஏற்பட்டே உள்ளது. பிரிட்டனில் கல்வி வாய்ப்பில் பூரணமான சமத்துவம் நிலவுகிறது என்று கூறுவது சற்று மிகைப்படுத்தியே கூறுவதாகுமெனினும், சென்ற தலைமுறையைவிடத் தற்போது ஏழை மக்களின் குழந்தைகளுக்கு அதிகமான கல்வி வாய்ப்புகள் இருக்கின்ற காரணத்தால், அவர்கள் பயிற்சி பெற்றுத் திறமைமிக்க தொழில்களிலும் ((skilled trades) வேலை

களிலும் நுழைவதற்கு வழி ஏற்பட்டுள்ளது. ஆயினும், தொழிற் சங்கங்களாலும் (trade unions), வாழ்க்கைத்தொழிற் சங்கங்களாலும் (professional associations) விதிக்கப்பட்டுள்ள தடைகளால் தொழில்களில் தடையற்ற நுழைவு (free entry) தடுக்கப்படுகிறது. சமூகத்தில் ஒரு பிரிவிலிருந்து மற்றொரு பிரிவுக்குப் பெயர்ந்து செல்லுவதும் இன்னும் கடினமானதொன்றாகவே இருக்கிறது. இத்தகைய காரணிகளின் சக்தி நாளுக்கு நாள் குறைந்து கொண்டுதான் வருகிறது; இன்னும் ஓரிரு தலைமுறைகளில் இத்தகைய காரணிகள் சற்றும் முக்கியமற்றவைகளாகப் போகக்கூடும்.

## மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles* (Staples Press, London, 1958), Vol. II., Ch. X.

E. Hubback, *The Population of Britain* (Penguin Books, London, 1947), Parts I and III.

J. Bowen, *Population* (Cambridge University Press, London, 1954), Chs. III—VI, IX—X.

*Report of the Royal Commission on Population* (Cmd. 7695, H.M.S.O., London, 1949).

P. Sargant Florence, *Labour* (Hutchinson, London, 1949), Chs. I—II.

# 6. நிலம் (Land)

## 1. நிலத்தின் அளிப்பு (The Supply of Land)

பொருளாதாரத்தில் நிலம் என்னும் சொல் சாதாரண வழக்கில் அது உணர்த்துகின்ற பொருளைக் காட்டிலும் சிறப்பானதொரு பொருளை உணர்த்தும். நிலம், உலகத்தின் மேற்பரப்பு என்னும் கருத்தில், உணவுப் பொருள்கள் உற்பத்திக்கும் கச்சாப் பொருள்கள் உற்பத்திக்கும் இன்றியமையாததொன்றாக இருக்கிறது. இவைகளை உற்பத்தி செய்யும் முயற்சியில் நிலத்தின் பங்கு ஒரு நிலப்பகுதிக்கும் மற்றொரு நிலப்பகுதிக்கும் வேறுபடுகின்றது. பல்வேறு நிலப்பகுதிகளின் பொருளாதார வாழ்வின் அமைப்புகளுக்கு இதன் விளைவுகளே பெரிதும் காரணமாக இருக்கின்றன.

நிலத்தின் மேற்பரப்பின் தன்மை, வகை ஆகியவற்றில் உள்ள மூலமுதற் பொருள்களும் (elements) முக்கியம் வாய்ந்தவையே. நிலத்தின் அமைப்புச் சூழ்நிலைகள் (physical environments) பொருளாதார நடவடிக்கைகளுக்கு ஏற்றனவாக இருப்பதிலும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியின் தட்பவெப்ப நிலைகள் (climatic condition) விவசாயப் பொருள்களின் உற்பத்திக்கு அல்லது தொழிற் சாதனைகளுக்கு ஏற்றவையாக இல்லாமலிருக்கலாம்; ஆனால், அவை பயணிகளின் கருத்தைக் கவரத்தக்க இடங்களாகப் பெரும் பயனைத் தரவல்லனவாக இருக்கக்கூடும். மேலும், நிலத்தின் இடம் (position) நல்லதாயோ அல்லது கெட்டதாயோ இருக்கக்கூடும்; எப்படியெனில், நிலமானது வாணிப இடங்களுக்கு (trading areas) அல்லது பன்னாட்டுக் கப்பல் மார்க்கங்களுக்கு (international shipping routes) அல்லது பெரும் அங்காடிகளுக்கு (major markets) செல்லத்தக்கதாக இருக்கலாம், அல்லது அவைகளுக்கு மிக அப்பாற்பட்டு அவைகளிடம் செல்லமுடியாத படியும் இருக்கலாம். நிலத்தின் மேற்பரப்புத் தன்மை (superficial nature) மிகவும் முக்கியமானதாகும். மலைநாட்டை விருத்திசெய்ய வேண்டுமாயின், அது கடினமானதாகவும் பணச்செலவு மிக்கதாகவு

மிருக்கும். சமவெளிப் பிரதேசமாக இருப்பின் அதில் போக்குவரத்துச் சாதனங்களை எளிதில் அமைக்கக்கூடுமாதலால், அதனை விருத்தி செய்தலில் அத்துணைப் பணச்செலவும் கடினமும் ஏற்படா.

இவ்வாறு சம்பந்தப்பட்டுள்ள காரணிகளுள் மூன்றாவதாக உள்ள காரணி, நிலமானது அதன் அடிப்பாகத்தில் எதனைப் பெற்றுள்ளது என்பதாகும். உலகம் முழுமையும் பரவியுள்ள கனிப்பொருட் செல்வங்கள் (mineral wealth) பொருளாதார வளர்ச்சிக்கு மிக முக்கியமான பங்கை நல்கியிருக்கின்றன—தொடர்ந்தும் அவை நல்கிக்கொண்டேயிருக்கும். இதில் நிலம் அத்துணை அளவு கனிப்பொருட் செல்வத்தைப் பெற்றிருக்கின்றது என்பதுகூட அவ்வளவு முக்கியமன்று; அது பெற்றுள்ள கனிப்பொருட் செல்வத்தை எத்துணை எளிதாக எடுக்கமுடியுமென்பதே முக்கியமாகும். பிரிட்டனில் தற்போது நிலக்கரிச் சுரங்கங்கள் வறண்டுவருகின்றன. வறண்டுவருகின்றனவென்பதால் பூமிக்குள்ளிருக்கும் நிலக்கரி அனைத்தும் தோண்டி எடுக்கப்பட்டுவிட்டதென்று பொருளன்று; எச்சமாக உள்ள நிலக்கரிச் சுரங்கங்கள் மனிதர்கள் அடையமுடியாதபடி (inaccessible) இருக்கின்றனவென்றோ அல்லது அங்குள்ள நிலக்கரி அதனைத் தோண்டி எடுக்கும் செலவுக்குக்கூடக் கட்டாத அளவிற்கு மிகக் குறைவாக இருக்கிறதென்றோ பொருள். இந்தத் தலைப்பில் நிலத்தின் பல்வேறு பகுதிகளின் ‘சக்தி’ (power) அளிக்கும் தன்மையையும் கூறலாம். மலைப்பகுதிகள் மற்ற வழிகளில் மதிப்பில் குறையுடையனவேயெனினும், சக்தி அளிக்கும் வகையில் மிகவும் மதிப்புயர்ந்தனவாகவே இருக்கின்றன. பொருளாதார விற்பன்னரைப் பொறுத்தவரை, கடலையும் நிலமாகவே அவர் கருதுவார். இது முரண்பாடாகத் தோன்றினும், கடலின் விளைபொருள்களை நோக்கும்போது, அவ்வாறு கருதுவது சரியென்றே படுகின்றது. கடல், மீன்களைத் (அல்லது இன்னும் பிறபொருள்களையும்) தருகின்றது. எனவே, கடலிலிருந்து மீன்களை வெளிக்கொணர்தல் (extraction) விவசாயம் அல்லது கனிப்பொருள்களைச் சுரங்கங்களினின்று வெட்டி எடுத்தல் போன்றதொரு பொருளாதார நடவடிக்கையின் தன்மைக்கு நிகரானதாகவே இருக்கின்றதல்லவா?

பொருளாதார நோக்கில் நிலத்தின் தன்மைகளையெல்லாம் மனத்தில் கொண்டு பார்க்கும்போது, ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியின் இயற்கையான (natural) அல்லது உள்ளார்ந்த (inherent) தன்மைகளையும், மனித சாதனங்களைக்கொண்டு அதன்மீது உண்டு பண்ணப்பட்ட தன்மைகளையும் நடைமுறையில் வேறுபடுத்திக் கூறுவது இயலாததென்பது நன்கு விளங்கும். ஒரு வயலானது

மற்றொரு வயலைக் காட்டிலும் வளமை மிக்கதாக இருக்கிறதென்று கூறுவது, அது இயற்கையில் வளமையானதென்று பொருளன்று; அது நன்ருகத் திருத்தப்பட்டு நீர் பாய்ச்சப்படுகிறதென்பதோ அல்லது அதன் மீது நிறைய உரம் (fertiliser) தூவப்பட்டதென்பதோ தான் பொருள். இவ்வாறு நிலத்தின் விளைவிற்கு ஒன்றுக்கொன்று துணையாகவுள்ள (contributory) காரணிகள்—இயற்கையான மூல முதற்பொருளும் (natural element), சேர்க்கப்பட்ட முதற்பொருளும் (added element)—ஒன்றுக்கொன்று பிரிக்க முடியாத அளவிற்கு ஒன்றிக் காணப்படுவதால், இந்த விளைபொருள் இயற்கையான மூல முதற்பொருளால் உற்பத்தி செய்யப்பட்டது, இது சேர்க்கப்பட்ட முதற்பொருள் உண்டுபண்ணியது என்று வேறுபடுத்திக் கூறுதல் இயலாததாக இருக்கிறது.

இருப்பினும், கோட்பாட்டளவில் இவ்விருவகைப்பட்ட கருத்துகளையும் வேறுபடுத்திக் கூறுவது எளிதேயாகும். பொருளாதார ஆய்வில் (economic analysis) இவ்வாறு வேறுபடுத்திக் கூறுவது முக்கியமானதாகும். ஏனெனில், நிலத்தின் மேற்கூறிய முதல் வகையான தன்மையானது—அதாவது, இயற்கையானவும் உள்ளார்ந்தனவுமான பண்புகள் நிலத்திலிருந்தே தோன்றுகின்றன. அதனுடன் சேர்க்கப்படுகின்ற பண்புகள் உழைப்பு (labour) அல்லது முதல் (capital) இவைகளினின்றும் தோன்றுவதால், இப் பண்புகளை அக் காரணிகள் விளைவிக்கும் பொருள்களாகக் கருதுதல் வேண்டும். இத்தகையதொரு வேறுபாட்டினைத் தெளிவாக்கிய பின்னர், நிலம் ஒரு பொருளாதாரக் காரணி (economic factor) என்ற வகையில் அதன் தன்மைகளை ஆராய்வோம். பொருளாதார ஆய்வில், நிலம் ஒரு தனிப்பட்ட காரணியாகக் கருதப்பட்டு ஆராயப் படவேண்டுமென்பதற்கு அதனிடம் இரண்டு தனித்தன்மையான தன்மைகள் இருப்பதே காரணமாக இருக்கிறது.

இவற்றில் முதலாவதாக உள்ள தன்மையானது, மற்ற மூன்று காரணிகளைப்போலல்லாது, நிலத்தின் அளிப்பு மாருமல் நிலையான தாக (fixed in supply) இருப்பதே. ஒவ்வோர் ஆண்டிலும் நிலத்தின் ஒரு சிறு பகுதி கடலினின்றும் மீட்கப்படக்கூடும்; அல்லது கடல் அரிப்பினுல் ஒரு சிறு பகுதி இழக்கப்படவும் நேரிடும். ஆனுல், இதன் வழியில் நிகரமாக ஏற்படும் மாறுதல் (change) மிகச் சொற்பமாக இருத்தலின், இதனை ஒரு பொருட்டாகக் கருதாமல் விட்டுவிடலாம். மேலும், மனித இனத்திற்குக் கிடைத்துள்ள நிலத்தின் பரப்பு, அளவில் மாருமல் நிலையானதாக இருக்கிறது. பயன்படுத்தப்படும் நிலத்தின் பரப்பு வேண்டுமானுல் அவ்வப்போது அளவில் மாறுதல் அடையக்கூடும். நிலத்தின் பயன்படு அளவு

(effective amount)—அதாவது, நிலத்தின் உற்பத்தித்திறனைப் பொறுத்து இது கணிக்கப்படுகிறது—நிலத்தின் வளம் விவேகமற்ற பயிரிடு முறையினால் தீர்ந்துபோதல், (அல்லது) தொழிலியல் வளர்ச்சிமூலமாக வளம் அதிகரிக்கப்படுதல் ஆகியவற்றின் காரண மாக மாறக்கூடும். உதாரணமாக, 1920ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளிலும் 1930ஆம் ஆண்டை அடுத்த பத்தாண்டுகளிலும் ஐக்கிய அமெரிக்காவிலுள்ள டென்னசி பள்ளத்தாக்கிலுள்ள பரந்த நிலப்பரப்பு திறமையற்ற பயிரிடு முறையினாலும் கடலரிப்பி னாலும் (erosion) ஒரு மணல்நிடலாக (dust-bowl) மாறியது. பின்னர், அறிவியல் விவசாய முறையினாலும் (scientific culture), நீர்ப்பாசனத்தாலும், காடு வளர்ப்பினாலும் (afforestation) மிக உயர்ந்த வளமை அந் நிலப்பரப்பிற்கு மீண்டும் கொண்டுவரப் பட்டது. ஆனால், மனிதர்களின் செயலுக்கப்பாற்பட்ட நிலத்தின் பண்புகளை—அதாவது, நிலத்தின் இடம் (position), தட்பவெப்ப நிலை (climate), இன்னும் மற்ற உட்கிடையான தன்மைகள் (innate qualities) ஆகியவற்றை—மனித இனத்தால் அழிக்கவோ அல்லது அதிகரிக்கவோ இயலாதாகையால், அவைகளின் அளிப்பு மாருமல் நிலையானதாகவே இருக்கிறது. இந்தப் பண்பு உள்ளதன் காரண மாகவே, அடுத்த உட்பிரிவில் ஆராயப்பட்டுள்ள குறைந்துசெல் பயன்பாட்டு விதியானது (the law of diminishing returns) முதலில் நிலத்தைச் சான்ருக வைத்தே ஆராயப்பட்டுள்ளது.

நிலத்தின் இரண்டாவது தனித்தன்மையான பண்பானது அதற்கு உற்பத்திச் செலவின்மை என்பதாம். இந்தப் பண்பை மற்றக் காரணிகள் பெற்றிருக்கவில்லை. உழைப்பை உண்டுபண்ணு வதற்குச் சில குறிப்பிட்ட செலவுகளை மேற்கொள்ளவேண்டும்—அதாவது, மக்களைப் பேணுதல் (rearing), கல்வி கற்பித்தல் (educating), பயிற்சி அளித்தல் (training) ஆகிய செலவுகளை மேற் கொள்ள வேண்டும். முதலும் (capital) தொழில்துணிவும் (enterprise) ஆகிய இவ்விரண்டிற்குங்கூட மற்றக் காரணிகளை ஒன்று திரட்டவேண்டுமாயின், உற்பத்திச் செலவு உண்டு. நிலத்தைப் பொறுத்தவரையில், சமூகத்திற்கு ஒரு செலவுமில்லை. ஒரு வரையறுக்கப்பட்ட அளவு நிலமானது மனித சமுதாயத்திற்கு ஆண்டவனால் கொடுக்கப்பட்டுள்ளது. நிலத்தினைக் கொணர யாரும் செல்வத்தையோ அல்லது முயற்சியையோ செலவிடத் தேவையில்லை. ஆனால், ஒரு நபர் மற்றொருவருடைய நிலத்தைப் பயிரிட வேண்டுமாயின், நிச்சயமாக அதற்குப் பணம் கொடுக்க வேண்டும். அவருக்கு அது செலவு (cost) ஆகின்றது. ஆனால், இத்தகையதொரு செலவு மனிதர்களுக்குள்ளேயே பரிமாறப்பட்டுக் கொள்வதொன்ருகவே இருக்கிறதேயொழிய, சமூகம் முழுமைக்கும்

பார்க்கும்போது அதற்கு ஒரு செலவும் ஏற்படுவதில்லையென்பது தெளிவாகின்றது. (இவை யாவும் நிலத்தின் உட்கிடையான பண்புகளைத் தழுவியன வாகும்; மனித உழைப்பினால் நிலத்தோடு சேர்க்கப் படுகின்ற பண்புகளுக்கு உற்பத்திச் செலவு இருக்கவே செய்கின்றது.) இதனால், நிலம் எவ்வளவுதான் குறைவான விளைவைத் தந்த போதிலும், நிலத்தினைப் பயன்படுத்துதல் எப்போதும் இலாபந் தர வல்லதாக இருக்குமென்றுகிறது; ஏனெனில், சமூகத்திற்கு அதனுடைய செலவு சுன்னமாக (zero) இருக்கிறது. செலவைக் காட்டிலும் விளைவு அதிகமானால் இலாபமாகும். சமூகத்திற்கு செலவு ஒன்றுமில்லாதபோது நிலத்திலிருந்து விளைவு கிடைப்பது சமூக இலாபமாகும். இவ்வாறு அளிப்பில் மாறாத தன்மை (fixity of supply)—இந்தக் கருத்துப் பின்னர் மற்றக் காரணிகளுக்கும் சுமத்தப் பட்டது—வாரம் (rent) என்பது ஓர் உபரி (surplus) என்னும் கருத்திற்கு வழிகோலியது.

## 2. குறைந்துசெல் பயன்பாட்டுவிதி (The Law of Diminishing Utility)

ஒரு குடியானவன் தான் பயிரிடுவதற்கு எத்துணை அளவு நிலத்தை எந்த இடத்தில் பயிரிடுவான் எனில்—நிலம் இலவசமாகக் கிடைக்கிறது என்னும் கருத்தில்—தனது உழைப்பையும் முதலையும் எந்த எல்லையில் பயன்படுத்தினால் தனக்கு மிக அதிகமான சராசரி விளைவு கிடைக்குமோ அந்த எல்லையில் பயிரிடுவான். வரலாற்று வாயிலாகவும், கவனித்தல் முறையாலும், சோதனை முறையாலும் மேற்கூறிய கூற்று உண்மை என்று முடிவு செய்யப்பட்டுள்ளது. அக் குடியானவன் அதே நிலப்பரப்பில் அதிகமான உழைப்பை அல்லது அதிகமான மூலதனத்தை அல்லது அவ்விரண்டையுமே செலுத்தினால், உழைப்பின் அலகு ஒன்றிற்கு அல்லது முதலின் அலகு ஒன்றிற்குச் சராசரி உற்பத்தி (average output) உடனடியாகவோ அல்லது காலந்தாழ்ந்தோ குறைய ஆரம்பிக்கும். அவனுடைய மொத்த உற்பத்தி (total output) அதிகரிக்கும்; ஆனால், மற்றக் காரணிகளைப் பயன்படுத்தும் அளவிற்கு ஏற்றாற்போல அதே விகிதத்தில் அவ்வதிகரிப்பு இருக்காது.

குறைந்துசெல் பயன்பாட்டு விதியானது (law of diminishing returns) பல பொருளாதாரக் கருத்துகள் விளக்கப்படுவதுபோல், ஓர் எளிதான விளக்கப்படத்தின்மூலம் நன்கு விளக்கப்படுகிறது. உதாரணமாக, ஒரு குடியானவன் ஒற்றைப் பயிரான கோதுமையைப் பரப்பில் மாறாமல் நிலையாக உள்ளதும், ஏக்கர் அளவில் கூறப்படு கின்றதுமானதொரு நிலத்தில் பயிரிடுகிறானெனக் கொள்வோம். விளக்கப்படத்தில் (படம் 18) கொடுக்கப்பட்டுள்ள ஏக்கர் பரப்பளவுள்ள நிலத்தில், உழைப்பை அளிக்கும் மனிதர்களின் எண்ணிக்கை

படுகிடை அச்சில் (horizontal axis) காட்டப்பட்டுள்ளது ; செங்குத்து அச்சில் (vertical axis) ஒரு மனிதனுடைய சராசரி உற்பத்தி (மொத்த உற்பத்தியை, வேலைக்கு அமர்த்தப்பட்ட மக்களின் எண்ணிக்கையால் வகுத்துப் பெற்ற எண்ணிக்கை) காட்டப்பட்டுள்ளது.

குடியானவன் தனது சொந்த உழைப்பைமட்டுமே நிலத்திற்கு அளிக்கிறுன் என்று வைத்துக்கொண்டால், அவனுக்கு 30 அந்தர் ($A_1$) உற்பத்தி கிடைக்கும். ஆனல், அவன் தான் பயிரிடும் நிலப்




படம் 18

பரப்பு தனியொருவன் திறமையாகப் பயிரிடுவதற்கு அதிகமானதாக இருக்கிறதென்று கருதித் தன்னுடன்கூட இன்னெருவனை வேலைக்கமர்த்திக்கொண்டு பயிரிடுகிறுன் என்ருல், மொத்த உற்பத்தி 80 அந்தராகும்; அதாவது, ஒவ்வொருவருடைய சராசரி உற்பத்தி 40 அந்தராக ($A_2$) இருக்கும். சராசரி உற்பத்தி உயர்ந்துள்ளது ; எனவே, பயிரிடப்படுன்ற நிலத்தின் பரப்பளவும், ஏற்ருற்போல வேலைக்கமர்த்தப்படும் உழைப்பாளிகளின் எண்ணிக்கையும் ஒரே விகிதத்தில் இருக்கின்றன. தற்போது, அவர் மேலும் அதிகமான உழைப்பின் அலகுகளை வேலைக்கமர்த்திக்கொள்கிருரெனில், குறைந்துசெல் பயன்பாட்டு விளைவு விதி செயற்பட ஆரம்பிக்கும். தற்போது அவர் இன்னுமொரு மனிதனை வேலைக்கமர்த்திக் கொள்கிருரெனில், மொத்த உற்பத்தி அதிகரிக்கும் (உதாரணமாக, 105 அந்தர்) ; ஆனல், இவ்வதிகரிப்பு உழைப்புச் சக்தியின் (labour force) அதிகரிப்பிற்கு ஏற்ருற்போல அதே அளவில் அதிகரிப்பதில்லை ; எனவே, சராசரி உற்பத்தி (average output) 35 அந்தராகக் குறையும் ($A_3$). உழைப்பின் அளவு அதிகரிக்க அதிகரிக்க உழைப்பினது ஒவ்வோர் அலகினுடைய விளைவும் (the returns per unit of labour) தொடர்ந்து குறைந்துகொண்டேவரும்.

நிலத்தின் அளிப்பானது மாருமல் ஒரே அளவாக இருக்கின்ற காரணத்தால், விவசாய உற்பத்தியின் இந்தத் தத்துவம் பத்தொன் பதாம் நூற்ருண்டுப் பொருளாதார விற்பன்னர்களால் மிகவும் முக்கியம் வாய்ந்ததாகக் கருதப்பட்டது. மக்கள்தொகை அதிகரிக்கு மாஞல் அதற்கு வேண்டிய கூடுதலான உணவு அளிப்பை, மேற்கொண்டு கூடுதலான அலகுகள் உழைப்பையும் முதலேயும் நிலேயான அளவுள்ள நிலத்தின் அளிப்பில் பயன்படுத்தி (குறைந்து செல் விளேவு விதியின்கீழ்தான்) உற்பத்தி செய்யக்கூடும் என்பது —அதாவது, மக்கள் ஒவ்வொருவருக்கும் குறைவான அளவு உணவு உற்பத்தி செய்யக்கூடுமென்பது—இதில் அடங்கியுள்ளது. இந்த விதி நிலத்தின் மற்றப் பயன்களுக்கும் கையாளப்பட்டது. உதாரணமாக, சுரங்கங்களில் மேலும்மேலும் உழைப்பையும் முதலே யும் அதிகமாகச் செலுத்தச் செலுத்த அவைகளின் சராசரி உற்பத்தி—அச் சுரங்கங்களில் உள்ள கனிப்பொருள்கள் முற்றிலும் தோண்டி எடுக்கப்பட்டுவிடுவதாலோ அல்லது சுரங்கங்களே மிக ஆழமாகத் தோண்டிக்கொண்டே செல்லவேண்டியதாக இருப்ப தாலோ—குறைந்துகொண்டே செல்கின்றது. கனிப்பொருட் சுரங்கங்களின் வளத்தை, நிலங்களின் வளத்தைக் கவனமாகப் பயிரிடுவதன்மூலம் காப்பதுபோல், காலவரையறையின்றிப் பாது காத்தல் இயலாது. கட்டடத்திற்கான நிலமும் (building land) குறைந்துசெல் விளேவு விதிக்குட்பட்டே இருக்கிறது. அந் நிலத்தில் ஒரு குறிப்பிட்ட அளவிற்குமேல் தொழிலும் முற்றும் அதிகமாக செலுத்தப்படுமாஞல், மனேகளில் அதிகக் கூட்டமும் இடநெருக்கடி யும் ஏற்படும்; கூடுதலாகக் கட்டப்படும் ஒவ்வொரு கட்டடமும் இருக்கின்ற கட்டடங்களின் சராசரி மதிப்பைக் குறையச் செய்யும்.

பொருளாதார நடவடிக்கையைப்பற்றியதொரு பொதுமை (generalisation) என்ற வகையில் இந்த விதி யாதோர் ஐயமுமின்றிச் செல்லுபடியாகத்தக்கதாகவே இருக்கிறது. எனினும், விதி சம்பந்த மான சில முக்கியக் கருத்துகளே இங்குக் கூர்ந்து கவனித்தல் நலம். முதலாவதாக விதியை அமைத்த பத்தொன்பதாம் நூற்ருண்டு ஆசிரியர்கள், வெளிப்படையாகவோ அல்லது உட்கிடையாகவோ, மாருமல் நிலேயான அளவு உள்ள நிலப்பரப்பில் கூடுதலான காரணி கள் செலுத்தப்படும்போது, தொழில்நுணுக்க அறிவில் மாற்றம் எதுவும் இல்லாமலிருந்தது என்னும் எடுகோளேக் (assumption) கருத்தில் கொண்டிருந்தனர். இல்லாவிடில், உற்பத்தியின் அளவு பெருகியபோது ஒரு மனிதனின் சராசரி உற்பத்தியும் அதிகரித்திருக்கும். உதாரணமாக, முன்னர் மூன்று மனிதர்கள் வேலே செய்த அதே நிலத்தில் தற்போது ஆறு மனிதர்கள் வேலே செய்கிருர்களென்ருல், உற்பத்தியில் அதே முறைகள் கையாளப்

பட்டால், சராசரி உற்பத்தி குறையும். ஆனால், அதே நேரத்தில் புதிய தொழிலியல் முறைகள் அல்லது பொறிகள் கையாளப்படும் போது, இந்த ஆறு மனிதர்களும் ஏற்கெனவே வேலைசெய்துவந்த மூன்று மனிதர்களைக் காட்டிலும் அதிகமான சராசரி உற்பத்தியைப் பெறுவர். புதிய உற்பத்தி முறைகளால், விளக்கப் படத்தில் காட்டப் பட்டுள்ள உற்பத்திக் கோடு மேல்நோக்கி இடம்பெயர்ந்து (அத னுடைய வடிவம் மாற்றமடையாமல் அப்படியே இருப்பினும்) செல்லும். வரலாற்றிலும் இப்படித்தான் நிகழ்ந்துள்ளது. வளரு கின்ற மக்கள்தொகையானது, பட்டினியில் கொண்டுபோய் நிறுத்தும் என்னும் இருளடைந்த முன்னறிவிப்புகள் செயலிழந் திருக்கின்றன. தொழில்நுணுக்க வளர்ச்சி (technical development) குறைந்துசெல் விளைவு விதியின் விளைவுகளைச் சரிக்கட்டு வதற்கும் மேலாகச் செயலாற்றிவந்திருக்கிறது; விவசாயத்தில் சராசரி உற்பத்தி குறைவதற்குப் பதிலாக அதிகரித்தே வந்திருக் கிறது.

இரண்டாவதாக, விதி அமைக்கப்பட்டபோது, மாறாக் காரணி யின்மீது (fixed factor) செலுத்தப்படும் மாறும் காரணிகளின் (variable factors) அலகுகளின் தன்மைகளில் (quality) மாற்றம் எதுவும் இல்லை என்பதும், மாறாக் காரணியானது மாறும் காரணி களின் பல்வேறு அளவுகளின்மீது பரவியிருக்கவல்லது என்பது மான எடுகோள் கொள்ளப்பட்டது. மாறும் காரணிகளின் தன்மை நிலையானதாக இல்லாதிருக்குமானாலோ, அல்லது மாறாக் காரணியின் தன்மை மற்றக் காரணிகளின் ஒருகுறிப்பிட்ட அளவோடு கலந்து பயன்படுத்தப்பட இயலுமென்றாலோ, இவ் விதி செயலிழந்து போகக்கூடும்.

இவ் விதியைப்பற்றிக் கடைசியாகக் கவனிக்கவேண்டிய கருத்து ஒன்றுண்டு. அதாவது, இவ் விதி, நிலம் என்னும் காரணியுடன் (the factor of land) மட்டுமே தனித்தன்மைவாய்ந்ததொரு முறையில் சம்பந்தப்பட்டிருக்கவில்லை; மற்றக் காரணிகளிலும் இது செயற்படக் கூடும், செயற்படுகிறதென்பதாம். பத்தொன்பதாம் நூற்றாண்டு எழுத்தாளர்கள் இவ் விதியை நிலத்தோடு தொடர்புகொண்ட தொன்றாக அமைத்ததற்குக் காரணம், நிலத்தின் அளிப்பு மாறாமல் நிலையாக உள்ளதென்பதும், எனவே, அதுவே மற்றக் காரணிகளின் மாறுகின்ற கணியங்களை (varying quantities) அதன்மீது செலுத்தப் படத்தக்க மாறாக் காரணியாக உள்ளதென்பதுமான கருத்தை அவர்கள் கொண்டிருந்தமையே. சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில், மற்றக் காரணிகளும் அளிப்பில் மாறாமல் நிலையானவைகளாகக் குறைந்தபட்சம் ஒரு குறிப்பிட்ட கால அளவிற்காவது இருக்கக்

கூடும். அவ்வாறு ஏதாவதொரு காரணி, மற்றக் காரணிகளின் அதிகரித்த அளவுகளுடன் சேர்க்கப்பட்டுப் பயன்படுத்தப்படுமானல், அப்போது குறைந்துசெல் விளைவு விதியின் விளைவை அங்குக் காணலாம். ஒரு விவசாயி சரிசமமான அளவு நிலம், உழைப்பு ஆகியவற்ருேடு பயிர்த்தொழிலை ஆரம்பிக்கிருனென்று வைத்துக் கொள்வோம். அவன் தன்னிடமுள்ள மாருது நிலையாக உள்ள உழைப்பைப் புதிதாக நிலத்தை இணைத்து இணைத்து அதிகமான அளவு நிலத்தோடு பரவலாக்குகிருனெனக் கொள்வோம். அப்போது, சாதனங்களின் ஒவ்வோர் அலகின் சராசரி உற்பத்தி, நிலையான எல்லையையுடைய நிலத்தின்மீது உழைப்பின் அதிகமான அளவுகள் செலுத்தப்படுவதற்கு இணையாகக் குறைந்துகொண்டே செல்லும். எனவே, குறைந்துசெல் விளைவு விதிக்குக் காரணமாக இருப்பது நிலமன்று;காரணியின் அளிப்பு (factor of supply)மாருமல் நிலையான தாக (fixity) இருப்பதே காரணமாக இருக்கிறது. நீண்ட காலத்தில் நிலம்மட்டுமே அளிப்பில் முற்றிலும் மாருமல் நிலையானதாக உள்ளது. ஆனல், குறுங்காலத்தில்—அதாவது, தாற்காலிகச் சூழ்நிலைகளில்—மற்றக் காரணிகளுங்கூட மாருமல் நிலையானவை களாக இருக்கின்ற காரணத்தால், அவைகளும் குறைந்துசெல் விளைவு விதிக்கு இடமளிப்பனவாக உள்ளன. இக் கூற்று மிகவும் தெளிவாகவே உள்ளது; இது, ஒரு வானூர்தியில் (aircraft) ஒரு வானூர்தி ஓட்டிக்குப் (piolet) பதிலாக இரு வானூர்தி ஓட்டிகள் இருப்பார்களேயானல், ஒரு வானூர்தி ஓட்டி இருந்ததைக் காட்டிலும் அது இருமடங்கு வேகமாகப் பறந்துவிடவோ அல்லது இரு மடங்கு பயணிகளை ஏற்றிச்செல்லவோ முடியாதென்பதனை விளக்கு வதுபோன்று தெளிவாக உள்ளது. இவ் விதியைப் பொதுவாகக் கையாண்டு, எல்லா உற்பத்தி நடவடிக்கையிலும் உற்பத்திக் காரணி களின் உத்தமமான சேர்க்கை (optimum combination) ஒன்று உண்டென்பதும், இதன் விளைவாகப் பயன்படுத்தப்பட்டுள்ள சாதனங் களின் ஓர் அலகின் சராசரி உற்பத்தி உச்சமாக (maximum average output per unit) இருக்குமென்பதும் தெளிவாகிறது. மாருமல் நிலையாகவுள்ளதொரு கணியத்தைக்கொண்ட ஒரு காரணியில் மற்றக் காரணிகளின் கூடுதலான அளவுகள் செலுத்தப்படும்போது, மொத்த உற்பத்தி அதிகரிக்கும்; ஆனல், இந்த அதிகரிப்பானது மாறும் காரணிகளின் அளவுகளின் விகிதத்திற்குக் குறைவான விகிதத்தில் தான் அதிகரிக்கும்.

### 3. மனைகளும் தொழில் இட அமைப்பும் (Sites and Industrial Location)

நிலத்தின் முக்கியத் தன்மைகளில் ஒன்று (அதனுடைய வளமை யைத் தவிர்த்து) அதனுடைய நிலவாரி நிலையாகும் (geographical

position). இதன் காரணமாகத்தான், ஒரு துண்டு நிலம் அதனுடைய விளைபொருள் உற்பத்தித் திறனுக்கும் மேம்பட்ட மதிப்பையுடைய தாக இருக்கின்றது. லண்டனின் மேற்குக் கோடியிலுள்ள ஓர் ஏக்கர் நிலமானது, பயிரிடப்படுகின்ற பலநூறு ஏக்கர் நிலங்களுக்கும் மேலான மதிப்புடையதாக இருக்கிறது. இதற்குக் காரணம் என்ன வெனில், சில நோக்கங்களுக்காக பிக்காடில்லியிலுள்ள (Piccadilly) ஓர் ஏக்கர் வளமற்ற நிலமானது கம்பர்லாந்திலுள்ள (Cumberland) பதினாயிரம் ஏக்கர் நல்ல நிலங்களுக்குச் சமமான மதிப்பையுடையதாக இருப்பதேயாகும்.

இந்த வகையில், மனைகளின் மதிப்பு (site values), நிலத்தி னுடைய, அதனுடைய தேவையின் தகுதிக்கேற்ற சாதகமான இடவமைப்பைப் பொறுத்தே உளது. குடியிருப்புக் கட்டடங்களுக் கான (residential buildings) நோக்கத்திற்காக இருப்பின், அவை களின் மதிப்பு நிலத்தின் பிற மனைகளினின்றும், ஒப்பீடானதொரு தனித்துக் காணப்படுகிற தன்மையினின்றும் தோன்றுவதாக உள்ளது. யாவற்றிலும் முக்கியமானதொன்று, உற்பத்திக்குப் பயன்படும் பல்வேறு மனைகள் பலதிறப்பட்ட மதிப்பையுடையனவாக இருப்பதாகும். எனவே, ஒரு தொழில் மனையின் (industrial site) மதிப்பிற்குக் காரணமான பலவிதக் காரணிகளையும் ஆராய்வது நலம். குறிப்பிட்டதொரு துண்டு நிலமானது ஏன் அதிக விலையுள்ளதாக இருக்கிறது? அதே சமயத்தில் அதற்குச் சமமான அல்லது அதிகமான விவசாய மதிப்புடைய துண்டு நிலம் விலை குறைவாக இருப்பானேன்? இதை வேறு வகையில் கூறப்போனால், ஓர் இடத்தில் தொழிலுக்கான உற்பத்திச் செலவுகள் மற்ற இடத்தை விடக் குறைவாக இருப்பதற்குக் காரணம் என்ன என்னும் கேள்வியை எழுப்பலாம்.

ஒரு தொழிலைக் குறிப்பிட்ட இடங்களில் தொன்றுதொட்டு அமையும்படி செய்த மிக முக்கியக் காரணிகள், சக்தியின் அளிப்புகளும் (power supplies) கச்சாப் பொருள்களுமே (raw materials). சான்றாக, பிரிட்டனின் மிகப் பழமையான தொழில்களில் ஒன்றாகிய கம்பளித் தொழிலை எடுத்துக்கொள்வோம். ஆரம்பத்தில் இத் தொழில் நீர்ச் சக்தியை (water power) நம்பியே இருந்தது (அதாவது, நீராவி இயந்திரம் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்னர்). இதன் காரணமாக இத்தொழில், வேகமான ஓட்டமுடைய ஓடைகள் நிறைந்த மலைப்பகுதிகளில்தான் (வெஸ்ட்ரைடிங்—West Riding—போன்ற பகுதிகளில்) செய்துவரப்பட்டது. இதைப்போன்றே, நீராவிச் சக்தியானது பெரிதும் பயன்படுத்தப்பட்டபோது, செய் பொருள்களை உற்பத்தி செய்கின்ற தொழில்கள் (manufacturing

industry), நிலக்கரி அதிகமாகக் கிடைக்கும் பகுதிகளான இங்கிலாந்தின் வடக்குப் பகுதி (North of England), தெற்கு வேல்ஸ் (South Wales) ஆகிய பகுதிகளில் அமைந்தன.

கச்சாப் பொருள்களின் முக்கியத்துவம்பற்றி அதிகம் கூறத் தேவையில்லை. நிலக்கரி, மாக்கல் (slate), உலோகக் கனிப் பொருள்கள் (metal ores) ஆகியவற்றை வெட்டி எடுத்தல் சம்பந்தமான தொழில்களைப் பொறுத்தவரையில், ஒரு பகுதி மற்றொரு பகுதியைக் காட்டிலும் சிறந்ததாகக் காணப்படுகிறது. நிறைய அளவு கனிப்பொருள்களையுடையதும், நிலவியற் சூழ்நிலையில் அந்தக் கனிப் பொருள்களை வெட்டி எடுப்பது இலாபகரமாக இருப்பதுமான நிலப் பகுதிகளில்தான் இத்தகைய தொழில்கள் அமைக்கப்படக்கூடும். இதேபோன்று, கச்சாப் பொருள்களைப் பயன்படுத்தும் சில தொழில் களுக்குச் சில பகுதிகள்தாம் மற்றப் பகுதிகளைவிடச் சாதகமானவைகளாக இருக்கும். இரும்பு (iron), எஃகு (steel) உற்பத்திபோன்ற 'கனரக'த் தொழில்களுக்கு நிறைய அளவு நிலக்கரி, தாதுப் பொருள்கள் ஆகியவை தேவையாதலால், இவைகள் அகப்படுகின்ற இடங்களுக்கருகில் இத் தொழில்கள் இருப்பது அத் தொழில் களுக்கு மிகவும் சாதகமாக இருக்கும். ஏனெனில், இக் கனிப்பொருள்களை வெட்டி எடுத்து இவைகள் பயன்படுகின்ற தொழில்கள் வேறு இடங்களில் இருக்குமாயின், அந்த இடங்களுக்குக் கொண்டு செல்லுதல், பொருள்களின் உற்பத்திச் செலவைக் கூடுதலாகச் செய்துவிடும். இதன் காரணமாகத்தான், கிரேட் பிரிட்டனில் பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்றுண்டுகளில் நிலக்கரிச் சுரங்கங்களையுடைய இடங்கள் செய்பொருள்களை உற்பத்தி செய்யும் இடங்களாயுமிருந்தன. நிறைய அளவு இரும்பையும் எஃகையும் பயன்படுத்தும் தொழில்களான கப்பல் கட்டுதல், பொறியியல் தொழில்கள் ஆகியவை இரும்பு, எஃகு ஆகியவைகளை உற்பத்தி செய்யும் இடங்களை நோக்கிச் செறிகின்றன. தற்போது, பிரிட்டனில் ஏராளமான அளவு கச்சாப் பொருள்கள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுவதால், பல தொழில்கள் துறைமுகங்களுக்கு (ports) அருகிலேயே இயங்குவது சாதகமானதாக இருக்கிறது; உதாரணமாக, மாவு அரைத்தல் தொழிலானது வெளிநாட்டுக் கோதுமையை இறக்குமதி செய்கின்ற துறைமுகங் களுக்கு அருகிலேயே நடைபெறுகின்றன. இதற்குக் காரணம், கோதுமையானது கப்பல்களினின்றும் இறக்கப்பட்டு நேராகக் கோதுமைக் களஞ்சியங்களுக்கு எடுத்துச் செல்வதில் குறைவான தூக்குக் கூலியே செலவாவதுதான்.

மற்றொரு வகையிலும் போக்குவரத்துச் செலவுகள் (transport charges) குறைக்கப்படுகின்றன. அதாவது, தொழில்கள் பெரிய

அங்காடிகளுக்கு அருகில் அமைந்திருக்குமாயின், அப் பொருள்களை ஏற்றிச் செல்லும் செலவுகள் குறைகின்றன. பொதுவாக இத்தகைய பெரும் அங்காடிகள் பொதுவாகக் கச்சாப் பொருள்கள் அகப்படுகின்ற இடங்களாகவே இல்லாமலும் இருக்கலாம் (பெரும்பாலும் அப்படி இருப்பதுமில்லை). உற்பத்தியாளர்களுக்காகப் பொருள்களை உற்பத்தி செய்யாமல் நுகர்வோர்களுக்காகப் பொருள்களைச் செய்யும் தொழில்கள் மக்கள் தொகை நிரம்பியுள்ள இடங்களில் அமைக்கப்படுதல்தான் சாதகமானதாக இருக்கும். பெரும்பாலும் இதன் காரணமாகத்தான் 1920ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளிலும், 1930ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளிலும் நுகர்ச்சிப் பொருள்களை (உதாரணமாக, மின்சாரப் பொருள்கள், தட்டுமுட்டுப் பொருள்கள்) உற்பத்தி செய்யும் புதிய தொழில்கள் பல லண்டன் மாநகரால் ஈர்க்கப்பட்டன. எனவே, ஒரு தொழிலானது பல்வேறு பகுதிகளை நோக்கி ஈர்க்கப்படக்கூடும்—ஒன்று கச்சாப் பொருள்கள் அகப்படும் இடங்களை நோக்கியும், மற்றொன்று அங்காடிகள் உள்ள இடங்களை நோக்கியும் ஈர்க்கப்படக்கூடும். தொழிலானது இதில் எந்தப் பக்கமாக ஈர்க்கப்படுமென்பது அத் தொழிலின் தன்மையைப் பொறுத்ததாக இருக்கும். தொழிலில் பயன்படுத்தப்படும் கச்சாப் பொருள்கள் பெருமளவில் இருந்து, அவைகளினின்றும் உற்பத்தி செய்யப்படும் செய்பொருள்களை வேறு இடங்களுக்குக் கொண்டுசெல்லுதல் குறைந்த செலவில் இயலுமென்றால் (கனரகத் தொழில்களில் இருப்பதுபோல), இத்தகையதொரு சூழ்நிலையில் தொழிலானது கச்சாப் பொருள்கள் அகப்படும் இடங்களுக்கு மிக அருகில் அமைக்கப்படும். உற்பத்தி செய்யப்பட்ட பொருளை ஏற்றிச் செல்வதில் செலவு அதிகமாகுமெனில் (அதனுடைய பெரிய அளவு, எளிதில் உடையக்கூடிய தன்மை, அல்லது விரைவாகக் கொண்டு செல்லப்படவேண்டியதொன்றாக இருத்தல் ஆகிய காரணங்களால்), அங்காடிக்கு (market) அருகில் அப் பொருளை உற்பத்தி செய்யும் தொழில்கள் அமையும். இதற்குச் சான்றாக பிஸ்கோத்துகள் (biscuits) அல்லது மின்சாரப் பொருள்கள் அல்லது ரொட்டி ஆகியவற்றைக் கூறலாம். சில தொழில்களின் பொருள்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு ஏற்றிச் செல்லுதல் இயலாது. பணித்தொழில்களை (service trades) இவற்றிற்கு உதாரணமாகக் கூறலாம்—உணவு விடுதிகள் நடத்துதல், சலவைத் தொழில் நிலையங்களை (laundries) நடத்துதல், கார்களின் குச்சில்களை (garages) அமைத்துக் கொடுத்தல், அல்லது வாழ்க்கைத் தொழிற் பணிகள் (professional services)—இன்னோரன்ன பணித்தொழில்களின் தொழிலிடச் செறிவை அங்காடியின் இருப்பிடமே நிர்ணயிப்பதாக இருக்கின்றது.

இத்தகைய காரணிகள்தாம் ஆரம்பத்தில் ஒரு தொழிலை ஓர் இடத்தை நோக்கிச் செறியச்செய்கின்றன. ஒரு தொழிலானது ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஆரம்பிக்கப்படுமானால், பின்னர் குவிதலாக வரும் பிற சக்திகள் (cumulative forces) அந்த எல்லையில் இடம் பெற்று அத் தொழிலை வேரூன்றும்படியாகச் செய்துவிடும். ஒரு தொழிலைச் சுற்றிலும் அத் தொழில் சம்பந்தமான துணைத் தொழில்கள் (subsidiary industries) வந்தமையுமாதலால், அத் தொழிலை ஏற்று நடத்தும் ஒரு நிறுவனத்திற்கு அத் துணைத் தொழில்களால், உற்பத்திச் செலவு நன்மைகள் (cost advantages) ஏற்பட வழியுண்டு. உதாரணமாக, கப்பல் கட்டும் பொறியியல் (marine engineering) குறிப்பாக கிளைட் (Clyde) போன்ற கப்பல் கட்டும் இடங்களுக்கருகில்தான் வளர்ச்சியடைந்துள்ளன. அதே போன்று நெசவுப் பொறிகளைச் (textile machinery) செய்வதில் சிறப்புத் திறன்வாய்ந்த நிறுவனங்கள் பெரிதும் லங்காஷயரிலேயே (Lancashire) (அங்கு அவைகளின் பெரும் வாடிக்கைக்காரர்கள் தொழில் செய்வதால்) அமைந்துள்ளன. இவ்வாறே, ஒரு தொழிலின் கச்சாப் பொருள்கள், செய்பொருள்கள் ஆகிய வற்றில் சிறப்புத்திறன் வாய்ந்த (specialisation) சில தொழில்களும் அத் தொழில் இடம்பெற்றுள்ள இடத்தைச் சுற்றியே அமைக்கப்படு கின்றன. உதாரணமாக, லிவர்ப்பூல் பருத்தி நிலையம் (Liverpool Cotton Exchange) லங்காஷயரிலுள்ள பருத்தித் தொழிலையும் (Lancashire Cotton Industry), சாயம் போடுவதிலும் (dyeing), மெருகேற்றுவதிலும் (finishing) சிறப்புத்திறன் வாய்ந்த பிராட்ஃபோர்டு நிறுவனங்கள் (Bradford firms) யார்க்ஷையரிலுள்ள (Yarkshire) கம்பளித் தொழிலையும் நம்பியே நிறுவப்பட்டுள்ளன.

மேலும், ஒரு தொழிலானது ஓரிடத்தில் செறியும்போது அங்கு அத் தொழிலில் சிறப்புத் திறமைவாய்ந்த தொழிலாளர்கள் பலர் இருப்பார்களாதலால், திறமைமிக்க உழைப்பின் அளிப்பு அங்கு பெருகும். அவ்விடத்தில் ஒரு நிறுவனம், வேறு எந்த இடத்திலும் கிடைப்பதைக்காட்டிலும் அதிகமான அளவு திறமையான தொழிலாளர்களைப் பெற இயலும். (மற்றொரு பக்கம், தொழிலாளர்கள் கிடைப்பது அரிதாக இருக்கும் தருணத்தில், ஒரு நிறுவனமானது, இதற்கு முன்னர் ஒரு தொழிலும் அமைக்கப்பட்டிராததோர் இடத்திற்கு ஈர்க்கப்படும்; காரணம், யாதொரு தொழிலும் இதற்கு முன்னர் அங்கு ஆரம்பிக்கப்படாததால் உழைப்பின் அளிப்பு எளிதாகக் கிடைக்கும்.)

இந்தக் காரணிகள் யாவும் எவ்வாறு குவிதலான விளைவுகளைப் பெறுகின்றன என்பதை எளிதாக ஆராயலாம். ஒரு தொழில்

அமைக்கப்பட்டதும் அதனுடைய துணைத்தொழில்கள் அல்லது சிறப்புத் திறன் வாய்ந்த தொழில்கள் (specialised trades) அந்த எல்லையில் ஆரம்பிக்கப்படுகின்றன. இவை ஏற்கெனவே ஆரம்பத்தில் ஏற்பட்ட தொழிலிற்கு உற்பத்திச் செலவு நன்மைகளை (cost advantages) அளிக்கின்றன. இதேபோல்தான், அத் தொழிலில் தேர்ச்சி பெற்ற தொழிலாளர்கள் அங்குப் பெருகியிருப்பதும் நன்மையை அளிப்பதாக உள்ளது. ஒரு தொழிலானது ஓரிடத்தில் ஆரம்பத்தில் அதனைக் கவர்ந்த 'இயற்கையான' சக்திகள் (natural forces) செயற்படாதொழிந்து நெடிது காலம் சென்றபிறகும், அது ஈட்டிய நன்மைகளால் (acquired advantages), அந்த இடத்தால் கவரப்படும். உதாரணமாக, ஹை வைகோம்ப் (High Wycombe) என்னும் நகரம் தட்டுமுட்டுச் சாமான்களை (furniture) உற்பத்தி செய்யும் தொழிலுக்குப் பெயர்பெற்றதொரு நகரமாக விளங்கியதற்கு முதன்மைக் காரணம், அது சில்ட்டர்ன்ஸிலுள்ள (Chilterns) பீச் மரங்களுக்கு (Beech trees) அருகிலிருந்ததுதான். ஆரம்பத்தில் சில்ட்டர்ன்ஸ் நகரம் அதன் தொழிலுக்கான முக்கியக் கச்சாப் பொருளான மரத்தை நிறைய அளித்துவந்தது. தற்போது அங்கு தட்டுமுட்டுச் சாமான்களை உற்பத்தி செய்யும் தொழிலானது அவ்வூரின் மரத்தை நம்பியிருக்கவில்லை. ஆயினும், இந்த இடமானது இத் தொழிலின் புதிய நிறுவனங்களைத் தன்னிடத்தே ஈர்த்துக்கொண்டுதானுள்ளது. காரணம், இந்த இடத்தில், தட்டுமுட்டுச் சாமான்களைச் செய்யும் பொறிகளிலும், மரங்களைப் பதனிடுதலிலும் தேர்ச்சிபெற்றவர்கள் பலர் உள்ளனர். இவர்கள் இங்குப் பரம்பரையாகத் தட்டுமுட்டுச் சாமான்களைச் செய்பவர்கள். இங்குள்ள பள்ளிகளும், தொழில் நுணுக்கக் கல்லூரிகளும் (Technical Colleges) தட்டுமுட்டுச் சாமான்களை உற்பத்தி செய்யும் தொழிலில் மிகவும் கவனம் செலுத்துகின்றன.

பல்வேறு பகுதிகளில் தொழிலீடச் செறிவை உண்டுபண்ணும் பெரிய சக்திகள் இவைகள்தாமெனினும், சில குறிப்பிட்ட தொழில்களில் இன்னும் சில காரணிகளும் காரணமாக இருக்கின்றன. உதாரணமாக, கப்பல் கட்டுதல், பழுதுபார்த்தல் (repairing) ஆகிய தொழில்களுக்கு நல்ல துறைமுக வசதிகள் (harbour facilities) முக்கியமானவைகளாக இருக்கின்றன. உள்ளூரில் கிடைக்கும் தண்ணீர் அளிப்பின் (water supply) தன்மைகளும், ஊரின் தட்பவெப்பநிலையின் விநோதத் தன்மைகளும்தாம் பர்ட்டனைச்-(Burton) சாராயம் காய்ச்சும் (brewing) தொழிலுக்கும், லங்காஷயரை நூற்புத் தொழிலுக்கும் (spinning) பெயர்பெற்ற இடங்களாகச் செய்துள்ளன. குறைந்த வாடகையானது தொழில்களை வளர்ச்சியடையாத பகுதிகளுக்குச் (undeveloped areas) செல்லும்படி

தூண்டும். சில சமயங்களில், ஓரிடத்தில் கிடைக்கும் முதல், தொழிலை அவ்விடத்திற்குக் கவரச் செய்யும். உதாரணமாக, 1930ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளில் பிரசித்தமான ஒரு வானூர்தி செய்யும் கம்பெனியானது, முதன்முதலாக யார்க்ஷயரில் (Yorkshire) ஏற்படுத்தப்பட்டது. இதற்குக் காரணம் யார்க்ஷயரில் வாழ்ந்த ஒரு நிலச்சுவான்தார், தனது எல்லையிலுள்ள மக்களின் வேலையின்மையைப் (unemployment) போக்கும்பொருட்டுத் தன்து முதலை வானூர்தி கட்டும் தொழிலில் முதலீடு செய்ய முன்வந்தமைதான். மற்றொரு பக்கம், ஒரு நிறுவனத்தின் சொந்தக்காரர், பொருளாதார சம்பந்தமேயில்லாத முற்றிலும் தனிப்பட்ட காரணங்களுக்காகவும் (ஏன் விவேகமற்ற தனிப்பட்ட காரணங்களுக்காகவும்கூட) ஒரு குறிப்பிட்ட இடத்தில் சென்று தொழில் செய்யும்படி நேரிடலாம்.

ஒரு தொழிலில், மிக அதிகமான தொழிலில் சிறப்புத்திறன் இருப்பது நன்மைகளைப் பயக்கும் என்பதில் ஐயமில்லை. ஆயினும், 1930ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளில் ஏற்பட்ட மந்தமானது (the depression of the 1930s) அத்தகைய சிறப்புத்திறனைப் பெற்றிருப்பதும் வெகுவான சமூகக் கேடுகளைப் (grave social dangers) பயக்கும் என்பதை உணர்த்தியது. சென்ற அத்தியாயத்தில் உழைப்புப் பெயர்ச்சியைப் பற்றிக் (mobility of labour) கூறியபோது வலியுறுத்தியதுபோல, இங்கும் ஒரு கருத்து வலியுறுத்தப்படல்வேண்டும். ஒரு சமுதாயமானது ஒரு தொழிலின் ஒரு வரையறுக்கப்பட்ட எல்லையிலேயே முழுமையாகக் கவனம் செலுத்தி அளவுக்குமீறி அதை நம்பி வாழ்வதாக இருப்பின், அத் தொழிலுக்குக் கெட்ட காலங்கள் ஏற்படும்போது அதிகமான ஏழ்மையும் இடர்ப்பாடுகளும் ஏற்படும். பலதிறப்பட்ட தொழில்களிருப்பின், ஒரு தொழிலில் மந்தம் ஏற்படினும் அது மற்றத் தொழில்களில் உள்ள சுபிட்சத்தால் சரிக்கட்டப்படும். எனவே, அப் பகுதி முழுமையும் அளவுக்கு மீறிய தீமைகளை அடைய நேரிடாது. ஒரு தொழிலையே நம்பியிருக்கின்ற பகுதிகளில் அத் தொழிலை மந்தம் பீடிக்கும்போது, வேறு மாற்று வேலை இருக்காதாகையால், அந்த நிலப்பகுதி முழுமையும் வெகுவாகப் பாதிக்கப்படும்.

இந்த ஆபத்தைத் தவிர்க்கும்பொருட்டே பிரிட்டன் 1945ஆம் ஆண்டிலிருந்து தொழிலினைப் பல்வகைப்படுத்தும் கைக்கோளினை ஆதரித்துவந்தது. முக்கியமாகப் போருக்கு முன்னர் ஒன்று அல்லது இரண்டு அடிப்படைத் தொழில்களை நம்பியிருந்தனவும், 1930ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளில் ஏற்பட்ட மந்தத்தால் கடுமையாகத் தாக்குண்டனவுமான பகுதிகளில்தான் இக் கைக்கோள் பின்

பற்றப்பட்டது. 1945ஆம் ஆண்டின் தொழிற் பகிர்வுச் சட்டத்தின் (Distribution of Industry Act) மூலமாக 'வளர்ச்சிப்' பகுதிகள் என அழைக்கப்பட்ட இப் பகுதிகள் தனியாகக் கவனம் செலுத்தப்பட்டன. இப் பகுதிகளில் தொழிற்சாலைகளைக் கட்டுதற்கோ அல்லது தொழிற் பேட்டைகளை (trading estates) அமைப்பதற்கோ அரசாங்கத்திற்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. இவ்வாறு அரசாங்கம் கட்டுவித்த தொழிற்சாலைகளிலும் தொழிற் பேட்டைகளிலும் தொழில் நிறுவனங்களைக் குடியிருப்போராக (tenants) ஈர்க்கும் நோக்கத்துடன் தான் அவைகள் அமைக்கப்பட்டன. இவ்வாறு குடிவந்த நிறுவனங்கள் அரசாங்கத்தின் நிதி உதவிகளைப் பெறக்கூடியனவாக இருந்தன. கட்டடப் பொருள்களுக்கும் கச்சாப் பொருள்களுக்கும் கட்டுப்பாடு இருந்த நாட்களில், இத்தகைய நிறுவனங்களுக்கே, வளர்ச்சிப் பகுதிகளுக்குப் புறம்பாகவுள்ள நிறுவனங்களைக் காட்டிலும் மேற்சொல்லப்பட்ட சலுகைகளைப் பெறுவதில் முதலிடம் அளிக்கப்பட்டது. 1943, 1947, 1955 ஆகிய ஆண்டுகளில் இயற்றப்பட்ட, நகர, நாட்டு அமைப்புச் சட்டங்கள் (Town and Country Planning Acts) என்ற பல்வேறு சட்டங்களின்மூலம் உள்ளாட்சி மன்றங்களுக்கு (Local Government Authorities) நாடு முழுவதிலும் நில வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் வழங்கப்பட்டது. உள்ளாட்சி மன்றங்கள் இவ்வதிகாரத்தை மத்திய அரசாங்கத்தின் ஆலோசனையின்பேரில்தான் செயற்படுத்தவேண்டுமென்றும் சட்டங்களில் கண்டிருந்தது. எந்த இடங்களில், தொழில் வளர்ச்சி போதிய அளவிற்குமேல் ஏற்பட்டுவிட்டது என உள்ளாட்சி மன்றங்கள் கருதுகின்றனவோ, அந்த இடங்களில் மேற்கொண்டும் தொழிற் கட்டடங்களைக் கட்டுவதை அவை தடுத்து நிறுத்துவதற்கான அதிகாரத்தை இச் சட்டங்கள் நல்கின. 1950ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளின் மத்தியில், இவ் 'வளர்ச்சிப்' பகுதிகள் பல, தனிப் பிரச்சினைகள் எவற்றையும் எழுப்பவில்லை. தெளிவாகப் பாகுபடுத்தப்படாத பகுதிகள்தாம் பிரச்சினைகளை எழுப்பிக்கொண்டிருந்தன. பழைய வளர்ச்சிப் பகுதிகளைக் காட்டிலும் சற்று வளர்ச்சி குறைவாக இருந்த பகுதிகள் இத் துறையில் இடர்ப்பாடுகளைச் சந்திக்கவேண்டியிருந்தபோதிலும், செறிந்த வளர்ச்சியில் அவைகள் மிகவும் கவனம் செலுத்தின. 1958ஆம் ஆண்டின் தொழிற் பகிர்வுச் (தொழில் நிதிய) சட்டத்தின் [Distribution of Industry (Industrial Finance) Act of 1958] மூலம் கைக்கோளை மேலும் இணக்கமாகச் செய்யும் முயற்சி சாத்தியமானது. இந்தச் சட்டம், ஆண்டொன்றுக்குக் குறைந்தபட்சம் 4 சதவீதம் வேலையின்மையுள்ள பகுதிகளை நோக்கி அவ்வப்போது பெயர்ந்து வருகின்ற நிறுவனங்களுக்கு நிதிய உதவி அளிக்கும் அதிகாரத்தை அரசாங்கத்திற்கு நல்கியது.

ஆனால், இத்தகையதொரு கைக்கோள் மிகவும் நிதானமாகச் செயற்படுத்தப்பட்டது என்பது தெளிவாக நமக்கு விளங்குகிறது. ஒரு பகுதியானது ஓர் ஆண்டு முழுவதும் கணிசமான அளவு வேலையின்மையை அனுபவித்த பிறகும் ஒரு நிறுவனமானது அந்தப் பகுதியில் அரசாங்கத்தின் நிதிய உதவியைப் பெறுவதற்கு அது தகுதிவாய்ந்ததென அதிகாரிகளைத் திருப்திபடுத்துகின்ற தருணத்தில், ஆரம்பத்தில் இருந்த பிரச்சினை தீர்க்க முடியாத அளவிற்கு வலுத்துவிடக்கூடும். இவ்வாறு பிரச்சினைகளைத் தீர்ப்பதைக் காலந்தாழ்த்துதல், பின்னிட்ட முயற்சிகளைப் (recessions) பலனளிக்காவண்ணம் செய்துவிடக்கூடியனவாக இருந்தன. எனவே, தற்போது அமலில் உள்ள 1960ஆம் ஆண்டின் உள்துறை வேலைச் சட்டமானது (Local Employment Act of 1960) ஏற்கெனவே இருந்த சட்டத்தை மாற்றியமைத்தது. இந்தச் சட்டமானது, 1945, 1958 ஆகிய ஆண்டுகளின் சட்டங்களில் கண்டிருந்த அதிகாரங்களை அரசாங்கத்திற்கு நல்கியது. இத்துடன், பகுதிகளின் நடப்பு நிலைகளுக்கு ஏற்றாற்போல் எந்தப் பகுதிகள் அரசாங்கத்தின் நிதிய உதவிகளைப் பெறத் தகுதிவாய்ந்தனவென்று அவ்வப்போது முடிவு செய்யும் அதிகாரமும் அரசாங்கத்திற்கு அளிக்கப்பட்டது. எனவே, இன்ன தகுதிவாய்ந்த பகுதிகள்தாம் நிதிய உதவியைப் பெறத் தகுதி வாய்ந்தனவென்று அறுதியிட்டதோர் இணக்கமற்ற பட்டியல் (rigid list) மாற்றியமைக்கப்படக்கூடியதாக இருந்தது. இச் சட்டத்தின் மிகவும் முக்கியமான மற்றோர் அம்சம், அரசாங்கம் குறிப்பிட்ட பகுதிகளில் அதிகமாக வேலையின்மையால் தனி ஆபத்தினை அடையும் தறுவாயிலேயே அந்தப் பகுதிகளுக்கு நிதிய உதவி அளிக்கலாமென்று சட்டத்தில் கண்டிருந்தமையேயாகும். அந்தப் பகுதிகள், கட்டாயமாக அத்தகைய ஆபத்தை அனுபவிக்கும் வரை அரசாங்கம் காத்திருந்து பின்னர்தான் நிதிய உதவி அளிக்க வேண்டுமென்ற நிலை நீங்கியது.

அளவுக்குமீறிய தொழிற்செறிவையும் தனிச்சிறப்புத் திறனையும் தவிர்க்கும் இந்த முயற்சிகளில் உள்ள பிரச்சினை எதுவெனில், குறிப்பிட்ட இடங்களை நோக்கித் தொழில்களை ஈர்க்கும் சக்திகள் பெரும்பாலும் சக்திவாய்ந்தனவாக இருப்பதுதான். ஒரு தொழிலானது ஒரு குறிப்பிட்ட இடத்தில் அமைக்கப்படுவதற்கு (அத்தொழில் வேறோர் இடத்தில் தானாக அமைவதை விட்டு) அரசாங்கத்தின் தலையீடு (state intervention) தேவைப்படும்போது, வேறொரு பிரச்சினை எழும்புகிறது. இவ்வாறு அரசாங்கம் தலையிடுவதால் அத்தொழிலின் உற்பத்திச் செலவானது, அத்தொழில் தலையீடின்றி அமைக்கப்படும் இடத்தில் அதற்கு ஏற்படும் உற்பத்திச் செலவைக் காட்டிலும் அதிகமாகவும் ஏற்படக்கூடும். அப்படி உற்பத்தி

செய்யப்படுகின்ற பண்டங்கள் நாட்டு மக்களே நுகருகின்ற பண்டங்களாயின், இவ்வாறு கூடுதலான உற்பத்திச் செலவை, நாட்டின் சிறந்த சமன நிலையான தொழிற் பகிர்விற்கு மக்கள் தரும் விலையாகக் கருதப்பட்டு ஏற்றுக்கொள்ளப்படும். ஆயினும், உள் நாட்டு அங்காடிகளில் அல்லது ஏற்றுமதி அங்காடிகளில் (home or export markets) அயல்நாட்டுப் போட்டியைச் சந்திக்கும் தொழில்களாக இருப்பின், இக் கூடுதலான செலவு (extra cost) மிகவும் ஆபத்தானதாக இருக்கும். அயல்நாட்டினர், எதற்காக பிரிட்டனின் தொழிற் பகிர்வுச் சீரமைப்பிற்குத் தாங்கள் அதிகமான விலைகொடுத்து அதன் பண்டங்களை வாங்கவேண்டுமென்று எண்ணி, அவர்கள் தொழில்களில் உற்பத்திச் செலவு நலன்களை (cost advantages) அடைய முனைவர். இதற்கு முடிவு காணும் பிரச்சினை யாதெனில், தொழிலின் சரிசமமான பகிர்விற்கான தேவையை இயன்ற அளவிற்கு மிக அதிகமான தொழில் திறமையை (highest possible level of industrial efficiency) அடையும் நோக்கத்துடன் இணங்குமாறு நிறைவேற்றிக்கொள்ளுதலேயாகும்.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles*, Vol. II, Chs. III.

Marshall, *Principles of Economics*, Bk. IV, Chs. II-III.

R. Cohen, *The Economics of Agriculture* (Revised ed., Cambridge University Press, London, 1949) Ch. III.

E. A. G. Robinson, *The Structure of Competitive Industry* (Cambridge University Press, London, 1951), Ch. X.

A. Beacham and L. J. Williams, *Economics of Industrial Organisation* (4th ed., Pitman, London, 1962), Ch. VII.

R. Turvey, *The Economics of Real Property* (Allen & Unwin London, 1957), Chs. II-V.

# 7. முதல்

## 1. முதலின் வகைகளும் அம்சங்களும்

முதலினைப்பற்றி ஆரம்பமான சில விளக்கத்தை இரண்டாம் அத்தியாயத்தில் நாம் ஆராய்ந்தபொழுது அதனை ஒரு சமுதாயத்தின் செல்வமென்றும் (wealth of a community), அது அச்சமுதாயத்தின் எந்த ஒரு நேரத்திலும் உள்ள ஓர் இருப்பு என்றும் பார்த்தோம். மேலும், இது வருமானத்தினின்றும் வேறுபட்டதென்பதையும், ஒரு குறிப்பிட்ட கால அளவில் புழங்கும் செல்வத்தைக் கணக்கிட்டால் அதுதான் வருமானமென்பதையும் பார்த்தோம். நடைமுறையில் முதலின் முக்கியமான அம்சம் யாதெனில், அதன் முழு மதிப்பும் மறைமுகமாகவே துய்க்கப்படுவதாகும். முதலானது பண்டங்கள், பணிகள் இவற்றின் உற்பத்திக்குப் பயன்படுகிறது. அவைகளை நாம் நேரடியாக நுகர்கிறோம். முதலின் முழு மதிப்பையும் நாம் நெடுங் காலத்திற்குத் துய்க்கத்தக்கதாக உள்ளதென்றும் விளக்கம் கூறலாம். உதாரணமாக, ஒரு வீடானது அதில் குடியிருப்பவருக்கு நேரடியாகவே பயனளிக்கிறது. இது மற்றப் பொருள்களை உற்பத்தி செய்வதற்காகப் பயன்படுத்தப்படுவதில்லை. ஆனால், அதே நேரத்தில் வீடானது ஒரு நெடுவாழ்வுப் பொருளாகும்; அது உற்பத்தி செய்யப்பட்டதுமுதல் பல ஆண்டுகட்குத் தொடர்ந்து பலனளிக்கத்தக்கதாக இருக்கிறது. வீடு உற்பத்தி செய்யப் பட்ட ஆண்டில் மட்டிலும் நுகரப்படுவதாகக் கருதப்பட்டுக் கணக்கிட்டால் (உண்மையில் அப்படி ஓர் ஆண்டிற்குமட்டுமே வீடு நுகரப்படுவதில்லை), அந்த ஆண்டின் நுகர்ச்சி மதிப்பீடு வெகுவாக அதிகரித்துக் காணப்படும். அதேபோன்று இதனையடுத்துப் பின்னர் வருகின்ற ஆண்டுகளில் இந்த மதிப்பீட்டளவு குறைந்து காணப்படும். காரணம் என்னவென்னில், பின்னர் வருகின்ற ஆண்டு களில் வீடானது நுகரப்பட்டாலும், அதனை மதிப்பீட்டுக் கணக்கில் சேர்த்துக்கொள்வதில்லை. கண்டிப்பாகக் கூறுமிடத்து, தட்டுமுட்டுச் சாமான்கள், கார்கள் இவைகளையும், மேற்கூறிய காரணங்களால் முதல் எனவே கருதவேண்டும். வீடுகளைப்போன்றே இவைகளும் நெடுங்காலத்தில்தான் தங்களது முழுப் பயனையும் அளிப்பனவாக

உள்ளன. இவைகளுக்கும் வீட்டிற்குமுள்ள வேறுபாடு மிகச் சொற்ப மானதே; வீடுகள் பொதுவாக இவைகளைவிட அதிகமான கால அளவிற்கு நீடித்து இருக்கக்கூடியன.

ஒரு சமுதாயத்தின் எந்த ஒரு நேரத்தினுடைய பொருளாதார செல்வத்தை ஒரு மின்னொளி, புகைப்படம் (flash light) எடுக்க இயலுமெனில், இப் பொருள்கள் யாவும் மொத்த முதல் இருப்பில் சேர்க்கப்பட்டுக் கணக்கிடப்படக்கூடும். ஆனால், நடைமுறையில் இந்த முறை சாத்தியமில்லை. ஒவ்வோர் ஆண்டிலும் முதலின் மொத்த இருப்பில் ஆண்டுக் கூடுதல்கள், கழிவுகள் இவை களில் நுகர்வோர்களுக்கு நேரடியாகப் பயனளிக்கும் வீடுகள் மாத்திரமே இடம்பெறுகின்றன. ஒரு பொருளாதார அமைப்பில் வீடுகளின் மதிப்பில் ஏற்படும் மொத்த மாற்றத்தைக் கணக்கீடு செய்வது இயலும். ஆனால், தட்டுமுட்டுச் சாமான்கள், பியானோக்கள் (pianos), கார்கள் முதலியவற்றின் மொத்த இருப்பில் ஏற்படும் மாற்றங்களைக் கணக்கீடு செய்வது பிரம்மாண்டமானதொரு வேலை யாக இருக்கும். ஆயினும், தொழில்களால் உற்பத்தி நோக்கங்களுக் காகப் பயன்படுத்தப்படும் கார்களின் எண்ணிக்கையின் அதிகரிப்பு முதல் இருப்பில் ஏற்படும் கூடுதலாகச் சேர்க்கப்படும். இவ்வாறு சேர்க்கப்படுவது, கார்கள் நெடுவாழ்வுப் பொருள்கள் (durable goods) என்பதற்காக அல்ல; மற்றத் தொழில் முதலைப்போன்று கார்கள் அத் தொழிலின் செய்பொருள் உற்பத்திக்கு மறைமுகமாகப் பணி யாற்றுவதால் மதிப்புடையனவாக இருப்பதும், அவைகள் கார்கள் என்ற முறையில் மட்டுமே பயன்படுத்தப்படாமலிருப்பதுமே இவ்வாறு கணக்கிடப்படுகின்றன.

கருத்தியலான வெறும் வாதத்திற்கேயல்லாது நடைமுறை நோக்கங்களை உத்தேசித்து, ஒரு சமுதாயத்தின் மொத்த முதல் இருப்புடன் ஒவ்வோர் ஆண்டிலும் கூடுதலாகச் சேருகின்றவை களைத் (annual additions) தனிப்பட்ட முதல் (personal capital) என்றும், தொழில் முதல் (industrial capital) என்றும், சமூக முதல் (social capital) என்றும் மூவகையாகப் பாகுபடுத்திக் கூறுதல் வழக்கம். தனிப்பட்ட முதலின்கீழ்க் குடியிருப்பு வீடுகள் பாகுபடுத்தப் படுகின்றன. தொழில் முதலின்கீழ் நிலையான முதலும், நடை முறை முதலும் சேர்க்கப்படுகின்றன. நிலையான முதலுக்கும் நடைமுறை முதலுக்கும் உள்ள வேறுபாடு யாதெனில், நிலையான முதலினைப் பல தடவைகள் பயன்படுத்தலாம்; நடைமுறை முதல் செய்பொருள் உற்பத்தியில் நேரடியாக இடம்பெற்றுவிடுவ தால் ஒரு முறைதான் பயன்படுவதாக உள்ளது. இந்த வேறுபாட்டினை இரண்டாம் அத்தியாயத்திலும் கண்டோம்.

நிலையான முதலானது, உற்பத்தியின் எல்லாவகையான நோக்கங்களுக்காகவும் ஒரு தொழில் பயன்படுத்துகிற இயந்திரத் தொகுதி (plant), இயந்திரங்கள், கட்டடங்கள் ஆகியவைகளைக் கொண்டதாகும். நடைமுறை முதலில் ஒருபுறம் உற்பத்தியாளர்களிடமும் மொத்த வியாபாரிகளிடமும் சில்லறை வியாபாரிகளிடமும் கைவசமுள்ள செய்பொருள்களின் இருப்பும் (stock of finished goods), மற்றொருபுறம் கச்சாப் பொருள்களும் முற்றிலும் உற்பத்தி முடிவடைந்த பொருள்களாக ஆவதற்குத் தயாராக இருக்கும் அரை குறையாக உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களும் (semi-finished goods) இடம் பெறுகின்றன. சமூக முதலின்கீழ், குறிப்பிட்ட மனிதர்கள் அல்லது தொழிற்சாலைகளின் சொத்துகளேயல்லாமல் சமுதாயம் முழுமைக்கும் சொந்தமான சொத்துகள் யாவும் அடங்கும். உதாரணமாக, சாலைகள், பள்ளிகள், மருத்துவமனைகள் இவைகளைக் கூறலாம்.

கடந்த காலங்களில் ஐக்கிய அரசாங்கத்தின் முதலின் மொத்த இருப்பைக் (வீடுகளைத் தவிர்த்த தனிநபர் சொத்துகள் போன்ற பெருஞ் சொத்து வகைகளையும் நிலத்தையும் சேர்த்து) கணக்கீடு செய்யும் முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. பெரும்பாலானவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கணக்கீடுகளில் சர் எச். சேம்பியன் அவர்களது கணக்கீடும் ஒன்றாகும். இக் கணக்கீடு 1930ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளின் கணக்கீடாகும். இக் கணக்கீடு கீழ்க்கண்ட பகிர்வை எடுத்து விளக்கியது :

| | மில்லியன் பவுண்டில் | சதவீதம் |
|---|---|---|
| தனிப்பட்ட முதல் ... | 5,900 | 35 |
| தொழில் முதல் ... ... | 9,000 | 53 |
| சமூக முதல் ... ... | 2,100 | 12 |
| | 17,000 | 100 |

சமூக முதல் கணக்கீட்டில் சாலைகள், போர்ச்சாதனங்கள் இவை இடம்பெறவில்லை; இவற்றிற்கு மதிப்பைக் கணக்கிடுதல் என்பது கருத்தினுக்கு ஒவ்வாததாக இருக்கும். உண்மையில் இத்தகையதொரு கருத்தே, நாட்டு முதல் (national capital) மதிப்பீடுகளின் மீது வரையறுக்கப்பட்டதொரு சார்பினைக் (reliance) கொள்ளுதற்குக் காரணமாக இருக்கிறது. ஒரு பொருளாதாரச் சொத்தானது ஒரு வெளி அங்காடியில் அது என்ன விலையைப் பெறுகின்றதோ அதன் அடிப்படையில்தான் மதிப்பிடப்படுகிறது. இந்தக் கருத்தின்

அடிப்படையில் பார்க்கும்போது, சாலைகள், பள்ளிகள், மருத்துவ மனைகள் ஆகியவை (அல்லது ஒரு குறிப்பிட்ட தொழிலின் சொத்துகள் முழுவதும்) கருத்தியல் சொத்துகளாக மட்டுமே (notional assets) கருதப்படல்வேண்டும்.

இந்த வாதத்தின்படி பார்த்தால், முதல் என்னும் சொல் பொருளியலான சொத்துகளையே—அதாவது வீடுகள், தொழிற்சாலைகள், சாலைகள் முதலியவற்றை—உணர்த்துவதாகத் தெரிகிறது. இதில் பணத்தின் இருப்புகளைப்பற்றியோ அல்லது அடைமானங்கள் அல்லது கடன் பத்திரங்கள் (securities) போன்ற உரிமைச் சீட்டு களைப்பற்றியோ ஒன்றும் குறிப்பிடவில்லை. பொருளாதார முறை முழுவதையும் மனத்திற்கொண்டு நோக்குமிடத்து, பணத்தையோ அல்லது பணத்திற்கான உரிமைச் சீட்டுகளையோ (மக்கள் தங்களது சாதாரணமான சொல் வழக்கில் 'பணம்' என்பதனை 'முதல்' என்று கூறிவரினும்) முதல் என்று கூற முடியாது. ஒரு தனிநபருக்குப் பணமானது முதலாக இருக்கிறது; ஏனெனில், அது பண்டங்கள், பணிகள் ஆகியவற்றிற்கு உரிமையைத் தருவதாக இருக்கிறது. இத்தகைய உரிமைகளை (claims) வைத்துக் கொண்டு சமுதாயம் முழுவதுமே தன்னைச் செல்வம் படைத்ததாக ஆக்கிக்கொள்ள முடியும். பணமோ அல்லது எல்லா வகையான கடன் பத்திரங்களோ சமுதாயத்தின் மற்ற அங்கத்தினர்களின் மீதுள்ள உரிமைகளை உணர்த்துவனவாக உள்ளன. (கடனானது எவ்வாறு ஓர் உரிமைக்கு ஓர் ஒப்புதலாக (acknowledgment) உள்ளதோ, அதேபோன்று சமுதாயம் முழுமைக்கும் இத்தகைய உரிமைச் சீட்டுகளும் கடன்களும் ஒன்றுக்கொன்று தள்ளுபடி செய்துகொள்வனவாக உள்ளன. பணம் அல்லது பணப்பத்திரங்கள் (monetary instruments) தேவைப்படுவது அவைகள் பணமாகவும் பணப்பத்திரங்களாகவும் இருக்கின்ற காரணத்தால் அன்று; அவை களைக்கொண்டு பண்டங்கள், பணிகள் இவைகளை வாங்கக்கூடும் என்பதற்காகவே. ஒரு சமூகத்தில் பணத்தின் அளவு அதிகரித்து விட்டால் அது அந்தச் சமூகத்தைச் செல்வமிக்க சமூகமாக எந்த விதத்திலும் ஆக்கிவிட முடியாது; பண்டங்கள், பணிகள் ஆகியவை களில் ஏற்படும் அதிகரிப்பினால்தான் அவ்வாறு செய்யமுடியும். இவற்றை இந் நூலில் பின்னர்க் காண்போம். ஆனால், மற்றச் சமூகங் களின்மீதுள்ள உரிமைகள் (claims)—உதாரணமாக, அயல்நாட்டி னர்மீதுள்ள—முதலாக உள்ளன. ஏனெனில், ஒரு சமூகம் அத்தகைய உரிமைகளைப் பயன்படுத்தித் தன்னிடம் உள்ள பண்டங் களின் மொத்த அளிப்பைக் கூடுதலாகச் செய்துகொள்ள முடியும். உதாரணமாக, பவுண்டு நோட்டுகளை அதிகமாக அச்சடிப்பதன் மூலம் பிரிட்டன் தன்னை வசதிமிக்கதாகச் செய்துகொள்ள முடியாது;

ஆனல், திடீரென்று அதற்கு டாலர்கள் கொடையாகக் (gift of dollers) கிடைக்குமானல், அக் கொடை அதனை வசதிமிக்கதாகச் செய்துவிடும். ஏனெனில், இத்தகையதொரு கொடையை வைத்துக் கொண்டு, பிரிட்டன் தன்னுடைய மக்கள்தொகைக்குக் கிடைக்கின்ற பண்டங்களின் அளிப்பைக் கூடுதலாகச் செய்துகொள்ள முடியும். எனவே, ஒரு நாடு பிற நாடுகளின் மீதுள்ள உரிமைகளின் இருப்பைப் பெற்றிருக்குமானல்,—உதாரணமாக, அது வெளிநாடுகளில் வைத்திருக்கும் தங்கம், டாலர்கள் ஆகியவற்றின் காப்பு நிதிகள், பொருளியலான சொத்துகள் ஆகியவை—இவை அதன் முதலின் ஒரு பகுதியாக இருக்கும்; பணத்தின் இந்த ஒரு வகை மட்டுமே நாட்டு முதலின்கீழ் வைக்கப்படத்தக்கதாக உள்ளது. ஆனல், உலகம் முழுமைக்கும் கணக்குப் பார்க்கும்போது, இத்தகைய உரிமைகள் அவைகளுக்குச் சமமான கடன்கள் அல்லது பொறுப்புகள் (liabilities) ஆகியவைகளால் தள்ளுபடி செய்யப்படுவதால், பொருளியலான சொத்துகளே உலகத்தின் முதல்-இருப்பாக வைத்தெண்ணப்படுகின்றன.

## 2. மொத்த உற்பத்தியும் நிகர உற்பத்தியும் (Gross and Net Output)

ஒரு புள்ளியியல் விற்பன்னர் ஒரு நாடு குறிப்பிட்ட கால அளவில்—உதாரணமாக, ஓர் ஆண்டு என்று வைத்துக் கொள்வோம்—எவ்வளவு அளவு செல்வத்தை உற்பத்தி செய்கிறதென்பதைக் கணக்கிட முயலும்போது, அவர் செய்பொருளைச் செய்வதற்குப் பயன்படுகின்ற கச்சாப் பொருள்களையும், செய்பொருள்களையும் சேர்த்துக் கணக்கிட முடியாது. அப்படி அவர் கணக்கிடுவாரானல், அவர் ஒன்றையே இருமுறை கணக்கிடும் தவற்றைச் செய்தவராவார். உதாரணமாக, குருஸோ (Crusoe) ஓர் ஆண்டில் ஓர் அந்தர் எடையுள்ள கோதுமையை விளைவிக்கின்றுரென வைத்துக்கொள்வோம். இக் கோதுமை முழுவதும் மாவாக்கப்பட்டு 50 பெரிய ரொட்டித் துண்டுகளாகச் செய்யப்படுகிறதென்ருல், அவர் தனது மொத்த உற்பத்தியை, ஓர் அந்தர் கோதுமையும் 50 ரொட்டித் துண்டுகளும் என்று கூறிக்கொள்ள முடியாது. ரொட்டியில் கோதுமை அடங்கியுள்ளது; எனவே, அவர் ஒன்றை உற்பத்தி செய்தபோது மற்றென்றைப் பயன்படுத்தியுள்ளார். எனவே, அவர் அந்த ஆண்டில் உற்பத்தி செய்த நிகரமான செல்வத்தை ரொட்டிமட்டிலுமே உணர்த்தும். செல்வத்தின் உண்மையான உற்பத்தி எவ்வளவு என்று கணக்கிடப்படவேண்டுமெனில், உற்பத்தி முடிவடைந்த பொருள்களுடன் அவற்றை உற்பத்தி செய்வதற்குத் தேவையாக இருந்த சாதனங்களையும் சேர்த்துக் கணக்கிடக் கூடாது.

இதேபோன்று, புள்ளிவிவர நிபுணர்கள் கொடுக்கப்பட்டதோர் ஆண்டின் செல்வத்தைக் கணக்கிடும்போது, உற்பத்தியாளர்கள் அந்த ஆண்டின் ஆரம்பத்தில் தங்கள் கையிருப்பிலிருந்து உற்பத்திக்குப் பயன்படுத்திய பண்டங்கள் அல்லது பண்டங்களின் பகுதிகள் இவைகளையும் சேர்த்துக் கணக்கிடுதலும் கூடாது. ஓர் உற்பத்தியாளர் ஒரு பண்டத்தை உற்பத்தி செய்யும்போது அந்தக் கால அளவில் உற்பத்தி செய்யப்பட்ட சாதனங்களை அந்தப் பண்டத்தை உற்பத்தி செய்வதில் பயன்படுத்துவதுபோல—குரூஸோ தனது கோதுமையைச் செலவழித்ததுபோல—அவர் தான் இதற்கு முன்னர்ப் பெற்றிருந்த சாதனங்களையும் (அதாவது, முதலை) அந்தப் பண்டத்தை உற்பத்தி செய்யப் பயன்படுத்தியிருக்கக்கூடும். இவ்வாறு இந்த முதலைப் பயன்படுத்தியதைப் பொறுத்தவரையில், சமூகமானது அம் முதல் பயன்படுத்தப்படாமலிருந்தபோது இருந்ததைவிட, பயன்படுத்திய பிறகு சற்று வறிய நிலையை அடைந்ததாகத் தான் இருக்கும். அச் சமூகம் எவ்வளவு புதிய செல்வத்தை உற்பத்தி செய்தது என்பதைக் கணக்கிட வேண்டுமாயின், இவ்வாறு நுகரப்பட்ட முதலையும் மொத்த உற்பத்தியிலிருந்து கழித்துக் கணக்கிடல்வேண்டும். உதாரணமாக, ஒரு நாடு ஓர் ஆண்டின் ஆரம்பத்தில் 1000 சோடி அடி புதையரணங்களை (shoes) வைத்துள்ளது எனக் கொள்வோம். அந்த ஆண்டில் அது 500 சோடிகளை நுகர்ந்தது எனக் கொள்வோம். ஆண்டுக் கடைசியில் அதற்கு 900 சோடி அடி புதையரணங்கள் இருப்பு இருக்குமானல், அது அந்த ஆண்டில் உற்பத்தி செய்த அடி புதையரணங்களின் உண்மையான உற்பத்தி 400 சோடிகளாகத்தான் (அதனுடைய நுகர்ச்சி 500 சோடிகளாக இருப்பினும்) இருந்தாகவேண்டும்.

முதலானது பண்டங்களின் இருப்பு வடிவில் உள்ளவரை இது தெளிவாக விளங்குகிறது. நிலையான முதலைப் பொறுத்தவரை (இவையும் சமமான முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக இருப்பினும்), நமக்குத் தெளிவு சற்றுக் குறைவாகவே காணப்படுகிறது. உதாரணமாக, ஒரு நாடு 400 சோடி கால் புதையரணங்களை உற்பத்திசெய்து, அந்த ஆண்டில் அது உற்பத்தியை ஆரம்பித்தபோது தான் வைத்திருந்த அதே இயந்திரங்களின் தொகுதியையும் (plant) இயந்திரங்களையும் ஆண்டு இறுதியிலும் வைத்திருக்கிறதென்று கொள்வோம். அதன் இருப்புகளில் மாற்றமெதுவுமில்லை என்னும் எடுகோளை வைத்துக்கொண்டு, அந்த நாட்டின் செல்வத்தின் உண்மையான உற்பத்தி 400 சோடி அடி புதையரணங்கள்தாமா என்று ஆராய வேண்டும். 'இல்லை' என்பதே இதற்கு விடை. இயந்திரங்கள் அந்த ஆண்டில் பயன்படுத்தப்பட்டபோது அதிகமான அளவிலோ அல்லது குறைந்த அளவிலோ தேய்மானம் அடைந்

திருக்கக்கூடும். அப்படியே அவைகள் தேய்மானத்தை அடைந்திராவிட்டாலும், தொழில்நுணுக்க வளர்ச்சியின் காரணமாக ஓரளவிற்குப் பழையனவாகப் போயிருக்கக்கூடும். காரணம் எதுவாக இருப்பினும்—பெரும்பாலும் மேற்சொன்ன இருவிதக் காரணிகளும் இயந்திரங்களின் விஷயத்தில் செயற்படுகின்றன—நிலையான முதலானது ஆண்டு ஆரம்பத்திலிருந்ததைக்காட்டிலும் ஆண்டு இறுதியில் மதிப்பில் குறைவடைந்தே காணப்படும்; அதாவது, அது மதிப்பிறக்கத்தை அடைந்திருக்கும் (depreciated). உற்பத்தியின் உண்மை மதிப்பை மதிப்பீடு செய்வதற்கு முன்னர், உற்பத்தியில் ஏற்படும் இத்தகைய தேய்மானத்திற்கும் ஒரு தொகையை ஒதுக்கீடு செய்தாகவேண்டும். ஒவ்வோர் ஆண்டிலும் இவ்வாறு பயன்படுத்தப்படுகிற அல்லது தேய்மானத்தை அடைகின்ற நிலையான முதலை மாற்றிப் புதியதாக அமைக்கப் போதுமான அளவு சாதனங்கள் ஒவ்வோர் ஆண்டிலும் ஒதுக்கப்படவில்லையெனில் (இவ்வாறு ஒதுக்கப்படும் தொகையை 'முதலின் கடன் ஒதுக்கீடு'—amortisation of capital—என்று கூறுவர்), சமூகமானது தனது சாதனம் முடிவெய்தும் நிலையை அடைவதைக் காண நேரிடும்; அதன் உற்பத்திச் சக்திகள் வெகுவாகப் பாதிக்கப்படும்.

எனவே, ஒரு பொருளாதார அமைப்பின் நிகர உற்பத்தியைக் கணக்கிடவேண்டுமாயின், முதலின் மதிப்பிறக்கத்தைக் கழித்தாக வேண்டும்; மொத்த உற்பத்தியைக் கணக்கிடும்போது இதனைக் கழிக்கவேண்டியதில்லை. நடைமுறையில், முதலானது ஒரு குறிப்பிட்ட கால அளவில் எந்த அளவிற்குத் தேய்மானம் அடைந்துள்ளது என்பதைக் கணக்கிடுவது கடினமாக இருக்கிறது. குறிப்பாக, இயந்திரங்கள் பழையனவாக வழக்கற்றுப்போகக் (process obsolescence) கூடும். இவ்வாறு வழக்கற்றுப் போதல் என்னும் தொட்டறிய முடியாத ஒன்றிற்குச் சரியான மதிப்பீடு செய்வது (அவ்வாறு செய்ய வேண்டியது அவசியம்) கடினம். மதிப்பீடுகள், அவைகளைக் கணக்கிடுகின்ற கால அளவில் ஏற்படுகின்ற விலை மாற்றங்களால் தெளிவற்றனவாகப் போகக்கூடும். (ஐந்தாண்டுகளுக்கு முன்னர் வாங்கிய இயந்திரமொன்றை நீக்கிவிட்டு வேறொன்றைப் புதியதாக நிறுவவேண்டுமாயின், அந்த இயந்திரத்திற்கு முன்னர் இருந்த விலையைக்காட்டிலும்—முதற்கருவிப் பொருள்களின் விலை இந்த ஐந்தாண்டுக் கால அளவில் அதிகரித்திருக்குமானால்—கணிசமான அளவிற்கு அதிக விலையாக இருக்கும்.) பின்னே தரப்பட்டுள்ள மதிப்பீடுகள் 1962ஆம் ஆண்டில் தயாரிக்கப்பட்ட, நாட்டு வருமானம்-செலவுபற்றிய திருந்தா முதற்படி (Blue Book) ஆகும். இது ஐக்கிய அரசாங்கத்தின் சமீபகாலத்திய மொத்த உற்பத்தி, நிகர உற்பத்தி ஆகியவைகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகளை உணர்த்துவதாக

உள்ளது. மதிப்பீட்டு அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ள எண்கள் இத்தனை மில்லியன் பவுண்டுகள் என்பதனை உணர்த்துவதாக உள்ளன :

அட்டவணை 6

| | | நாட்டின் மொத்த உற்பத்தி | முதல் நுகர்ச்சி | நாட்டின் நிகர உற்பத்தி (நாட்டு வருமானம்) |
|---|---|---|---|---|
| 1955 | ... | 16,857 | 1,500 | 15,357 |
| 1956 | ... | 18,373 | 1,613 | 16,760 |
| 1957 | ... | 19,392 | 1,724 | 17,668 |
| 1958 | ... | 20,284 | 1,841 | 18,443 |
| 1959 | ... | 21,149 | 1,903 | 19,246 |
| 1960 | ... | 23,701 | 2,144 | 21,557 |

மதிப்பிறக்கத்திற்காக ஒதுக்கப்படும் நிதியை உத்தேசித்து—இது மொத்த உற்பத்தியில் சுமார் 9 சதவீதமிருக்கும்—செய்யப்பட வேண்டிய திருத்தமும் ஒரு முக்கியமான இனமே என்பது விளங்கும்.

### 3. முதல் ஆக்கமும் நுகர்ச்சியும் (Capital Formation and Consumption)

நவீன உலகத்தில் வாழ்க்கைத்தரம் பல்வேறு சமூகங்களிடையேயும் வெகுவாக வேறுபட்டுள்ளது. இதற்கு முதன்மையான காரணம், பல்வேறு நாடுகளின் உற்பத்தித் திறன் வெகுவாக வேறுபட்டுள்ளமையே. ஒரு தொகுதி மக்களின் சராசரி உற்பத்தி மற்றொரு தொகுதியின் சராசரி உற்பத்தியைவிட அதிகமாக இருப்பானேன்? இதற்கு விடையாகப் பல்வேறு காரணிகளைக் கூறலாம். மக்களின் பல்வேறு இனங்களுக்கிடையேயுள்ள உழைப்புச் சக்திகளின் (labour forces) தேர்ச்சியிலும் வலிமையிலும் வேறுபாடுகளிருக்கின்றன ; அல்லது அவர்களுக்குக் கிடைத்துள்ள இயற்கைச் சாதனங்களில் வேறுபாடுகளுள்ளன. இதேபோன்று, பல்வேறு இன மக்களுக்குப் பல்வேறுபட்ட சமூக அரசியல் வரலாறுகள் உள்ளன. இத்தகைய ஒரு விடையில் ஓர் இடத்தின் முக்கியத்துவத்தைக் கூறும்போது, பல்வேறு இடங்களில் வசிக்கும் பல்வேறு சமூகங்களுக்குள்ள முதல் அளவில் வேறுபாடுகளுள்ளதையும் குறிப்பிடவேண்டும். ஒரு நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளியைக் காட்டிலும் மற்றொரு நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளி அதிகமான அளவு நிலக்கரியை வெட்டியெடுக்கின்றார். இதற்குப் பல காரணங்

களிருக்கலாம் ; நடைமுறையில் இதற்கு முக்கியமான காரணம், ஒரு தொழிலாளி ஓர் இருநாக் கோடரியை (pick) வைத்துக்கொண்டு நிலக்கரியை வெட்டியெடுப்பதும், மற்றவன் சக்தியினுல் இயக்கப்படும் வெட்டுகருவியைப் பயன்படுத்தி நிலக்கரியை வெட்டியெடுப்பதும், ஏற்று பொறியின்மூலம் வெட்டிய நிலக்கரியை ஏற்றுவதுமே. எல்லா உற்பத்தி முறைகளிலுமே இயந்திரங்கள், மிக்க வலிமையும் திறமையுங்கொண்ட தொழிலாளர்களைக் காட்டிலும் எல்லையின்றி அதிக விரைவாகவும், தொடர்ந்து நெடுநேரத்திற்கும் உற்பத்திப் பணியைச் செய்கின்றன.

அதிகமான உற்பத்திக்கு அதிகமான அளவு முதல்தான் முக்கியமாகத் தேவையெனில், ஏன் எல்லா நாடுகளுமே பொருளாதார முன்னேற்றத்தை அடைந்துள்ள நாடுகளைப்போன்று அதிகமான அளவு முதலைத் தேடி வைத்துக்கொண்டிருக்கவில்லை ? இதற்கு விடையளிக்க சமுதாய முதல் சாதனத்தை அல்லது முதல் ஆக்கத்தைப் பெறுவதில் எது சம்பந்தப்பட்டுள்ளதென்பதை ஆராய்தல் நலம். முதற்கருவிப் பொருள்களென்பவை அவைகள் நிறுவப்பட்ட கணிசமான கால அளவிற்குப் பிறகே பயன்தரத்தக்கனவாக இருக்கும். நாட்டின் சாதனங்களை, அத்தகைய பொருள்களை உற்பத்தி செய்வதில் செலவிடும்போது, நுகர்ச்சிப் பொருள்களைக் காட்டிலும் முதற்கருவிப் பொருள்களே பெரிதும் செய்யப்படுமாதலால், நுகர்ச்சிப் பொருள்களினின்றும் கிடைக்கப்பெறும் நுகர்ச்சி இன்பத்தை நாடு தியாகம் செய்தேயாகவேண்டும்.

எளிய சான்று ஒன்றினை ஆராய்வோம். குருசோ, தனது தீவில், ஒரு குறிப்பிட்ட அளவு தானியங்களை வைத்திருந்தார் என வைத்துக்கொள்வோம். அதிகமாகச் சாப்பிடுவதன்மூலம், அவர், அத் தானியங்களை முதற் சில மாதங்களிலேயே சாப்பிட்டிருக்க முடியும். ஆனால், அதற்குப் பதிலாக அவர் ஓரளவு தானியங்களைச் சாப்பிடாமல் சேமித்துவைத்து, அவற்றை நட்டார் என வைத்துக்கொள்வோம். அப்போது அவர் தனது நுகர்ச்சி வீதத்தைக் குறைத்துக்கொள்ளவேண்டிய ஒரு நிர்ப்பந்தத்திலிருப்பார். நாட்கள் கடந்தன ; குருசோவிற்கு ! தான் நட்ட தானியங்கள் பயிர்களாகி நல்ல விளைவைக் கொடுத்தன. சிக்கலான ஒரு பொருளாதாரப் பிரச்சினைகொண்டதொரு நாட்டிலும் இதே நிலைதான் உள்ளது. அந் நாட்டின் தொழிலாளர்களும், இன்னும் மற்றச் சாதனங்களும் முதல் இருப்பை அதிகரிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டால், அந் நாடு, அச் சாதனங்களை உற்பத்தி செய்திருக்கக்கூடும் நுகர்ச்சிப் பண்டங்களை உடனடியாக அனுபவிப்பதனின்றும் விலகி நின்று தியாகம் செய்தாக

வேண்டும். அந் நாட்டில் பயன்படுத்தப்படாத (தொழில்களில் வேலைக்குப் பயன்படுத்தப்படாத) சாதனங்கள் முதல் ஆக்கத்தைத் தோற்றுவிக்கப் பயன்படுத்தப்படுமானால்—உதாரணமாக, சாலைகளை அமைத்தல், அல்லது தொழிற்சாலைகளை நிறுவுதல் போன்றவைகளுக்கு—அப்போது அங்கே நுகர்ச்சியைக் குறைத்துக்கொள்ளாமலேயே முதலை அதிகரித்துக்கொள்ள முடியும். ஆனால், இந்த விதத்திலும் ஒரு தியாகச் செயல் உள்ளது. அந்த நாடு, அவ்வாறு முதலை அதிகரிக்கத் தான் பயன்படுத்திய சாதனங்களை, நுகர்ச்சிப் பொருள்களை உற்பத்தி செய்யப் பயன்படுத்தியிருக்குமானால், இன்னும் அதிகமான நுகர்ச்சிப் பொருள்களைத் தான் நுகர்வதை விடுத்துத் தியாகம் செய்கிறதல்லவா?

பொருளாதாரத்துறையில் வளர்ச்சியடையாத நாடுகள் என்று அழைக்கப்படும் நாடுகளில் உற்பத்தியை அதிகரிப்பதற்கு இதுவே தீர்மானமான ஒரு காரணியாக (crucial factor) இருக்கிறது. முதல் உற்பத்தி செய்யப்படவேண்டுமானால், தற்போதைய தேவைகளையும் மனநிறைவுகளையும்—அதாவது, நுகர்ச்சியை — ஓரளவிற்குக் குறைத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. ஆனால், ஒரு நாடு மிகவும் ஏழ்மையான ஒரு நாடாக இருப்பின், அதன் உடனடியான தேவைகளை வேண்டாது விடுதல் இயலாத ஒன்றாக இருக்கக்கூடும். மக்களுக்கு முதலினை அளிக்கும் ஓர் ஏற்பாட்டில், அதனை நிறைவேற்றுங் கால அளவில் அவர்கள் பட்டினியால் இறந்துபடுவார்களாயின், அத்தகைய முதலால் பயனொன்றுமில்லை. இவ்வகையான ஓர் ஏற்பாடு, குடியாட்சி முறையைப் (democracy) பின்பற்றும் அரசை உடைய நாடுகளுக்கு வலுக்கட்டாயமான ஒரு நியதியாகவே எந்தவிதத்திலும் தோன்றும். ஆயினும், ஒரு நாடு அதன் குடிகளின் வாழ்க்கை நலனை இரண்டாவதாக மதித்து, அதன் பெரிய கீர்த்தியையே (glory) முதலாவதாக வைத்து எண்ணுமேயாயின்—அதன் குடிகளது வேதனைகளைச் சற்றும் செவிமடுக்காமலும் இருக்குமானால்—தனது அதிகார பலத்தைக்கொண்டு உடனடியான நுகர்ச்சியை நெருக்கி, மனிதர்களின் வேதனை எவ்வளவு இருப்பினும் அதனை மதியாது, அதன் பொருளாதார வளர்ச்சி வேகத்தைத் துரிதப்படுத்த முடியும். அதிகமான இடர்ப்பாடுகள், பெருமளவில் பட்டினி ஆகியவற்றின் விலை கொடுத்துதான் சோவியத் ஒன்றியம் (Soviet Union) 1920ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளிலும் 1930ஆம் ஆண்டையடுத்த பத்தாண்டுகளிலும் அதிகவீத முதல் ஆக்கத்தைப் பெற்றது. மக்கள் நலனை ஏற்று அவற்றைப் பல்வேறு அளவையில் செயற்படுத்துவனவும், பல்வேறு அரசியலமைப்பைக் கொண்டனவுமான மேற்கத்தி நாடுகள் இத்தகைய கைக்கோள்களைச் செயற்படுத்த இயலாது.

பெரும்பாலான நாடுகள், தம்முடைய முதல் ஆக்கத்திற்கு வேண்டிய சாதனங்களை ஒதுக்கிவைக்கலாம் என்று தீர்மானிப்பதற்கு முன்னர், ஒரு குறிப்பிட்ட அளவு செல்வநிலையை அடைந்தேயாகவேண்டும். ஆனால், பல நாடுகளில், அவைகள் அதிகமான முதலினை அடைந்த பின்னரே, போதிய அளவு அதிகமான உற்பத்தியை அடையமுடிகிறது. பணக்கார நாடுகளின்மூலம் கிடைக்கும் அயல் உதவியினால்தான் இத்தகைய ஒரு நச்சு வட்டம் (vicious circle) தகர்க்கப்படக்கூடும். ஒரு செல்வமிக்க நாடு ஓர் ஏழை நாட்டிற்கு ஈயும் அல்லது கடனைக் கொடுக்கும் செல்வத்தினால்தான், ஏழை நாடு இவ்வுதவியை வைத்துக்கொண்டு தனது நுகர்ச்சியினைக் குறைத்துக்கொள்ளாதவகையில் முதல் ஆக்கத்தினைத் தேடிக்கொள்ள முடியும். இதற்குச் சான்றாகப் பாகிஸ்தானைக் கூறலாம். பாகிஸ்தான், இதற்கு முன்னர் உணவு உற்பத்தியில் ஈடுபடுத்தியிருந்த தொழிலாளர்களைப் பயன்படுத்தித்தான் தனது நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றிக்கொள்ள முடியும். உணவு இல்லாவிடில், அதன் மக்கள் பலர் பட்டினி கிடக்க நேரிடும். இதனை உத்தேசித்தே, பாகிஸ்தானின் முதல் ஆக்கம் உருவாகிக் கொண்டிருக்கும் வேளையில், அதன் மக்களுக்கு உணவளிக்க பிரிட்டனும், இன்னும் மற்ற நாடுகளும் அதற்குக் கடன் கொடுத்துதவுகின்றன. முதல் ஆக்கத்தினைத் தேடும் பணி முடிவடைந்த பின்னர், பாகிஸ்தானின் உணவு உற்பத்தி வெகுவாக அதிகரிக்கும். இத்தகைய உற்பத்தி அதன் கடனைச் சில ஆண்டுகள் கால அளவில் அடைத்தற்குப் போதிய அளவிற்கு மேலாகவே இருக்கும்.

நாட்டின் முதல் இருப்பினைப் பாதுகாத்தலுக்கும், அந்த இருப்பினை அதிகரித்தலுக்கும் வேறுபாடு உண்டு. சென்ற உட்பிரிவில் (previous section), உற்பத்தியானது உழைப்பையும் கச்சாப் பொருள்களையும் பயன்படுத்துவதுபோலவே முதலையும் பயன்படுத்துகிறதென்பது, இவ்வாறு பயன்படுத்தப்பட்ட முதலினை ஈடுசெய்வதற்குத் தகுந்த சாதனங்களை ஒதுக்காவிட்டால் நாடானது அது உற்பத்தி செய்வதைக்காட்டிலும் அதிகமாக நுகர்கின்றதென்பதும் எடுத்துக் கூறப்பட்டது. இதனையே அது தொடர்ந்து செய்யுமாயின், நாளடைவில் அதன் செல்வ உற்பத்தித் திறன் வெகுவாகப் பாதிக்கப்படுவதோடு, அதன் விளைவாக அது மிக ஏழ்மையாகப் போகக்கூடும். அதனுடைய முதல் இருப்பு அதிகமாக இருக்குமானால், இத்தகைய முதலினைப் பயன்படுத்தும் முறையானது உற்பத்தியை வெகுவாகப் பாதிப்பதற்கு நீண்ட காலம் பிடிக்கும். மழையானது கூரையின் வழியாக இறங்கி வீட்டில் குடியிருப்பவர்களுக்கு இடையூறு விளைவிக்கும் வரையில், வீடு செப்பனிடும் வேலையினைத் தள்ளிப்போடக்கூடுமல்லவா ?(!) ஓர்

இக்கட்டான சூழ்நிலை வாய்க்குமானால், ஒரு நாடானது, தான் உற்பத்தி செய்வதைவிட அதிகமாகப் பல ஆண்டுகட்கு நுகரலாம். இவ்வாறு, முதலினைப் பராமரித்தலுக்குச் சாதனங்களைப் பயன் படுத்தாமல் அதற்குப் பதில் உடனடியாக நுகரத்தக்க பொருள்களை உற்பத்தி செய்வதில் பயன்படுத்தற்குத் தகுந்த நெருக்கடிச் சூழ்நிலை (expedient) அந் நாட்டிற்கு இருக்கவேண்டும். உதாரண மாக, ஒரு போரின்போதும், அல்லது அது நடப்பதற்கு ஓரிரு ஆண்டுகட்கு முன்னதாகவும் போர் முயற்சிக்கே உச்சமான அளவில் சாதனங்கள் பயன்படுத்தப்படும். இந்தச் சாதனங்கள் நாட்டின் முதலினைச் சரிவரப் பாதுகாத்தற்குப் பயன்படவேண்டிய வைகளாக இருந்திருக்கும். இத்தகைய சூழ்நிலையில் தொலைவி லுள்ள எதிர்காலம் கவனிக்கப்படுவதில்லை. நாளடைவில் இத் தகைய ஒரு புறக்கணிப்பு ஈடுசெய்யப்படவேண்டியிருக்கும். இதனால், சாதாரணமாகத் தேவையாக உள்ளதைக் காட்டிலும் அதிகமான அளவு நடப்பு நுகர்ச்சியைத் தியாகம் செய்யவேண்டி வரும். ஈண்டு, நாடு போரினை வென்றுவிட்டது என்னும் எடுகோளினை நாம் கொள்ளுதல் வேண்டும்—இது மிக முக்கியமாகக் கருத்தில் கொள்ளவேண்டிய ஒன்று. பிரிட்டிஷ் மக்கள் இரண்டா வது உலகப் போர் முடிவடைந்து பல ஆண்டுகட்குப் பின்னரும் பங்கீடு (rationing), பற்றுக்குறை ஆகியவற்றைத் தாங்கிக்கொள்ள நேர்ந்தமைக்கு ஒரு பங்கு காரணமாக இருந்தது; போர் நடந்த ஆண்டுகளின்போது ஏற்பட்ட முதல் மதிப்பிறக்கத்தை பிரிட்டன் ஈடுசெய்யவேண்டியதாக இருந்தது.

பொருளாதார விற்பன்னர்கள், உற்பத்தியின்போது, உண்மை யானதும், ஆனால், கண்ணால் பார்க்க முடியாததுமான முதல் நுகர்ச்சி என்னுமோர் உறுபொருளிற்கு (element) இடமளிப்பதற்காகவே மொத்த உற்பத்தியென்றும், நிகர உற்பத்தியென்றும் பாகுபாடு செய்துவைத்திருக்கின்றனர். அதுபோன்றே, 'மொத்த முதல் ஆக்கம்'—இது மொத்த முதலீடு என்று பெரும்பாலும் அழைக்கப் படுகிறது—என்றும், 'நிகர முதல் ஆக்கம்'—இது நிகர முதலீடு என்றழைக்கப்படுகிறது—என்றும் அவர்கள் வேறுபடுத்திக் கூறு கின்றனர். முதற்கருவிப் பொருள்களைச் செய்வதற்கான சாதனங் களின் மொத்தப் பயன்படுத்துதலே மொத்த முதலீடாகும். இத்தகைய முதலீட்டில் சில நாடு நடப்புக் காலத்தில் பயன்படுத்தும் முதலினை ஈடுசெய்வதற்கே (அதாவது, தேய்மானத்தை) பயன் படுத்தப்படுவதாக உள்ளதேயல்லாமல், முதலினை அதிகரிப்பதற்குப் பயன்படுவதாக இல்லை. மொத்த முதலீட்டிலிருந்து இதனைக் கழித்தால்தான் எந்த அளவு முதலீட்டால் முதல் இருப்பு அதிகரிக் கப்பட்டுள்ளது என்னும் உண்மை நிலை தெரியவரும். அவ்வாறு

கண்டுபிடிக்கப்படும் முதலீட்டின் அளவே நிகர முதலீடு எனப்படும். ஒரு நாடு, எவ்வளவு விரைவாகத் தனது உற்பத்தித்திறனை அதிகரிக்கிறதென்பதனை, அதன் நிகர முதலீட்டு வீதமே உணர்த்துகின்றது. ஐக்கிய அரசாங்கத்தில், சமீப ஆண்டுகளில், நிகர முதலீடானது முதற்கருவிப் பொருள்கள்மீது அது செலவழித்த மொத்தத் தொகையில்—அதாவது, மொத்த முதல் ஆக்கத்தில்—40-45 சதவீதமாக இருந்தது.

கவனத்தில் வைக்கவேண்டிய முக்கியமான ஒன்றை ஈண்டு ஆராய்வோம். முதலின் ஒரு வகை பிறநாடுகளின்மீதுள்ள உரிமைகளைக் (claims) கொண்டதாக உள்ளது. உதாரணமாக, அயல்நாட்டுச் செலாவணிகள் வடிவிலோ (அல்லது அவற்றை வாங்கக்கூடிய தங்கத்தின் வடிவிலோ), அல்லது அயல்நாட்டிலுள்ள பொருளியல் சொத்துகளின் (சுரங்கங்கள், தோட்டங்கள், தொழிற்சாலைகள் முதலியவை) வடிவிலோ இருக்கும். இவ்வுரிமைகளின் அதிகரிப்பும், உள்நாட்டில் இயந்திரங்களின் தொகுதி (plant), இயந்திரங்கள் (machinery) இவைகளின் இருப்பு அதிகரித்தலைப் போன்றே முதலீட்டை அமைக்கின்றது. எனவே, முதலீடு உள்நாட்டு (domestic) முதலீடாகவோ அல்லது அயல்நாட்டு (foreign) முதலீடாகவோ இருக்கும். ஐக்கிய அரசாங்கத்தின் வரலாற்றில் பின்னதாகக் கூறிய முதலீட்டுவகை தனி முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்துவந்திருக்கிறது.

இதுவரை கூறியவற்றினின்றும், ஒரு நாட்டின் பொருளாதார பலத்திற்கு ஓர் அதிகவீத முதலீடு தேவையென்பதும், அதே சமயத்தில் அது தற்போதைய நுகர்ச்சியைத் தியாகம் செய்ய வைக்கின்றதென்பதும், அவ்வாறு தியாகம் செய்வது மனத்திற்கு இன்பமளிக்கும் ஒன்ருக இருக்கமுடியாது என்பதும் தெளிவாகத் தெரிகின்றது. இவ்வாறு, எதிர்காலச் செல்வம் (future wealth), தற்போதைய இன்பம் (present enjoyment) ஆகிய இரண்டிற்குமிடையேயுள்ள முரண்பாடு எவ்வாறு தீர்த்துவைக்கப்படுகிறது? முதலினைத் தனிநபர்களும் அரசாங்கமும் சொந்தமாகக் கொண்டுள்ள பிரிட்டனைப்போன்ற ஒரு நாட்டில், இது, அரசாங்கம், தனிநபர்கள் ஆகிய இருதிறப்பட்ட மக்கள் எடுக்கும் முடிவுகளின் விளைவாகவே இருக்கிறது. சமூகம் சொந்தமாக வைத்துள்ள முதலினை (socially-owned capital) அதிகரிப்பதற்கு எவ்வளவு ஒதுக்கப்படவேண்டுமென்பதை அரசாங்கம் (நாட்டுரிமையாக்கப்பட்டுள்ள தொழில்களும் சேர்ந்து) தீர்மானிக்கின்றது. தனிப்பட்ட வணிக நிறுவனங்களின் உரிமையாளர்கள் தங்களது முதலினை எவ்வளவு அதிகரிக்கவேண்மென்று தீர்மானிக்கின்றனர். இவ்வாறு அவர்கள் தீர்மானிப்

பதில், முதலின் விலையானது அவர்கள் எவ்வளவு அளவு செல்வத்தைக் கொணர விழைகின்றார்களோ அதற்கேற்றாற்போல் உள்ள முதலின் விலையைப் பொறுத்ததாக இருக்கும். (இத்தகைய ஒரு முறையானது இந்நூலின் பிற்பகுதியில் நெடிது விளக்கப்பட்டுள்ளது.) முதலீடுபற்றிய இத்தகைய முடிவுகள் நாடு முழுவதற்கும் விலைகளின் மட்டம், வேலைமட்டம் ஆகியவற்றைத் தீர்மானிப்பனவாக உள்ளன. இந் நூலின் பிறிதொரு பகுதியில் இதுவும் ஆராயப்படவேண்டிய ஒன்றாக இருக்கிறது.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Marshall, *Principles of Economics*, Bk. IV, Ch. VII.

Henderson, *Supply and Demand*, Ch. VIII.

F. A. Lutz and D. C. Hague (editors), *The Theory of Capital* (Macmillan, London, 1961).

# 8. தொழில்துணிவு
## (Enterprise)

### 1. தொழில் துணிவோனின் பணிகள்

மேசையின்மீது போடப்பட்ட சீட்டுக்கட்டு தானாக ஆட்டத்தினை ஆடிவிட முடியாது; பாத்திரத்தில் போடப்பட்ட முட்டைகளும், வெண்ணெயும், மாவும் தாமாக வெண்ணெய்ப் பிட்டாக (pudding) முடியாது; அதுபோல, நிலம், உழைப்பு, முதல் இவைகள் தாமாகவே ஒரு செல்வம் உற்பத்தி செய்யும் தொடர்பினை அமைத்துக்கொள்ள முடியாது. தனிப்பட்ட சாதனங்களின் தொகுதி ஒவ்வொன்றும் மற்றொன்றுடன் பயனுள்ளவாறும் முறைப்படியும் தொடர்புகொண்டிருக்குமாறு செய்யப்படுவதற்கு ஒழுங்குபடுத்தும் தலைமைப் பீடம் ஒன்று (a controlling intelligence) செயற்படவேண்டும். சீட்டுக்கட்டுகளைப் பொறுத்தவரையில் இதனை நல்குவது சீட்டாட்டக்காரரே; வெண்ணெய்ப் பிட்டுக்கு சமையல்காரரும், செல்வ உற்பத்திக்குத் தொழில்துணிவோரும் (entrepreneur) இதனை நல்குகின்றனர். கடைசியாகக் கூறப்பட்ட 'தொழில்துணிவோன்' என்னும் சொல் ஆங்கில மொழியில் ஒரு விநோதமான சொல்லாகவே உள்ளது. (இச் சொல் ஆங்கிலத்தில் பிற மொழியினின்றும் மொழிபெயர்க்கப்பட்ட ஒரு சொல்லாக இருப்பதால்தான் தவறான கருத்திற்கு இடமளிப்பதாக உள்ளது.) ஆனால், இச் சொல் பொருளாதாரத்தில் யாவராலும் ஏற்கப்பட்டுள்ள ஒரு தொழில்நுணுக்கச் சொல்லாக இருந்துவருகிறது.

தொழில்துணிவோன் என்னும் சொல் உற்பத்தியின் மற்றக் காரணிகளை முறையாக ஒருங்குசேர்த்து உற்பத்தியைச் செய்கின்ற ஒரு நபர் (person) அல்லது நபர்களைக்கொண்ட ஒரு குழுவைக் குறிக்கும். உற்பத்திக்குப் பயன்படுத்தப்படும் ஒவ்வொரு சாதனமும் எந்தக் கணியங்களில் இருக்கவேண்டுமென்று முடிவு செய்வதும், உற்பத்தி செய்யப்படும் பொருளில் அவைகள் எந்தக் கணியங்களில் இருக்கவேண்டுமென்று தீர்மானிப்பதும் அவரது

வேலையாகும். அவர் தொழில்துணிவு என்னும் காரணியை உற்பத்திக்கு அளிக்கின்றார்.

தொழில்துணிவு என்னும் இக் காரணியை ஒரு தனி வகையான உழைப்பு என்றும், தொழில்முயல்வோனை ஒரு தனிவகையான தொழிலாளியே என்றும் கருதுவதற்கு நிறைய காரணங்களைக் கூற முடியும். உழைப்பு என்பது செல்வ உற்பத்திக்காகச் செலுத்தப்படும் மனித அறிவு அல்லது உடலின் உழைப்பு என விளக்கப்பட்டுள்ளது. தொழில் முயல்வோனின் வேலையான, காரணிகளை ஒருங்குசேர்த்து அவைகளை வழிநடத்துதலும் (organisation) இத்தகைய விளக்கத்தின்பாற்படுவதாகவே உள்ளது. ஆயினும், ஆய்வு நடத்தும் நோக்கங்களுக்கு, இந்தக் குறிப்பிட்ட வகையான உழைப்பை ஒரு தனிப்பட்ட ஒரு காரணியாகக் கருதுவதே, (நிலத்தை அது ஒருவகை முதல் என்று கூறாமல் தனிப்பட்ட ஒன்றாகக் கருதுதல்போன்று) உகந்ததாக இருக்கின்றது. ஏனெனில், இக் காரணியின்மீது தனிச் சக்திகள் செயற்படுகின்றன. அதுமட்டுமல்லாமல் ஒரு நாட்டின் பொருளாதார முறையில் தொழில் துணிவோன் நல்கும் பங்கும் தனிச் சிறப்பான ஒன்றாகவே இருக்கிறது.

தொழில்முயல்வோனைப்பற்றி மிக முக்கியமாகத் தெரிந்து கொள்ளவேண்டியது யாதெனில், அவர் மற்றக் காரணிகளின் பணிகளைப் பெறுவதற்கான செலவைத் தான் ஏற்கவேண்டியதாக இருக்கிறது. இவ்வளவு செலவாகும் என்பதை அவர் முன்கூட்டியே தெரிந்திருக்கவேண்டும். அக் காரணிகளை ஒன்றுபடுத்தி உற்பத்தி செய்து, உற்பத்தி செய்த பண்டங்களை விற்று, அதன்மூலம் கிடைக்கும் வருமானத்தைக்கொண்டு தான் ஏற்கின்ற செலவை ஈடுசெய்யலாம் என்ற நம்பிக்கையின்பேரிலேயே செலவை முன்கூட்டித் தான் ஏற்கின்றார். எனவே, அவர் எதிர்காலத்திலுள்ளதும் நிலையற்றதுமான ஒரு விளைவை (a return which lies in the future and is uncertain) நம்பி உற்பத்தியைத் தொடங்குகின்றார். ஆனால், மற்றக் காரணிகள் அப்படியல்ல; நிலம், உழைப்பு, முதல் ஆகிய காரணிகள், அவைகளது பணிகள் பயன்படுத்தப்படுவதற்கு முன்னரே ஒப்புக்கொள்ளப்பட்ட குறிப்பிட்ட அளவு ஊதியத்தைப் பெறுகின்றன. இத்தகைய ஓர் உத்தரவாதமளிக்கப்பட்ட ஊதியம் தொழில்முயல்வோருக்கு இல்லை. ஏனெனில், அவர் ஒரு பொருளை உற்பத்தி செய்வதற்கு என்ன செலவாகும், அதனை விற்றால் என்ன விலை கிடைக்கும் என்பதையெல்லாம் சரிநுட்பமாகவும் நிச்சயமாகவும் அறுதியிட முடியாதல்லவா? இத்தகைய ஒரு காரணமே தொழில் துணிவை மற்றக் காரணிகளிலிருந்தும் வேறுபடுத்திக் காட்டுகிறது.

மற்றக் காரணிகள் சிறிய ஊதியத்தைப் பெறக்கூடுமெனினும், தொழில்முயல்வோனே எதிர்க்கணிய ஊதியத்தைக்கூட—அதாவது, நிகர நஷ்டத்தை—பெறக்கூடியவராக இருக்கின்ருர். அவருடைய யூகம் (judgement) தொழில் முறையில் தவறுமாயின், தனது முயற்சிகளுக்கு ஊதியம் கிடைக்காமல்போவதோடுகூட—ஒரு பொருள் விற்கப்படவேண்டிய விலையைக்காட்டிலும் அதனை உற்பத்தி செய்ததில் ஏற்பட்ட செலவு அதிகமாக இருக்குமானல்—தான் உற்பத்தியை ஆரம்பித்தபோது வைத்திருந்த செல்வத்தைவிடக் குறைவான அளவு செல்வத்தை அவர் வைத்திருக்க நேரிடும். அவரது வெற்றி காணு இவ்வுற்பத்தி முயற்சியில் செல்வத்தின் ஒரு பகுதி இழக்கப்பட்டுவிடுவதால் இவ்வாறு நேரிடுகிறது.

ஆகவே, தொழில் முயல்வோருடைய வேலையானது, விபத்துகளையும் (risks) நிலையற்றவைகளையும் மேற்கொள்ளவேண்டியதாக இருக்கின்றது. காரணிகளை ஒருங்குசேர்த்துத் திறமையான உற்பத்தி முறைக்கு அவைகளைத் தொடர்புபடுத்தலிலும், அக் காரணிகள் எந்த வகையான பண்டத்தை உற்பத்திசெய்யவேண்டுமென்று அவர் முடிவு எடுப்பதிலும் விபத்துகளும் நிலையின்மைகளும் ஏற்படக் கூடும். உலகமானது யாதொரு மாற்றத்தையும் பெற்றிராத ஓர் இடமாகவும் (static) இருந்து, அங்கு மக்கள் நுகருகின்ற பொருள்களின் அளவும் ஒவ்வொரு மாதமும் ஒரே அளவாகவும், உற்பத்தி முறைகளில் மாற்றமெதுவுமில்லாமலும் இருக்குமானல், உற்பத்தியை ஏற்பாடு செய்தல், வழிப்படுத்துதல் ஆகிய பணியானது ஒரு செயல் நடத்தும் வழக்குமுறையாகவே (administrative routine) இருக்கும். உண்மையில் உலகம் அப்படி இருக்கவில்லையே? நாகரிகமும் பழக்கமும் அடிக்கடி மாறுகின்றன; அல்லது மக்கள் சில சமயங்களில் செல்வத்தில் வசதியானவர்களாகவும், சில சமயங்களில் வசதி குறைந்தவர்களாகவும் இருக்கின்றனர்; நுகர்வோர்களுடைய தொன்றுதொட்ட பழக்கங்களை, புதியனவாக வந்துள்ள பதிலிப் பொருள்கள் மாற்றியமைக்கும்படி தூண்டுகின்றன. இன்னோரன்ன காரணங்களால் பலதிறப்பட்ட பண்டங்களுக்கான தேவையில் அடிக்கடி மாற்றம் ஏற்படுகிறது. தற்கால உற்பத்தி முறையில், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் கடைவாயிலை அடைவதற்குப் பல மாதங்கள்—ஏன் பல ஆண்டுகட்கு முன்னரே அவைகளுக்குச் சாதனங்களை (அதாவது, அவைகளை உற்பத்தி செய்யும் செலவு முன்னதாகவே கொடுக்கப்படவேண்டியிருக்கிறது) அளிக்க வேண்டியுள்ளது. எனவே, உற்பத்தி செய்யப்பட்ட பொருளில் எத்தனை அலகுகள் விற்கக்கூடும்? அவைகளை என்ன விலைக்கு விற்க முடியும் என்பதையெல்லாம் நான்கு அல்லது ஐந்து திங்கட்கு முன்னரே யூகித்தறிதல் எளிதான செயலன்று. உற்பத்தித் தொழில்நுணுக்க முறைகளும்

நிலையானவைகளாக இருப்பதில்லை; ஒரு தொழில்முயல்வோன் ஓர் இயந்திரத்தை வாங்கி உற்பத்தியைச் செயற்படுத்துகிருரென வைத்துக்கொள்வோம். அவர் இயந்திரத்தை வாங்கிய ஒரு சில மாதங்களில், ஒரு புதிய சாதனம் (device) அல்லது புதிய உற்பத்தி முறை கண்டுபிடிக்கப்பட்டது என வைத்துக்கொள்வோம். இது அத் தொழில்முயல்வோனின் உற்பத்திமுறைகளைக் காலங்கடந்தவைகளாகச் செய்துவிடக்கூடும். அவருடைய போட்டியாளர்கள் கடைப்பிடிக்கும் உற்பத்தியாளர்களின் செய்முறையைக் காட்டிலும் அவரது முறைகள் செலவு மிக்கனவாகப் போகக்கூடும். எனவே, காலத்திற்கேற்றவாறு மாறுகின்ற உலகத்தில், தொழில்முயல்வோனின் தலையாய கடமை யாதெனில், நவீன பொருளாதார அமைப்பிலுள்ள நிலையின்மையைக் கணக்கீடு செய்து தெரிந்துவைத்துக் கொள்ளுதலும், அந் நிலையின்மையைத் தாங்கிக்கொள்ளுதலுமாகும்; நிலையின்மை எனக் கூறப்படுவது எதிர்காலத் தேவை, விலைகள், உற்பத்தி முறைகள் என்பனவற்றிலுள்ள நிலையின்மையாகும். ஓரளவிற்கு வழக்கமாக ஏற்படுகின்ற குறிப்பிட்ட சில வாணிப விபத்துகளைக் (business risks)காப்புறுதி (insurance) செய்து கொள்வதன்மூலம் தவிர்க்க முடியும். இவ் விபத்துகளைக் கணக்கிட்டு—புயல், தீ அல்லது திருட்டு இவைகளால் ஏற்படும் நஷ்டங்களை—தவிர்க்கலாம். இவ் விபத்துகளைக் கணக்கிட்டுக் காப்புறுதி செய்யும் பொறுப்பை ஒரு காப்புறுதிக் கம்பெனியின் கையில் ஒப்படைக்கலாம். ஆனால், எதிர்காலத் தேவை அல்லது அளிப்பு இவற்றில் ஏற்படும் நிலையின்மைகளை முன்கூட்டியே கணக்கிடுவது முடியாது. எனவே, இவைகளை மதிப்பீடு (assess) செய்யும் பொறுப்பினையும், அவற்றினைத் தாங்கும் பொறுப்பினையும் தொழில்முயல்வோனே ஏற்கவேண்டும்.

## 2. உத்தம காரணிச் சேர்க்கை (Optimum Factor Combination)

தொழில்முயல்வோனே, இன்ன பொருள்கள் இன்ன அளவில் உற்பத்தி செய்யப்படவேண்டுமென்பதைத் தீர்மானிக்கவேண்டும். அவருடைய முடிவு தவருக இருப்பின் அவருக்குக் கிடைக்கும் ஆதாயம் குறைவாக இருக்கும்; சில சமயங்களில் ஆதாயம் எதிர்க்கணியத்திலும் (negative) இருக்கும். அவர் ஒரு பண்டத்தை உற்பத்தி செய்யவேண்டுமென்று முடிவுசெய்துவிட்டார் என்று வைத்துக்கொள்வோம்; அப்பொழுதும் பண்டங்களை எவ்வாறு உற்பத்தி செய்வது என்னும் பிரச்சினை அவருக்கு எழும். எந்தப் பொருள்களும் ஒரே ஒரு செய்முறையில் உற்பத்தி செய்யப்படுவதில்லை. அநேகமாக எல்லாவகையான பண்டங்களுக்கும் பல்வேறுபட்ட பல செய்முறைகள் இருக்கின்றன. உதாரணமாக, மீன்

பிடிக்கும் தொழிலை எடுத்துக்கொள்வோம். மீன் பிடிக்கும் தொழில் ஒரு மிக எளிதான முறையைக்கொண்ட ஒரு பொருளாதாரச் செயல்போன்று பட்டாலும், மீன் பிடிக்கும் முறைகள் உண்மையில் பலதிறப்பட்டனவாக உள்ளன. ஒருவன் ஒரு கழியையும், அதில் கட்டப்பட்டுள்ள தூண்டில் கயிற்றையும் வைத்துக்கொண்டு மீன் பிடிப்பதிலிருந்து, தொலைநோக்கிக் கருவியையும் (radar) எதிரொலி (echo-sounding equipment) கொண்ட தற்கால வலைஞர் நாவாயை யும் (modern trawler) வைத்துக்கொண்டு (அதாவது, நிறைய அளவு முதலினையும் குறைந்த அளவு உழைப்பையும் வைத்துக்கொண்டு) மீன்பிடிக்கும் முறைவரையில் பல்திறப்பட்ட மீன்பிடிப்பு முறைகள் இருக்கின்றன.

தொழில்முயல்வோன் தான் உற்பத்தி செய்யவேண்டிய பொருள் இந்தவிதக் காரணிச் சேர்க்கையுடன் உற்பத்தி செய்ய வேண்டுமென்பதை எதன் அடிப்படையில் தீர்மானிக்கிறார்? தொழில் முயல்வோன், வேறு எந்த உற்பத்திக் காரணியின் சொந்தக் காரரைப்போன்றே, தனது பொருளாதார நடவடிக்கைகளில் இயன்ற அளவு உச்சமான பண ஊதியத்தைப் பெறுவதற்கே முயலுகிறார் என்று கருதப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட அளவு உற்பத்தியைச் செய்து, அதனைக் குறிப்பிட்ட ஒரு விலைக்கு விற்க வேண்டுமென்று அவர் முடிவுசெய்யும்போது, பண்டங்களை உற்பத்தி செய்வதில் குறைந்த உற்பத்திச் செலவை உண்டுபண்ணும் காரணிச் சேர்க்கையையே அவர் நாடுவார். அவருடைய ஊதியமானது, அவர் பயன்படுத்துகின்ற காரணிகளுக்கு அவர் கொடுக்கவேண்டிய ஊதியத்திற்கும் (அதாவது, உற்பத்திச் செலவு), உற்பத்தி செய்யப் பட்ட பொருளினை விற்றதால் கிடைக்கக்கூடிய வருமானத்திற்கு மிடையேயுள்ள வேறுபாட்டினைக் கொண்டதாக உள்ளது. உற்பத்திச் செலவு குறையுமானால் அவருடைய ஊதியமும் அதிகமாகும்.

தொழில்முயல்வோனது நிலைக்கும், தனிப்பட்ட நுகர்வோர் ஒருவரின் நிலைக்குமிடையே நெருங்கிய ஒற்றுமை காணப்படுகிறது. தனிப்பட்ட நுகர்வோரின் தன்மையை மூன்றாவது அத்தியாயத்தில் ஆராய்ந்தோம். குறிப்பிட்ட ஒரு தொகையைச் செலவழிப்பத னின்றும் உச்சமான பயன்பாட்டினை நுகர்வோர் தேடுவர். குறிப்பிட்ட கணியக் காரணிகளினின்றும் உச்சமான உற்பத்தியை அடையத் தொழில்முயல்வோர் பாடுபடுவார். அப்படியானால், நுகர்வோர் செலவினை ஆய்வு செய்யப் பயன்படுத்தப்பட்ட ஆய்வுச் சாதனங்களையே (analytical tools) ஒரு சிறு மாற்றத்துடன், தொழில்முயல்வோர் உற்பத்திச் சாதனங்களை எவ்விதத்தில் இணைக்கின்றார் என்பதனை ஆராயவும் பயன்படுத்திக் கொள்ளலாம். படம் 19-ல் ஓர் உதாரணம் கொடுக்கப்பட்டுள்ளது. படத்திலுள்ள

$Q_1Q'_1$, $Q_2Q'_2$ முதலிய கோடுகள் சமநோக்குக் கோடுகளுடன் ஒப்பிடத்தக்கனவாக இருக்கின்றன. உற்பத்தியாளரைப் பொறுத்த வரையில், இக் கோடுகள் அவர் உற்பத்தி செய்யும் பொருளின் பல்வேறு உற்பத்தி மட்டத்தை உணர்த்துவதாக உள்ளனவே ஒழிய மனநிறைவை உணர்த்தவில்லை. அக் கோடுகள் சமகணியக் கோடுகள் (isoquants) என அழைக்கப்படுகின்றன; காரணம், ஒவ்வொரு கோட்டிலும் உள்ள ஒவ்வொரு புள்ளியும் ஒரே கணிய உற்பத்தியை உணர்த்துகின்றன. சமநோக்குக் கோட்டுப் படத்தில், பண்டங்களின் கணியங்களிலிருந்து நுகர்வோர் பெறுகின்ற மனநிறைவை சமநோக்குக் கோடுகள் உணர்த்துவதுபோல, இப் படத்தின் அச்சுகளில் பலதிறப்பட்ட சேர்க்கைகளைக் கொண்ட உற்பத்திக் காரணிகளின் அளவுகள் (அந்த உற்பத்திப் பொருள்களை உற்பத்தி செய்வதற்குத் தேவையான உற்பத்திக் காரணிகளின் அளவுகள்) அளவிடப்பட்டுள்ளன.

உதாரணமாக, படம் 19 (a)-ல் உள்ள கோடு Q அளவு உற்பத்தியை விளைவிக்கும் முதல், உழைப்பு (இவைகள்மட்டுமே மாறும் காரணிகள் என்னும் எடுகோளில்) ஆகியவற்றின் சேர்க்கைகளைக் காட்டுகிறது. முதலின் ஓர் அலகினுடையதும், உழைப்பின் ஓர் அலகினுடையதுமான ஒப்பீடான விலையை **PA** என்னும் கோடானது உணர்த்துகின்றது. இந்தக் கோடு நுகர்வோர் வரவு செலவுத் திட்டக் கோட்டினை யொத்ததாக இருக்கிறது. இக் கோட்டில் தொடுமிடப் புள்ளியான $X_1$ என்பது Q அளவு உற்பத்தியைக் குறைந்தபட்ச செலவில் உற்பத்தி செய்யும் காரணிகளின் சேர்க்கை எதுவென்பதனை உணர்த்துகின்றது. இந்த உதாரணத்தில் $OC_1$ அலகுகள் முதலும், $OL_1$ அலகுகள் உழைப்புமே அவ்வாறு குறைந்தபட்ச செலவில் செய்யக்கூடிய காரணிகளின் சேர்க்கையாக இருக்கின்றன. இந்தப் புள்ளியானது, காரணிகளின் இறுதிநிலைப் பதிலீட்டுவீதமானது—அந்தப் புள்ளியில் ஏற்படும் சமகணியக் கோட்டின் சரிவினால் இது உணர்த்தப்படுகிறது—அவைகளின் ஒப்பீடான விலைக்குச் (இது விலைக்கோட்டின். சரிவினால் உணர்த்தப்படுகிறது) சமமானதாக இருக்கின்ற இடத்தை உணர்த்துவதாக உள்ளது. இப் புள்ளியானது நுகர்வோர் சமநிலைப் புள்ளியை ஒத்து இருக்கிறது. நுகர்வோர் சமநிலைப் புள்ளியில் இறுதிநிலைப் பதிலீட்டு வீதங்களும், பண்டங்களின் ஒப்பீடான விலைகளும் சமமாக இருக்கும். இந்தப் புள்ளியானது அவ்வாறு ஒரு குறிப்பிட்ட அளவு உற்பத்தியைக் குறைந்தபட்ச செலவில் உற்பத்தி செய்யக்கூடிய காரணிகளின் சேர்க்கையை உணர்த்துவதாக இருப்பதற்குக் காரணம் என்ன? இதனை எண்பிப்பதற்கு இந்தச் சேர்க்கையின் செலவை, அதே அளவு

உற்பத்தியை உண்டுபண்ணும் வேறு எந்தக் காரணிகளின் சேர்க்கையுடனுவது ஒப்புமை செய்தல் அவசியமாகிறது. ஓர் உற்பத்தியாளர், உதாரணமாக, $X_2$ என்னும் சேர்க்கையைப் பயன்படுத்துகிருரென்று வைத்துக்கொண்டால், அவர் $EX_1$ அளவு உழைப்பைக் குறைத்துக்கொள்ளக்கூடும். இத்தகைய $EX_1$ அளவு உழைப்பு அலகுகளின் சேமிப்பானது EF அலகுகள் முதலின் செலவிற்குச் சமமென்பதை PA என்னும் விலைக்கோடு உணர்த்துகிறது. ஆனுல், உற்பத்தியாளர், உண்மையில், $FX_2$ அலகுகள் முதலினைப் பயன் படுத்துகிருர்; $X_2$ என்னும் புள்ளியில் இதைவிட அதிகமாகப் பயன் படுத்துகிருர். இதைப்போன்றே உற்பத்தியாளர் $X_3$ என்னும் சேர்க்கையைப் பயன்படுத்துவராகில், அவரால் $X_1G$ அலகுகள் முதலினைச் சேமிக்க முடியும்; இதனை வைத்துக்கொண்டு தாராளமாக GH அளவு அதிகப்படியான உழைப்பு அலகுகளுக்கு ஊதியத்தை அளிக்க முடியும். எனினும், அவரது கூடுதலான உழைப்புத் தேவைகள் இதனைக் காட்டிலும் $HX_3$ அளவு அதிகமாகவே இருக்கும். $X_1$ என்னும் சேர்க்கைதான் உத்தேசத்திலிருக்கும் Q அளவு உற்பத்தியை இயன்ற அளவிற்கு மிகவும் குறைந்த செலவில் உற்பத்தி செய்ய முடியும். இந்தச் சேர்க்கையில்தான் காரணிகளின் இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் அவைகளின் ஒப்பீடான விலைக்குச் சமமானதாக இருக்கிறது.




படம் 19.

படம் 19 (b)-ல் காட்டப்பட்டுள்ள உதாரணங்களைப்போன்று ஒவ்வொரு செயல்முறை உற்பத்தி மட்டத்திற்கும் இதைப்போன்ற சமகணியக் கோடுகளை வரையலாம். இக் கோடுகளின் தொடு புள்ளிகளையெல்லாம் இணைத்தால் பெருக்கப் பாதையான (expansion path) SS′ கிடைக்கிறது. இது தொழில் முயல்வோன் உற்பத்தி

யின் பல்வேறு மட்டங்களை உற்பத்திசெய்யப் பயன்படுத்தும் காரணி களின் கணியங்களை உணர்த்துகிறது.

ஒரு குறிப்பிட்ட அளவு உற்பத்தியைக் குறைந்தபட்ச உற்பத்திச் செலவில் உற்பத்தி செய்யக்கூடிய காரணிகளின் சேர்க்கையே உத்தம அல்லது மிகச் சிறந்த சேர்க்கையாகும். சம்பந்தப்பட்ட பொருளை உற்பத்தி செய்வதற்கு இதுவே மிகச் சிறந்த (மிக மலிவான) வழியாகும். இச் சேர்க்கையானது தொழில்முயல்வோரின் இயக்குதல், அமைத்தல் ஆகிய பணிகளுடன் கூடிய நிலம், உழைப்பு, முதல் ஆகியவற்றின் ஒரு சேர்க்கையாகும். இந்த உற்பத்தி முறையில்தான் நாட்டின் கிடைப்பருமையான சாதனங்கள், ஒரு குறிப்பிட்ட அளவு செல்வத்தை உற்பத்தி செய்வதற்கு மிகக் குறைவாகத் தியாகம் செய்யப்படுகின்றன. எனவே, இத்தகைய ஓர் உத்தமச் சேர்க்கையானது பல்வேறு வகைப் பண்டங் களுக்குப் பலதிறப்பட்ட காரணிகளின் பல்வேறு விகித சேர்க்கைகளாக உள்ளது; சில பண்டங்கள் நிறைய அளவு நிலத்துடனும், அதற்கு ஒப்பீடாக மிகக் குறைந்த அளவு உழைப்பு முதலுடனும் மிகவும் மலிவாக உற்பத்தி செய்யப்படுகின்றன; அதே சமயத்தில், இன்னும் மற்றப் பொருள்கள் அதிக அளவுகள் முதலுடனும் அவைகளுக் கொப்பீடாக மிகக் குறைந்த நிலம், உழைப்பு இவற்றுடனும் சிறப்பாக உற்பத்தி செய்யப்படுகின்றன. ஒரு பண்டத்தை உற்பத்தி செய்வதற்கான உத்தமச் சேர்க்கையானது புதிய தொழில் நுணுக்க முறைகளாலும், புதிய கண்டுபிடிப்புகளாலும் அவ்வப் போது மாறும். இவைகளில் ஏற்படும் மாற்றங்களால் சமகணியக் கோடுகளின் இடம் அல்லது சரிவில் (position or slope) மாற்றங்கள் (shifts) ஏற்படும். கடைசியாக, உத்தம அளவானது பல்வேறு காரணிகளின் ஒப்பீடான உற்பத்திச் செலவுகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டதாக இருக்கிறது. நிலம் அதிக அளவில் கிடைக்குமானால், ஒரு குறிப்பிட்ட பண்டத்தை உற்பத்தி செய்ய ஒரு சேர்க்கை உத்தமச் சேர்க்கையாக இருக்கும்; எனவே, அச் சேர்க்கை மிகவும் மலிவானதாக இருக்கும். ஆனால், உழைப் பிற்கு ஒப்பீடாக நிலம் விலையதிகமானதாக இருப்பின், முற்றிலும் வேறான ஓர் உத்தம அளவே உத்தமச் சேர்க்கையாக இருக்கும். இத்தகைய ஒரு மாற்றத்தை, விலைக்கோட்டின் சரிவு பொருத்த மாகச் சரிசெய்துகொள்ளுதலைக்கொண்டு ஆராய்ந்துணரலாம்.

### 3. பேரளவு உற்பத்தி (Large-scale Output)—வளர்ந்துசெல் விளைவுகள் (Increasing Returns)

உற்பத்தியின் அளவு அதிகரிக்க அதிகரிக்கச் சாதனங்கள் ஒவ்வொன்றின் சராசரி உற்பத்தியானது குறைந்துகொண்டே

செல்லும் என்பது குறைந்துசெல் விளைவு விதியாகும். இந்த விதியானது விவசாய உற்பத்தி சம்பந்தமாக இயற்றப்பட்டது. சாதனங்களின் ஒவ்வோர் அலகிற்குமான சராசரி உற்பத்தி, உற்பத்தியின் ஒவ்வோர் அலகிற்குமான சராசரி உற்பத்திச் செலவிற்கு நேர்மாருக இருக்கும். ஒரு பண்ணையில் 10 மனிதர்கள் வேலைக்கமர்த்தப்பட்டபோது, ஆண்டொன்றுக்கு 500 அலகுகள் உற்பத்தி செய்யப்படுகின்றதென வைத்துக்கொள்வோம். இதனை, ஒரு மனிதரின் சராசரி உற்பத்தி ஓர் ஆண்டிற்கு 50 அலகுகள் என்ருே, அல்லது உற்பத்தியின் ஓர் அலகின் சராசரி உற்பத்திச் செலவு ஒரு மனித-ஆண்டில் (man-year) 1/50 பங்கு என்ருே கூறலாம். எப்படிச் சொன்னலும் கருத்து ஒன்றுதான். எனவே, குறைந்துசெல் விளைவு விதிக்குக் கீழ்க்கண்டவாறு விளக்கம் சொல்லலாம். அளிப்பில் மாருமல் நிலையாக உள்ள மற்ருெரு காரணிமீது கூடுதலாகச் செலுத்தப்படும் உற்பத்திக் காரணிகள், ஒரு குறிப்பிட்ட அளவிற்குமேல் சராசரி உற்பத்திச் செலவை அதிகரிக்கச் செய்யும்.

ஏற்கெனவே வலியுறுத்திக் கூறியதுபோல், உற்பத்தி நடவடிக்கையின் இத்தகைய ஒரு பண்பு விவசாயத்திற்குமட்டுமே உரியதன்று. இது தொழிலுக்கும் செயற்படுவதாக உள்ளது. தொழிலிலும், ஒரு தொழில் முயல்வோன் ஒரு குறிப்பிட்ட அளவிற்குமேல் உழைப்பின் கூடுதலான அலகுகளை மாருமல் நிலையாக உள்ள முதல் இருப்பின் மீது செலுத்தச் செலுத்த, அவைகள் குறைந்துசெல் விளைவுகளை அளிப்பதையே அறிவார். அரியவான சில சந்தர்ப்பங்களில், மாருமல் நிலையாக உள்ள உழைப்புச் சக்தியானது அதிகமான அளவு முதலுடன் பரவலாகச் சேர்க்கப்படும்போதும் இதே விதமான விளைவே ஏற்படும். உற்பத்தி நடவடிக்கையின் இத் தன்மையையே படம் 19-ல் உள்ள சமகணியக் கோடுகளின் வடிவம் பொதுவாகப் பிரதிபலிப்பதாக உள்ளது. உற்பத்தியின் எந்த மட்டத்திற்காயினும் பயன்படுத்தப்படுகிற ஒரு காரணியின் உத்தமச் சேர்க்கையினின்றும் வேறுபட்டுத் தொழில் நடத்தினல், அது அதிகரித்த உற்பத்திச் செலவை ஏற்படுத்திவிடும்; அல்லது இதனை வேறு வழியில் கூறப்போனல், பயன்படுத்தப்பட்ட சாதனங்களின் சராசரி உற்பத்தி குறைவதை இது ஏற்படுத்திவிடுமென்று கூறலாம்.

குறைந்துசெல் விளைவு விதியானது, தொழிலியல் அறிவும் தொழில்நுணுக்க சாத்தியங்களும் பொதுவாக மாற்றமேதுமின்றி நிலையாக உள்ள ஒரு சூழ்நிலைக்கே பொருந்தத்தக்கதாக இருக்கிறது. தொழிலில் உற்பத்தி பெருகுமானல், அது தொழில் நுணுக்க சாத்தியங்களை நிலையாக இருக்கச் செய்யாது. தொழில்

முயல்வோன், தான் குறைந்த அளவில் பொருள்களை உற்பத்தி செய்துகொண்டிருந்தபோது தேவைப்படாத புதிய முறைகளும் உற்பத்தி நுணுக்கங்களும் உற்பத்தியின் அளவு அதிகரிக்கப்படும் போது தோன்றும். இதனால் பயன்படுத்தப்படும் சாதனங்களின் சராசரி விளைவுகள் (average returns) அதிகரிக்கும். சென்ற ஆய்வின்படி இதைக் கூறவேண்டுமாயின், உற்பத்திக் காரணிகளின் மீது தொழில்முயல்வோனின் மொத்தச் செலவீடு அதிகரிக்க அதிகரிக்க, சமகணியக் கோடுகள் மேலும்மேலும் விலகிச் சென்று கொண்டேயிருக்கின்றன என்று கூறலாம். குறைந்துசெல் விளைவு விதியின் நிலைக்கு மாறாக, ஒரு காரணியின் அதிகமான அளவுகளை, ஒரு குறிப்பிட்ட கால அளவில், மற்றொரு காரணியின் அல்லது காரணித் தொகுதியின் நிலையான அளவுடன் சேர்த்துத் தொழில் செய்யும்போது, தொழில் வளர்ச்சியில் பெரும்பாலும் வளர்ந்து செல் விளைவு விதியே செயற்படுகிறது. இதனால் தொழில் முயல்வோர்களுக்குப் பேரளவு உற்பத்திச் சிக்கன நலன்கள் என்னும் நன்மை கிட்டுகின்றது. உற்பத்தியாளர் தமது உற்பத்தி அளவை அதிகரிக்க அதிகரிக்க இச் சிக்கன நலன்களை அதிகமாகப் பெற்றுக் கொண்டேயிருப்பார்.

இச் சிக்கன நலன்களை அகச்சிக்கன நலன்களென்றும், புறச் சிக்கன நலன்களென்றும் இருவகையாகப் பிரிக்கலாம். அகச்சிக்கன நலன்களென்பவை ஒரு தனிப்பட்ட நிறுவனம் வளர்ச்சியடையும் போது எழுகின்ற சிக்கன நலன்களாகும்; இச் சிக்கன நலன்கள் அந்த நிறுவனம்மட்டுமே துய்ப்பதாக உள்ளனவாகும்; அவைகள் தொழில்நுட்பத் திறமை வழிவந்தவைகளாகவோ, பேரம் அல்லது நிதிய வழி (marketing or financial in nature) வந்தவைகளாகவோ இருக்கக்கூடும். தொழில்நுட்பச் சிக்கன நலன்களென்பவை செய் முறை உற்பத்திச் செலவினைக் குறைப்பதனால் ஏற்படும் சிக்கன நலன்களாகும். இந்த வரிசையில் வைத்தெண்ணத்தக்க சிக்கன நலன்களில் பெரும்பகுதியும் அதிகரித்த உழைப்புப் பகுப்பினால் தான் ஏற்படுகின்றது. ஒரு குறைவான உற்பத்தியை வைத்துக் கொண்டு ஒரு செய்முறைக்கோ அல்லது செய்முறையின் ஒரு பகுதிக்கோ ஒரு மனிதரை நியமிப்பது என்பது இயலாமற்போகலாம். ஆனால், உற்பத்தி அதிகரிக்கும்போதும், உழைப்புச் சக்திகள் அதிகரிக்கும்போதும் அதிகமான அளவு சிறப்புத் திறனை அது விளைவிக்கும் நன்மைகளுடனும் பயன்படுத்திக்கொள்ள இயலும். இது நிருவாகம், தொழில்கள் ஆகிய இரண்டிற்குமே பொருந்தும். ஒரு சிறிய நிறுவனத்தில் நிருவாகியே தொழிலாளர் தொடர்பி லிருந்து விற்பனையை ஓங்கச் செய்யும் பணிவரையில் எல்லாவகை யான நிருவாகத்தையும் தானே கவனித்தாகவேண்டும். ஒரு பெரிய

நிறுவனமாக இருந்தால், இந்தப் பணிகள் ஒவ்வொன்றுக்குமே ஒரு சிறப்புத் திறனுளரை நியமிக்கக்கூடும். இரண்டாவதாகவுள்ள சாத்தியக்கூறு யாதெனில், இயந்திரங்கள் பயன்படுத்துவதாகும். உதாரணமாக, ஒரு நிறுவனத்தில் அதிவேகத் துளையிடும் பொறி (high speed drilling machine) பயன்படுத்தப்படுகிறதென்று வைத்துக்கொள்வோம். அந்த நிறுவனத்தின் வார உற்பத்தி அந்தப் பொறிக்கு ஒருமணி நேரத்திற்கே வேலை கொடுக்குமளவிற்கு இருக்குமாயின், அது பொருளாதார நலனை அளிப்பதாகாது. ஒரு பெரிய நிறுவனத்தில்தான் அதன் சக்திகள் முழுவதையும் பயன் படுத்திக்கொள்ள முடியும். சிறிய நிறுவனத்தைவிடப் பெரிய நிறுவனத்தில்தான் இயந்திரங்களை அதிகமாகப் பயன்படுத்திக் கொள்ள முடியும். இது மட்டுமன்று; சாதனங்களின் அளவு பெரிதாக இருக்குமானால், அவற்றை நிர்மாணிப்பதும் இயக்குவதும் கூட மலிவானதாக இருக்கும். உலைப் பக்கங்களை (sides of the furnace) இரு மடங்காக அகலப்படுத்துவதன்மூலம் அதன் உற்பத்திச் சக்தியை இரு மடங்கிற்குமேல் அதிகரித்துக்கொள்ள முடியும். ஒரு பெரிய லாரிக்கும், சிறிய லாரிக்குத் தேவைப்படுகின்ற அளவிற்கே லாரி ஓட்டுபவர்கள் தேவைப்படுகின்றனர். இப்படித் தான் மற்றச் சாதனங்களுக்கும் தேவைப்படுகிறது. மேலும், ஒரு பெரிய ஆலையாக இருப்பின், அதற்குச் செய்முறைத் தொகுப்பினல் (linking of processes) ஏற்படும் நலன்களும் கிட்டுகின்றன. அதாவது, உற்பத்தி முறையைத் தொடர்வரிசைப்படுத்தி உற்பத்தி யைச் செய்வதன்மூலம், உற்பத்தியைத் தனித்தனிக் கட்டங்களாகப் பிரித்து உற்பத்தி செய்வதனல் ஏற்படும் விரயங்களைத் தவிர்க்க முடியும். உதாரணமாக, ஒரு பெரிய எஃகு ஆலையானது (a large steel mill) இரும்புக் கனிப்பொருளை வார்ப்பு இரும்பாகவும் (pig-iron), வார்ப்பு இரும்பைத் தூய்மைப்படுத்தப்படாத எஃகாகவும் (crude steel), தூய்மைப்படுத்தப்படாத எஃகை முற்றுருப்பெற்ற எஃகு தகடுகளாகவும் (finished steel strips) தொடர்வரிசையாகச் செய்கின்றது எனில், இவ் வேலைகளைத் தனித்தனியே செய்யும் சிறிய தொழிற்சாலைகளைக் காட்டிலும் குறைவான கடத்து செலவுகளையும், உருக்கு, மறுவுருக்குச் செலவுகளையுமே (costs of heating and re-heating) ஏற்க நேரிடுகிறது.

பேரச் சிக்கன நலன்கள் (marketing economies) கொள்முதலிலும் விற்பனையிலும் கிடைக்கக்கூடும். கொள்முதலைப் பொறுத்தவரை யில், கச்சாப் பொருள்களின் தேவையானது ஒரு சிறப்புத்திறனுள்ள கொள்முதலாளரை (a skilled buyer) நியமித்துக்கொள்ளுமளவிற்கு அதிகமாக இருக்குமானல், நிறைய இலாபம் கிடைக்கும். அதிக அளவில் கொள்முதல் செய்வதில், குறைந்த அளவில் கொள்முதல்

செய்வதில் ஏற்படுவதைவிட நிறைய இலாபம் ஏற்படும். ஏனெனில், வாங்குகின்ற பண்டங்களுடைய கணியங்கள் அதிகரிக்கும் விகிதத்தில் தூக்குக் கூலி, கடத்து செலவு ஆகிய செலவுகள் அதிகரிப்பதில்லை. மேலும், விற்பனையாளர்கள், பெரும்பாலும் அதிகமான தேவைகளைக் கோரும் முக்கிய வாடிக்கைக்காரர்களுக்கே அதிகச் சலுகைகளைக் கொடுக்கின்றனர். பொருள்களை அதிகமான அளவில் விற்கும்போது ஒரு பொருளின் சராசரி விற்பனைச் செலவு பொதுவாகக் குறைவானதாகவே இருக்கிறது. ஏனெனில், விற்பனை செய்யப்படும் அளவு எந்த அளவாக இருந்தபோதிலும், ஒரு குறிப்பிட்ட அளவுள்ள விற்பனை அமைப்பு எப்படியும் தேவைப்படுகிறது. ஊர்ஊராகச் சென்று தேவைகளைச் சேகரிக்கும் வாணிபப் பயணிகள் ஒரு சிறிய தேவையைச் சேகரிப்பதில் எவ்வளவு நேரத்தையும் முயற்சியையும் (time and effort) செலவிடுகின்றனரோ, அதே அளவு நேரத்தையும் முயற்சியையும்தாம் பெரிய அளவு தேவையைச் சேகரிப்பதற்கும் செலவிடக்கூடும். பெரிய நிறுவனமாயினும் சிறிய நிறுவனமாயினும், கணக்குப் பதிவியற் செலவு (cost of book-keeping), நிருவாகச் செலவு பெரும்பாலும் ஒன்றுகவே இருக்கின்றன. பண்டங்கள் அதிக அளவில் உற்பத்தி செய்யப்படுமானுல், அவைகளைக் கடத்துவதற்கென்றே சிறப்பாக அமைக்கப்பட்ட சாதனங்களையும் (specially designed transport facilities) விற்பனைத் துறைகளையும் (sales outlets) வைத்துக்கொள்ள முடியும். இதனுல் விற்பனை முறை அதிகபட்சமான திறமையையும் பயனையும் கொண்டதாக இருக்கும்.

நிதியச் சிக்கன நலன்களும் தெளிவாகக் காணப்படுகின்றன. ஒரு பெரிய நிறுவனத்திற்குச் சிறிய நிறுவனத்தைக்காட்டிலும் வணிக விபத்துகள் குறைவாகவே இருக்கின்றன. எனவே, முதலீடு செய்பவர்கள் பெரிய வணிக நிறுவனங்களுக்குக் குறைந்த வட்டிக்கும் கடனுதவி அளிக்கத் தயாராக இருக்கின்றனர். பெரிய நிறுவனத்திற்குக் கடன் தேவைப்படும்போது பாங்குகள் கடனுதவி அளிக்க அவ்வளவாகத் தயங்குவதில்லை. முக்கியமான வாடிக்கைக்காரர்களுக்குச் சாதாரணமாக உதவியளிப்பதை மறுத்துவிடக்கூடாதல்லவா? முதல் அங்காடியில் பணம் திரட்டுவதில் ஏற்படும் செலவு, திரட்டப்படும் பணத்தின் அளவிற்கு ஏற்றவாறு அதிகரிப்பதில்லை— அதாவது, சிறிய அளவில் பணம் திரட்டுவதற்கு என்ன செலவாகிறதோ அதே அளவு செலவுதான் பெரிய அளவில் பணம் திரட்டுவதற்கும் செலவாகிறது. ஆக, பெரிய அளவில் கடன் பெறுபவருக்குக் கடன் பெறும் வகையில் ஏற்படும் சராசரிச் செலவு இந்த வகையில் குறைவாகவே இருக்கிறது.

வளர்ச்சியடைந்து செல்லும் ஒரு தனிப்பட்ட நிறுவனத்திற்குக் கிடைக்கின்ற இத்தகைய சிக்கன நலன்கள் யாவும் அகச்சிக்கன நலன்கள் என்று அழைக்கப்படும். புறச்சிக்கன நலன்கள் ஒரு தொழிலின் வளர்ச்சியினின்றும் ஏற்படக்கூடிய இலாபங்களாகும். இந்த இலாபங்கள் அந்தத் தொழிலிலுள்ள நிறுவனங்கள் யாவற்றிற்கும், அவைகள் சிறியனவாக இருப்பினும் பெரியனவாக இருப்பினும், கிடைப்பனவாகும். ஒரு தொழிலானது பெரிதாக வளர ஆரம்பித்ததும் அதில் சிதறல் (disintegration) ஏற்படுகிறது. அதாவது, அத் தொழிலின் செய்முறைகளில் குறிப்பிட்ட ஒன்றைத் தனியாகப் பிரித்தெடுத்து, அதனைச் சிறப்புத் திறன்வாய்ந்த ஒரு நிறுவனம் உற்பத்திசெய்ய ஆரம்பிக்கும். இதனால் அச் செய்முறையில் அந்த நிறுவனம் பேரளவு உற்பத்தியிலுள்ள எல்லாச் சிக்கன நலன்களையும் எய்தும். இந்த நிறுவனத்தின் உற்பத்தியை அத் தொழிலிலுள்ள ஏனைய நிறுவனங்களும் பயன்படுத்திக்கொள்ளும். காரணம், அவைகள் ஒவ்வொன்றும் அப் பொருள்களைத் தாங்களே செய்துகொள்ள ஆரம்பித்தால், உற்பத்தியைக் குறைந்த அளவில்தான் செய்ய முடியும் என்பதோடு அதிகச் செலவும் ஆகும். ஒரு தொழிலானது, அதனுடைய துணைத்தொழில்களையும் ஆதரிக்குமளவிற்கு வளர்ச்சியடைந்துவிட்டால், துணைத்தொழில்கள் (இவைகள் 6ஆம் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன) நிறைய வளர ஆரம்பிக்கும். இத் துணைத்தொழில்களால் அத் தொழிலிலுள்ள நிறுவனங்களுக்கு நலன்கள் விளையும். சிறப்புத்திறன் வாய்ந்த கொள்முதல், விற்பனை நிறுவனங்களும் நிறுவப்படும். போதிய அளவில் விரயப் பொருள்கள் தொழிலில் ஏற்படுமானால் அவற்றைப் பயன்படுத்திக்கொள்ளும் நிறுவனங்களும் நிறுவப்படுமாதலால், உற்பத்திச் செலவைக் குறைத்துக்கொள்ள வழியேற்படும். மேலும், ஆராய்ச்சிக் கழகங்களும் செய்திக் கழகங்களும் தோன்றி அத் தொழிலுக்குச் சிறப்பாகப் பணிபுரியும். இவைகளை ஒரு தனி நிறுவனம் வேலையிலமர்த்திக் கொண்டு, ஊதியம் கொடுத்து, அவைகளின் பணிகளைப் பெறுவதென்பது இயலாதல்லவா? பெரும்பாலும் இத்தகைய சிக்கன நலன்கள் ஒரு குறிப்பிட்ட தொழிலில், ஒரு குறிப்பிட்ட இடத்தில் சிறப்புத் திறன் பெற்றுப் பெருகியிருக்கும்போது விளைகின்றன; ஆனால், அவைகள் இந்த வகையில்தான் இருக்கவேண்டுமென்ற நியதி ஒன்றுமில்லை.

இந்தச் சிக்கன நலன்கள் யாவும் (அகச்சிக்கன நலன்களும் புறச்சிக்கன நலன்களும்), ஒரு வகையில், சில உற்பத்திக் காரணிகள் பகுக்க முடியாதபடி இருப்பதால்தான் ஏற்படுகின்றன—அவைகள் மொத்தமாகவே கிடைக்கின்றன என்று கூறலாம். உழைப்பானது முற்றிலும் சிறிய அலகுகளாகப் பகுக்கப்படத்தக்கதாக இருப்பின்,

உழைப்புச் சக்தி எவ்வளவுதான் சிறியதாக இருந்தபோதிலும், உத்தம உழைப்புப் பகுப்பினைக் கையாள முடியும் ; உழைப்பின் ஒரு சிறு பகுதியை ஒவ்வொரு தனிப்பட்ட செய்முறைக்கும் பயன் படுத்திக்கொள்ளலாம். ஆயினும், ஒரு மனிதன் (அல்லது ஒரு பெண்), உள்ளவற்றில் மிகச் சிறிய உழைப்பு அலகாக இருப்பதால், பல்வேறு செய்முறைகளுக்கும் ஒரு மனிதனை வேலையிலமர்த்திக் கொள்ள நேரிடுகிறது (இதைவிடக் குறைந்த அளவில் வேலையில் அமர்த்திக்கெள்ளப்படுவது சாத்தியமில்லை!). ஒரு நிறுவனத்தின் உற்பத்தியளவு மிகக் குறைவாக இருந்து, அது ஒரு மனிதனின் சிறப்புத் திறனுக்குக்கூட இடமளிப்பதாக இல்லாதவரையில், இவ்வாறு வேலையிலமர்த்திக்கொள்வது சாத்தியமாக இருக்கும். இதைப்போலவே அதிகரித்த இயந்திரங்களைப் பயன்படுத்துவதால் ஏற்படும் தொழிலியல் சிக்கனநலன்கள் யாவும் ஒரு சிறிய அளவு உற்பத்தியாளருக்குக் கிட்டுவதில்லை. அவரால் ஓர் இயந்திரத்தின் சிறிய பகுதியைத் தன் தொழிலில் நிறுவமுடியாதல்லவா? அவருடைய தொழிலானது ஓர் இயந்திரத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளுமளவிற்குப் பெரியதாக இருந்தால்தான், அவர் ஓர் இயந்திரத்தைப் பயன்படுத்த முடியும். தொழில்நுணுக்க வளர்ச்சி, புதிய கண்டுபிடிப்புகள் ஆகியவற்றினின்றும் கிடைக்கக்கூடிய முழு நன்மைகளும், அந் நன்மைகளைப் பெறக்கூடிய அளவிற்குப் பெரியன வாக இருக்கும் நிறுவனங்களையே சென்றடைகின்றன.

### 4. சிற்றளவு உற்பத்தி (Small-scale Output)

பேரளவுத் தொழில் உற்பத்தியில் முக்கியமான சிக்கனநலன் கள் தோன்றி சராசரி உற்பத்திச் செலவைக் குறைக்கின்றன என்று கூறும்போது, உற்பத்தி முறையில் சிற்றளவு உற்பத்தி எவ்வாறு இடம் பெறுகிறது? அவைகளுக்கும் இடம் உண்டு என்பதனை 1961ஆம் ஆண்டில், ஐக்கிய அரசாங்கத்தில், 11 மனிதர்களுக்கும் குறைவான அளவில் தொழிலாளர்களை வைத்துச் செய்பொருள்களைச் செய்துவந்த தொழில்கள் சுமார் 140,000-த்திலிருந்து 200,000 வரை யிலும் இருந்தன (செய்பொருள் தொழில்களில் இருந்த மொத்த வேலையில் இச் சிற்றளவுத் தொழில்கள் 10 சதவீதத்திற்கும் குறை வான வேலையையே அளிக்கக்கூடியனவாக இருப்பினும்) என்னும் நிகழ்ச்சி, சிற்றளவுத் தொழில்கள் வாழும் என்பதற்குச் சான்றாக இருக்கிறது. இத்தகைய சிறிய நிறுவனங்களில் பலவற்றை ஒரு நிறுவனம் கூட்டாக உரிமையாக்கிக்கொண்டிருக்கக்கூடும். ஆயினும், சிறு நிறுவனங்கள், பிரிட்டிஷ்தொழிலைவிட்டு மறைந்துவிட வில்லை என்பதுமட்டும் தெற்றெனவே விளங்குகின்றது. சிற்றளவுத் தொழில்களின் வளர்ச்சிக்கு முக்கியக் காரணமாக இருப்பது

அங்காடி அளவின் வரையறையே ஆகும். அங்காடியில் குறைந்த அளவில் தான் உற்பத்தி செய்தவற்றை விற்கமுடியும் என்ற நிலை இருக்கும்போது, பேரளவில் உற்பத்தி செய்வதில் யாதொரு பயனுமில்லை. பண்டங்களை ஓரிடத்திலிருந்து மற்ற இடங்களுக்குக் கடத்திச் செல்லும் பிரச்சினைகளாலும் அங்காடிகள் மிகவும் வரையறுக்கப் பட்டவையாக உள்ளன. சான்ருக, மக்கள் தங்கள் கைக்கெட்டிய தூரத்திலேயே கடைகள் இருக்கவேண்டுமென்று விழைகின்றனர். ரொட்டியை வெகு அதிக தூரத்திலுள்ள இடங்களுக்குக் கொண்டு செல்ல முடியாது. கார் நிறுத்தும் குச்சில்கள், சலவை நிலையங்கள், உணவுச்சாலைகள் ஆகியவைகளை, அவைகள் எங்கு தேவைப் படுகின்றனவோ அங்குதான் நிறுவியாகவேண்டும். நாட்டிலுள்ள பால் முழுவதையும் மைய நிறுவனமொன்று ஏற்று நடத்துமானுல், பால் பதனிடும் செலவுகளை மிகக் குறைந்தபட்சமாகச் செய்துவிட முடியும். ஆனுல், இந்தத் தொழிலுக்கு உள்ளூர் அங்காடியே மிகவும் பயன்தரத்தக்க முறையில் இருக்கும். ஆகவே, இத் தொழிலை நாட்டு மட்டத்தில் அமைப்பது என்பது பயனற்ற செயலாகும். இதேபோன்றுதான், செங்கல் உற்பத்தியை மைய நிறுவனம் ஒன்றின்மூலம் உற்பத்தி செய்தால், உற்பத்திச் சிக்கன நலன்களைப் பேரளவில் கிடைக்கப்பெறலாம். ஆனுல், அவ்வாறு உற்பத்தி செய்யப்பட்ட செங்கற்களைப் பரவலாக இருக்கின்ற பல்வேறு இடங்களுக்கு ஏற்றிச்செல்வதில் அதிகக் கடத்து செலவுகள் ஏற்படுமாதலால், கிடைக்கப்பெறும் உற்பத்திச் சிக்கன நலன்களுக்கு மேலாகவே இச் செலவினங்கள் ஏற்படும்.

இரண்டாவதாக, சில தொழில்களின் தன்மையே, அவைகளைச் சிற்றளவு உற்பத்தியைத் தேவைப்படும்படி செய்கின்றது. உதாரணமாக, விவசாயத்திலும் கட்டடத் தொழிலிலும், வேலையானது, ஒரு பரந்த நிலவாரி எல்லையில் செய்யப்படவேண்டியதாக இருப்பதால், அவைகளை மையப்படுத்துதல் இயலாது.

மூன்ருவதாக, ஒரு சிற்றளவு நிறுவனமானது (அமைப்பில் சிக்கல்கள் குறைந்தும், முதலிலும் உழைப்பிலும் தீவிரமான சிறப்புத்திறன் அதிகமில்லாமலும் இருக்கின்ற காரணத்தால்) உற்பத்தி முறையில் மிகவும் இணக்கமானதாகவே இருக்கிறது. தேவையில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்றவாறு பெரும்பாலும் தன்னைப் பக்குவப்படுத்திக்கொள்கிறது. கார்களைப் பெருமளவில் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்றில், கார்களின் உருவ அமைப்பு மாற்றி அமைக்கப்படுமானுல், பல வாரங்கள் அல்லது மாதங்களுக்கு உற்பத்தியில் நிலைமாற்றம் ஏற்படும்; இதனுல் ஏராளமான முதல் தேவைப் படக்கூடும். ஆனுல், சிறியதும் குறைந்த சிறப்புத் திறனும்

கொண்டதொரு தொழிற்சாலையில், பண்டங்களின் அமைப்பில் ஏற்படு கின்ற மாற்றங்கள் எந்தவிதமான கடுமையான இடர்ப்பாட்டினையும் ஏற்படுத்தாமல் ஏற்கப்படுகின்றன. நாகரிகம் ஆதிக்கம் செலுத்து கின்ற அங்காடிகளிலும், எந்தக் காரணத்திற்காகவும் தேவையானது ஊசலாடிக்கொண்டிருக்கிற (oscillate) அங்காடிகளிலும் இத்தொழில் கள் முக்கியம் வாய்ந்தவைகளாக இருக்கின்றன. செய்பொருள்கள் ஒவ்வொன்றும் தனி மனிதனின் தேவையை நிறைவேற்றுவதாக இருப்பின் (உதாரணமாக, தையல் தொழில் அல்லது பழுதுபார்க்கும் தொழில்),—தரப்படுத்தப்பட்ட வகையில் இல்லாமல்—அவைகளுக்குச் சிற்றளவுத் தொழிலே மிகவும் ஏற்றதாகும்.

கடைசியாக, தொழிலியலான சக்திகள் சில சமயங்களில் ஒரு நிறுவனத்தின் தொடர்ந்த வளர்ச்சியினைக் கட்டுப்படுத்துவனவாக இருக்கும். ஒரு நிறுவனம் மிகப் பெரியதாக இருக்குமானால், அதனை ஒரே ஒரு தொழில் முயல்வோனால் திறமையாக நிருவகிக்க முடியாது. நிறுவனம் மேற்கொண்டு வளர்ச்சியடைவதற்குப் போதிய நிதிய வசதிகள் இல்லாமற்போகலாம். போட்டியாளரின் அங்காடியில் புகுந்து தன் உற்பத்திப் பொருள்களைப் பெருமளவில் விற்பனை செய்வதற்குச் செலவு மிக்க விற்பனை, விளம்பர நடவடிக்கை கள் தேவைப்படலாம். மேலும், தொழில் முயல்வோர்களுக்கும் ஏனைய மனிதர்களைப்போன்றே சோர்வு மனப்பான்மை (inertia) ஏற்பட்டு, தாங்கள் உற்பத்தியை அதிகரிப்பதன்மூலம் இலாபம் பெறக்கூடிய வழிவகை இருப்பினும், தங்களது உற்பத்தியைப் பெருக்காமலிருக்கவும்கூடும்.

சிற்றளவுத் தொழில்கள் வாழுகின்றன. பேரளவு உற்பத்தியில் பெருவாரியாகத் தொழிலியல் நன்மைகள் கிடைப்பதாக இருந்துங் கூட, சிற்றளவுத் தொழில்கள் தொடர்ந்து நீடிப்பதற்கான வாய்ப்பு கள் இருக்கின்றன. எப்போதுமே, ஒரு தொழிலில் உள்ள நிறுவ னங்களுக்கு, கோட்பாட்டளவில் உத்தம அளவு என்று ஒன்றுண்டு. தொழிலியற் காரணிகள் பேரளவு உற்பத்தி நிறுவனங்களை வளர்ப்பனவாக உள்ளன; அதே சமயத்தில் அங்காடிக் காரணிகள் (இன்னும் மற்றக் காரணிகளும்) சிறிய நிறுவனத்தை வளர்ப்பனவாக உள்ளன. உத்தம அளவு என்பது இவ்விருவகைக் காரணிகளின் நன்மைகளையும் பெறக்கூடிய வகையில் சிறிய நிறுவனமாகவோ அல்லது பெரிய நிறுவனமாகவோ இல்லாமல் இரண்டிற்கும் பொது வானதொன்றாகவுள்ளது. இத்தகையதோர் உத்தம அளவினை நடை முறையில் இன்னதென்று கண்டறியமுடியாது. ஏனெனில், தொழில்முயல்வோனின் பண்பு (இது மற்றக் காரணிகளுடன் இணைந்த தொழில்முயல்வோனின் தொழில்துணிவினைப் பொறுத்

ததே ஒழியத் தொழில்முயல்வோனின் எண்ணிக்கையைப் பொறுத்த தன்று) போன்ற காரணிகளை எதிர்நோக்கியே இருக்கிறது. உத்தம அளவு என்பது காலத்திற்குக் காலம் தொழிலுக்குத் தொழில் வேறுபடுவதாகவுள்ளது. உத்தம அளவைப்பற்றிக் கூறவேண்டிய தெல்லாம் அது உற்பத்திச் செலவைக் குறைந்தபட்சமாகக் குறைக்கக் கூடியதொரு (அதில் செயற்படும் எல்லாச் சக்திகளையும் கணக் கெடுத்துப் பார்த்து) நிறுவன அளவு என்பதே.

## 5. தொழிலமைப்பு (Industrial Organisation)

தொழில்முயல்வோன் என்பவர் யார்? கோட்பாட்டளவில் விடை தெளிவாகவே உள்ளது—'தொழில்முயல்வோன்' என்பது உற்பத்திக் கைக்கோளினைத் தீர்மானித்து, தேவையை எதிர்பார்த்துச் செய்யப்படும் உற்பத்திச் செய்முறையில் உட்கிடையாக உள்ள (inherent) நிலையின்மையைத் தாங்கியும் உற்பத்திப் பொறுப்பினை ஏற்றும் நடத்துகின்ற ஒரு மனிதரைக் (அல்லது குழுவை) குறிக்கும் என்று பொருள். நடைமுறையில் பார்க்கப்போனால், திட்டவட்ட மாக இந்தப் பணிகளைச் செய்வது யார் என்று நிச்சயமாகக் கூற முடியாது. பல்வேறு பொருளாதார நிறுவனங்கள் எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளன என்பதைப்பற்றிய ஒரு சிறிய ஆராய்ச்சியி னால்தான் இந்த உண்மை புலப்படுகிறது. செயற்படும் பொருளாதார உலகத்தோடு தொழில்துணிவு என்னும் இக் காரணி எவ்விதத்தில் தொடர்புகொண்டுள்ளது என்னும் கருத்தியல் வாதத்திற்கும் இவ் வாராய்ச்சி விடையளிக்கும்.

பிரிட்டனில் காணப்படும் தொழில் அமைப்புகளில் மிகவும் எளிதான தொழிலமைப்பு ஒரு-மனிதன் தொழிலாகும் (one-man business). இந்த நிறுவனம் ஒரு தனி நபரால் சொந்தமாக்கப்பட்டு நிருவகிக்கப்படுவதாகும். நிறுவனத்தின் உற்பத்தி வேலைகளுக்கு இவரே பெரிதும் பாடுபடுபவராக இருக்கிறார்; தனக்கு உதவியாக மற்றும் சிலரையும் இவர் வேலைக்கமர்த்திக்கொள்வார். இந்த வகையான நிறுவனங்கள் பெரும்பாலும் சிற்றளவுத் தொழில்களில் தான் அதிகமாகக் காணப்படுகின்றன. விவசாயம், சில்லறை வியா பாரம், வாழ்க்கைத் தொழிற் பணிகள் (professional trades) முதலிய வற்றில் இவ்வகை நிறுவனங்கள்தாம் பெரும்பாலும் காணப்படு கின்றன. செய்பொருள் தொழில்களின் சில பிரிவுகளில் சில சமயங் களில் இவ்வகை நிறுவனம் இடம் பெறுவதுண்டு. இவ்வகை நிறுவனத்தில் தொழில்முயல்வோனை யார் என்று எளிதாகக் குறிப் பிட்டுவிடலாம். இதைப்போன்ற மற்றுமொரு தொழிலமைப்பு, கூட்டு நிறுவனமாகும். கூட்டு நிறுவனமானது, இரண்டு அல்லது

அதற்கும் அதிகமான நபர்கள் உரிமையாக்கிக்கொண்டு நிருவகித்து வருகின்றதொரு நிறுவனமாகும். பொதுவாக, இத்தகைய நிறுவனங்களில் வரையிட்ட பொறுப்பு இல்லை. அதாவது, இவைகளுக்குக் கடன் கொடுத்துள்ள கடன்காரர்கள், அக் கடன்களைத் திரும்பப் பெறுவதற்கு, அவர்களின் தனிப்பட்ட சொத்துகளின்மீதும் உரிமை கொண்டாடலாம். ஆயினும், இவ்வாறு உரிமை கொண்டாடுவதற்குச் சில விதிவிலக்குகளும் உண்டு. இந்த வகை நிறுவனத்திலும் யார் தொழில்முயல்வோன் எனச் சுட்டுவது எளிதாகவே இருக்கிறது. நிறுவனத்தின் கைக்கோளிற்கேற்ற முடிவுகளை எடுப்பதும், நிலையின்மையைத் தாங்கும் பொறுப்பும் தனிப்பட்ட கூட்டாளிகளின் கைகளில்தானுள்ளன. நடைமுறையில் பார்த்தால், சில கூட்டாளிகள் நிறுவனத்தின் வேலையில் யாதொன்றும் செயற்படாமல் தங்களது தொழில்முயல் அதிகாரங்களை ஏனைய செயற்படு கூட்டாளிகளுக்கே விட்டுவிடுவதும் உண்டு.

பிரிட்டனின் வணிக அமைப்பில் உள்ள மிக முக்கியமான நிறுவனம், பதிவு செய்யப்பட்ட கூட்டுப் பங்குக் கம்பெனிகளாகும். தனியார் தொழிலில் இதுவே பெரும்பகுதியாக இருக்கிறது. சில தனிவகையைச் சேர்ந்த கூட்டுப் பங்குக் கம்பெனிகளையும், அவ்வளவாக முக்கியமல்லாத கூட்டுப் பங்குக் கம்பெனிகளையும் தவிர்த்து, ஏனைய கூட்டுப் பங்குக் கம்பெனிகள் பல்வேறு கம்பெனிகளின் சட்டப்படி பதிவு செய்துகொள்ளப்படவேண்டும். அவைகளுக்கு வரையிட்ட பொறுப்பு என்னும் உரிமை அளிக்கப்படுகிறது. இதன்படி, கம்பெனியில் முதலீடு செய்யும் நபர்கள்—அதாவது, கம்பெனியின் உரிமையாளர்கள் (பங்குதாரர்கள்) கம்பெனி அடைந்த எந்தவிதக் கடன்களுக்கும் பொறுப்பு ஏற்கவேண்டியதில்லை; அவர்கள் அந்தக் கம்பெனியில் எவ்வளவு முதலீடு செய்திருக்கின்றார்களோ அந்த அளவிற்கே அவர்கள் பொறுப்பாவார்கள். உதாரணமாக, ஒரு நபர் ஒரு பதிவு செய்யப்பட்ட கம்பெனியில் £ 1,000 மதிப்புள்ள பங்குகளைப் பெற்றிருக்கின்றாரென்று வைத்துக் கொள்வோம். அந்தக் கம்பெனி நஷ்டத்திற்காளாகி வக்கற்ற நிலையை அடைந்துவிட்டதென்றால், அவர் தனது £ 1000-ந்தான் இழப்பார். கம்பெனியின் கடன்கள் இன்னும் கொடுபடாமல் நிறைய இருக்கின்றதெனினும், கடன் கொடுத்தவர், பங்குதாரரின் ஏனைய சொத்துகளின்மீது கடனைத் திரும்பப்பெற யாதோர் உரிமையையும் கொள்ள முடியாது.

இந்தக் கம்பெனிகள் இருவகைப்படும். தனியார் கூட்டுப் பங்குக் கம்பெனி என்பது ஒருவகை; இதில் குறைந்தது இரண்டு, ஆனால், 50-க்கும் மேற்படாத நபர்கள் பங்குகளைப் பெற்றிருப்பர். இது

தனியார் கம்பெனி என்று அழைக்கப்படுவதற்குக் காரணம், ஆண்டு இருப்புநிலைக் குறிப்பை இது வெளியிடவேண்டியதில்லை; மேலும், புதிய முதலினைப் பெறும்பொருட்டுப் பொதுமக்களை அணுகி முதலீடு செய்யுமாறு வேண்டுகோள் விடுத்தற்கு இது அனுமதிக்கப்படுவதில்லை. நடப்பில் அதிகமான எண்ணிக்கையிலுள்ள கம்பெனிகள் பொதுக் கூட்டுப் பங்குக் கம்பெனிகளே. இந்தக் கம்பெனிகள் ஆண்டுக்கு ஒருமுறை பங்குதாரர்களின் கூட்டத்தைக் கூட்ட வேண்டும். ஆண்டுக்கொருமுறை இருப்புநிலைக் குறிப்பை வெளியிடவேண்டும். இதில் முதலீடு செய்யும் பொதுமக்களை, பொய் (mis-information), மோசடி (fraud) இவைகளினின்றும் காப்பாற்றும் நோக்கத்துடன் இயற்றப்பட்ட சில சட்டச் சடங்குகளை (legal requirements) இது பின்பற்றியாகவேண்டும். ஆனால், இக் கம்பெனிகள் பொதுமக்களிடம் கடன் பத்திரங்களை (securities) விற்று, அதன்மூலம் கம்பெனியின் வியாபாரத்திற்கு நிறைய நிதிகளைப் பெறலாம்.

இக் கடன் பத்திரங்களில் மூன்று முக்கிய வகைகள் உண்டு. அவற்றுள் 'கடன்-பங்குப் பத்திரங்கள்' (debentures) ஒருவகை. கடன்-பங்குப் பத்திரங்கள் என்பன ஒரு குறிப்பிட்ட தொகையைக் கடனாகப் பெற்றுக்கொண்டதற்கு அளிக்கப்படும் பற்றுச் சீட்டுகளாகும் (acknowledgements). இவைகளுக்கு ஆண்டுதோறும் குறிப்பிட்ட வீதத்தில் வட்டி கொடுக்கப்படும். பெரும்பாலும் இப் பத்திரங்கள் இன்ன தேதியில் முதல் திருப்பித் தரப்படும் என்னும் வாக்குறுதியைத் தாங்கி இருக்கும். கடன்-பங்குப் பத்திரங்களை வாங்குபவர்கள் கம்பெனியின் பங்குதாரர்களல்லர்; அவர்கள் கம்பெனிக்குக் கடன் கொடுத்தவர்களாவர். குறிப்பிட்ட வட்டி வீதத்தில் ஆண்டுக்கொருமுறை வட்டி பெறவும், ஒரு குறிப்பிட்ட கால அளவிற்குப் பிறகு முதலினைத் திரும்பப் பெறவுமே அவர்களுக்கு உரிமையுண்டு. ஏதாவதொரு காரணத்தால் கம்பெனியானது ஒப்பந்தம் செய்யப்பட்ட வட்டியையோ அல்லது முதல் செலுத்துகளையோ செலுத்தத் தவறினால், கடன்-பங்குப் பத்திரத்தை வைத்திருப்பவர் கம்பெனியை வக்கற்றது என்று சட்டப்படி அறிவித்துவிட்டு, தனது முதலினைத் திரும்பப் பெறும்பொருட்டு அதன் சொத்துகளை விற்றுத் தனக்குச் சேரவேண்டியதைப் பெற்றுக்கொள்ள முடியும்.

இரண்டாவது முக்கியமான வகையான கடன் பத்திரம் 'சலுகைப் பங்கு' (preference share) எனப்படும். கடன்-பங்குப் பத்திரத்தைப் போலல்லாது, இந்த வகைக் கடன் பத்திரத்தைப் பெற்றிருப்பவர், கம்பெனிக்குக் கடன் கொடுத்தவரல்லர்; அவர் கம்பெனியின் பங்கு

தாரர் ஆவார். கம்பெனியானது தான் பெறுகின்ற எந்த இலாபத்திலும் இவருக்கு உரிமையுண்டு; ஆனால், கம்பெனி யாதோர் இலாபத்தையும் அடையாதிருக்கும்போதும், அதன் விளைவாக அவர் முதலீடு செய்துள்ள தொகைக்கு யாதோர் இலாபத்தையும் கொடுக்க இயலாத நிலையிலிருக்கும்போதும் இவருக்குக் கம்பெனியின் மீது யாதோர் உரிமையும் கிடையாது. கடன்-பங்குப் பத்திரத்தைப் போலவே, சலுகைப் பங்கும் ஒரு குறிப்பிட்ட வீத இலாப ஈவைப் பெறுகின்றது. இந்த இலாப ஈவானது, மற்ற எவரும் இலாபத்தைப் பங்கு பெறுவதற்கு முன்னரே, சலுகைப் பங்குதாரருக்குக் கொடுக்கப்படவேண்டும். கம்பெனிக்கு இலாபம் இவ்வளவு வந்தது என்று கணக்கிடு முன்னரே கடன்-பங்குப் பத்திரத்திற்கு வட்டியைக் கொடுத்தாக வேண்டும். பிறகு, இலாபத்தில் முதல் உரிமை (first claim) சலுகைப் பங்குதாரருக்கே உண்டு. குறிப்பிட்ட வீத இலாப ஈவு அவருக்குக் கொடுக்கப்பட்டான பிறகே, மற்றவர்கள் கம்பெனியின் இலாபத்தில் பங்கு பெறமுடியும். சில சலுகைப் பங்குகள் குவியும் சலுகைப் பங்குகளாக (cumulative preference shares) இருக்கும். ஏதாவதோர் ஆண்டில் கம்பெனியானது போதுமான இலாபத்தைப் பெருதபோது இத்தகைய பங்குதாரர்களுக்கு முழுவீத இலாப ஈவினைக் கொடுக்கமுடியாமற்போகுமானால், அதனை அடுத்து வரும் ஆண்டுகளில் கிடைக்கும் இலாபங்களிலிருந்து (வேறு மற்றவர்கள் அந்த இலாபங்களில் பங்கு பெறுவதற்கு முன்னரே) கொடுத்து ஈடுசெய்யவேண்டும். குறிப்பிட்ட வீத ஈவு கொடுக்கப்படும் வரையில், சலுகைப் பங்குதாரர்களுக்குக் கம்பெனி நிருவாகத்தில் வாக்களிக்கும் அதிகாரங்கள் எதுவும் கிடையாது.

மூன்ருவது வகையான கடன் பத்திரம் 'சாதாரணப் பங்கு' எனப்படும். சாதாரணப் பங்கைப் பெறுபவருக்கு உத்தரவாதமான இலாப ஈவு வீதம் ஒன்றும் அளிக்கப்படுவதில்லை. சலுகைப் பங்குதாரர்களுக்கு அவர்களுடைய முந்தைய (prior) உரிமைகள் யாவற்றையும் கொடுத்தபிறகு, எச்சமாக உள்ள எந்த இலாபத்திலும் சாதாரணப் பங்குதாரர்களுக்குப் பாகம்பெற உரிமையுண்டு. ஆகவே, நிறுவனத்தின் விபத்துகளில் பெரும்பகுதியைச் சாதாரணப் பங்குதாரரே தாங்குகின்றர். பல ஆண்டுகளுக்குத் தனது முதலீட்டிற்குக் கிடைக்கும் இலாபம் சூனியமாகவும் இருக்கக்கூடும்; மற்றொருபுறம், கம்பெனியானது வெற்றியோடியங்கி நிறைய இலாபத்தைப் பெறும்போது முதலீட்டினின்றும் அவருக்கு நிறைய வருமானம் கிடைக்கும். இயல்பான காலங்களில் சாதாரணப் பங்குதாரர்கள் கம்பெனியின் ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் கலந்துகொள்வர். அப்போது அவர்களின் சார்பில் கம்பெனியை நிருவகிக்க அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநர் குழு (Board of Directors) கம்பெனியின்

கைக்கோளை விவரிக்கும். பங்குதாரர்களுக்குத் திருப்தி இல்லையேல், அதே இயக்குநர் குழுவினை மீண்டும் தேர்ந்தெடுக்க மறுத்துவிட்டு, அவர்களுக்குள்ளேயே வேறு நபர்களைப் புதிய இயக்குநர்களாகத் தேர்ந்தெடுக்கலாம்.

ஒரு தனியார் அல்லது பொதுக் கூட்டுப் பங்குக் கம்பெனியில் தொழில்முயல்வோன் யார் என்று கண்டுபிடிக்க முயற்சி செய்யப் படுகிறபோது, அது பெரும்பாலும் கடினமானதொரு வேலையாகவே இருக்கிறது. கோட்பாட்டளவில் பார்க்கும்போது, இந்தப் பொருளா தார நிறுவனத்தில் உட்கிடையாக உள்ள நிலையின்மைகளைத் தாங்குவோர் பங்குதாரர்களே என்பது தெளிவாக விளங்குகிறது. அதேவிதமாகத்தான், கம்பெனியின் நிருவாகத்திற்குத் தேவையான கைக்கோள் முடிவுகளை எடுக்கும் பொறுப்பும் பங்குதாரர்களிடமே உள்ளமை தெரிகின்றது. ஆயினும், நடைமுறையில் பார்க்கும் போது, பங்குதாரர்கள் உண்மையாகப் பயன்படுத்தும் அதிகாரங்கள், மிகக் குறைவான அளவாகவே இருப்பது தோன்றுகிறது. நியாய மான அளவிற்கு இலாப ஈவைக் கம்பெனியானது தொடர்ந்து கொடுத்துக்கொண்டிருக்கும்வரையில், பெரும்பாலான பங்குதாரர்கள் கம்பெனியின் விவகாரங்களை இயக்குநர் குழுவே கவனித்துக் கொள்ளட்டும் என்று இருந்துவிடுவதோடு, ஆண்டுப் பொதுக் கூட்டங்களிலும் கலந்துகொள்வதில்லை. எனவே, பெரிய கம்பெனி யில் நிருவாகமே—அதில், செயலாற்றுகின்ற இயக்குநர்களும், சம்பளம் பெறும் நிருவாகிகளும் அடங்கியுள்ளனர்—தொழில்முயல் வோனைக் கருதப்படத் தகுதிபெற்றதாக இருக்கிறது. பங்குதாரர் களின் பொதுக்குழு கடன் ஈவோர்களின் கூட்டமாக இருக் கின்றதேயொழிய, கம்பெனியின் கைக்கோள் இயற்றுவதில் அப் பங்குதாரர்கள், உண்மையானதொரு கருத்தில் பங்கு பெறுவதே யில்லை. எனவே, 'தொழில் முயல்வோனின் பணிகளான உரிமையைப் பெற்றிருத்தல், நிருவகித்தல் ஆகிய இரண்டும் ஒன்றை விட்டு ஒன்று பிரிந்தே காணப்படுகின்றன. எனவேதான், தொழில்முயல்வோன் யார் என்று கூறுவது நடைமுறையில் குழப்ப மானதொரு காரியமாக இருக்கிறது.

இன்றும் தொழில் அமைப்பின் மற்ற வகையிலும் இவ்வாறே—ஏன்—இன்னும் அதிகமாகக்கூடக் குழப்பம் ஏற்படுகிறது. உதாரண மாக, கூட்டுறவு சங்கங்களில் நிறைய அளவு சிறிய பங்குதாரர்கள் இருக்கின்றனர். கோட்பாட்டளவில் இவர்களே இந்தச் சங்கங்களை நிருவகிக்கின்றனர் என்றாலும், நடைமுறையில் பார்க்கப்போனால், இவர்கள் இவற்றுள் செயற்படு விதத்தில் பங்கு கொள்வதில்லை. மத்திய மின்சார சபை, பி.பி.சி. (B.B.C.), வாயு சபைகள், நிலக்கரிச்

சுரங்க வேலை, ரயில்வேக்கள் முதலியன போன்ற பொதுக் கார்ப்பரேஷன்கள் அல்லது நாட்டுரிமையாக்கப்பட்ட தொழில்கள் ஆகியவைகள், கோட்பாட்டளவில் நாடு முழுவதிலுமுள்ள குடிமக்களுக்கு உரிமையாக்கப்பட்டுள்ளன. இந்தத் தொழில்களில், ஒவ்வொரு வாக்காளரும் ஒரு தொழில் முயல்வோன் என்று கருதுவது, கற்பனையை வெகு உயரத்திற்குக் கொண்டு போவதை ஒக்கும். இவற்றில் பயனுள்ள அதிகாரங்களனைத்தும் சம்பந்தப்பட்ட சபைகளினது சபைத் தலைவர்களின் கைகளில் தானுள்ளன. சம்பந்தப்பட்ட அமைச்சரும் இவைகட்குப் பொறுப்பாவார்.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures On Economic Principles*, Vol. I, Chs. VIII-IX.

Marshall, *Principles of Economics*, Bk. IV, Chs. XI-XII.

Robinson, *The Structure of Competitive Industry*, Chs. II-V, VII-VIII.

Beacham and Williams, *Economics of Industrial Organisation*, Chs. I, III-IV, VIII.

Henderson, *Supply and Demand*, Ch. VII.

### குறிப்பு

இந்த அத்தியாயத்தில் தொழிலமைப்புபற்றிக் கூறப்பட்டுள்ள பொதுவான வாதத்தையும், ஆறும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள தொழில் இட அமைப்பு (industrial location) என்பதையும் இவைகளைச் செயல்முறையாகப் பயன்படுத்தியுள்ள சில குறிப்பிட்ட தொழில்களைப்பற்றிய ஆராய்ச்சிகளோடு இணைத்துப் படிப்பது நலம். இந்த நோக்கத்திற்குப் பயன்படும் நூல்கள் கீழே தரப்பட்டுள்ளன :

D. Burn (Editor), *The Structure of British Industry* (Cambridge University Press, London, 1958), Vols. I & II.

J. H. Dunning and C. J. Thomas, *British Industry : Change and Development in the Twentieth Century* (Hutchinson, London, 1961).

G. C. Allen, *The Structure of Industry in Britain* (Longmans, London, 1961).

# 9. அளிப்பு நடவடிக்கை
## (The Operation of Supply)

சென்ற அத்தியாயத்தில் தேவையைப்பற்றி ஆராய்ந்தபோது, நுகர்வோர்கள் மற்றப் பண்டங்களை மாற்றுச் செய்து தங்களுக்குத் தேவையான பண்டங்களை வாங்கிக்கொள்கின்றனர்—அதாவது, பண்டமாற்று முறையில்—என்று பார்த்தோம். நவீன பொருளாதார உலகத்திற்குப் பணமே ஒரு வசதியான இடையீட்டுப் பொருளாக இருந்துவருகிறது. இதைப்போன்றே உற்பத்திக் காரணிகளின் உரிமையாளர்கள் தங்களது பணிகளுக்குப் பண்டமாற்ருக, அவர்களின் பணிகளின்உதவியால் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களில் ஒரு பாகத்தைப் பெறக்கூடும் எனினும், அக் காரணிகளின் பணிகளைத் தொழில் முயல்வோருக்கு அளித்துவிட்டு, அவற்றிற்குப் பதிலாகப் பணத்தைப் பெற்றுக்கொள்வதே அவர்கள் எல்லோருக்குமே மிகவும் வசதியானதொன்ருக இருக்கிறது. எனவேதான், உழைப்பிற்குக் கூலிகளும் (சம்பளங்களும் இவற்றில் அடங்கும்), நிலத்திற்கு வாரமும், கடனுகப் பெறப்பட்ட முதலுக்கு வட்டியும், தொழில்துணிவிற்கு இலாபங்களும் தரப்படுகின்றன. இந்தக் காரணிகளின் விலைகளை நிர்ணயிக்கும் சக்திகளைப்பற்றி மேற்கொண்டு ஆராயப்பட்டுள்ளது.

சமநோக்குக் கோடுகளை (indifference maps) அங்காடித் தேவைக் கோடுகள் என்று பொருள்கொள்ளவேண்டியது அவசியமாக இருத்தலைப்போலவே, சென்ற அத்தியாயத்தில் கூறப்பட்ட சமகணியக் கோடுகளையும் உற்பத்திச் செலவுக் கோடுகளென்று பொருள்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. உற்பத்திச் செலவுக் கோடுகள், ஒரு நிறுவனம் உற்பத்தி செய்கின்ற பண்டங்களின் கணியங்களுக்கும், பல்வேறு உற்பத்தி மட்டத்தில் அதற்கு ஏற்படும் உற்பத்திச் செலவுகளுக்கும் இடையேயுள்ள தொடர்பை விளக்குவதுபோன்றுள்ளன. படம் 20 சமகணியக் கோட்டுப் படத்தை உற்பத்திக் கோடாகப் பொருள்கொள்ளலாம் என்பதற்கு ஓர் உதாரணமாகத் திகழ்கிறது.

ஒரு தொழில்முயல்வோருக்குள்ள உற்பத்தி சாத்திய வழிகளைப் படம் 20 (a)-ல் உள்ள ஐந்து சமகணியக் கோடுகள் உணர்த்துவதாகக் கொள்வோம். அவருக்குத் தேவையான உழைப்பு வகைக்கு அப்போது நடைமுறையில் உள்ள கூலிவீதப்படி, அவர் மாதமொன்றுக்கு £ 100 கொடுக்கவேண்டியதாயிருக்கிறதென்றும், அத் தொழில் முயல்வோன் 3,000 அலகுகள் மாத உற்பத்தியை உற்பத்தி செய்யக் கூடிய ஒரு தொழிற்சாலையைக் கட்டுவதற்குத் திட்டமிடுகிருரென்றும் கொள்வோம்.

வசதியை உத்தேசித்து, படம் 20 (a)-ல் பயன்படுத்தப்படும் முதலின் அளவு, மாத உற்பத்திச் செலவு—அதாவது, கட்டடங்கள். இயந்திரங்கள் இவைகளுக்கான ஆண்டுச் செலவை (வட்டியும் தேய்மானச் செலவும்) பன்னிரண்டால் வகுத்து வரும் தொகை—என்று காட்டப்பட்டுள்ளது. முதல், தொழில் ஆகியவற்றின் ஒப்பீடான விலை £ 1,000 முதல் பத்து மனிதர்களுடன் இணைக்கும்




படம் 20

ஒரு கோட்டால் உணர்த்தப்படுகிறது. இப்படியே மற்றக் கோடுகளும் உணர்த்துகின்றன. சென்ற அத்தியாயத்தில், 3,000 அலகுகளை உற்பத்தி செய்யத் திட்டமிட்டிருக்கும் ஒரு தொழில் முயல்வோன், அலகொன்றுக்கு மிகக் குறைந்தபட்ச உற்பத்திச் செலவை $X_3$ என்னும் தொடுமிடத்தில் அடைகிருர் என்பது உறுதியாக்கப்பட்டது—அதாவது, £ 36,000 (மாதமொன்றுக்கு £ 3,000) ஆண்டு உற்பத்திச் செலவைக்கொண்ட முதல் இருப்பைப் பெற்

றிருக்கும்போது என்று கூறவேண்டும். நடைமுறையில் இது £ 500,000 மொத்த முதல் இருப்பையும், 150 மனிதர்களின் உழைப்புச் சக்தியையும் உணர்த்தும்.

தொழிற்சாலையைக் கட்டி முடித்த பின்னர், தொழில் முயல்வோன் மெல்லமெல்ல முழு உற்பத்தியைத் தொடங்குகிறார். அவர் முதலாவதாக ஒரு மாதத்திற்கு 1,000 அலகுகள் உற்பத்தி செய்ய ஆரம்பிக்கின்றார்; இது சம்பந்தப்பட்ட சமகணியக் கோடு, அவருக்குள்ள முதல் (நிலையான) இருப்புடன் அவர் $X_1$ என்னும் புள்ளியில்—அதாவது, 50 மனிதர்களைக்கொண்டு—உற்பத்தியைச் செய்ய வேண்டியவராக இருக்கிறார். அவர் தனது உற்பத்தியை மாதமொன்றுக்கு 2,000 என்னும் மட்டத்தில் அதிகரிக்கும்போது (50 கூடுதலான மனிதர்களை வேலைக்கு வைத்துக்கொண்டு, அதன் மூலம் மொத்தம் 100 மனிதர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்வதன் மூலம்), அவர் $X_2$ என்னும் புள்ளியைச் சென்றடைவர். பிறகு இன்னும் 50 மனிதர்களை வேலைக்கமர்த்திக்கொள்வதன்மூலமும், $X_3$ என்னும் புள்ளியை அடைவதன்மூலமும் தனது உற்பத்தி இலக்கை (target output) எய்துவார். இவ்வளவு அதிகமாக உற்பத்தியை உற்பத்தி செய்தபிறகும், இன்னும் அப் பொருளுக்கான தேவை (முழுதும் நிறைவேற்றப்படாமல்) இருந்துகொண்டேயிருக்கிறதென்பதை அவர் அறிய நேரிடுகிறதென்று வைத்துக்கொள்வோம். அவருடைய முதல் இருப்பு தற்சமயத்திற்கு நிலையானதாக இருக்கிறது—இக் காரணியின் முக்கியத்துவத்தைச் சற்றுப் பின்னர் ஆராய்வோம்—எனவே, $X_4$ என்னும் புள்ளிக்குச் செல்லும்போது அவரால் மாதமொன்றுக்கு 4,000 அலகுகளையே உற்பத்தி செய்ய முடிகிறது.

இதைப்போன்றே, அவர் இன்னும் அதிகமாக, அதாவது, மாதமொன்றுக்கு 5,000 அலகுகளை உற்பத்தி செய்ய விழைந்தால், அவர் தான் வேலையில் அமர்த்தியிருக்கும் உழைப்புச் சக்தியை மாதமொன்றுக்கு 300 ஆக அதிகரித்தால்தான் $X_5$ என்னும் புள்ளியை அடையமுடியும்.

ஒவ்வோர் உற்பத்தி மட்டத்திலும், அவருடைய ஒரு நிலையான முதல் இருப்பில் உள்ள இரு காரணிகளின் பல்வேறு சேர்க்கைகள் இவ்வாறே தீர்மானிக்கப்படுகின்றன. நடப்புக் கூலிவீதத்தை (ஒரு மாதத்திற்கு=100) தெரிந்துகொண்டால், இவைகளை மொத்த உற்பத்திச் செலவுகளாக மாற்றிக் கணக்கிட்டுக்கொள்ளலாம். இந்த மொத்தத்தை உற்பத்தி வீதத்தால் வகுத்தால், ஒவ்வோர் உற்பத்தி மட்டத்திலுமுள்ள ஓர் அலகின் சராசரி உற்பத்திச் செலவைக்

கண்டுபிடித்துவிடலாம். இந்த உதாரணத்தில் மாத உற்பத்திச் செலவு அமைப்புப் பின்வருமாறு இருக்கும் :

| மாத உற்பத்தி | மூலதனச் செலவுகள் (£) | உழைப்புச் செலவுகள் (£) | மொத்த உற்பத்திச் செலவுகள் (£) | சராசரி உற்பத்திச் செலவு (£) |
|---|---|---|---|---|
| 1,000 | 3,000 | 5,000 | 8,000 | 8·0 |
| 2,000 | 3,000 | 10,000 | 13,000 | 6·5 |
| 3,000 | 3,000 | 15,000 | 18,000 | 6·0 |
| 4,000 | 3,000 | 22,000 | 25,000 | 6·25 |
| 5,000 | 3,000 | 30,000 | 33,000 | 6.6 |

மேற்கண்ட சராசரிச் செலவுகளைப் படத்தில் குறிப்பிட்டு ஒரு கோடாக இணைத்தால், படம் 20 (b)-ல் உள்ளதுபோல் ஒரு சராசரி உற்பத்திச் செலவுக் கோடு தென்படும். கோட்பாட்டளவில் இந்தக் கோடானது, தொழில் முயல்வோன் உற்பத்தி செய்யக்கூடிய ஒவ்வோர் உற்பத்தி மட்டத்தினுடைய சராசரி உற்பத்திச் செலவுகளை உணர்த்தும்.

எனவே, சராசரி உற்பத்திச் செலவுக் கோடானது பல்வேறு உற்பத்தி மட்டங்களில் ஒரு பண்டத்தினது ஓர் அலகை உற்பத்தி செய்வதில் பயன்படுத்தப்பட்டுள்ள காரணிகளின் சராசரி அளவின் செலவை (தொழில்முயல்வோனுக்கு ஏற்படுகின்ற) உணர்த்துகிறது; அதாவது, மொத்தக் கூலிச் செலுத்துகள், வாரம், வட்டி, இலாபங்கள் இவற்றை உற்பத்தி செய்யப்பட்ட அலகுகளால் வகுத்து வரும் உற்பத்திச் செலவை உணர்த்துகிறது. வேறு வழியில் கூறப் போனல், இக் கோடானது ஒரு பண்டத்தை உற்பத்தி செய்வதற்குத் தேவையான எல்லாக் காரணிகளின் (தொழில்துணிவு என்னும் காரணியையும் சேர்த்து) செலவுகளையும் குறிக்கின்றது. ஒரு தொழில் முயல்வோனுக்குத் தனது உற்பத்தி நடவடிக்கையில், ஒரு குறிப்பிட்ட அளவு இலாபம் கிடைக்கவில்லையெனில், அவர் வேறு தொழிலை நாடிச் செல்வார் ; அல்லது கூலி பெறுபவராக அல்லது சம்பளம் பெறுபவராகச் சென்று வேலையில் அமரக்கூடும். ஆகவே, ஒரு குறிப்பிட்ட வீத இலாபம்—சம்பந்தப்பட்ட தொழில் முயல்வோனின் ‘இயல்பான’ இலாபவீதம் ஒரு பண்டத்தின் உற்பத்திச் செலவின் ஒரு பகுதியாக இருக்கிறது. சராசரி உற்பத்திச் செலவுக் கோட்டில் இதுவும் ஓர் உறுபொருளாக (element) சேர்க்கப்பட்டுள்ளது. விலையானது உற்பத்திச் செலவிற்குச் சமமாக இருக்குமானல், தொழில் முயல்வோன் இலாபமெதுவும் பெறவில்லை என்று

பொருளன்று (சாதாரணச் சொல்வழக்கில் இவ்வாறுதான் பொருள் படுகிறது); பண்டத்தின் ஒவ்வோர் அலகிற்கும் அவர் இயல்பான இலாபவீதத்தை அடைகிருர் என்றே பொருள்படும்.

தேவைக்கோடுகளைப்பற்றிய இந்த வாதங்களில், அக் கோடுகள் இயல்பாக இடமிருந்து வலமாகச் சரிந்து செல்கின்றனவென்பது (அவைகளின் மிகச் சரியான சரிவு—exact slope—பல்வேறு பண்டங்களுக்கிடையே மாறுபட்டபோதிலும்) உறுதியாக்கப்பட்டது. உற்பத்தி அதிகரிக்கும்போது சராசரி உற்பத்திச் செலவு அதிகமாகவோ, குறைவாகவோ, அல்லது நிலையாகவோ (constant) இருக்கக்கூடுமாதலால், உற்பத்திச் செலவுக் கோடுகளைப் பொறுத்தவரையில், அத்தகைய இயல்பான விதியொன்றும் இயற்றப்படவில்லை. வேறு வழியில் கூறப்போனல், எந்தச் சமயத்திலும் உற்பத்தியானது மூன்று பெரும் அளிப்புச் சூழ்நிலைகளில்—குறைந்து செல்லும் உற்பத்திச்செலவு, நிலையான உற்பத்திச் செலவு அல்லது அதிகரித்த உற்பத்திச் செலவு ஆகியவை—ஏதாவது ஒன்றின்பாற்படும். செலவுக் கோடுகளை அவைகளின் நீளம் முழுமையும் ஒரே திசையில் இருக்குமாறு (சரிந்திருந்தல், படுகிடையாக இருத்தல், மேல் நோக்கிச் செல்லுதல் என்றவாறு) வரைதல் பெரும்பாலும் எளிதாகும்; ஆனல், நடைமுறையில் பெரும்பாலான சராசரி உற்பத்திச் செலவுக் கோடுகள், படம் 21-ல் காட்டப்பட்டுள்ள கோட்டைப் போன்றே இருக்கின்றன. இக் கோட்டின்படி, உற்பத்தி அதிகரிக்கும்போது சராசரி உற்பத்திச் செலவு (average cost) குறைந்து கொண்டு செல்கிறது. ஒரு குறிப்பிட்ட 'இயல்பான' அளவு உற்பத்தியைக் காரணிகளின் உத்தமச் சேர்க்கையுடன் செய்ய முனையும் போது, உற்பத்தியானது OM என்னுமோர் அளவில் குறைந்தபட்ச உற்பத்திச் செலவினை உடையதாக இருக்கிறது. பிறகு மேலும் உற்பத்தியானது இந்த மட்டத்தைத் தாண்டி அதிகரிக்கும்போது, உற்பத்திச் செலவானது அதிகரிக்க ஆரம்பிக்கின்றது; காரணம், குறைந்துசெல் விளைவு விதி செயற்படுவதே. உதாரணமாக, எவ்வளவுதான் உற்பத்தியானது குறைவாக இருந்தபோதிலும், பெரும்பாலான பண்டங்களுக்கு ஒரு குறைந்தபட்ச முதல் சாதனம் (உதாரணமாக, ஒரு தொழிற்சாலைக் கட்டடம்) இருந்தேயாக வேண்டும். உற்பத்தி அதிகரிக்கும்போது, இந்த முதல்,



படம் 21.

அதிலிருந்து கடைசி இயல்பான திறனை அடையப்பெறும்வரை, மேலும் மேலும் அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது. இதற்குப் பிறகும், உற்பத்தி கணிசமான அளவிற்கு அதிகமான அளவில் இருந்தாலொழிய, முதலினை அதிகமாக நிறுவிக்கொண்டே செல்லு தல் (உதாரணமாக, மற்றொரு தொழிற்சாலையைக் கட்டுதல்) பயன் தருவதாக இருக்காது. ஏனெனில், உழைப்பை மேலும் மேலும் வேலையில் அமர்த்திக்கொண்டேயிருந்தால் உற்பத்திச் செலவுகளும் அதிகரித்துக்கொண்டே செல்லும். இவ்வகையில், உற்பத்தியானது இரண்டாவது 'பேரளவு'த் தொகை முதலினைக் (second big lump) கோருகின்ற அளவிற்கு அதிகமாகவும், உற்பத்திச் செலவுக் கோடு மீண்டும் ஒருமுறை இறங்கிவருவதாகவும் இருந்தாலொழிய, அதிகரிக்கப்படுவது பயன் தருவதாக இருக்காது.

தேவைக் கோடுகளைப் பொறுத்தவரையில், ஒரு தனித்த கோட்டைக்கொண்டு எந்த ஓர் உற்பத்தியிலும், உற்பத்தியில் ஏற்படும் மாற்றங்கள், சராசரி உற்பத்தியில் ஏற்படுத்தும் விளைவுகளை ஆராய்ந்தறியலாம். உற்பத்தியின் அடிப்படையான சூழ்நிலைகள் மாறுமானால், முற்றிலும் புதியதொரு கோடு வரையப்படவேண்டிய தாக இருக்கிறது—இக் கோடு, புதிய சூழ்நிலைகளில் ஒவ்வோர் உற்பத்தி மட்டத்திலும் உள்ள உற்பத்திச் செலவைக் குறிக் கின்றது. தேவையில் ஏற்படும் மாற்றத்திற்குப் (விலையில் ஏற்படும் மாற்றத்தைப்போலல்லாது) புதிய தேவைக்கோடு வரையப்படுவது போலவே, மேற்சொல்லப்பட்ட புதிய கோடும் வரையப்படவேண்டிய தாக இருக்கிறது. உதாரணமாக, கருதுகோளானதொரு நிகழ்ச்சி யைச் சித்திரிக்கு முன்னர் விளக்கப்பட்ட படம் 20 இதனை நன்கு விளக்குகின்றது. படம் 20(b)-ல் காட்டப்பட்டுள்ள உற்பத்திச் செலவுக் கோட்டிற்கு, தொழில்முயல்வோன் மாதமொன் றுக்கு 3,000 அலகுகளை உற்பத்தி செய்யக்கூடிய ஆலையினை

| உற்பத்தி மட்டம் | மாத உற்பத்திச் செலவு £ 2,500 ஆக இருக்கும் முதல் இருப்பின் உற்பத்திச் செலவு (£-ல்) | மாத உற்பத்திச் செலவு £ 5,000 ஆக இருக்கும் முதல் இருப்பின் உற்பத்திச் செலவு (£-ல்) |
|---|---|---|
| 1,000 | 7·8 | 9.0 |
| 2,000 | 6·5 | 6·8 |
| 3,000 | 6·1 | 6·2 |
| 4,000 | 6·3 | 6·2 |
| 5,000 | 6·7 | 6·4 |

இயக்குவதானதோர் எடுகோள் கொள்ளப்பட்டது. அந்த ஆலேக்கு ஒரு மாத, முதல் உற்பத்திச் செலவுகளை £ 2,500 ஆக (அதாவது 1,000 அலகுகளை மாதமொன்றுக்கு உற்பத்தி செய்வதற்காகத் தயாரிக்கப்பட்டது) அல்லது £ 5,000ஆக (அதாவது, மாதமொன்றுக்கு 5,000 அலகுகளை உற்பத்தி செய்வதற்காகத் தயாரிக்கப்பட்டது) இருக்கிறதென்ற எடுகோளில் பல்வேறு உற்பத்தி மட்டங்களுக்கான உற்பத்திச் செலவுகளைத் தற்போதுமீண்டும் கணக்கிடுவோமானல், பின்வரும் சராசரி உற்பத்திச் செலவுகள் கிடைக்கப்பெறும் :

இந்த உற்பத்திச் செலவின் அமைப்பு முழுவதும் இருவகையில் வேறுபடுகின்றது. உற்பத்திக் கோட்டின் இடமாற்றத்திற்கு உற்பத்தி அளவில் ஏற்படும் ஒரு மாற்றமே காரணமாக இருப்பதில்லை; தொழில்நுணுக்க அமைப்பில் ஏற்படும் மாற்றங்களும் இதே விளைவினை உண்டுபண்ணக்கூடும். உதாரணமாக, படம் 22-ல் உள்ள AC என்னும் கோடு ஒரு குறிப்பிட்ட தொழில்முயல்வோனின் உற்பத்திக் கோடாக உள்ளது எனக் கொள்வோம்; அந்த நிறுவனம் OM அலகுகளை உற்பத்தி செய்யும்போது, பண்டத்தின் சராசரி உற்பத்திச் செலவு OPஆக இருக்கிறது. தற்போது, உற்பத்தியில் ஒரு புதிய முறை கண்டுபிடிக்கப்படுகிறதென்றே அல்லது ஒரு புதிய கண்டுபிடிப்பு தோன்றுகிறதென்றே கொள்வோம். இதனல், உற்பத்திச் சாதனங்களின் உற்பத்தி அதிகரிக்கும். எனவேதான், உற்பத்திச் செலவுக் கோடு (அதன் நீளம் முழுவதுமாக) கீழ்நோக்கி இடம் மாறியுள்ளது. AC′ என்னும் கோடு இவ்வாறு இடம் மாறியுள்ளதை அறிவிக்கின்றது. இப்போது OM அளவு உற்பத்தி செய்யப்படும்போது சராசரி உற்பத்திச் செலவு OP′ ஆகக் குறையும்.




படம் 22

இதுகாறும் தனியொரு தொழில்முயல்வோன் அல்லது நிறுவனத்தின் (firm) உற்பத்திச் செலவுக் கோட்டினை ஆராய்ந்தோம். பெரும்

பாலும் ஒரு தொழில் முழுவதன் அளிப்பும்—அதாவது, ஒரே பண்டத்தை உற்பத்தி செய்கின்ற எல்லா நிறுவனங்களாலும் பல்வேறு விலைகளில் உற்பத்தி செய்யப்படும் மொத்த அளவு—ஆராய்வதற்கு மிகவும் சுவையானதாகவே உள்ளது. இதனை ஆராய்வதற்குத் தொழில் முழுவதற்குமானதோர் அளிப்புக் கோட்டினை வரையவேண்டும். இந்தக் கருத்தானது 3ஆம் மடலில் ஆராயப்படும்.

## 2. சராசரி உற்பத்திச் செலவும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் (Average and Marginal Cost)

உற்பத்திச் செலவுகளைப்பற்றிக் கூறும்போது, சில குறிப்பிட்ட உற்பத்திச் செலவுகளை (குறிப்பாக, உழைப்பிற்கான செலவுகளை), உற்பத்தியை அதிகரிப்பதன்மூலமோ அல்லது குறைத்துக் கொள்வதன்மூலமோ (உற்பத்தியில் மாற்றம் ஏற்படும்போதெல்லாம்) அதிகரித்துக்கொள்ளவோ அல்லது குறைத்துக் கொள்ளவோ இயலும் என்ற எடுகோள் கொள்ளப்பட்டது. ஆனால், மற்ற உற்பத்திச் செலவுகள் (குறிப்பாக முதல் உற்பத்திச் செலவுகள்), உற்பத்தி எவ்வளவுதான் மாற்றமடையக்கூடியதாக இருந்தபோதிலும், ஒரு கணிசமான கால அளவிற்கு மாற்றப்பட இயலாதனவாக இருக்கின்றன. இவ்வாறு உற்பத்தி மாற்றமடையும்போதெல்லாம், மாற்றப்படக்கூடிய காரணிகளின் செலவுகளுக்கும் மாற்றப்பட முடியாத காரணிகளின் செலவுகளுக்குமுள்ள வேறுபாடு, கோட்பாட்டளவிலும் நடைமுறையிலும் மிகவும் முக்கியம் வாய்ந்ததொன்றாக இருக்கிறது. முன்னர் கூறப்பட்ட செலவுகள் முதன்மைச் செலவுகள் அல்லது மாறும் செலவுகள் (variable costs) என்றும், பின்னர் கூறப்பட்ட செலவுகள் மேற்செலவுகள் அல்லது மாறாச் செலவுகள் (fixed costs) என்றும் அழைக்கப்படுகின்றன.

மாறுஞ் செலவுகள் என்பன, குறுகிய கால அளவிலுங்கூட, உற்பத்தியுடன் நேரடியாக மாறக்கூடிய செலவுகளாகும். உழைப்புச் செலவுகளும், கச்சாப் பொருள்களுக்கான செலவுகளும் இத்தகைய செலவுகளில் பெரும்பாலானவையாக இருக்கின்றன. தொலைக்காட்சிப் பெட்டிகளைத் (television sets) தயாரிக்கும் நிறுவனமொன்று, தொலைக்காட்சிப் பெட்டிகளுக்கான தேவையும் விலையும் குறைந்துவிட்டதன் காரணமாக, உற்பத்திக் குறைவை, தேவைப்படுமானால் அது தனது உழைப்புச் சக்தியை ஏறக்குறைய உடனடியாகவே குறைத்துக்கொள்ள இயலும். எனவே, அதற்குக் குறைவான மின் எதிர்முனைக் கதிர்க் குழாய்கள் (fewer cathode-ray tubes), பெட்டிகள் (cabinets) முதலியவனவே தேவைப்படுமாதலால்,

இவைகளைக் குறைவாகவே வாங்கும். ஆயினும், சில செலவுகளை உடனடியாக மாற்ற இயலாது. அவைகளுக்கு மாருச் செலவுகள் என்று பெயர். இச் செலவுகள் நிறுவனமானது உள்ளவரை நிலையான மட்டத்திலிருக்கும் பொறுப்புச் செலவுகளாகும் (commitments). அந்த நிறுவனத்தில் உற்பத்தி மட்டம் எவ்வளவாக இருந்த போதிலும், மேற்சொன்ன செலவுகளை ஏற்றேயாகவேண்டிய நிலை இருக்கும். அப்படி அச் செலவுகளை மாற்றவேண்டுமாயின், ஒரு கணிசமான கால அளவிற்குப் பிறகே மாற்ற இயலும்—உதாரணமாக, தொழிற்சாலை நிறுவப்பட்டிருக்கிற நிலத்தின் வாரம், இயந்திரங்களிலும் பொறிகளிலும் முடங்கிக் கிடக்கின்ற முதல், இன்றியமையாத மேலாண்மை (managerial) நிருவாகப் பணியாளர்களின் சம்பளங்கள் ஆகியவற்றைக் கூறலாம். இந்த வகைகளில் கொடுக்கப்படும் செலுத்துகள், ஒரே சமயத்தில், நீண்ட காலங்களுக்கு நிர்ணயிக்கப்படுகின்றன. நீண்ட காலத்தில் தவிர, இவைகளுக்கும் உற்பத்தி வீதத்திற்கும் எந்தவிதமான நேரிடையான தொடர்பும் இல்லை. இத்தகைய செலவுகளின் தன்னுரிமையான தன்மைக்கு ஓர் உதாரணம் கூறப்படவேண்டுமாயின், நூல் வெளியீட்டுத் தொழிலைக் கூறலாம். ஒரு நூலை வெளியிட முடிவுசெய்தவுடன், தொழில்முயல்வோர், அச்சுக்கோக்கும் செலவுகளை ஏற்று அச்சடிப்பதற்குத் தயாராக வைத்துக்கொள்ளவேண்டும்; அவர் எத்தனை நூல்களைப் பின்னர் அச்சடிக்கப்போவதாக இருந்தாலும், இந்த ஆரம்ப அச்சுக்கோக்கும் செலவு மாருமல் அப்படியேதான் இருக்கும். அதிகமான எண்ணிக்கையான பிரதிகளை அச்சடித்துக்கொண்டே செல்லும்போது, மொத்த உற்பத்திச் செலவில் பெரும்பகுதியாக (major) உள்ள இந்த மாருச் செலவு அதிகமான அளவு உற்பத்தியின்மீது பரவலாக்கப்படுகிறது. உதாரணமாக, பிரிட்டிஷ் மின் மேலாண்மை (British Electric Authority) ஒரு மின்சக்தி நிலையத்தைக் (Power Station) கட்டிச் சாதனங்களை அமைக்கும்போது, கட்டடங்களின் செலவு, சாதனங்களின் செலவு ஆகியவற்றைப் பொறுத்தவரையில் மாருச் செலவினையே ஏற்கின்றது. இந்தச் செலவானது அந் நிலையம் எவ்வளவு மின்சக்தியை அதிகமாகத் தோற்றுவிக்கின்ற போதிலும், மாருமல் நிலையாகவே இருக்கின்றது.

இதன் காரணமாக, உற்பத்தியின் ஓர் அலகின் சராசரி உற்பத்திச் செலவிற்கும், ஓர் அலகைக் கூடுதலாக உற்பத்தி செய்வதில் ஏற்படும் கூடுதல் செலவிற்கும் வழக்கமாக ஒரு முக்கிய வேறுபாடுள்ளது. ஒரு குறிப்பிட்ட அலகின் சராசரி உற்பத்திச் செலவென்பது, தொழில்முயல்வோனுக்கு உற்பத்தியில் ஏற்படுகிற மொத்தச் செலவை உற்பத்தி செய்யப்பட்ட அலகுகளின் மொத்த எண்ணிக்கையால் வகுத்து வரும் செலவாகும். மொத்த உற்பத்தி

யில் ஓர் அலகின் இறுதிநிலை உற்பத்திச் செலவு என்பது என்ன வென்று பார்ப்போம். உற்பத்தியில் Xஆவது (Xth) அலகின் இறுதி நிலை உற்பத்திச் செலவானது, X அலகுகளை உற்பத்தி செய்வதற் கான மொத்த உற்பத்திச் செலவிற்கும் X—1 அலகுகளை உற்பத்தி செய்வதில் ஏற்படும் மொத்த உற்பத்திச் செலவிற்குமுள்ள வேறுபாடாகும்.

உதாரணமாக, மரச்சாமான்களை உற்பத்தி செய்யும் தொழிலை எடுத்துக்கொள்வோம்; அட்டவணை 7-ல் குறிக்கப்பட்டுள்ள புள்ளி விவரங்கள் மேசைகளை உற்பத்திசெய்வதில் ஏற்படும் வார உற்பத்திச் செலவுகளைக் குறிப்பதாகக் கொள்வோம். வாரமொன்றுக்கு 10 மேசைகளை உற்பத்தி செய்வதற்கு ஆரம்பமான ஆயுதங்களை வாங்குவதில் ஏற்படும் மாருச் செலவு £ 100 எனக் கொள்வோம். அதற்குப் பின்னரும் மேசைகளை உற்பத்தி செய்யவேண்டுமாயின், அவ்வாறு உற்பத்தி செய்யப்படும் ஒவ்வொரு மேசைக்கும் சாமான் களும் உழைப்பும் (தொழில் முயல்வோனின் அதிகப்படியான திறமையையும் சேர்த்து) தேவைப்படும். எனவே, அட்டவணையில் மூன்று வாரங்கள்வரையிலும் உற்பத்தி செய்யப்படும் உற்பத்திக்கு மேசை ஒன்றுக்கு £ 50 வீதம் உற்பத்திச் செலவாக இருக்கிறது. இந்த மூன்று வார உற்பத்திக் கட்டத்தைத் தாண்டி உற்பத்தி செல்லும்போது, தொழில்முயல்வோன் தனது தொழிலாளர்களுக்கு அதிகமான அதிக நேரக் கூலியினைக் கொடுக்கவேண்டியிருக்கிறது,

அட்டவணை 7: மேசைகளை உற்பத்தி செய்வதில் சராசரி, இறுதிநிலைச் செலவுகள்

| (1) மேசைகளின் வார உற்பத்தி £ | (2) மாருச் செலவுகள் £ | (3) மாறும் செலவுகள் £ | (4) மொத்தச் செலவுகள் £ | (5) சராசரிச் செலவு [(4)÷(1)] £ | (6) இறுதி நிலைச் செலவு £ |
|---|---|---|---|---|---|
| 1 | 100 | 50 | 150 | 150 | 150 |
| 2 | 100 | 100 | 200 | 100 | 50 |
| 3 | 100 | 150 | 250 | 83 | 50 |
| 4 | 100 | 210 | 310 | 78 | 60 |
| 5 | 100 | 287 | 387 | 77 | 77 |
| 6 | 100 | 384 | 484 | 81 | 97 |
| 7 | 100 | 503 | 603 | 86 | 119 |
| 8 | 100 | 653 | 753 | 94 | 150 |
| 9 | 100 | 825 | 925 | 103 | 172 |
| 10 | 100 | 1035 | 1135 | 114 | 210 |

அல்லது அவருடைய பொதுவான கூலி மட்டத்தைப் புதிய தொழிலாளர்களைக் கவரும் வகையில் அதிகரிக்கவேண்டியிருக்கிறது, அல்லது தனக்கு வேண்டிய மரங்களைத் தொலைவான இடங்களிலிருந்தும் பெறவேண்டியிருக்கிறது. இவை காரணமாக மாறும் செலவுகள் வளர்வீதத்தில் அதிகரிக்கின்றன.

முதல் மேசையை உற்பத்தி செய்யும்போது உற்பத்தியின் மொத்தச் செலவு £150 ஆக இருக்கிறது. ஒரே ஒரு மேசையே செய்யப்படுவதால், இதுவே சராசரி உற்பத்திச் செலவாகவும் இருக்கிறது. இதில் இந்த மேசையை உற்பத்தி செய்வதில் ஏற்பட்ட மொத்தச் செலவும், இறுதிநிலைச் செலவும் ஒன்றாக இருப்பதற்குக் காரணம், கூடுதலாக ஒரு மேசையும் செய்யப்படாததே. ஆயினும், இதற்குப் பிறகு, அட்டவணை 7-ல் காட்டப்பட்டிருப்பதுபோல், மொத்தச் சராசரி இறுதிநிலைச் செலவுகள் கணிசமான அளவிற்கு வேறுபடுகின்றன. ஆரம்பத்தில் இறுதிநிலைச் செலவானது கணிசமான அளவிற்கு வேறுபடுகின்றது. இதற்குக் காரணம் மாறாச் செலவு அதிகமான எண்ணிக்கையுள்ள மேசைகளின்மீது பரவலாக்கப்படுவதேயாகும். சராசரி உற்பத்திச் செலவும் குறைந்துகொண்டு செல்லுகின்றது; ஆனால், அவ்வளவு தீவிரமாகக் குறைவதில்லை. வாரமொன்றுக்கு 3 மேசைகளுக்கும் அதிகமாக உற்பத்தியானது அதிகரிக்கும்போது, இறுதிநிலை உற்பத்திச் செலவுகள் அதிகரிக்க ஆரம்பிக்கின்றன. சிறிது காலத்திற்கு இத்தகைய விளைவானது அதிகமான உற்பத்தியின்மீது மாறாச் செலவு பரவலாக்கப்படுவதால் ஏற்படுகிற இலாபத்தால் சரிக்கட்டப்படுகிறது; சராசரிச் செலவும் தொடர்ந்து குறைந்துகொண்டேவருகிறது. இறுதிநிலைச் செலவானது சராசரிச் செலவைக் காட்டிலும் குறைவானதாக இருக்கும் வரையில் சராசரி குறைந்தேயாகவேண்டும். சராசரியைக் காட்டிலும் குறைந்த தொகை மொத்தச் செலவில் சேர்க்கப்படுவதால், மொத்தச் சராசரி குறைக்கப்படுகிறது. கடைசியில், இதன் காரணமாக (இந்த உதாரணத்தில், உற்பத்தியானது வாரமொன்றுக்கு 6 மேசைகளுக்கும் அதிகமாக அதிகரிக்கும்போது), இறுதிநிலைச் செலவானது சராசரிச் செலவைக்காட்டிலும் அதிகமாக இருக்கிறது. சராசரிச் செலவும் அதிகரிக்க ஆரம்பிக்கின்றது; அதிகரித்துக்கொண்டு செல்லும் இவ்வதிகமான மாறுஞ் செலவுகள், மாறாச் செலவு பரவலாக்கப்படுவதைச் சரிக்கட்டும் அளவிற்குப் போதுமானதற்கும் மேலாகவே இருக்கின்றன. மீண்டும், சராசரிச் செலவானது இறுதிநிலைச் செலவைக்காட்டிலும் சற்றுக் குறைந்த தீவிரத்துடன்தான் மாறும்.

சராசரி உற்பத்திச் செலவிற்கும் இறுதிநிலை உற்பத்திச் செலவிற்குமிடையேயுள்ள தொடர்பினை, வழக்கமாக விளக்குவது

போல், ஒரு கோட்டுப் படத்தின்மூலம் விளக்கலாம். படம் 23, 7ஆம் அட்டவணையில் குறிப்பிட்டுள்ள புள்ளிவிவரங்களின் அடிப்படையில் வரையப்பட்டுள்ளது. AC என்னும் கோடானது ஏற்கெனவே நாம் விவரித்துள்ள உற்பத்திக் கோட்டு வகையைச் சேர்ந்ததாகும். அது




படம் 23

உற்பத்தியின் பல்வேறு மட்டங்களிலுள்ள சராசரி உற்பத்திச் செலவைக் காட்டுகிறது. இதே OX, OY என்னும் அச்சுகளில் MC என்னும் இறுதிநிலைச் செலவுக் கோட்டையும் வரையலாம். இவ் விரு கோடுகளின் தன்மையைப்பற்றிய சில பொது விதிகளை நாம் வகுக்கக்கூடும். முதலாவதாக, இறுதிநிலைச் செலவுக் கோடானது சராசரிச் செலவுக் கோட்டிற்கும்கீழே இருக்கும்வரையில், உற்பத்தியானது அதிகரித்துக்கொண்டேபோகும்போது சராசரிச் செலவும் குறைந்துகொண்டேபோகும். இது சிக்கலேதுமின்றித் தெளிவாக விளங்குகின்றது. நாம் ஏற்கெனவே கண்டவாறு, இறுதிநிலை உற்பத்திச் செலவானது சராசரி உற்பத்திச் செலவிற்கும் குறைவாக இருக்குமானல், அதிகரிக்கும் உற்பத்தியானது மொத்த உற்பத்திச் செலவுகளில் சென்ற சராசரியைக் காட்டிலும் ஒரு சிறு அளவினையே அதிகப்படுத்துவதாக இருக்குமாதலால், புதிய சராசரி பழைய சாரசரியைக் காட்டிலும் குறைவானதாகவே இருக்கும். இதைப்போலவே இறுதிநிலைச் செலவுகள் சராசரிச் செலவு

களைக் காட்டிலும் அதிகமாக இருக்குமானால், அது சராசரிச் செலவு உயர்ந்து இருக்கவேண்டுமென்று பொருள்; உற்பத்தி அதிகரித்துச் செல்லும்போது சென்ற சராசரிச் செலவு கூடுதலாக அளித்ததற்கு மேலானதொரு பெரிய தொகை மொத்த உற்பத்திச் செலவுடன் சேர்க்கப்படுவதால், புதிய சராசரி பழைய சராசரியைக் காட்டிலும் அதிகமானதாக இருக்கும். கடைசியாக, இறுதிநிலைச் செலவும் சராசரிச் செலவும் சமமாக இருக்குமானால், அப்போது அந்தப் புள்ளியில் (at that point) சராசரிச் செலவு அதிகரிக்காமலும் குறையாமலும் இருக்கும்; அது குறைந்து செல்வதனின்றும் நின்று விடுகிறது; அதிகரிக்கவும் ஆரம்பிப்பதில்லை.

### 3. அளிப்புக் கோடுகள் (Supply Curves)

இதுவரையில் நாம் தனி நிறுவனத்தைப்பற்றிமட்டுமே ஆராய்ந்தோம். இதுகாறும் கூறப்பட்ட கோடுகள் ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தின் உற்பத்திக்கும், அதன் சராசரி அல்லது இறுதிநிலை உற்பத்திச் செலவுக்குமிடையேயுள்ள தொடர்பினைக் கூறுவதாக உள்ளன. பலவித நோக்கங்களுக்கு, அங்காடியில் ஒரு பண்டத்தின் மொத்த அளிப்பானது, ஒரு நிறுவனமானது அந்த மொத்த அளிப்பில் ஒரு பகுதியை உற்பத்தி செய்து அளிப்பதைக் காட்டிலும், கருத்திற்குப் பயன் தருவதாக இருக்கிறது. உதாரணமாக, பாலின் விலையானது அதன் அளிப்பை எவ்வாறு பாதிக்கின்றது என்பதனைத் தெரிந்துகொள்ளப் பாலின் மொத்த அளிப்பை ஆராய்ந்து தெரிதல் வேண்டுமே தவிர, பால்பண்ணை வைத்து நடத்தும் ஒரு தனிநபரின் உற்பத்தியை ஆராய்ந்து தெரிந்துகொள்ள முடியாது. இத்தகைய பிரச்சினையை ஆராயத் தனி நிறுவனத்தை ஆராயாமல் தொழிலையே ஆராயவேண்டும். தொழில் என்று கூறப்படுவது அங்காடிக்குச் சம்பந்தப்பட்ட பண்டத்தின் அளிப்பு முழுவதையும் ஒருங்கே உற்பத்தி செய்யும் நிறுவனங்களின் தொகுதியாகும். வேறு வழியில் கூறப்போனால், இத்தகைய ஆராய்ச்சியில் தனி நிறுவனத்தின் உற்பத்திச் செலவுக் கோட்டினைவிட்டு விலகித் தொழில் முழுவதன் அளிப்புக் கோட்டின்மீது ஆழ்ந்து கவனம் செலுத்தவேண்டும். இத்தகையதோர் அளிப்புக் கோடானது, ஒரு பண்டத்தின் அளிப்பிற்கும், அதன் அங்காடி விலைக்குமிடையேயுள்ள தொடர்பினைச் சித்திரிக்கின்றது.

அளிப்புக் கோட்டினை எவ்வாறு அமைப்பது என்பதனை ஆராயு முன்னர், இது சிக்கலான பிரச்சினைகளைக்கொண்டதொரு வேலையென்பதைத் தெளிவுபடுத்தியாகவேண்டும். அத்தகைய சிக்கலான பிரச்சினைகள் என்னவென்பதைப் பிறிதோர் இடத்தில் நன்கு ஆராய்வோம். தற்சமயம் இவ்வாராய்ச்சியைச் சற்று ஒதுக்கி

வைப்போம். உதாரணமாக, ஒரு 'தொழில்' என்பது எதனைக் குறிக்கின்றது? நிறுவனங்கள் ஒரேவிதப் பொருள்களை (identical) உற்பத்தி செய்யாது ஒத்த (similar) பொருள்களை உற்பத்தி செய்யுமானல்—காட்பரீஸ் கம்பெனியின் சாக்லெட்டுகள், ஃபிரை கம்பெனியின் சாக்லெட்டுகள்போன்று—இந்த நிறுவனங்கள் ஒரே தொழிலைச் சேர்ந்தனவாக ஆகுமா அல்லது ஆகாவா என்னும் கேள்வி எழுகிறது. ஒத்த பண்டங்கள் ஒரேவிதப் பண்டங்கள் என அழைக்கப்படுவதற்கு எத்தகையனவாக இருக்க வேண்டும்? இரண்டாவதாக உள்ள இடர்ப்பாடானது, தொழிலில் உள்ள பல்வேறு நிறுவனங்களுக்கிடையே உள்ள உறவு எத்தகையதாக உள்ளது என்பதனைப் பொறுத்ததாகும்; அவைகள் எந்த அளவிற்கு ஒன்றையொன்று போட்டிபோட்டுக்கொண்டிருப்பனவாகக் கருதப்படுகின்றன, சர்வாதீன அம்சங்கள் எந்த அளவிற்கு அத் தொழிலில் குடிகொண்டிருக்கின்றன என்று திட்டவட்டமாகக் கூறுவதிலும் இடர்ப்பாடு நேரிடும். விலைக்கும் உற்பத்திக்குமிடையே உள்ள தொடர்பைப் பொறுத்தவரையில் இப் பிரச்சினைகள் மிகவும் முக்கியம் வாய்ந்தனவாக இருக்கின்றன. இவைகள் எந்த விதத்தில் முக்கியம் வாய்ந்தன என்பது 10—13 அத்தியாயங்களில் விளக்கப்பட்டுள்ளது.

அளிப்புக் கோட்டைப்பற்றிய கருத்தின் முக்கியமான தன்மையை ஆராயும்பொருட்டு, இச் சிக்கல்களை ஒரு பக்கம் ஒதுக்கி வைப்போம். தற்போதைக்கு, ஏறக்குறைய ஒரேவிதமான பண்டங்களை உற்பத்தி செய்கின்ற நிறுவனங்களின் தொகுதி உள்ளதென்பதும், அவைகளைச் சேர்த்து ஒரு தொழில் என்று கூறலாமென்பதுமான கருத்தினைமட்டும் கொள்வோம். மேலும், அந்த நிறுவனங்களுக்கிடையே பூரண போட்டி உள்ளதெனவும் கொள்வோம். இதனல் ஒவ்வொரு நிறுவனமும் தொழிலின் மொத்த உற்பத்தியில் ஒரு சிறு பகுதியையே உற்பத்தி செய்வதால், அதன் உற்பத்தியில் ஏற்படும் எந்த மாற்றமும் அங்காடி விலையிலோ அல்லது மற்ற நிறுவனங்களின் மொத்த உற்பத்தியிலோ எவ்விதமான விளைவையும் ஏற்படுத்துவதில்லை. அத்தகைய ஒரு சூழ்நிலையில் அந்தப் பண்டம் விற்கப்படுகின்ற அங்காடி விலையில் ஏற்படும் ஒரு மாற்றமானது அதனுடைய மொத்த அளிப்பை இரு வழிகளில் பாதிக்கும். முதலாவதாக, ஏறக்குறைய உடனடியாக உள்ள விளைவு யாதெனில், தொழிலில் ஒவ்வொரு தனிப்பட்ட நிறுவனத்தின் உற்பத்தி அளவானது, அவைகளின் திறமை—திறமை என்று கூறுவது முதல் சாதனங்களை ஏற்படுத்தும்—பரந்த எல்லைக்குட்பட்டு உற்பத்தியில் மாற்றங்களை ஏற்படுத்தும். இரண்டாவதாக, விலையில் ஏற்படும் மாற்றம் போதுமான அளவிற்கு நிரந்

தரமாக இருக்கும்பட்சத்தில், இருக்கின்ற நிறுவனங்கள் தங்களது அடிப்படை உற்பத்தித்திறனில் போதிய சரிசெய்தல்களைச் செய்து கொள்ளும்; புதிய நிறுவனங்கள் தொழிலுக்கு வர ஆரம்பிக்கும் (அல்லது இருக்கின்ற நிறுவனங்கள் தொழிலைவிட்டு விலகும்).

உதாரணமாக, ஒரு பண்டத்தின் அங்காடி விலை உயருகின்றதென வைத்துக்கொள்வோம். தொழிலில் ஏற்கெனவே உள்ள நிறுவனங்கள், பழைய குறைந்த விலையில் உற்பத்தி செய்வதில் இலாபம் கண்டன. உற்பத்தியின் ஓர் அலகிற்கான புதிய இலாப வீதம் ஏற்கெனவே இருந்த இலாபவீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தாகவேண்டும். அப்போதுதான் அதிக இலாபவீதங்களால் அவர்கள் தூண்டப்பட்டு (உற்பத்தியாளர்கள் எப்போதுமே தங்களது இலாபங்களை உச்சமான அளவில் தேடுவர் என்னும் எடுகோள் கொள்ளப்படுகிறது) உற்பத்தியைப் பெருக்குவர். சென்ற உட்பிரிவில் உற்பத்தியின் ஒவ்வொரு கூடுதலான அலகிற்கான உற்பத்திச் செலவானது 'இறுதிநிலைச் செலவு' என்று விளக்கப்பட்டது. உற்பத்தியாளர் தன் உற்பத்தியின் ஒவ்வோர் அலகினின்றும் பெறுகின்ற வருமானம் (revenue) (இந்த எளிய உதாரணத்தில் பண்டம் விற்கப்படுகின்ற விலை) இறுதிநிலைச் செலவைக் காட்டிலும் அதிகமாகவோ, அல்லது சமமாகவோ இருக்கும்வரையிலும் உற்பத்தியாளர் தனது மொத்த இலாபத்தை அதிகரித்துக்கொண்டவராவார். எனவே, விலைகள் அதிகரிக்கும் போது, ஒவ்வொரு நிறுவனமும் அதன் இறுதிநிலைச் செலவானது அங்காடிச் செலவிற்குச் சமமாக இருக்கின்ற புள்ளியை அடையும் வரையில் தனது உற்பத்தி அதிகரித்துக்கொண்டே செல்லும்.

தொழிலில் உள்ள நிறுவனங்களின் உற்பத்திக்கு ஏற்றவாறு சரிசெய்துகொள்வதன்மூலம் எவ்வாறு ஒரு பண்டத்தின் மொத்த அளிப்பானது, அங்காடி விலையில் ஏற்படும் மாற்றங்களுக்குத் தக்கவாறு மாற்றமடைகிறதென்பதை ஓர் எண் உதாரணத்தின்மூலம் நன்கு விளக்கலாம். அட்டவணை 8 ஆனது, ஐந்து நிறுவனங்களைக் கொண்டதொரு தொழிலின் பல்வேறு உற்பத்தி மட்டங்களில் உள்ள இறுதிநிலைச் செலவுகளை உணர்த்துகிறது. இவ் உதாரணத்தில் மிகக் குறைந்த கால அளவே கருதப்பட்டுள்ளது. இக் குறுகிய கால அளவில் இந்த நிறுவனங்கள் தங்களது உற்பத்தித்திறன் மட்டத்தைச் சரிசெய்துகொள்ள முடியாது; இக் கால அளவில் புதிய நிறுவனங்களையும் அமைத்துவிட முடியாது. உதாரணத்தை எளிதாக விளக்குமுகத்தான், ஒவ்வொரு நிறுவனமும் உற்பத்தியின் எல்லா மட்டங்களிலும் அதிகரித்த இறுதிநிலைச் செலவுகளையுடையன வாக இருக்கின்றனவென்னும் (சென்ற உட்பிரிவில் நாம் பார்த்தபடி

இத்தகைய ஒரு நிலை நடைமுறையில் ஏற்படுவதில்லை) ஓர் எடுகோள் கொள்ளப்பட்டுள்ளது.

அட்டவணை 8 : ஒரு கருதுகோளான தொழிலில் உள்ள இறுதிநிலைச் செலவுகள்

| உற்பத்தி அலகுகள் | ஓர் அலகின் இறுதிநிலை உற்பத்திச் செலவு (ஷில்லிங்குகளில்) கம்பெனி 1 | கம்பெனி 2 | கம்பெனி 3 | கம்பெனி 4 | கம்பெனி 5 |
|---|---|---|---|---|---|
| 100 | 2·0 | 2·0 | 2·0 | 2·0 | 2·0 |
| 200 | 3·0 | 4·0 | 2·5 | 4·0 | 6·0 |
| 300 | 4·0 | 6·0 | 3·0 | 6·0 | 8·0 |
| 400 | 5·0 | 8·0 | 3·5 | 8·0 | 12·0 |
| 500 | 7·0 | 12·0 | 4·0 | 10·0 | 20·0 |
| 600 | 8·0 | 16·0 | 6·0 | 12·0 | 25·0 |
| 700 | 10·0 | 20·0 | 8·0 | 16·0 | 32·0 |
| 800 | 12·0 | 24·0 | 12·0 | 23·0 | 40·0 |
| 900 | 16·0 | 29·0 | 16·0 | 27·0 | 50·0 |
| 1000 | 20·0 | 35·0 | 20·0 | 32·0 | 60·0 |

அங்காடி விலையானது 2 ஷில்லிங் அளவில் இருக்கிறதென வைத்துக்கொள்வோம் ; இந்த விலையில் ஒவ்வொரு நிறுவனமும், 100 அலகுகளின் உற்பத்தி வீதத்தில்தான் தனது உற்பத்திச் செலவுகளைச் சமாளிக்க முடிகிறது. இந்த உற்பத்தி மட்டத்தைவிட அதிகமாக உற்பத்தி செய்வதன்மூலம் அவைகளில் எந்த நிறுவனமும் இலாபத்தைப் பெற இயலாது. எனவே, இந்த 2 ஷில்லிங் அங்காடி விலையில் மொத்த அளிப்பு 500 அலகுகளாகவேயிருக்கும்.

தற்போது அங்காடி விலை 4 ஷில்லிங்காக அதிகரிக்கின்றதென வைத்துக்கொள்வோம். இந்த விலையில் முதல் கம்பெனி 300 அலகுகளை உடையதாகத் தன் உற்பத்தியை அதிகரித்துக்கொள்ளும். ஏனெனில், இந்த உற்பத்தி மட்டத்திற்கும் அதிகமான உற்பத்தி மட்டத்தின் போதுதான் அங்காடி விலை 4 ஷில்லிங்கிற்கும் அதிகமாக இருக்கிறது. இதைப்போன்றே 2, 4 ஆகிய கம்பெனிகள் ஒவ்வொன்றும் தங்கள் உற்பத்தியை 200 அலகுகளாகவும், 3ஆவது கம்பெனி 500 அலகுகளாகவும் உற்பத்தியை அதிகரித்துக்கொள்கின்றன ; ஏனெனில், இந்த உற்பத்தி மட்டங்களில்தான் விலையானது இறுதிநிலைச் செலவைச் சமாளிக்கவல்லதாக இருக்கின்றது. எனினும், இவ்விலை 5ஆவது கம்பெனி 100 அலகுகளின் மட்டத்திற்குமேல் தனது உற்பத்தியை அதிகரித்துக்கொள்ளுமளவிற்கு அதிகமானதாக இல்லை. எனவே, 4 ஷில்லிங் அங்காடி விலையில் மொத்த அளிப்

பானது 1,300 அலகுகளாக அதிகரிக்கும்—முதல் கம்பெனி உற்பத்தி செய்தது 300 அலகுகள்; 2, 4 ஆகிய கம்பெனிகள் ஒவ்வொன்றும் உற்பத்தி செய்தது 200 அலகுகள்; 3ஆவது கம்பெனி உற்பத்தி செய்தது 500 அலகுகள்; 5ஆவது கம்பெனி உற்பத்தி செய்தது 100 அலகுகளாகும். இத்தகைய ஒரு முறையே பல்வேறு அங்காடி விலைகளுக்கும், நீடிக்குமானால் ஒவ்வொரு விலையிலும் அளிக்கப்படும் பண்டத்தின் மொத்த அளவைக் குறிக்கும் ஓர் அட்டவணையை அமைக்கக்கூடும். அட்டவணை 8-ல் உள்ள புள்ளி விவரங்கள் 20 ஷில்லிங் அங்காடி விலையில் மொத்த அளிப்பு 3,900 அலகுகளாக இருக்குமென்பதைக் காட்டுகின்றது—1000 அலகுகள் முதல் கம்பெனியாலும், 1700 அலகுகள் 2ஆவது கம்பெனியாலும், 1000 அலகுகள் 3ஆவது கம்பெனியாலும், 700 அலகுகள் 4ஆவது கம்பெனியாலும், 500 அலகுகள் 5ஆவது கம்பெனியாலும் உற்பத்தி செய்யப்பட்டன.

இந்த விலைகளையும் உற்பத்திகளையும் ஒரு வரைகட்டத்தில் (graph) குறித்தோமானால், சம்பந்தப்பட்ட தொழிலின் அளிப்புக் கோடு கிடைக்கும். படம் 24-ல் SS′ என்னும் கோடு இத்தகையதோர் அளிப்புக் கோட்டை உணர்த்துகிறது. இந்தக் கோடானது,




படம் 24

அட்டவணை 8-ல் காணும் புள்ளிவிவரங்களின் அடிப்படையில் வரையப்பட்டுள்ளது. இருக்கின்ற நிறுவனங்களின் உற்பத்தித் திறன் மாற்றமேதுமின்றி நிலையாக உள்ளதென்பதும், நிறுவனங்களின் எண்ணிக்கை மாறவில்லை என்பதுமான எடுகோளைக் கொண்ட புள்ளிவிவரங்களின் அடிப்படையில் இக்கோடு வரையப்

பட்டிருப்பதால், இது குறுங்கால அளிப்புக் கோடாகவே இருக்கிறது. மேலும், இது மிகவும் எளிதாக்கப்பட்டதும், குறிப்பாக உண்மைநிலைக்கு ஒவ்வாததுமானதோர் உதாரணத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது. அட்டவணை 8-ல் 5ஆவது கம்பெனியின் இறுதிநிலைச் செலவானது, 100ஆவது அலகை உற்பத்தி செய்யும்போது 2 ஷில்லிங்காகவும், 101ஆவது அலகை உற்பத்தி செய்யும்போது 6 ஷில்லிங்காகவும் அதிகரிப்பதுபோல அதிகரிப்பதும் இல்லை. ஆயினும், இது அளிப்புக் கோடுகளைப் பெறுகின்ற கோட்பாட்டினைப் பாதிப்பதாக இல்லை; இதுவே இங்குள்ள மிக முக்கியப் பிரச்சினை. இத்தகைய அளிப்புக் கோடுகள் இயல்பாக இடமிருந்து வலமாக மேல்நோக்கிச் சரிந்து செல்லும். இக் கோடு எந்த ஒரு பண்டமும் குறைந்த விலையைக் காட்டிலும் அதிகமான விலையில்தான் அதிகமாக அளிக்கப்படும் என்னும் மிகப் பழக்கமானதொரு பொருளாதாரப் பொதுமையைப் பிரதிபலிப்பதாக உள்ளது. விலையானது அதிகரித்துச் செல்லச் செல்ல, உற்பத்தியானது அதிக இலாபமானதாக இருக்கும்; தொழில்முயல்வோனும் அதிகமான அளவு உற்பத்தியைச் செய்வது பயனுள்ளதென அறியக்கூடும்.

•

ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் தேவைக் கோட்டை, அத்துடன் தொடர்புகொண்டுள்ள பண்டங்களின் விருப்பச் சுவைகள், வருமானங்கள் அல்லது விலைகள் இவைகளில் ஏற்படும் மாற்றங்கள் இடப்புறமாகவோ அல்லது வலப்புறமாகவோ மாற்றி அமைத்துவிடும் என்பதனைச் சென்ற உட்பிரிவில் பார்த்தோம். இதுபோன்றே உற்பத்தியின் அடிப்படையான நிலைகளில் ஏற்படும் ஒரு மாற்றமானது (உற்பத்தித் திறனில் சரிசெய்துகொள்ளுதலோ அல்லது ஒரு புதிய கண்டுபிடிப்போ) உற்பத்திச் செலவுக் கோட்டை வலமாகவோ அல்லது இடமாகவோ மாற்றியமைக்கும். இதனால் அளிப்புக் கோடுகளும் தொழில்நுணுக்க வளர்ச்சியின் காரணமாக ஒரு குறிப்பிட்ட கால அளவில் மாற்றமடையும் என்பது விளங்குகின்றது. எனவே, ஒரு குறிப்பிட்ட பண்டத்திற்கான அங்காடி விலையும் ஒரு தொழிலானது அளிக்கும் அப் பண்டத்தின் கணியங்களும் ஒன்றுக்கொன்று நீண்டகால அளவிற்குத் தொடர்புகொண்டனவாக இருக்குமானால், விலைகள் குறைவாக இருக்கும்போது பண்டத்தின் அளிப்பானது விலை அதிகமாக இருந்திருந்தபோது இருந்ததைக் காட்டிலும் அதிகமானதாக இருக்கும் என்பது தெரியவரும். இதனால், ஒரு குறிப்பிட்ட நேரத்திலுள்ள அளிப்புக் கோடு கீழ்நோக்கிச் சரிந்து செல்வதாக உள்ளது என்று பொருளன்று; சாதாரணமாக 'இயல்பாக' உள்ளதென்றே பொருள். உற்பத்தியின் அளவில் அல்லது தொழிலியல் முறைகளில் ஏற்படும் வளர்ச்சி

களின் காரணமாக மேல்நோக்கிச் செல்லும் அளிப்புக் கோடானது அவ்வப்போது இடம் மாறிக்கொண்டிருக்கும்.

தேவைக் கோடுகளைப் போலவே அளிப்புக் கோடுகளையும் உண்மை நிகழ்ச்சியாகச் சித்திரிக்க முடியாது. பல தனி நிறுவனங்கள் தங்களது பல்வேறு உற்பத்தி மட்டங்களுக்கான உற்பத்திச் செலவுக் கோடுகளை வரைந்து வைத்துக்கொள்ளக்கூடிய நிலையிலிருக்கும் என்று கூறமுடியாது. அவைகள் ஏதோ தோராயமான, பொதுப் படையான கணக்குகளை வேண்டுமானல் வைத்துக்கொண்டிருக்கும். தொழிலுள்ள எல்லா நிறுவனங்களினின்றும் (தொழில் என்பது எதனைக் குறிக்கும் என்னும் பிரச்சினைக்கு முடிவு கண்டுவிட்டதாகக் கருதியபோதும்) ஒப்புமையானதோர் அடிப்படையில் புள்ளி விவரங்களைச் சேகரிப்பது என்பதும் (தொழில் முழுமைக்குமான தோர் அளிப்புக் கோட்டினை அமைப்பதற்கு) இயலாத காரியமாகும். ஆயினும், இத்தகைய கோடுகள் மதிப்பு வாய்ந்ததோர் ஆராய்ச்சிச் சாதனமாக இருக்கின்றன. அவைகள் விலை, உற்பத்திச் செலவு, உற்பத்தி ஆகியவைகளுக்கிடையேயுள்ள தொடர்புகளின் அடிப்படைக் கோட்பாடுகளைக் கண்ணுக்குத் தெரியக்கூடிய வகையிலும், எளிதாகப் புரிந்துகொள்ளக்கூடிய அளவிலும் விளக்குகின்றன. இதேபோன்று தேவைப் பகுதியிலமர்த்தப்படும் காரணிகளுக்கும், கோடுகளை வரைந்து அதன்மூலம் தெளிவுகொள்ளலாம். இவ்விதமாகத்தான் சிக்கலானவையும், ஒன்றையொன்று தழுவியுள்ளவையுமான பல சக்திகளை ஓர் ஆராய்ச்சி முறையின்கீழ்க் கொண்டுவரலாம். இச் சக்திகளின் உத்தேசமான விளைவுகளை (probable effects), கணக்கு முறையிலல்லாத ஒரு வழியில் விளக்கப் படுவதைக் காட்டிலும் தெளிவாக இம் முறையில் விளக்கலாம்.

கடைசியாக உள்ளதொரு தகுதியும் தேவைப்படுகிறது. இந்த ஆராய்ச்சி முழுவதிலும், உற்பத்தியானது, விலை, உற்பத்திச் செலவு ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறதென்று கருதிவந்தோம். மேலும், அளிப்பும் உற்பத்தியும் ஒன்று என்றும் கருதப்பட்டது. நடைமுறை உலகத்தில் இவ்விரண்டு எடுகோள்களுமே தவறானவைகளாக இருக்கின்றன. நிறுவனங்களின் உற்பத்தியும், அல்லது ஒரு தொழில் முழுவதன் உற்பத்தியும் விலைகள் அல்லது உற்பத்திச் செலவுகள் இவைகளில் மாற்றமேதுமின்றியே மாறக்கூடும்—உதாரணமாக, பாதகமான வானிலை அல்லது தொழிலாளர்களிடையே ஏற்படும் தீய தொத்துநோய், போர்க்காலத்தில் எதிரி நாட்டின் குண்டுவீச்சு இவற்றால் உற்பத்தியில் மாற்றங்கள் ஏற்படக் கூடும். பொருளாதார ஆய்வில் இத்தகைய இதர காரணிகள் புறக்கணிக்கப்படுவதற்குக் காரணம் அவைகள் பொருளாதார வயப்

பட்டவைகளாக இல்லாமலிருப்பதேயாகும். இவைகளைப்பற்றிக் கருத்துகளைத் தெரிவிக்கப் பொருளாதார விற்பன்னருக்கு எந்தவித அதிகாரமும் இல்லை.

அளிப்பும் உற்பத்தியும் ஒன்று என்பதற்கும் ஆதாரங்கள் குறைவாக உள்ளனபோன்றே தோன்றுகிறது. அங்காடியில் விலைகள் மாறும்போது ஒரு முக்கியமான நிகழ்ச்சி ஏற்படக்கூடும்—பெரும் பாலும் அவ்வாறே ஏற்படுகிறது. அதாவது, மொத்த விற்பனை யாளர்களும் சில்லறை விற்பனையாளர்களும் சரக்குகளின் இருப்பைச் சேகரித்து வைத்துக்கொள்கின்றனர். சரக்கிருப்புகளில் ஏற்படும் இத்தகைய மாற்றம் அங்காடிவிலையில் மேலும்முக்கியமான மாறுதலை உண்டுபண்ணுகிறது. இவ்வாறு சரக்கிருப்புகளை வைத்துக்கொள்வ தானது, நடப்பு உற்பத்திக்கும் நுகர்வோர்களுக்கு அளிக்கப்படும் பண்டங்களின் அளிப்பிற்குமிடையேயுள்ள நேரடியான தொடர்பினை அறுப்பதாக உள்ளது. வர்த்தகர்கள், ஒரு பண்டத்தின் விலை யானது அதிகரிக்கப்போகிறதென்று நம்புவார்களானால், அந்தப் பண்டங்களை, விலையதிகரித்த பின்னர் விற்பதற்காக நிறைய சேகரம் செய்வர். இதேபோன்று பண்டங்களின் விலை குறையும் என்று அவர்கள் எதிர்பார்ப்பார்களேயானால், விலை குறைவதற்குள் விற்றுவிடவேண்டுமென்னும் நோக்கத்துடன் தங்களிடம் கைவச மாகவுள்ள அப் பண்டங்களின் சரக்கிருப்புகள் முழுவதையும் அங்காடியில் கொண்டுவந்து குவிப்பர். இத்தகைய யூகங்கள் சரியானவைகளாக இருந்தபோதிலோ அல்லது தவறானவைகளாக இருந்தபோதிலோ இத்தகைய பங்குமாற்று நிலையங்கள் பண்டத்தின் உற்பத்தியில் எவ்வித மாற்றங்களும் இல்லாமலிருந்தபோதிலும், பண்டத்தின் அளிப்பில் கணிசமான அளவிற்கு மாற்றத்தை (அதன் மூலம் விலையிலும்) உண்டுபண்ணுகின்றன.

இருப்புகளின்மூலம் இவ்வாராய்ச்சிக்கு நேர்ந்துள்ள சிக்கல்களை இரு காரணங்களுக்காகத் தற்சமயம் பொருட்படுத்தாதிருப்போம். முதலாவதாக, விலை, உற்பத்திச் செலவு, உற்பத்தி ஆகியவைகளுக் கிடையேயுள்ள அடிப்படையான தொடர்புகளைப்பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ளுதல் அவசியமாகும்; இவற்றை அறிந்துகொள்ளு வதற்குத் துணைக்காரணங்களை—நடைமுறையில் அவைகள் முக்கியம் வாய்ந்தவைகளாக இருப்பினும் தற்போது ஒதுக்கிவைப்பது நலம். இரண்டாவதாக, பெரும்பாலான பண்டங்கள், எந்த அளவு காலத்திற்குச் சேகரித்து வைக்கப்படுகின்றனவோ அந்த அளவு அவை ஒரு வழியில் அல்லது மற்றொரு வழியில் தரங் குன்றுகின்றன. இதன் காரணமாக, நீண்ட கால அளவில் இருப்பு நிலைகளில் ஏற்படும் மாறுதல்கள், ஒன்றின் விளைவு மற்றொன்றின் விளைவைப்

போக்கிக்கொள்வதாக இருக்கின்றன—அதாவது, சேகரித்து வைக்கப்படுவதில் ஏற்படும் தரங்குன்றுதலே, நீண்ட காலத்தில் இருப்புநிலைகளில் ஏற்படும் மாற்றங்கள் போக்குவனவாக உள்ளன. ஒரு பண்டத்தின் நீண்டகால அளிப்பு முக்கியமாக அதன் உற்பத்தி மட்டத்தால்தான் நிர்ணயிக்கப்படுகிறது; பங்குமாற்று நிலையங்கள் அதன் விலையில் முக்கிய, ஆனால், தாற்காலிக விளைவை உண்டு பண்ணக்கூடும்.

## 4. அளிப்பில் காலத்தின் முக்கியத்துவம் (The Significance of Time in Supply)

விலையில் ஏற்படும் மாற்றமானது தேவையில் ஏற்படுத்தும் விளைவுகளை ஆராய்ந்தபோதும், அல்லது தேவையில் ஏற்படும் மாற்றங்கள் விலையில் ஏற்படுத்தும் மாற்றங்களை ஆராய்ந்தபோதும், ஒன்றின் மாற்றத்திற்கும் மற்றொன்றின் மாற்றத்திற்குமிடையே கழிந்துவிடக்கூடிய (elapse) காலநீடிப்பைப் (delay) பொருட்படுத்தாது விட்டுவிடுதல் சாத்தியமானதாக இருந்தது. நடைமுறையில் பார்க்கும்போது, இத்தகைய காலநீடிப்புகள் நீண்டவைகளாக இருப்பதில்லை; அப்படியே அவைகள் தோன்றினாலும் தேவை, விலை ஆகியவைகளுக்கிடையே ஏற்படும் விளைவு எதிர்விளைவுகளைப்பற்றிய ஆய்வினை உருப்படியாகப் பாதிப்பதில்லை. பண்டங்களின் அளிப்பைப் பொறுத்தமட்டில், காலநீடிப்புகள் அல்லது கால இடைவெளிகள் கணிசமான அளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்தனவாக இருக்கின்றன. இதற்குக் காரணம், நடைமுறை உலகத்தில், உற்பத்தியானது விலையின் மாற்றங்களுக்கேற்றவாறு முழுவதும் சரிசெய்து கொள்வதற்குக் கணிசமான அளவில் காலம் தேவைப்படுகிறது (தொழிற்சாலைகள், கப்பல் கட்டும் துறைகள் இவற்றை ஒரே நாளில் கட்டிமுடித்துவிட முடியாது). மேலும், இத்தகைய கால இடைவெளிகள் கோட்பாட்டு ஆய்வில் மிக முக்கிய விளைவுகளை உண்டு பண்ணத்தக்கனவாக இருக்கின்றன.

மாறாச் செலவுகளுக்கும் மாறுஞ் செலவுகளுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டினை விளக்கியபோது, அவைகள் ஒரு குறுகிய காலத்தில் எந்த அளவில் சரிசெய்யப்படும்—மேல்நோக்கி அல்லது கீழ்நோக்கி—என்பதுபற்றிக் கூறப்பட்டது. இதை இன்னும் சரிநுட்பமாகக் கூறப் போனால், பொருளாதார நிபுணர்கள் குறுங்காலத்தையும் நெடுங் காலத்தையும் தெளிவாக வேறுபடுத்திக் கூறுகிறார்கள் எனலாம். குறுங்காலம் என்பது தொழிலின் உற்பத்தித் திறனானது தேவையில் ஏற்படுத்தும் ஒரு மாற்றத்திற்கேற்றவாறு தன்னை முழுவதுமாகச் சரி செய்துகொள்ள இயலாததொரு காலமாகும். நெடுங்காலம் என்பது

உற்பத்தித்திறன் சரிசெய்யப்படுதலில் ஏற்படும் கால இடைவெளியாகும். இத்தகைய சரிசெய்தல், தொழிலில் ஏற்கெனவே இருக்கின்ற நிறுவனங்களின் இயல்பான திறனில் மாற்றங்களைச் செய்வதன் மூலமோ, (அதாவது தொழிற்சாலை இடத்தை அதிகரித்தல் அல்லது குறைத்தல், இயந்திரங்களின் தொகுதி, பொறிகள் ஆகியவற்றை நிறுவுதல் அல்லது நீக்கிவிடுதல் முதலிய வழிகளில்) அல்லது அத் தொழிலுக்குப் புதிய நிறுவனங்கள் உட்புகுதல்மூலமோ அல்லது அத் தொழிலைவிட்டு நிறுவனங்கள் வெளியேறுவதன்மூலமோ அல்லது இரண்டு காரணங்களும் சேர்ந்த ஒரு காரணத்தாலோ ஏற்படக்கூடும். உதாரணமாக, அட்லாண்டிக் பெருங்கடலைத் தாண்டியுள்ள நாடுகளுக்குப் பயணம் செய்தலில் தேவை அதிகமாக இருக்குமானால், கப்பல் கம்பெனிகள், தங்களிடமுள்ள கப்பல்களையும் கப்பலோட்டிகளையும் (crew) அதிகமான பயணங்களுக்குப் பயன் படுத்தியும், ஏற்கெனவே ஏதாவது ஒரு காரணத்தால் பயன் படுத்தப்படாமலிருந்த கப்பல்களையும் கப்பலோட்டிகளையும் பயன் படுத்தியும் தேவையைச் சமாளிக்கவேண்டிவரும். ஆனால், இந்த ஏற்பாடு நிரந்தரமானதொரு நிவாரணத்தை அளிப்பதாகாது. தேவையின் அதிகரிப்பு நிரந்தரமாக இருக்கும் என்று நம்பும் பட்சத்தில் புதிய கப்பல்கள் செய்யப்படும்; புதியதாகக் கப்பலோட்டிகளைச் சேர்த்துப் பயிற்சி அளிக்கப்படும். புதிய கப்பல்களும், புதிய கப்பலோட்டிகளும் பயன்படுத்தப்படும்போது, நெடுங்காலச் சமநிலை அடையப்பெறும். இதனை அடைவதற்கு முன்னருள்ள நிலை குறுங்காலச் சமநிலையேயாகும்.

பஞ்சாங்க முறைப்படி குறுங்காலங்களின், நெடுங்காலங்களின் கால அளவு தொழிலுக்குத் தொழில் வேறுபடுவதாக இருக்கிறது. உதாரணமாக, பஞ்சு நூற்புத் தொழிலைப் பொறுத்தவரையில் புதிய இயந்திர சாதனங்கள் பொருத்தப்படுவதற்கும், பயிற்சிபெற்ற பொறி இயக்கு தொழிலாளர்களை நியமிப்பதற்கும் முன்னுலுள்ள காலம் ஒருசில மாதங்களாகவே இருக்கும்; விமானப் போக்குவரத்தைப் பொறுத்தவரையில் புதிய விமானங்களை வருவித்தலுக்கும், கூடுதலாக விமானப் படையினரைப் பயிற்சி அளித்து நியமிப்பதற்கும் ஐந்து அல்லது ஆறு ஆண்டுகள் பிடிக்கும். இரண்டாவதாகக் கவனிக்கவேண்டியது என்னவெனில், நெடுங்காலமென்பதானது பஞ்சாங்க முறைப்படி உள்ள காலத்திற்கும் வேறுபட்ட கால அளவை உடையதாக இருக்கிறது. இக் கால அளவானது, தொழிலின் உற்பத்தி அளவு விரிவாக்கப்படுகிறதா அல்லது சுருக்கப் படுகிறதா என்பதைப் பொறுத்திருக்கிறது. பொதுவாக, உழைப்புப் போன்றதொரு காரணியானது, வேலைக்கமர்த்தப்படுவதைக் காட்டிலும் விரைவாக வேலையினின்றும் விலக்கப்படக்கூடும். மற்றொரு

புறம், முதலானது ஒப்பீடாக நிதானமாகவே தேய்மானத்தை அடைகிறது ; ஓர் இயந்திரமானது தேய்மானத்தால் பயனொழிந்து போவதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கும்; ஆனால், ஒரு புதிய இயந்திரத்தை ஒருசில மாதங்களில் உற்பத்தி செய்துவிட முடியும். தன் உற்பத்திக்குக் குறைவான தேவையைப் பெறுகின்ற ஓர் உற்பத்தியாளர்(அதன் காரணமாகஅதிகமான அளவு மூலதனச் சாதனத்தைப் பெற்றிருக்கும்போது) தனது முதலினை அது தேய்மானத்தை அடைகின்ற அளவிற்கே குறைத்துக்கொள்ள முடியும். (தன் முதல் சாதனத்தை வேண்டுமென்றே எந்த முதலாளியும் அழித்துவிட மாட்டார்; அவ்வாறு செய்வதில் அவருக்கு எந்தவிதப் பயனுமில்லை.) அவர் செய்யக்கூடியதெல்லாம் இதுதான் : தன் முதல் சாதனத்துக்கு இனிமேல் யாதொரு தொகையையும் செலவிடாமல் வேண்டுமானால் இருந்துகொள்ளலாம்—அதாவது, அதனைப் பழுதுபடும் அளவுக்குப் பராமரிக்காமல் இருந்து நாளடைவில் தேய்மானத்தை அடையும்படி விட்டுவிடலாம்.

பொருளாதார ஆய்வில் நெடுங்காலம், குறுங்காலம் ஆகிய இவற்றிற்கிடையே உள்ள வேறுபாடு முக்கியத்துவத்தைப் பெற்றிருப்பதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவது காரணம், தேவையில் மாற்றம் ஏற்படும்போது உற்பத்தியாளர்கள் கைக்கொள்ளும் விலை, உற்பத்தி சம்பந்தமான கைக்கோளில் இது நிறைய பங்கு பெறுகிறது. உற்பத்தியாளர் ஒருவருக்கு, அவர் உற்பத்தி செய்யும் பொருளின் அங்காடி விலை திடீரென்று குறைந்துபோகின்ற நிலை ஏற்பட்டுள்ளது என்று வைத்துக்கொள்வோம். சில குறிப்பிட்ட உற்பத்தி மட்டங்களில், புதிய விலையானது அவருடைய இறுதிநிலை உற்பத்திச் செலவைக் காட்டிலும் அதிகமாக இருப்பினும், அவருடைய குறைந்தபட்ச சராசரி உற்பத்திச் செலவைக் காட்டிலும் குறைவாகவே இருக்கும். அவருடைய உற்பத்தியில் இது என்ன விளைவை உண்டுபண்ணும் ? நீண்டபொழுதில் அவருடைய உற்பத்தித் திறனில் ஏற்படுத்தப்படும் ஏதாவதொரு மாற்றமானது சராசரி உற்பத்திச் செலவைக் குறைத்தாலொழிய, அவர் தன் உற்பத்தியை நிச்சயம் கைவிட்டுவிடுவார். ஏனெனில், நடப்பில் உள்ள விலையில் தன் பண்டங்களை விற்று அதன்மூலம் தனது எல்லா உற்பத்திச் செலவுகளையும் சமாளிக்கமுடியாது. இதனால், அவர் உற்பத்தியைத் திடீரென நிறுத்திவிடக்கூடுமென்று பொருள் கொள்ளலாகாது. குறுங்காலத்தில் அவரது பொதுச் செலவுகள் மாறாமல் நிலையானவைகளாக இருக்குமாதலால், அவர் உற்பத்தியைச் செய்தாலும் செய்யாவிட்டாலும், அவைகளை ஏற்றேயாகவேண்டும். அவர் தனது பண்டத்தை அவருடைய இறுதிநிலைச் செலவுகளைச் (அதாவது, மாறுஞ் செலவுகளை) சரிக்கட்டுமளவிற்கு உள்ளதொரு

விலையில் விற்க முடியுமானல், தனது உற்பத்தி முழுவதையும் நிறுத்தி விட்டால் இருக்கும் நிலையைக் காட்டிலும் மோசமில்லாததொரு நிலையில் அவர் இருப்பார். வருமானமானது இறுதிநிலைச் செலவைக் காட்டிலும் அதிகமாக இருப்பின்,—சராசரி உற்பத்திச்செலவைச்சரிக் கட்டுவதற்கு இன்னும் அது போதிய அளவில் இல்லாமலிருப் பினும்,—அவர் தனது பொதுச் செலவுகளை ஓரளவிற்கு ஏற்கக்கூடும். இந் நிலையில், தான் உற்பத்தி முழுவதையும் மூடிவிட்டால், இருக்கும் நிலையைக் காட்டிலும் அவர் வசதியான நிலைமையிலிருப்பார். பல சமயங்களில் உற்பத்தியாளர்கள் தங்கள் பொருள்களைச் சராசரி உற் பத்திச் செலவிற்கும் குறைவாகத் தொடர்ந்து விற்றுக்கொண்டிருப் பதற்கான காரணத்தை இது விளக்குகின்றது. குறிப்பாக, பொதுச் செலவுகள் மொத்த உற்பத்திச் செலவுகளில் அதிகமான இடத்தைப் பெறுகின்றதாக இருக்கின்ற அதிக மூலதனத்தைக்கொண்ட தொழில்களில் உற்பத்தியாளர் இவ்விதம் தொடர்ந்து விற்றுக்கொண் டிருப்பர். ஆனல், நெடுங்காலத்தில், மேற்செலவுகள் குறைக்கப் பட இயலும்போது, தொழில்முயல்வோர் தனது பண்டத்தின் விலை அவருடைய சராசரி விலையைச் சமாளிக்கும் அளவில் இருக்கின்ற வரையிலும், தனது உற்பத்தியைக் குறைத்துக்கொண்டுதானிருப்பார் அல்லது தொழிலைவிட்டே விலகிக்கொள்வார்.

இவை யாவும், எந்த ஒரு தொழிலிலும், குறுங்கால நெடுங்கால அளிப்புக் கோடுகள் பல்வேருக இருக்கக்கூடுமென்பதனை உணர்த்து கின்றன. குறுங்கால அளிப்புக் கோடானது, குறுங்காலத்திலுள்ள தனிப்பட்ட நிறுவனங்களின் இறுதிநிலைச் செலவுக் கோடுகளினின் றும் பெறப்படுகின்றது என்பதும், உண்மையில் அது அச் செலவுக் கோடுகளின் தொகுப்புச் சுருக்கமே என்பதும் ஏற்கெனவே நிலை நாட்டப்பட்டன. ஆனல், நெடுங்காலத்தைப் பொறுத்தவரையில் இது போதாது. இதை வைத்துக்கொண்டு தொழில் முயல்வோர்கள் தங்களது மாறுஞ் செலவுகளைச் சமாளிக்க முடியாது—அவர்கள் தங்களது தொழிலில் நீடிக்கவேண்டுமானல், அவர்களுடைய எல்லாச் செலவுகளும் சமாளிக்கப்படவேண்டும். இதனை வேறுவகையில் விலை யானது இறுதிநிலைச் செலவுகளைச் சரிக்கட்டுமளவிற்கு இருந்தால் மட்டும் போதாது; அவைகள் சராசரிச் செலவுகளையும் சரிக்கட்டுமாறு இருந்தாகவேண்டுமென்று கூறலாம். நெடுங்காலத்தில், தொழில் முயல்வோர்கள், புதிய சூழ்நிலைகளுக்கேற்பத் தங்களது உற்பத் தித்திறனை மறுசரிசெய்தலைச் செய்ய இயலும்போது, முற்றிலும் புதிய உற்பத்திச் செலவுக் கோடுகள் தோன்றும்.

இதனல், ஒரு தொழிலின் நெடுங்கால அளிப்புக் கோடானது சராசரி உற்பத்திக் கோடுகள் பலவற்றினின்றும் பெறப்படுகிற

தென்பது தெளிவாகிறது. இச் சராசரி உற்பத்திக் கோடுகள் ஒவ்வொன்றும் தொழிலில் அந்தந்தச் சமயத்தில் உற்பத்தித் திறனில் செய்யப்பட்ட ஒவ்வொரு சரிசெய்தலேயும் உணர்த்துவனவாக உள்ளன; படம் 25 (a)-ல் இத்தகையதோர் உதாரணம் சித்திரிக்கப்பட்டுள்ளது. தொழிலானது முதலில் $OM_1$ அளவு உற்பத்தியைச் செய்வதாகக் கொள்வோம். அப்போது சராசரி உற்பத்திச் செலவுக் கோடு $AC_1$ ஆக இருக்கிறது; எனவே, சராசரி உற்பத்திச் செலவு $MN_1$ ஆக இருக்கிறது. தற்போது, தேவை உயருகிறதெனில், உற்பத்தியும் $OM_2$ ஆக அதிகரிக்கிறது. குறுங்காலத்தில் உற்பத்தித்திறன் மாறுமல் நிலேயாக இருக்குமாதலால் $AC_1$ என்னும் கோடு செயற்படுவதாக உள்ளது; எனவே, $M_2 N_2$ ஆகிய சராசரி உற்பத்திச் செலவில் $OM_2$ உற்பத்தி அடையப்பெறும். எனினும், போதிய கால அளவிற்குப் பிறகு, செலவுக் கோடு $AC_2$ ஆக இடம் பெயர்ந்து




படம் 25

செல்லுகிறது; தற்போது உற்பத்தியின் சராசரிச் செலவாகிய $OM_2$ என்பது ($M_2$ A ஆகக்) குறைக்கப்படக்கூடும். இது $X_1$-க்கு வலப்பக்கமாக உள்ள புள்ளிகளிலுள்ள எல்லா உற்பத்தி அளவுகளிலும் உண்மையானதாக இருக்கிறது. மற்றொருபுறம், இதைவிடச் சிறிய உற்பத்தி அளவுகளில்—$X_1$-க்கு இடப்பக்கமாக உள்ள புள்ளிகளிலுள்ள—$AC_1$ஆல் பிரதிபலிக்கப்படும் ஆரம்ப உற்பத்தித்திறன் மட்டம் $AC_2$ஆல் பிரதிபலிக்கப்படும் உற்பத்தித்திறன் மட்டத்தைக் காட்டிலும் குறைவான சராசரி உற்பத்திச் செலவுகளே உண்டுபண்ணுவதாக இருக்கிறது. இதைப் போன்றே, உற்பத்தியானது மேலும் $OM_3$ ஆக அதிகரிக்கும்போது உற்பத்திச் செலவுகள் முதலில் $M_3 N_3$ ஆக அதிகரிக்கும்; ஆயினும், உற்பத்தித்திறன் சரிசெய்துகொள்ளுமளவிற்குப் போதுமான காலம் சென்ற பிறகு தொழிலியக்கச் செலவு $AC_3$ ஆக இருக்கும்; உற்பத்திச் செலவாகிய $OM_3$ ஆனது சராசரியில் $M_3B$ ஆகக் குறைக்கப்

படும். மீண்டும் ஒருமுறை இந்த மூன்றாவது உற்பத்தித்திறன் மட்டமானது, $X_2$-க்கும் வலப்பக்கமாகவுள்ள புள்ளியையொத்த எந்த உற்பத்தி அளவிற்கும் குறைந்த சராசரி உற்பத்திச் செலவை உண்டுபண்ணுவதாகவே இருக்கும். $X_1$ உற்பத்தி அளவு, $X_2$ உற்பத்தி அளவு ஆகியவற்றில் இரண்டாவது உற்பத்தித்திறன் மட்டமே உகந்தது.

வேறு வழியில் கூறுவோமாகில், எல்லாப் புள்ளிகளிலும் உற்பத்தித்திறன் சரிசெய்தல்களுக்குக் காலம் அனுமதிக்கப்படும்போது, இரு காரணிகள் தோன்றும். முதலாவது, சராசரி உற்பத்திச் செலவே நிர்ணயிக்கும் காரணியாக இருக்குமேயல்லாது, இறுதிநிலைச் செலவு அத்தகையதாக இருக்காது; இரண்டாவது, படம் 25 (a)-ல் தடித்த கோட்டினால் காட்டப்பட்டுள்ள மூன்று கோடுகளின் பாகங்கள் மட்டுமே பொருத்தமானவைகளாகவும் (relevent), செயற்பட உகந்தவைகளாகவும் (operative) இருக்கின்றன; அதாவது, தொழிலின் நெடுங்கால அளிப்புக்கோடானது கிளிஞ்சில் ஓரவடிவமுள்ள $SX_1X_2S'$ என்னும் கோட்டால் (the scalloped curve $SX_1$ $X_2$ $S'$) உணர்த்தப்படுகிறது. கோட்பாட்டளவில், சாத்தியமான ஒவ்வோர் உற்பத்தி அளவிற்கும் குறுங்கால சராசரி உற்பத்திச் செலவுக் கோடுகளை வரையக்கூடும். இக் கோடுகளின் எண்ணிக்கை அதிகமாக இருக்குமானால் கிளிஞ்சில் ஓரவடிவம் மறைந்துபோகக்கூடும்; இந்த உற்பத்தி அளவு முழுமைக்கும், படம் 25(b)-ல் காட்டப்பட்டுள்ள SS′ கோட்டைப்போன்று, 'பின்னிக்கொண்டிருக்கும் பல கோடுகளுக்கும் அடியில் உள்ள' ஒரு வழவழப்பான கோட்டினை வரையலாம். இந்த நெடுங்கால அளிப்புக் கோடானது இடமிருந்து வலமாகக் கீழ்நோக்கியோ படுகிடையாகவோ அல்லது மேல்நோக்கியோ செல்லும். இவ்வாறு செல்லுதல், அந்தத் தொழிலின் பெருக்கமானது வளர்ந்துசெல் விளைவுகளின் கீழுள்ளதா—அதாவது, பேரளவு உற்பத்தியில் கிடைக்கும் சிக்கன நலன்களைப் பெறுதல்—மாறா விளைவுகளின் கீழுள்ளதா அல்லது குறைந்துசெல் விளைவுகளின் கீழுள்ளதா என்பதைப் பொறுத்ததாகும். படம் 25 (b)-ல் காட்டப்பட்டுள்ள கோடானது நெடுங்காலத் தொழிற் பெருக்கத்தின்போது வழக்கமாக அமையக்கூடும் என்று கருதப்படுகிற வடிவத்தைக் கொண்டதாகவே இருக்கிறது—அதாவது, தொழிலானது பேரளவு உற்பத்திச் சிக்கன நலன்கள் முழுமையையும் அடையப்பெறும் வரையில் பெருக்கமடையும்போது வளர்ந்துசெல் விளைவுகளையும், இந்த நிலை அடைந்த பிறகும் வளர்ச்சியடைவது மாறாச் சராசரி உற்பத்திச் செலவுகளையும், தொழிலானது இதற்கு மேலும் பெருக்கமடையும்போது சிக்கல்களையும் வரையறைகளையும் (complexities and limitations) கொண்டதாக இருந்து குறைந்துசெல் விளைவு

களுக்கு இடமளிக்கும் ஆகையால் அதிகரித்த சராசரிச் செலவுகளைக் கொண்டதாக இருக்கும்.

அளிப்புபற்றிய ஆய்வில் 'காலம்' ஏன் சிறப்பான முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளதென்பதற்கு இரண்டாவது காரணம், 'அளிப்பின் நெகிழ்ச்சி' பற்றிய கருத்தானது கால இடைவேளையினின்றும் பிரிக்கப்பட முடியாமலிருப்பதேயாகும். தேவையைப் பொறுத்த மட்டில், நெகிழ்ச்சியை ஆராயும்போது, காலத்தினை ஓரளவிற்குப் பொருட்படுத்தாது விட்டுவிடலாம். விலையின் மாற்றத்திற்கேற்பத் தேவையில் ஏற்படும் மாற்றமானது, உண்மைக்குப் புறம்பான நிகழ்ச்சிகளை அதிகமாகக் கொண்டிராமல், உடனடியாக நிகழக்கூடியதாக இருக்கிறது. அளிப்பைப் பொறுத்தவரையில், காலம் என்னும் இவ்வுறுபொருள் (element of time) கணக்கிலெடுத்துக்கொள்ளப் படவேண்டியதொன்றாக உள்ளது. அளிப்பின் நெகிழ்ச்சி என்பதை அங்காடியின் விலையில் ஏற்படும் மாற்றத்திற்கேற்றாற்போல் உற்பத்தியில் ஏற்படும் விளைவு (responsiveness) என்று பொருள் கொள்ளலாம். இந்த ஒரு விளைவை, எந்த ஒரு குறிப்பிட்ட கால அளவில் அது ஏற்பட்டது என்பதனை ஆராயாமல் அளந்துவிட முடியாது. ஏற்கெனவே பார்த்ததுபோல், குறுங்காலத்தில் உற்பத்திக் கோடுகள் ஏறக்குறைய விரைவாகவே செங்குத்தாகச் செல்கின்றன. எனவே, விலையில் அதிகரிப்பானது உற்பத்தியில் சிறிதளவு அதிகரிப்பையே உண்டுபண்ணுகின்றது. ஆயினும், உற்பத்தித் திறனைச் சரிசெய்து கொள்ளுவதற்கு அதிகமான காலம் கொடுக்கப்பட கொடுக்கப்பட அளிப்பு அதிகமான நெகிழ்ச்சியை அடைய ஆரம்பிக்கும்.

தொழில்களுக்கிடையே உள்ள ஒப்பீடான அளிப்பு நெகிழ்ச்சியைப் பல காரணிகள் தீர்மானிக்கின்றன. உதாரணமாக, அதிகமாகச் சிறப்புத்திறன் வாய்ந்த முதல் அல்லது உழைப்பைப் பயன்படுத்தும் ஒரு தொழிலானது, சிறப்புத் திறனும் தேர்ச்சியும் இல்லாத காரணிகளைப் பயன்படுத்தும் தொழிலைக் காட்டிலும், அதன் உற்பத்தித் திறனை அதிகப்படுத்துவது அதிகக் கடினமாக இருப்பதாக உணரும். மேலும், ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களை உற்பத்தி செய்யும் ஒரு தொழிலானது, நெகிழ்ந்த அளிப்புத் திறனை அது உற்பத்தி செய்கின்ற எந்தப் பொருளிலாவது பெற்றிருக்கும். இதற்குக் காரணம், அப் பொருள்களின் ஒப்பீடான விலைகளில் மாற்றம் ஏற்படுமானால் அத் தொழிலானது தன் சாதனங்களை ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளுக்கு ஏறக்குறைய விரைவில் மாற்றி அமர்த்தக்கூடும். உற்பத்தியின் பருப்பொருளியலான நிலைகளும் (physical conditions) நெகிழ்ச்சியைப் பாதிப்பனவாக உள்ளன. உதாரணமாக, விவசாயப் பொருள்களின் அளிப்புக்

குறிப்பிடும்படியானதொரு நெகிழ்வற்ற தன்மையை உடையனவாக இருக்கின்றன. விவசாயி விதையை விதைத்துவிட்டபிறகு அல்லது வயல்களையும் பக்குவப்படுத்திவிட்ட பிறகு, விலைகளில் எவ்வளவு தான் ஏற்ற இறக்கங்கள் (fluctuations) ஏற்படினும், அடுத்த பருவம் வருகின்றவரையிலும், தனது உற்பத்தியை மாற்றி அமைத்துக் கொள்ள முடியாது.

## 5. கூட்டளிப்பு (Joint Supply)

ஒரு தனி நிறுவனமானது ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்களை உற்பத்தி செய்வது சாத்தியம் என்பதுபற்றி ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது. சம்பந்தப்பட்ட பொருள்கள் ஒரே உற்பத்தி முறையின் விளைவுகளாக இருக்கும்பட்சத்தில் சிறப்பான பிரச்சினைகள் எதுவும் தோன்றமாட்டா. உற்பத்தியானது ஒரே தொழிற்சாலையில் செய்யப்பட்டபோதிலும், அந்த நிறுவனம் இரண்டு அல்லது அதற்கும் அதிகப்பட்ட தொழில்களில் செயற்படும் இரண்டு அல்லது அதற்கும் அதிகமான தனிப்பட்ட நிறுவனங்களாகக் கருதப்பட்டு, ஒவ்வொரு பண்டத்திற்கும் தனித்தனியாக உற்பத்திச் செலவுக் கோடுகளை வரையக்கூடும்.

ஆனால், இத்தகையதொரு நிலை ஒரு பண்டத்தின் செய்முறையானது, தொழிலளவில் வேறு ஒரு பண்டத்தை உற்பத்தி செய்வதுடன் பிணைக்கப்பட்டிருக்கும்போது சற்றுச் சிக்கலானதாக உள்ளது (பெரும்பாலும் இப்படியே நிகழ்கிறது). இத்தகையதொரு நிலையில், உற்பத்தி செய்யப்படும் பண்டங்கள் கூட்டுப் பண்டங்கள் என்றழைக்கப்படும். இதற்குப் பொருள் என்னவெனில், ஒரே உற்பத்திமுறை இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட பொருள்களை விளைவிக்கின்றதென்பதாம். உதாரணமாக, நிலக்கரிவாயு உற்பத்தியானது (production of coal gas) கூடவே சுட்ட நிலக்கரியையும் (coke) உண்டுபண்ணுகிறது; மாமிசத்திற்காகக் கால்நடைகளை வளர்த்தலானது மாமிசத்துடன் தோல்களையும் அளிக்கின்றது; மரவாடியில் பலகைகளை அறுக்கும்போது மரத்தூள் நிறைய கிடைக்கிறது

இத்தகைய சூழ்நிலைகளில் எழுகின்ற பெரிய பிரச்சினை என்னவெனில், ஒரு பண்டத்தின் உற்பத்தி அதிகப்படுத்தப்படும்போதோ அல்லது குறைக்கப்படும்போதோ அதற்கு நிகரான மற்றொரு பண்டத்தின் உற்பத்தியும் அதிகரிக்கிறது அல்லது குறைகிறது என்பதால், இவ்விருவகைப் பொருள்களுக்கும் உற்பத்திச் செலவுகளை எவ்வாறு பகிர்ந்து கணக்கிடுதல் என்பதாம். நிலக்கரி வாயுவும் சுட்ட நிலக்கரியும் ஒரே உற்பத்தி முறையின்கீழ் உற்பத்தி செய்யப்

படுவதால், மொத்த உற்பத்திச் செலவை இவ்விரு பண்டங்களுக்கிடையே எவ்வாறு பங்கீடு செய்வது? இதைவிட முக்கியமாக, இவ்விரு பண்டங்களில் எந்த ஒரு பண்டத்திற்கும் இறுதிநிலைச் செலவை எவ்வாறு கணக்கிடுவது? தனி ஓர் உற்பத்தியாளரைப் பொறுத்தமட்டில், இறுதிநிலைச் செலவே தடையிலா அங்காடி ஒன்றில் விலை மட்டத்திற்கும் உற்பத்திக்குமிடையே சமநிலையை நிர்ணயிப்பதில் மிக முக்கியப் பங்குகொண்டுள்ளதென்பதை வரப்போகும் ஆய்வில் காண்போம்.

ஈண்டு இருவகையான நிலைகளை வேறுபடுத்திக் கூறலாம். ஒரு நிலையில், உற்பத்தி முறையில் தோன்றுகிற பண்டங்களின் ஒப்பீடான அளவுகளை மாற்றியமைப்பது தொழிலியல் ரீதியில் கடினமானதாக இருக்கும். உதாரணமாக, கச்சாப் பருத்தியை உற்பத்தி செய்வதில் ஏறக்குறைய ஒரு நிலையான விகிதத்தில் பருத்திக் கொட்டைகள் கிடைக்கின்றன. ஈண்டு, ஒரு பண்டத்தின் இறுதி நிலைச் செலவை, இரண்டு பண்டங்களிலும் கூடுதலான அலகை உற்பத்தி செய்வதில் ஏற்படும் மொத்த உற்பத்திச் செலவில், கூட்டுப் பண்டத்தின் அதிகரித்த உற்பத்தியால் கொண்டுவரப்படும் கூடுதலான வருமானத்தைக் கழித்துதான் கண்டுபிடிக்க முடியும். ஆயினும், விகிதங்கள் மாற்றப்படக்கூடியனவாக இருந்தால் (உதாரணமாக, பயன்படுத்தப்படும் கோதுமை விதையின் வகையை மாற்றுவதன்மூலம் கோதுமையோடு உற்பத்தி செய்யப்படுகிற வைக்கோலின் அளவைக் குறைத்துக்கொள்ள முடியும்), ஒரு பண்டத்தின் இறுதிநிலைச் செலவை, அப் பண்டத்தின் உற்பத்தியில் ஓர் அலகை அதிகரிப்பதில் ஏற்படும் (கூட்டுப் பண்டத்தின் உற்பத்தியை மாருமல் வைத்திருந்து) உற்பத்திச் செலவு என்று விளக்கலாம்.

ஒரு பண்டத்தின் அளிப்பில் ஏற்படும் அதிகரிப்பானது அத்துடன் தொடர்பு கொண்டுள்ள மற்ருெரு பண்டத்தின் விலையில் ஏற்படுத்தும் விளைவுகளை ஆராயும்போதும் இவ் வேறுபாட்டினை மனத்தில் கொள்ளவேண்டும். கூட்டுப் பண்டங்களின் விகிதங்கள் மாற்றியமைக்கப்பட முடியவில்லையெனில், அதிகரித்த தேவையினுல் கோரப்படும் ஒரு பண்டத்தின் அதிகரித்த உற்பத்தியானது, மற்ருெரு பண்டத்தின் உற்பத்தியையும் அதிகரித்தே தீரும். ஆகவே, (பின்னதாகக் கூறப்பட்டுள்ள பண்டத்தின் தேவையில் மாற்றமெதுவுமில்லை என்ற எடுகோளில்), பின்னதாகச் சொல்லப்பட்ட பண்டத்தின் விலை குறையும். மற்ருெருபுறம், விகிதங்கள் மாற்றியமைக்கப்படக்கூடியனவாக இருப்பின், ஒரு பண்டத்தின் உற்பத்தி அதிகரிப்பானது மற்றப் பண்டத்தின் உற்பத்தியில் அதிகரிப்பை ஏற்படுத்தாமலேயே ஏற்படக்கூடும் (அல்லது மற்றப்

பண்டத்தின் உற்பத்தியில் ஏற்படும் குறைவினாலும் தொடரப்படக் கூடும்). இதனால் கூட்டுப் பண்டத்தின் விலை மாற்றமேதுமின்றி நிலையாக இருக்கக்கூடும் அல்லது அதிகரிக்கவும் கூடும்.

இதில் மீண்டும் காலம் என்னும் உறுபொருளே பலவாற்றானும் முக்கியமானதாக இருக்கிறது. பெரும்பாலும் கூட்டுப் பண்டங்களின் அளிப்பு விகிதங்கள் நெடுங்காலத்தில் மாற்றியமைக்கப்படத்தக்கன வாக உள்ளன; குறுங்காலத்தில் அவ்வாறு மாற்றியமைக்கப்படத் தக்கனவாக இருப்பதில்லை. உதாரணமாக, ஓர் ஆட்டிடையர் உற்பத்தி செய்யும் கம்பளி, ஆட்டுக்கறி இவைகளின் ஒப்பீடான அளவுகளை ஒருவகைச் செம்மறி ஆடுகளை வளர்ப்பதைவிட்டு வேறு வகையை வளர்ப்பதன் மூலம் மாற்றியமைத்துக்கொள்ளமுடியும். ஆனால், இம் முறையில் கணிசமான அளவிற்குக் காலம் பிடிக்கும். ஆகவே, குறுங்காலத்தில் ஒரு கூட்டுப் பண்டத்தின் அதிகரித்த உற்பத்தி யானது மற்றப் பண்டத்தின் உற்பத்தியையும் அதிகரிக்குமாதலால், அந்த மற்றப் பண்டத்தின் விலையையும் குறையச் செய்யும்.

## 6. பிறவாய்ப்புச் செலவு (Opportunity Cost)

அளிப்பு, உற்பத்திச்செலவு என்பனவற்றை இதுகாறும்ஆராய்ந்த போது, 'செலவு' என்னும் சொல், தொழில்முயல்வோன் பல்வேறு உற்பத்திக் காரணிகளின் பணிகளைப் பெறுவதற்காக அவைகளுக்கு அளித்தாக வேண்டிய பணச் செலுத்துகளைக் குறிப்பதாகக் கண்டோம். உண்மையில் காரணிகள் பணம் கொடுத்துத்தான் பெறப்படுகின்றன; எனவேதான், பொருளாதார ஆய்வில் 'செலவு' என்னும் சொல் இந்தக் கருத்திலேயே பொதுவாக ஆளப்படுகிறது.

ஆயினும், 'செலவு' என்னும் சொல்லை வேறொரு முக்கிய அடிப்படையான கருத்திலும் பயன்படுத்தக்கூடும். அன்றாட உலகத்தில், பணமானது பயன்படுத்தப்படுவதற்குக் காரணம், அது மிகவும் வசதியான ஒரு சாதனமாக இருப்பதே. பண நடவடிக்கை களுக்கடியில், நமது தேவைக்கு ஒப்பீடாகவுள்ள சாதனங்கள் கிடைப்பருமையை உட்கிடையாகக் கொண்ட உண்மையான தியாகங்கள் இடம்பெற்றுள்ளன. எனவேதான், 'பிறவாய்ப்பு'ச் செலவு என்னும் கருத்து, சில சமயங்களில் பணம் என்னும் திரை மறைவில் (அடிப்படையான உண்மை நிலைகளை மறைத்துக்கொண் டிருக்கிற) சென்றமைகின்றது. சாதனங்கள் ஒரு குறிப்பிட்ட வகைக்குப் பயன்படுத்தப்படும்போது அவைகளின் மாற்று உப யோகங்கள் தியாகம் செய்யப்படுகின்றன; பிறவாய்ப்புச் செலவென் பது இவ்வாறு தியாகம் செய்யப்படும் மாற்று உபயோகங்களைக்

குறிக்கும். ஒரு மேசையின் பணச்செலவு என்பது, அந்த மேசை உற்பத்தி செய்யப்படும்போது அளிக்கப்படுகிற கூலிகள், வாடகை, வட்டி, இலாபம் இவைகளின் மொத்தத்தைக் குறிக்கும்; பிறவாய்ப்புச் செலவென்பது மேசையை உற்பத்தி செய்வதில் பயன்படுத்தப்படும் அதே சாதனங்களைக்கொண்டு உற்பத்தி செய்திருக்கக்கூடிய சாய்வு மேசை (desk) அல்லது நாற்காலிகள் அல்லது கிரிக்கெட் மட்டைகள் (cricket bats) இவைகளைக் குறிக்கும்; இவைகள் மேசையை உற்பத்தி செய்வதற்காகத் தியாகம் செய்யப்பட்டன.

பிறவாய்ப்பு உற்பத்திச் செலவு என்னும் கருத்துப் பல இடங்களில் திரும்பத் திரும்ப இடம் பெறுகின்றது. உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட தொழிலில் கூலிகள், தொழிலாளர்கள் மற்றத் தொழில்களில் வேலைக்குச் சென்றமர்ந்தால் என்ன கூலிகளை அவர்கள் சம்பாதிக்கக்கூடுமோ அதன் அடிப்படையில்தான் பகுதியும் நிர்ணயிக்கப்படுகின்றது. ஒரு நாடு, தன் பாதுகாப்புத் திட்டங்களை அதிகரித்துக் கொள்வதற்காக, மோட்டார் கார்களைத் தியாகம் செய்ய நேரிடும்; ஏனெனில், அந்த மோட்டார் கார்களை உற்பத்தி செய்துகொண்டிருக்கும் தொழிலானது அப்போது உருளும் கோட்டைகளையும் (tanks), போர் விமானங்களையுமே செய்துகொண்டிருக்கும். தனிப்பட்ட உற்பத்தியாளர் அல்லது நுகர்வோர் தவிர்த்து மற்றபடி சமுதாயம் முழுமைக்கும், பிறவாய்ப்புச் செலவு என்னும் இக் கருத்து பணச் செலவு என்பதனைவிட ஆழ்ந்த கருத்தினைக்கொண்டதாக இருக்கிறது. இதற்குக் காரணம், இக் கருத்துப் பொருளாதார உலகத்தின் அடிப்படை உண்மை நிகழ்ச்சியைத் தெளிவாகவும் ஐயமின்றியும் நம் மனத்தில் படம் பிடித்துக் காட்டுகின்றது. நாம் நுகர விழையும் பண்டங்கள், பணிகள் இவைகளுக்கொப்பாகச் சாதனங்கள் ஒருவகையில் முழுமையாகப் பயன்படுத்தப்படும்போது, அதன் மற்ற உபயோகங்கள் தியாகம் செய்யப்படுகின்றன; வெண்ணெயைத் தின்றுவிட்டு நெய்யுக்கு அழுதல் முறையாகுமா?

மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles*, Vol. I. Ch. XIII.

Ryan, *Price Theory*, Chs. 2-3.

Marshall, *Principles of Economics*, Bk. V, Chs. VI-VII.

Henderson, *Supply and Demand*, Chs. IV-V.

D. H. Macgregor, *Economic Thought and Policy* (Oxford University Press, London, 1949), Chs. 1-2.

மடல் IV

# விலைக் கோட்பாடு
# (The Theory of Price)

## 10. அங்காடிச் சமநிலையின் தன்மை
## (The Nature of Market Equilibrium)

### 1. விலைகள் (Prices), பொருள்கள் (Commodities), அங்காடிகள் (Markets)

ஒருபுறம் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் தேவையில் விளைவுகளை உண்டுபண்ணும் சக்திகளின் தன்மையையும், மற்றொரு புறம் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் அளிப்பில் விளைவுகளை உண்டுபண்ணும் சக்திகளின் தன்மையையும் நெடிது ஆராய்ந்தோம். இதனை ஆராய்ந்த நாம், தற்போது, தேவையும் அளிப்பும் எவ்வாறு ஒன்றை ஒன்று பாதிப்பனவாக உள்ளன என்பதை ஆராய வேண்டும். இதன்மூலமே நாம், அங்காடியிலுள்ள எந்த ஒரு பொருளுக்கும் எவ்வாறு விலை நிர்ணயிக்கப்படுகிறதென்பதனைக் கண்டுகொள்ளமுடியும்.

மேற்கொண்டு ஆராய்வதற்கு முன்னர், சென்ற வாக்கியத்திலுள்ள மூன்று முக்கிய வார்த்தைகளுக்குத் தெளிவாகப் பொருள் சொல்லப்பட வேண்டும்; அவ் வார்த்தைகள், விலை, பொருள், அங்காடி என்பனவாம். நவீன பொருளாதார அமைப்பில், பண்டங்கள் நேரடியாகப் பரிவர்த்தனை செய்துகொள்ளப்படுவதில்லை. விலையென்பது, ஒருவர், சம்பந்தப்பட்ட பொருளைச் சொத்துரிமையாகக் கொள்ளுதற்கு, அப் பொருளை விற்பனை செய்வதற்குக் கொடுக்கின்ற ஒரு தொகையாகும். ஆயினும், விலை என்று சொல்லப்படுவது இத்துணை எளிதாக விளங்குவதாக இல்லாமல் சற்றுச் சிக்கலானதாகவேயுள்ளது. இதனை ஆராய்வதற்குப் பொருளாதார நிபுணர்

நிர்ணய விலைகள் (absolute prices), ஒப்பீடான விலைகள் ஆகியவற்றை ஆராய்வார்—அதாவது, அவர், 'எழுதுகோல்கள் ஏன் 4 பென்சுக்கு விற்கப்படுகின்றன?' என்ற கேள்வியினுக்காவது அல்லது, 'ஏன் எழுதுகோல்களின் விலை ஒரு சிப்பம் சிகரெட்டுகளின் விலையில் பத்தில் ஒரு பங்காகவே இருக்கிறது?' என்னும் கேள்வியினுக்காவது விடை தேடிக்கொண்டிருக்கக்கூடும். தற்போதைய ஆராய்ச்சி இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ள கேள்வியினை யொட்டியதாகவே இருக்கிறது—அதாவது, ஒரு பொருளின் மதிப்பு மற்றப் பொருள்களின் மதிப்பிற்கு ஒப்பீடாக இருப்பதில் உள்ள அடிப்படைக் காரணங்கள் சம்பந்தமான பிரச்சினையை ஒட்டியதாக இருக்கிறது. விலைகளின் நிர்ணய மட்டம் (absolute level of prices) சம்பந்தமான பிரச்சினையைப் பின்னர் ஆராய்வோம்.

'பொருள்' (commodity) என்னும் சொல்லிற்கு ஐயமின்றித் தெளிவானதொரு (unambiguous) விளக்கத்தைக் கூறுவது சற்றுக் கடினமானதே. பொருள் என்பதற்குப் பொதுவாகவும் சற்றுத் தாராளமாகவும் விளக்கம் கூறவேண்டுமானால், நெருங்கிய பதிலிப் பொருள் எதுவுமற்ற ஒரு பண்டம் அல்லது பணி என்றும், அது நுகர்வோர்களால் விரும்பப்படுகிற குறிப்பிட்டதும் தனிப்பட்டதுமான தொரு விருப்பத்தைத் திருப்தி செய்யக்கூடியதென்றும் கூறலாம். நடைமுறை உலகத்தில் விருப்பங்களோ (wants) அல்லது பொருள்களோ இவைதாம் என்று அறுதியிட்டுச் சுட்டப்படமுடியாதாகையால், இன்னோரன்ன பண்டங்கள் அல்லது பணிகள் 'பொருள்' என்பதன் பாற்படும் என்று சுட்டி விளக்கந்தர இயலாததோர் அவலநிலையே நடைமுறையில் உள்ளது. தேயிலையானது தேநீர் அருந்தும் நோக்கத்திற்காகவே தேவைப்படுகிறதா, அல்லது பானங்களில் (beverage)அதுவும் ஒன்றுதானே என்பதற்காகத் தேவைப்படுகிறதா? ஆக, தேநீரின் தேவையானது காப்பி, கோக்கோ (coco), இன்னும் பன்னிருவகையான பானங்களால் நிறைவுசெய்யப்பட முடியுமா? இந்தியாவின் தேயிலையானது சீமைத்தேயிலையினின்றும் வேறுபட்ட தொரு பொருளா? லிப்டன் (Lypton's) தேயிலை, லியான்ஸ் (Lyon's தேயிலையினின்றும் வேறுபட்டதொன்றா? ஒரு பதிலிப் பொருளானது தனிவேறானதொரு பொருளாகக் கருதப்படாமலிருப்பதற்கு அது பொருளுக்கு எவ்வளவு நெருங்கியதாக இருக்கவேண்டும்? இவ்வகையானதோர் இடர்ப்பாடு பொருளாதார முறையின்கீழுள்ள ஒவ்வொரு பண்டத்திற்கும் ஏற்படுவதால், பலவகையான தீர்வுகாண இயலாத பிரச்சினைகள் தோன்றுகின்றன. மேலே கூறியுள்ள கருத்தில் 'பொருள்' என்பது பொருளாதார ஆய்வினுக்குகந்தவாறு இருக்கும்பொருட்டு மிகவும் எளிதாக்கப்பட்ட விளக்கத்தைக்கொண்டதாகவுள்ளது. ஆனால், நடைமுறை உலகத்தில், ஆய்வினில் ஆளப்

படும் விளக்கத்தினைக் கையாளுதலில் போதிய அளவில் சிக்கலும், தெளிவற்ற நிலையும் ஏற்படுகின்றன.

கடைசியாக, ‘அங்காடி’ என்னும் சொல் விளக்கப்பட வேண்டும். சாதாரணச் சொல்வழக்கில் அங்காடி என்பது குறிப்பிட்ட சமயங்களில் வாணிபம் நடைபெறுகின்றதையோ, ஒரு கட்டடம் அல்லது ஒரு திடலையோ குறிக்கும். பொருளாதாரத்தில் இச் சொல் இன்னும் பரந்த கருத்தில் ஆளப்படுகிறது. இந்தக் கருத்தில் இச் சொல், எந்த ஒரு பண்டத்தின் பரிவர்த்தனையிலும் சம்பந்தப் பட்டுள்ள எல்லா மனிதர்களையும் நிலையங்களையும் குறிக்கும். இந்தக் கருத்தில், இச் சொல் ஒரு நாட்டை, ஏன், உலகத்தையேகூட (இந்த எல்லையில் கொள்முதலும் விற்பனையும் செய்யும் மக்கள் ஒருவரோடொருவர் தொடர்புகொண்டிருப்பார்களேயானால்) குறிப்ப தாக இருக்கும். அதே சமயத்தில், ஏதாவதொரு பண்டத்தைப் பரிவர்த்தனை செய்துகொள்ளும் நோக்கத்துடன் ஒருவரோடொருவர் தொடர்புகொண்டுள்ள மக்கள் மிகச் சிலரே இருப்பார்களானால், அங்காடி என்னும் சொல் விரல்விட்டு எண்ணக்கூடிய எண்ணிக்கை யளவு மக்களையே குறிக்கும். எவ்விதத்திலும் இக் கருத்தில் அங்காடி என்பது அறுதியிடப்பட்டதொரு தனி இடத்தைக் குறிப்பதாகாது. ஒருவர் திறமையான விளம்பரம் ஒன்றினால் தூண்டப்பட்டு ஒரு பொருளை உள்ளூர்க் கடை ஒன்றில் வாங்குகின்றார் என வைத்துக் கொள்வோம்; அவர் வாங்கும் அச் செய்பொருளை உற்பத்தி செய்தவர் பல ஆயிரம் மைல் தூரத்திற்கப்பாலிருப்பவராக இருக்க லாம்; ஆயினும், இவ் வுதாரணத்தில், இவ் விருவர்களும் அப் பண் டத்திற்கான அங்காடியின் ஒரு பகுதியாகவே கருதப்படுவர்.

## 2. தொழிலும் நிறுவனமும் (Industry and Firm): தேவைக்கோடு (The Demand Curve)

தற்போதைய ஆய்வுக்குத் தனியொரு பொருளைப் போதிய அள விற்குச் சரிநுட்பமாக விளக்கம் தரக்கூடுமென்ற கருத்தினையே கொள்வோம். ஒரு நிறுவனம் என்பது ஒரு தொழில்முயல்வோனின் ஆளுகையின்கீழ்ச் செயற்படும் உற்பத்திக் காரணிகளின் ஒரு தொகுதி என்று விளக்கம் கூறலாம். தொழில் என்பது, இந்த ஆய்வில் ‘பொருள்’ என்று கூறப்பட்டுள்ளதை உற்பத்தி செய் வதில் ஈடுபட்டுள்ள நிறுவனங்கள் பலவற்றைக் கொண்டதென்று பொருள்படும்.

நிறுவனம் என்பதற்கும் தொழில் என்பதற்குமிடையேயுள்ள வேறுபாடு முக்கியமான ஒன்றாகும். இந்த நூல் ஆராயவேண்டிய பல்வேறு வகை அங்காடி நிலைக்கு அடிப்படையாக இவ் வேறுபாடு

உள்ளது. இவ் வேறுபாடு, குறிப்பாக இரண்டினுக்கு முக்கிய விளைவுகளை உண்டுபண்ணுவதாக உள்ளது. அவை இவ் ஆய்வில் சம்பந்தப்பட்டுள்ள தேவைக்கோடு ஒன்று; மற்றொன்று, சமநிலைச் சூழ்நிலைகள். முதலில் தேவைக் கோட்டில் ஏற்படும் விளைவுகளை ஆராய்வோம்.

தொழில் முழுவதற்கும், பொருளின் தேவைக்கோடே (தொழிலைப் பொறுத்தவரையில் மொத்தத் தேவையும் அளிப்புமே கருதப்படுவதால்) பொருத்தமான ஒன்றாக இருக்கிறது. இத் தேவைக் கோடானது, நான்காம் அத்தியாயத்தில் நாம் ஏற்கெனவே ஆராய்ந்த தேவைக் கோட்டின் வகையைச் சார்ந்ததாகும். இந்தக் கோடுகளை நாம் ஏற்கெனவே ஆராய்ந்தபோது வாங்கப்பட்ட பொருளின் கணியத்திற்கும் அதன் விலைக்கும் இடையேயுள்ள தொடர்பினை ஆராய்ந்தோம். ஆகவே, இத்தகைய ஒரு கோடானது சராசரி வருமானக் கோடு என்று அழைக்கப்படுகிறது. அங்காடியில் பொருளின் ஒவ்வோர் அலகும் ஒரே விலைக்கே விற்கப்படவேண்டும்; உற்பத்தியாளரின் மொத்த வருமானத்தை (total receipts) அவருடைய மொத்த விற்பனைகளால் வகுத்தால், அவர் உற்பத்தியினுடைய ஓர் அலகின் சராசரி வருமானம் கிடைக்கப்பெறும்; இதுவே அப் பொருளின் விலையாகும்.

பொருளாதார நிபுணர்கள் சராசரிச் செலவையும் இறுதிநிலைச் செலவையும் வேறுபடுத்திக் கூறுவதுபோல, சராசரிச் செலவிற்கும் இறுதிநிலை வருமானத்திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டினையும் கூறமுடியும். சராசரி வருமானம் என்பது ஒரு பொருளின் விற்பனை வருமானத்தை, விற்கப்பட்ட அப் பொருளினது அலகுகளின் எண்ணிக்கையால் வகுத்தால் கிடைக்கப்பெறும்; இறுதிநிலை வருமான மானது விற்கப்படுகின்ற அலகுகளின் மொத்த எண்ணிக்கையில் ஓர் அலகைக் கூட்டுவதாலோ அல்லது குறைப்பதாலோ மொத்த வருமானத்தில் ஏற்படும் மாற்றத்திற்குச் சமமானதாக இருக்கும்.

மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்பொழுது ஒரு பொருளின் எல்லா அலகுகளும் ஒரே விலைக்கு விற்கப்படுவதால், இறுதிநிலை வருமானமும் (மேலே விளக்கப்பட்டவாறு), இறுதிநிலை அலகானது விற்கப்படுகின்ற விலையும் ஒன்றாக இருப்பதுபோல் தோன்றும்; இதேபோன்று அது சராசரி வருமானத்திற்கும் சமமானதாக இருப்பதுபோல் தோன்றும். ஆனால், இது இப்படித்தான் இருக்க வேண்டுமென்பதில்லை. குறைந்துசெல்லும் தேவைக்கோட்டில் உள்ள (அதாவது, இடமிருந்து வலமாகக் கீழ்நோக்கிச் சரியும் கோடு) முக்கிய அம்சம் என்னவென்றில், ஒரு பொருளை அதிகமான அளவில்

விற்பதற்கு விலையானது (அப் பொருளின் எல்லா அலகுகளின் விலையும்) குறைக்கப்பட வேண்டும்; எனவே, உற்பத்தியின் ஓர் அலகிலிருந்து கிடைக்கக்கூடிய இறுதிநிலை வருமானமானது, அது எந்த விலைக்கு விற்கப்படுகிறதோ அதற்குச் சமமாக இருக்கும். ஆனால், இதில் மற்றொன்றையும் கழிக்கவேண்டும். இந்த இறுதிநிலை அலகை அங்காடி ஏற்றுக்கொள்ளத் தூண்டும்பொருட்டு விற்பனையாளர்கள் ஏற்கெனவே விற்றதைக்காட்டிலும் குறைந்த விலைக்கு விற்கவேண்டியிருப்பதால் நேரிடும் வருமானக் குறைவைக் கழித்தால், இறுதிநிலை வருமானத்தைத் தெளிவாகக் கணக்கிட்டுவிடலாம். ஒரு கீழ்நோக்கிச் சரியும் வகையைச் சார்ந்த ஒரு நிலையான தேவைக் கோட்டில் இறுதிநிலை வருமானமானது விலையைக்காட்டிலும் எப்போதும் குறைவாகவே இருந்தாகவேண்டும்; விலை எதிர்க் கணியத்திலும் (negative) இருக்கக்கூடும்.

அட்டவணை ஒன்பதிலும், படம் இருபத்தாறிலும் சித்திரிக்கப் பட்டுள்ள உதாரணத்தை நோக்குவோம். விற்பனையை அதிகரிப்பதற்காக விலையானது வளர்வீதத்தில் குறைக்கப்பட வேண்டியுள்ளது. இதன் விளைவாக, அங்காடி விலையானது குறைக்கப்படுவதற்கு ஏற்றாற்போல, மொத்த வருமானமானது குறைவான வேகத்துடன் அதிகரித்துச் சென்றபோதிலும், விற்பனையானது ஆறுவது அலகு வரை அதிகரிக்கும் வரையிலும் மொத்த வருமானமும் அதிகரிக்கின்றது. ஆறுவது அலகிற்குப் பிறகு மொத்த வருமானம் குறைந்து செல்கிறது. விற்பனை அதிகரிப்பானது, அந்த அதிகரிப்பை ஏற்படுத்தும் நோக்கத்துடன் செய்யப்படும் விலைக்குறைப்பைச் சரிக்கட்டும் அளவிற்குப் போதிய அளவில் இல்லாமலிருப்பதே, இதற்கும் காரணம் (அதாவது, தேவை நெகிழ்ச்சியானது ஒன்றுக்கும் குறைவாகக் குறைகின்றது). இதன் விளைவாக இறுதிநிலை வருமானம் எதிர்க்கணியத்தில் இருக்கிறது.




படம் 26.

தேவைக்கோடானது கீழ்நோக்கிச் செல்லுமிடத்தெல்லாம் (தொழில் முழுமைக்கும் வழக்கமாக இவ்வாறுதான் உள்ளது) சராசரி

வருமானம், விலை (ஒவ்வோர் உற்பத்தி மட்டத்திலும் உள்ள ஓர் அலகின் சராசரி வரவு), இறுதிநிலை வருமானம் (கடைசி அலகை உற்பத்தி செய்ததன் விளைவாக மொத்த வரவுகளில் கிடைக்கும் கூடுதல் வருமானம்) ஆகிய இவைகளுக்கிடையே ஒரு தெளிவான வேறுபாட்டினை (distinction) சித்திரிக்கவேண்டும்.

அட்டவணை 9

விலையும் (Price) இறுதிநிலை வருமானமும் (Marginal Revenue)

| விற்பனை செய்யப்பட்ட அலகுகள் (1) | விலை (= சராசரி வருமானம்) (2) | மொத்த வருமானம் [(1) × (2)] (3) | இறுதிநிலை வருமானம் (4) |
|---|---|---|---|
| | £ | £ | £ |
| 1 | 100 | 100 | 100 |
| 2 | 95 | 190 | 90 |
| 3 | 90 | 270 | 80 |
| 4 | 80 | 320 | 50 |
| 5 | 70 | 350 | 30 |
| 6 | 60 | 360 | 10 |
| 7 | 50 | 350 | —10 |
| 8 | 40 | 320 | —30 |
| 9 | 30 | 270 | —50 |
| 10 | 20 | 200 | —70 |

### 3. தொழிலும் நிறுவனமும் (Industry and Firms): சமநிலைச் சூழ்நிலைகள் (Equilibrium Conditions)

இரண்டாவதாக ஒரு கட்டத்திலும், நிறுவனம், தொழில் ஆகிய இவற்றிற்கிடையேயுள்ள வேறுபாடு முக்கியத்துவம் பெற்றதாக இருக்கிறது. பொருளாதாரத்தில் 'சமநிலை', மாற்றத்திற்கான போக்கு (tendency) எதுவும் இல்லாத ஒரு சூழ்நிலையையே குறிக்கும். தொழிலைப் பொறுத்தவரையில், இத்தகைய ஒரு போக்கானது, அந்தத் தொழிலில் புதிய நிறுவனங்கள் நுழைவதுமில்லை, ஏற்கெனவே அத் தொழிலில் உள்ள நிறுவனங்கள் அதனைவிட்டு வெளியேறுவதுமில்லை என்கிற ஒரு சூழ்நிலையை உணர்த்தும். ஒரு நிறுவனத்தைப் பொறுத்தவரையில், சமநிலை என்பது, அந் நிறுவனத்தில் தொழில்முயல்வோனுக்குத் தனது உற்பத்தியை அதிகரிக்கவோ அல்லது குறைக்கவோ எந்தவித ஊக்கமும் (incentive) இல்லாத ஒரு நிலையைக் குறிக்கும். இத்தகைய சமநிலைச் சூழ்நிலைகளை எத்தகைய சூழ்நிலைகளில் அடையக்கூடும்?

முதலில், எளிதான பிரச்சினைகளையுடைய தொழிலைப்பற்றி ஆராய்வோம். இதற்கு முன்னர் ஓர் அத்தியாயத்தில் 'இயல்பான' இலாபம் என்னும் கருத்தினை ஆராய்ந்தோம். அப்போது, இயல்பான இலாபம் என்பது ஒரு தொழில்முயல்வோன் தனக்குகந்த எந்த ஒரு தொழிலும் ஈட்டுவதற்கு எதிர்பார்க்கும் ஊதிய வீதமாகும் என்று பார்த்தோம். தொழில்முயல்வோர்கள், எந்த ஒரு தொழிலிலும், அதில் ஈட்டப்படும் சராசரி இலாப வீதம் இந்த இயல்பான மட்டத்திற்கும் அதிகமாக இருக்குமானால், அத் தொழிலை நோக்கிக் கவரப்படுவர். இத்தகைய இயல்பான மட்டத்திற்கும் குறைவாக இலாப வீதமானது ஒரு தொழிலில் இருக்குமானால், அவர்கள் அத் தொழிலைவிட்டு வெளியேறத் தலைப்படுவர். அத் தொழிலில் சமநிலை என்பது, அத் தொழிலில் உள்ள நிறுவனங்கள் அத் தொழிலின் உள்ளே நுழைவதுமில்லை, அதனைவிட்டு வெளியேறுவதுமில்லை என்பதான ஒரு நிலையை உணர்த்தும்; ஆக, இத்தகையதொரு நிலையில், இலாபங்களின் மட்டமானது இயல்பான மட்டத்திற்கு அதிகமாகவும் இருப்பதில்லை, குறைவாகவும் இருப்பதில்லை—அதற்குச் சமமாகவே இருக்கும்—என்னும் நிலையை உணர்த்துவதாகும்.

இலாபத்தில் இயல்பான மட்டம் எப்போது அடையப்பெறுகின்றது? தொழில்முயல்வோர்கள் தங்களது உற்பத்தியின் ஓர் அலகிற்கு அடையப்பெறும் சராசரித் தொகையானது சராசரி வருமான அல்லது விலைக்கோட்டினால் உணர்த்தப்படுகிறது—தேவைக்கோடானது நான்காம் அத்தியாயத்தில் ஓரளவிற்கு விரிவாகவே ஆராயப்பட்டது. தொழில்முயல்வோர்களால் உற்பத்தியின் ஓர் அலகிற்கு அவர்கள் செலுத்தியிருக்கும் தொகையானது—தங்களது பணிக்கான இயல்பான இலாபத்தையும் சேர்த்து—ஒன்பதாம் அத்தியாயத்தில் ஆராயப்பட்டுள்ள சராசரி விலைக்கோட்டினால் உணர்த்தப்படுகிறது. இதனால் சராசரி உற்பத்திச் செலவானது சராசரி வருமானத்திற்கு அல்லது விலைக்குச் சமமாக இருக்கும்போது, தொழில்முயல்வோர்கள் இயல்பான இலாபங்களையே அடைகின்றனரென்பதும், இதைக்காட்டிலும் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ இலாபங்களை அடைவதில்லையென்பதும் தெளிவாகின்றது. சராசரிச் செலவானது விலையைக்காட்டிலும் அதிகமாக இருக்குமானால் அவர்கள் இயல்பான இலாபத்திற்கும் குறைவானதொன்றையே ஓர் அலகிற்கும் பெறுவர்; சராசரிச் செலவானது விலைக்கும் குறைவாக இருக்குமானால், அப்போது அவர்கள் அதிகமான (அதாவது, இயல்பான இலாபத்திற்கும் அதிகமான) இலாபத்தை அடைவர். தொழில்முயல்வோர்கள் நுழையத்தக்கதாக உள்ள ஒரு புதிய தொழிலில் சமநிலை இருக்கவேண்டுமானால், அத் தொழிலில் சராசரிச் செலவும் சராசரி வருமானமும் சமமாக இருக்கும்படியாக வேண்டும்,

தற்போது ஒரு நிறுவனத்தை ஆராய்வோம். பொருளாதார ஆய்வு முழுவதும், ஒவ்வொரு மனிதனும் தனது பொருளாதார நலனை உச்சமாக அதிகரித்துக்கொள்ளவே பாடுபடுகிருனென்றும், இந்த நோக்கத்தைக் குறித்தே விவேகமுடன் செயலாற்றுகிருன் என்ற அடிப்படையான ஓர் எடுகோளின்மீதும்தாம் அமைக்கப் பட்டுள்ளது. இதனுல் ஒரு தொழில்முயல்வோன் தனது நிறுவனத்தில் தன் இலாபத்தை அதிகபட்சமாகப் பெறவே பாடுபடுகிருன் என்று கருதப்படவேண்டும் என்பது விளங்குகிறது. நிறுவனம் உள்ளவரையிலும், தொழில்முயல்வோர், மிக அதிகமான இலாபத்தை அல்லது மிகக் குறைவான நஷ்டத்தைத் தரக்கூடிய உற்பத்தி யளவைத்தான் உற்பத்தி செய்வார். இத்தகையதொரு சூழ்நிலை எப்போது ஏற்படும்? ஈண்டு, இறுதிநிலை வருமானம், இறுதிநிலைச் செலவு ஆகிய இரண்டு கருத்துகளையும் ஒருங்கே கொண்டுவர வேண்டும். இறுதிநிலை வருமானமென்பது உற்பத்தியின் கடைசி அலகினுல் மொத்த வரவுகளுக்குக் கிடைக்கின்ற கூடுதல் தொகையாகும்; இறுதிநிலைச் செலவென்பது தொழில் முயல்வோனுக்கு மொத்தச் செலவில் ஏற்படுத்துகின்ற கூடுதல் தொகையாகும். ஆக, ஒரு தொழில் முயல்வோன் தனது உற்பத்தியை அதிகப்படுத்துவதன் மூலம் தனது உற்பத்திச் செலவுகளில் கூடுதலைப் பெறுவதைவிடத் தனது வரவுகளில் கூடுதலைப் பெறுவாராகில், அவர் தனது மொத்த இலாபத்தை அதிகரித்துக்கொள்கிருரென்று பொருள். அவர் வரவுகளைவிடச் செலவில் கூடுதலை அதிகமாகப் பெறுவாராகில், தனது மொத்த இலாபத்தைக் குறைத்துக்கொண்டவராவார். இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை வருமானமும் சமமாக இருக்கும்போதுதான் அவர் தனது இலாபங்களை அதிகபட்சமாகப் (maximum) பெறுதல் கூடும்.

படம் 27-ல் காட்டப்பட்டுள்ள உதாரணம் இதனைக் கோட்பாடு வாயிலாகச் சித்திரிக்கின்றது. MRஎன்னும் கோடானது உற்பத்தியின் ஒவ்வோர் அலகினுலும் கொணரப்பட்ட இறுதிநிலைச் செலவை உணர்த்துவதாகக் கொள்வோம். MR என்பது ஒவ்வோர் அலகினுலும் மொத்தச் செலவில் ஏற்படுத்தப்பட்ட கூடுதல் தொகையை உணர்த்துகிறது. தொழில்முயல்வோரின் இலாபமானது, $OM_1$ அளவு உற்பத்தி செய்யப்படும்போதுதான், அதிகபட்சப்படுத்தப்படுகிறது. இந்த நிலையில்தான் கோடுகள் ஒன்றையொன்று வெட்டுகின்றன (intersect); இறுதிநிலை வருவாயும் இறுதிநிலைச் செலவும் சமமாக இருக்கின்றன. இதைவிடக் குறைவாக உள்ள வேறு எந்த அளவு உற்பத்தியிலும், உதாரணமாக, $OM_2$ஐ எடுத்துக்கொள்வோம், மொத்த இலாபத்தை அதிகரித்துக்கொள்ள இயலும். ஏனெனில், உற்பத்தியை அதிகரிப்பதற்காகச் செலவிடும் அதிகப்படியான

உற்பத்திச் செலவானது ($M_2N_2$) அவ் அதிகப்படியான உற்பத்தி ஈட்டுகின்ற அதிகப்படி வரவுகளைவிட ($M_2Q_2$) குறைவாகவே இருக்கும். வேறு எந்த அதிகப்படியான உற்பத்தி அளவிலும், உதாரணமாக, $OM_3$ஐ எடுத்துக் கொள்வோம், அதிகப்படியான வரவுகள் ($M_3N_3$) அதிகப்படியான செலவுகளைக்காட்டிலும் ($M_3Q_3$) குறைவாகவே இருக்கும். $OM_1$ அளவு உற்பத்தியின்போதுதான், அதாவது, கோடுகள் ஒன்றையொன்று வெட்டும்புள்ளியில் தொழில் முயல்வோன் உற்பத்தியின் இறுதிநிலைச் செலவையும், தனது இயல்பான இலாபத்தையும் சரிக்கட்டுமளவிற்கே கூடுதலான வருமானத்தைப் பெறுவார்.



படம் 27.

ஒரு தொழிலில் பூரணமான சமநிலை நிலவவேண்டுமாயின், கீழ்க்கண்ட சூழ்நிலைகள் வேண்டும் : (அ) அந்தத் தொழிலில் உள்ள நிறுவனங்களின் எண்ணிக்கை நிலையானதாக இருக்கவேண்டும்; (ஆ) ஒவ்வொரு நிறுவனத்தின் உற்பத்தி அளவும் நிலையானதாக இருக்கவேண்டும். முன்னதாகக் கூறப்பட்ட சூழ்நிலைக்குத் தேவையானது எதுவெனில், தொழில்முயல்வோர்கள் அடைகின்ற இலாபமானது இயல்பான மட்டத்தில் இருக்கவேண்டும். அதாவது, உற்பத்தி செய்யப்படும் ஓர் உற்பத்தி மட்டத்தில் சராசரிச் செலவானது, சராசரி வருமானம், விலை இவற்றிற்குச் சமமானதாக இருந்தேயாகவேண்டும். ஆகவே, பூரணமான ஒரு சமநிலையில் ஒவ்வொரு நிறுவனமும் எந்த அளவு உற்பத்தியில் சராசரிச் செலவானது சராசரி வருமானத்திற்குச் சமமாகவும், இறுதிநிலைச் செலவானது இறுதிநிலை வருமானத்திற்குச் சமமாயும் காணப்படுகிறதோ, அந்த அளவு உற்பத்தியையே செய்யும்.

கடைசியாக எச்சரிக்கையாக ஒரு வார்த்தை இங்கே கூறவேண்டும். பொருளாதாரக் கருத்துப்படி, ஓர் உற்பத்தியாளர் தனது இலாபங்களை அதிகபட்சமாக்கிக்கொண்டிருக்கிறார் என்பதனால், அவருடைய உத்தமமான அளவில் உள்ளதென்று பொருளன்று. உத்தம அளவு உற்பத்தி என்பதில் உற்பத்திக் காரணிகள் மிகத்திறமையான வகையில் செயற்படும்படி சேர்க்கப்பட்டிருக்கவேண்டும்—அதாவது, அத்தகையதோர் உற்பத்தியில் சராசரி உற்பத்திச் செலவானது மிகக் குறைவானதாக இருக்கும். இந்த உற்பத்தி, உற்பத்தியாள

ருக்கு அதிகபட்சமான இலாபத்தைத் தரக்கூடியதாக வேண்டு மானல் இருக்கலாம். (அதாவது, குறைந்தபட்ச சராசரிச் செலவுப் புள்ளியில்—சராசரிச் செலவும், சராசரி வருமானமும் சமமாக இருக்கக்கூடும்); அடுத்து வரும் அத்தியாயம் கூறுவதுபோன்று, இது தனிப்பட்டதும் வரையறுக்கப்பட்டதுமான சூழ்நிலையாகிய நிறைவுப் போட்டியில்தான் ஏற்படும்.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Ryan, *Price Theory*, Ch. 9.

*Joan Robinson, *The Economics of Imperfect Competition* (Macmillan, London, 1948), Introduction, Chs. 1 and 2.

# 11. நிறைவுப் போட்டியில் விலை
## (Price under Perfect Competition)

**1. நிறைவுப் போட்டி என்றால் என்ன ?**

ஒரு பண்டத்தின் மாற்று மதிப்பு எவ்வாறு நிர்ணயிக்கப்படுகிறதென்பதை விளக்குவதற்கு முன்னர், 'நிறைவுப் போட்டி' என்னும் கருதுகோளான வசதியானதொரு முற்கோளைக் (postulate) கையாளுதல் நலம். இத்தகையதொரு நிலை ஒருசில விதிவிலக்கான சூழ்நிலைகளில் தவிர மற்றச் சமயங்களில் ஏற்படுவதில்லையென்றே அனைவரும் கூறுகின்றனர். உலகத்தில் உள்ள எண்ணற்ற பிரச்சினைகளை நெருங்கி ஆராய்வதற்கு முன்னர் இத்தகையதொரு கருதுகோளினைப் பயன்படுத்துவதற்குத் தகுந்த காரணமிருக்கிறது. இக் கருதுகோள் இன்றியமையாத நிகழ்ச்சிகள் பலவற்றை ஆராய்வதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு வேலைத்திட்டமாக (frame-work) அமைகின்றது. பள்ளியில் நாம் பயிலுகின்ற பல பாடங்கள் (உதாரணமாகக் குறிக்கணக்கியல்—Algebra) பிற்கால வாழ்க்கைக்கு நேரடியாகப் பயன் தரத்தக்க முறையில் இருப்பதில்லை. இதனால் அப் பாடங்களைக் கற்பது பயனற்ற வேலை என்பது பொருளன்று. இப் பாடங்களைக் கற்பதில் உள்ள நன்மை என்னவெனில், மக்கள் ஒரு குறிப்பிட்ட பிரச்சினைக்குத் தீர்வுகாணும் நிலையில் இருக்கும்போது கவனமுடனும் ஒழுங்காகவும் அவர்களைச் சிந்திக்கச் செய்யவைப்பதே. நிறைவுப்போட்டி என்னும் இக் கருத்தும் மேற்குறிப்பிட்டுள்ள பள்ளிப் பாடங்களைப் போன்றதுதான். நடைமுறை உலகத்தில் 'நிறைவுப் போட்டி' என்பதனைக் காணுதல் அரிதானதாகவே இருக்கிறது; ஆயினும், இதனை ஆராயும்போது, உலகத்தை நோக்கியுள்ள பல சிக்கலான பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும்பொருட்டு ஒரு முறையான சிந்தனைவழியை நமக்குப் புலப்படுத்துகிறது.

'நிறைவுப் போட்டி' என்னும் இத்தகையதொரு நிலையானது மிகவும் கருதுகோளான ஒன்றாகும். பொருளாதார விற்பன்னர் இது சர்வாதீனம் (monopoly) இல்லாததொரு நிலையை உணர்த்துவ

தாகக் கூறுவார்—அதாவது, இத்தகையதொரு நிலையில், அங்காடி விலைகளைத் தனி நிறுவனமோ அல்லது நுகர்வோரோ கட்டுப்படுத்த இயலாது. இதில் பொருளாதார மாற்றல் சம்பந்தப்பட்டுள்ள இருவகைப்பட்ட பிரிவினரில் ஒவ்வொரு பிரிவினரைப்பற்றியும் சில குறிப்பிட்ட எடுகோள்கள் கொள்ளப்பட்டுள்ளன—அந்த இருவகைப் பிரிவினர் யாரெனில், உற்பத்தியாளர்களும் நுகர்வோர்களுமாவர். அளிப்புப் பகுதியைப் பொறுத்தவரையில், முதலாவதாகத் தங்களுக்குள் ஒருவரோடொருவர் போட்டியிட்டுக்கொண்டிருக்கிற அதிகமான எண்ணிக்கையில் விற்பனையாளர்கள் இருக்கின்றனரென்னும் ஓர் எடுகோளைக் கொள்ளவேண்டும். இந்த எண்ணிக்கை போதிய அளவிற்கு அதிகமாகவே இருக்கவேண்டும். எந்த அளவிற்கு எனில், அத்தகைய மொத்த எண்ணிக்கையிலுள்ள ஒவ்வொரு விற்பனையாளரும் மொத்த அளிப்பில் மிகச் சிறிய அளவினையே அளிப்பதாகவும், அதன் காரணமாகத் தனது உற்பத்தி அளவில் ஏற்படும் மாற்றங்களால் அங்காடி விலையில் முக்கிய மாற்றங்களை ஏற்படுத்த இயலாததாகவும் இருக்கவேண்டும். இரண்டாவதாக, ஒவ்வோர் உற்பத்தியாளரும் (மொத்த உற்பத்தியில் ஒரு சிறிய மூலக்கூருக—element—இருப்பதால்) நிறைவான நெகிழ்வுடைய உற்பத்திக் காரணிகளின் அளிப்பைப் பெற்றிருக்கவேண்டும்; வேறு வழியில் இதனை, அவ்வுற்பத்தியாளர் அத் தொழிலில் நடப்பிலுள்ள கூலிகள், வாடகை அல்லது வட்டி இவற்றை அதிகரிக்காமலேயே தனது உற்பத்தியை அதிகரித்துக்கொள்ளத் தக்கதாக இருக்கவேண்டுமென்று கூறலாம். மூன்றுவதாக, அத் தொழிலில் நிறுவனங்கள் தடையின்றி நுழைவதற்கும், அத் தொழிலைவிட்டு வெளியேறுவதற்கும் எவ்விதமான தடைகளுமில்லை என்றதோர் எடுகோளினையும் கொள்ளவேண்டும். கடைசியாக, ஒவ்வோர் உற்பத்தியாளரும் ஏனைய ஒவ்வோர் உற்பத்தியாளரும் என்ன இலாப வீதத்தைப் பெறுகின்றனரென்பதை நன்கு தெரிந்திருக்கின்றனர் என்ற ஓர் எடுகோளையும் கொள்ளுதல்வேண்டும்.

தேவைப்பகுதியைப் பொறுத்தவரையிலும், நுகர்வோர்களின் எண்ணிக்கை மிக அதிகமாக உள்ளதென்றும், இதன் காரணமாக அவர்களில் வாங்குவோர் எவரும் தான் வாங்குகின்ற அளவில் மாற்றமெதுவும் செய்வதன்மூலம் அங்காடி விலையை உருப்படியாக எந்த விதத்திலும் பாதித்துவிட முடியாதென்ற எடுகோளையும் கொள்ளுதல் வேண்டும். இரண்டாவதாக, வாங்குவோர் அனைவருக்கும், அப் பொருளை விற்பனை செய்யும் அங்காடியின் ஒவ்வொரு பகுதியிலும் அப் பொருளுக்கு என்ன விலை கோரப்படுகிறதென்பது தெளிவாகத் தெரிந்திருக்கவேண்டும்; மேலும், போக்குவரத்துச்

செலவுகளோ அல்லது சோம்பலோ (inertia) அவர்களை அங்காடியின் பல்வேறு பகுதிகளில் நிலவக்கூடிய விலை வேறுபாட்டினின்றும் நன்மையை (அப் பகுதிகளில் சென்று பொருளைக் குறைந்த விலைக்கு வாங்குவதன்மூலம்) அடைய இயலாதவாறு செய்கின்றன எனக் கருதுதல் வேண்டும். கடைசியாக, அப் பொருளை உற்பத்தி செய்யும் பல்வேறு உற்பத்தியாளர்களுக்கிடையே எந்த ஒரு குறிப்பிட்ட உற்பத்தியாளரிடமும் விருப்பத்தரம் காட்டுவதில்லை எனவும் கொள்ளவேண்டும்—அதாவது, அத் தொழிலில் உள்ள ஒரு நிறுவனத்தின் பண்டத்திற்கும், ஏனைய எந்த நிறுவனத்தின் பண்டத்திற்குமிடையே, உண்மையாகவோ அல்லது கற்பனையாகவோ எந்தவித வேறுபாடுகளும் இல்லை என்ற ஓர் எடுகோளினைக் கொள்ளவேண்டும்.

சிறந்த எடுகோள்கள் பலவற்றைப் பார்த்தோம். இவைகளின் நோக்கமென்ன ? ஒருபுறம், அவைகள் வழக்கமாகச் செயற்படுகின்ற துணைச்சக்திகளை எடுத்து விளம்புவனவாகவும் மற்றொருபுறம் எல்லா அங்காடிகளுக்கும் பொதுவாக உள்ள அடிப்படையான சக்திகள் இன்னவை என்று விளக்குவனவாகவும் உள்ளன. நடைமுறை உலகத்தில் அங்காடிகள் மிகவும் சிக்கல் நிறைந்தவையாக உள்ளன. இவைகளில் எளிதாக்கப்பட்டுள்ள மேற்கூறிய எடுகோள்கள் பொருந்தத்தக்கனவாக இருப்பதில்லை. சிக்கலற்று எளிதாக உள்ள நிலையின் அடிப்படைத் தன்மைகள் இன்னவை என்று ஆராயாமல் சிக்கலான பிரச்சினைகளைக்கொண்ட அங்காடிகளைப்பற்றி ஆராய்வது கல்லினின்றும் நார் உரிப்பதையொக்கும்; இது சுரம் பாடவே கற்றுக்கொள்ளாமல் பண்பாட எத்தனிப்பதையொக்கும்.

## 2. நிறைவுப் போட்டியில் தேவைக் கோடு (The Demand Curve under Perfect Competition)

நிறைவுப் போட்டி என்னும் இந்தத் கருதுகோளானது ஒரு சூழ்நிலையில் (hypothetical situation) தனி நிறுவனத்தின் தேவைக் கோட்டை ஆராய்வோம். தொழில் முழுவதற்குமான பொருளின் தேவைக்கோட்டினைத் தனி நிறுவனத்தின் தேவைக்கோட்டினின்றும் வேறுபடுத்திக் காட்டும்பொருட்டு (குழப்பத்தைத் தவிர்க்கும் நோக்கத்துடன்) தனி நிறுவனத்தின் தேவைக்கோட்டினை விற்பனைக் கோடு எனக் குறிப்பிடுவது நலம். நிறுவனத்தின் உற்பத்திப் பொருளும், தொழிலில் உள்ள ஏனைய உற்பத்திப் பொருள்களும் ஒரேவிதமாகவே இருக்குமாதலால் (விளக்கத்தின் அளவில்), அதன் விற்பனைக் கோடும், தொழில் முழுமைக்குமான விற்பனைக் கோடும்

ஒன்ருக இருப்பதுபோல் தோன்றக்கூடும்—அதாவது, படம் 26-ல் காட்டப்பட்டிருப்பதுபோல் கோடு கீழ்நோக்கிச் சரிந்து செல்வதாக இருக்கும். ஆனுல், இத்தகையதொரு நிலை, நிறைவுப் போட்டியின் சூழ்நிலைக்கான எடுகோள்களை வைத்துப் பார்க்கும்போது இருப்ப




படம் 28.

தில்லை. கருதுகோள்படி ஒவ்வொரு நிறுவனமும் தொழிலின் மொத்த விற்பனைகளில் ஒரு சிறு பகுதியையே உற்பத்தி செய்வதால், அதன் உற்பத்தியில் ஏற்படுத்தப்படும் எந்த ஒரு மாற்றமும் விலையைப் புலப்படுத்தும்படியாகப் பாதிப்பதில்லை. ஆகவே, அதன் உற்பத்தி எவ்வளவாக இருந்தபோதிலும், தனி நிறுவனமானது தன் உற்பத்தியை அங்காடி விலைக்கே (குறிப்பிட்டதொரு விலைக்கே) விற்கின்றது. படம் 28-ல் காட்டப்பட்டிருப்பதுபோன்று, அங்காடி விலையான OP வழியாக வரையப்பட்டுள்ள படுகிடைக்கோடு அதன் விற்பனைக் கோடாகும். இக்கோடானது, அந் நிறுவனத்தின் சாத்தியமான உற்பத்தி முழுவதற்குமே அங்காடி விலையைச் சுட்டுவதால், படுகிடையாக நெடிது சென்றுகொண்டிருக்கிறது.

இத்தகையதொரு நிகழ்ச்சியில் (case) தனியானதோர் இறுதிநிலை வருவாய்க் கோட்டினை வரைவது இயலுமா? இயலாதென்றே கூறவேண்டும்; ஏனெனில், ஒவ்வோர் அலகும் நிலையானதொரு விலையில் விற்கப்படும்போது, ஒவ்வோர் அலகும் மற்ற எந்த அலகைப்போன்றும் ஒரே தொகையைத்தான் மொத்த வரவுகளில் சேர்ப்பதாக உள்ளது. ஈண்டு ஒரே ஒரு விலையே உள்ளது. அதிகரித்த விற்பனையின் அவசியத்தை முன்னிட்டு விலைக் குறைப்புச் செய்வதில்லையாகையால், விலையில் எந்தவிதச் சரிசெய்தலும் தேவையில்லாமலிருக்கிறது; விலைகுறைப்பு என்பதே இத்தகைய நிகழ்ச்சியில் இடம்பெறுவதுமில்லை. ஆக, நிறைவுப் போட்டியின்கீழுள்ள ஒரு நிறுவனத்தில், சராசரி வருமானம் அல்லது விலை, இறுதிநிலை வருமானம் இவைகள் ஒன்ருகவே இருக்கின்றன.

பல நிறுவனங்களைக்கொண்ட தொழிலானது கீழ்நோக்கிச் செல்லும் தேவைக்கோட்டினை உடையதாக இருக்கும்போது, தொழிலில் உள்ள ஒவ்வொரு நிறுவனமும் படுகிடை (அதாவது, முற்றிலும் நெகிழ்வுள்ள) விற்பனைக் கோட்டினையுடையதாக இருப்பது விந்தையாகவே தோன்றக்கூடும். ஏராளமான படுகிடைக் கோடுகள் சேர்ந்து எவ்வாறு தொழிலில் கீழ்நோக்கிச் செல்லும் கோட்டினை

உண்டுபண்ணுகின்றன ? இதற்கு விடை யாதெனில், தனி நிறுவனங்களின் விற்பனைக் கோடுகளை ஒன்ருகச் சேர்த்துக் கணக்கிடுதல் இயலாததாக இருக்கின்றது என்பதாம். அத்தகைய கோடுகள் ஒவ்வொன்றும் தொழிலின் ஏனைய நிறுவனங்கள் நிலையான உற்பத்தியை உற்பத்திசெய்துகொண்டிருக்கின்றன என்ற எடுகோளின் மீது வரையப்பட்டனவாகும். எனவேதான்; ஒரு தனி நிறுவனத்தின் உற்பத்தியில் செய்யப்படும் பெருக்கம் தொழிலின் தேவைக்கோட்டின் உற்பத்தி அச்சில் முக்கியமான விளைவை உண்டுபண்ணுவதில்லை. எல்லா நிறுவனங்களுமே உற்பத்தியைப் பெருக்கும்போது நிச்சயமாகத் தொழிலின் உற்பத்தி அச்சில் புலனுகும்படியான மாற்றத்தை உண்டுபண்ணுமாகையால், அங்காடி விலை குறையும். தனித்துள்ள எந்த ஒரு நிறுவனத்தின் அங்காடி விலையும் அதனுடைய ஆளுகைக்கும் அப்பாற்பட்ட சக்திகளால் நிர்ணயிக்கப்படுகின்றன என்று கொள்ளலாம்.

### 3. நிறைவுப் போட்டியில் அங்காடிச் சமநிலை (Market Equilibrium under Perfect Competition)

நிறைவுப் போட்டியின்கீழுள்ள சமநிலையின் முழுப் பாணியையும் காணவேண்டுமாயின், பல்வேறு காரணங்களாகிய புரிகளைக்கொண்ட கயிற்றைப் பிடித்து இழுக்கவேண்டும். ஒவ்வொரு நிறுவனமும் முற்றிலும் நெகிழ்வுள்ள விற்பனைக் கோட்டினை (அதாவது, படுகிடைக் கோட்டினை) உடையனவாக இருக்கின்றன என்பதும் (படம் 28-ல் காட்டப்பட்டுள்ள DD′ கோட்டினைப்போல்), இத்தகைய ஒரு விற்பனைக் கோடும், சராசரி வருமானக் கோடும், இறுதிநிலை வருமானக் கோடும் ஒன்ருக இருக்கின்றன என்பதும் ஏற்கெனவே உறுதியாக்கப்பட்டது. ஒரு தொழிலில் சமநிலைக்குரிய நிபந்தனை யாதெனில், சராசரிச் செலவும் சராசரி வருமானமும் சமமாக இருக்கவேண்டுமென்பதாம். ஒரு நிறுவனத்தில் சமநிலைக்குரிய நிபந்தனை யாதெனில், இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை வருமானமும் ஒன்ருக இருக்கவேண்டுமென்பதாம். ஆனுல், நிறைவுப் போட்டியில், சராசரி வருமானமும் இறுதிநிலை வருமானமும் ஒன்ருகவே இருக்கிறது. எனவே, சமநிலைக்கான சூழ்நிலைகளுக்குத் தேவையானது எதுவெனில், ஒரு குறிப்பிட்ட அளவு உற்பத்தியில் சராசரிச் செலவு, இறுதிநிலைச் செலவு ஆகிய இரண்டும் சராசரி வருமானம், விலை இவற்றிற்குச் சமமானவைகளாக இருக்க வேண்டும்—ஆக, இவை ஒன்றுக்கொன்று சமமானவைகளாக இருக்க வேண்டும். இதன்மூலம், ஒவ்வொரு தனி நிறுவனத்தின் சமநிலைச் சூழ்நிலையும் படம் 29 (a)-ல் காட்டப்பட்டுள்ளதுபோன்று இருக்குமென்பது தெளிவாகிறது. படம் 29 (a)-ல் விற்பனைக் கோடானது

சராசரி உற்பத்திச் செலவுக் கோட்டினைத் தொட்டுச் செல்லும் புள்ளியில் உற்பத்தியானது முடிவு செய்யப்படுகிறது. இப் புள்ளியில்தான் சராசரி உற்பத்திச் செலவும் மிகத் தாழ்வான புள்ளியில் உள்ளது. தொழில் முழுமைக்கும் இதற்கிணையான ஒரு நிலை படம் 29 (b)-ல் காட்டப்பட்டுள்ளது. இதில் OX அச்சில் உற்பத்தி அளவைக் குறிக்கும் அளவைகள் படம் 29 (a)-ல் உள்ளதைக்காட்டிலும் சிறியன




படம் 29.

வாகவே இருக்கும் ; உற்பத்தியானது, அங்காடித் தேவைக்கோடான DD′ தொழிலின் நெடுங்கால அளிப்புக் கோடான SS′ என்பதன் குறைந்தபட்ச புள்ளியை வெட்டுமிடத்தில் அமைகின்றது. ஆகவே, உற்பத்தி OM ஆகவும், விலை OP ஆகவும் இருக்கும்.

ஒவ்வொரு தனி நிறுவனத்தின் சமநிலைச் சூழ்நிலையில், இத்தகைய தன்மைகளின் சிறப்புச் சேர்க்கையானது சம்பந்தப்பட்டிருப்பதற்கான காரணம் என்ன ? இதனை இரண்டு பகுதிகளாகப் பிரித்து ஆராய்வோம். முதலாவதாக, உற்பத்தியானது குறைந்தபட்ச உற்பத்திச் செலவில் அமைவதற்குக் காரணம் என்ன? இரண்டாவது, அந்தக் குறிப்பிட்ட உற்பத்தி மட்டத்தில் விற்பனைக்கோடானது சராசரி உற்பத்திச் செலவுக் கோட்டினைத் தொட்டுச் செல்வதற்குக் காரணம் என்ன ? முதலாவது கேள்விக்கு விடையாதெனில், ஏற்கெனவே கூறியதுபோலச் சமநிலை இருக்கவேண்டுமேயெனில், சராசரிச் செலவு, இறுதிநிலைச் செலவு ஆகிய இவ்விரண்டும் விலைக்குச் சமமானவையாக இருக்கவேண்டும் ; இதன் காரணமாக அவை ஒவ்வொன்றும் சமமானவைகளாகவே இருக்கவேண்டும் ; ஆனால், ஓர் இயல்பான U வடிவமுள்ள விலைக்கோட்டில், இறுதிநிலைச் செலவுக் கோடும் சராசரிச் செலவுக்கோடும் சராசரிச் செலவுக் கோட்டின் மிகத் தாழ்ந்த புள்ளியில்மாத்திரமே சமமாக இருக்கும். இறுதிநிலைச்

செலவானது சராசரிச் செலவைவிடக் குறைவாக இருக்கின்றவரையிலும், உற்பத்தியின் கூடுதலான ஒவ்வோர் அலகிற்குமான உற்பத்திச் செலவானது, உற்பத்தி முழுவதற்குமான சராசரி உற்பத்திச் செலவைக் காட்டிலும் குறைவாக இருக்கும்; எனவே, மொத்தத்திற்குமான சராசரி உற்பத்திச் செலவானது குறைவாகவே இருக்கும். இறுதிநிலைச் செலவானது சராசரி உற்பத்திச் செலவைக் காட்டிலும் அதிகமாக இருக்கின்றவரையிலும், சராசரிச் செலவானது (அதே காரணத்தால்) அதிகமாகவே இருக்க நேரிடும். இறுதிநிலைச் செலவும் சராசரிச் செலவும் சமமாக இருக்கும்போது, சராசரிச் செலவானது அதிகமாகவோ அல்லது குறைவாகவோ இருக்காது—அதாவது, அது மிகக் குறைந்த புள்ளியை அடைந்தும், இன்னும் அதிகரிக்க ஆரம்பிக்காத ஒரு நிலையில் இருக்கும்.

இரண்டாவது கேள்வியினுக்கு வருவோம். விற்பனைக்கோடானது ஏன் இந்தக் குறைந்தபட்ச புள்ளியில் சராசரிச் செலவுக் கோட்டினைத் தொட்டு, அதன்மூலம் அதற்கு ஒரு தொடுகோட்டினை அமைக்க வேண்டும்? இதற்குக் காரணம் என்னவெனில், சமநிலைச் சூழ்நிலை இருக்கவேண்டுமெனில், விலையானது (இந்த நிகழ்ச்சியில், சராசரி வருமானமானது இறுதிநிலை வருமானத்திற்குச் சமமானதாக இருக்க வேண்டும்) இறுதிநிலைச் செலவிற்கும் சராசரிச் செலவிற்கும் சமமானதாக இருக்கவேண்டும். சராசரிச் செலவும் இறுதிநிலைச் செலவும் சமமாக இருக்கின்ற இப் புள்ளியில்தான், தனியொரு விலையானது சராசரிச் செலவு, இறுதிநிலைச் செலவு ஆகிய இரண்டிற்கும் சமமானதாக இருக்கும். எனவே, விற்பனைக்கோடானது சராசரிச் செலவைத் தொடுகின்ற இந்தப் புள்ளியில்தான் நிறுவனம், தொழில் ஆகிய இரண்டிற்குமான பூரணச் சமநிலை அடையப்பெறும்.

இத்தகைய ஒரு நிலையானது, இத் தனி வகையான ஒரு தேவைகளின் (requirements) சேர்க்கையை அடையப்பெறாத ஏனைய நிகழ்ச்சிகளில் காணப்படும். படம் 30-ல் படுகிடை விற்பனைக் கோடானது, குறைந்தபட்ச உற்பத்திச் செலவுப் புள்ளிக்கும் மேலாக இருக்கிறது. நிறுவனம் $OM_1$ அளவு உற்பத்தியைச் செய்யும்போது, அது சமநிலையில் இருக்கும்; ஏனெனில், இந்தப் புள்ளியில் இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை வருமானமும் ஒன்றாக இருப்பதுடன், இலாபமும் அதிகமாக்கப்படுகிறது. ஆனால், அந்த உற்பத்தி அளவில், அதனுடைய சராசரி வருமானமானது $(M_1Q_1)$ அதன் சராசரி செலவைக் காட்டிலும் $(M_1N_1)$ அதிகமாக இருக்கும்; ஆகவே, அது இயல்பான இலாபத்தைக்காட்டிலும் அதிகமான இலாபத்தைப் பெறும். இத்தகைய அதிக இலாபங்களால் புதிய நிறுவனங்கள் தொழிலை நோக்கிக் கவரப்படும். எனவே, தொழிலா

னது சம நிலையில் இருக்காது. (புதிய நிறுவனங்கள் தொழிலை நோக்கி வந்ததும், மொத்த அளிப்பு அதிகரித்து விலையும் குறையும் ; இதனால் தனி நிறுவனத்தின் விற்பனைக்கோடு கீழ்நோக்கிச் செல்லும். அது சராசரிச் செலவுக் கோட்டினை அதன் குறைந்தபட்ச புள்ளியைத் தொடுகின்ற வரையிலும் இலாபமானது இயல்பான அளவிற்கே மீண்டும் திரும்புகின்ற வரையிலும், இவ்வாறு கீழ்நோக்கியே




படம் 30.

செல்லும்.) இதற்கு மாறாக, அது, $OM_2$ அளவு உற்பத்தியைச் செய்யும்போது, சராசரிச் செலவும், சராசரி வருமானமும் சமமாக இருக்கும்; இலாபம் இயல்பானதாக இருப்பதுடன், தொழிலும் சமநிலையில் இருக்கும். ஆனால், இந்த ஒரு நிலையில் நிறுவனமானது அதன் இலாபங்களை அதிகபட்சமாக ஆக்கிக்கொள்ள முடியாது ; உற்பத்தியானது $OM_2$ ஆக இருக்கும்போது இறுதிநிலை உற்பத்திச் செலவானது $(M_2 Q_2)$, பெறப்பட்ட இறுதிநிலை வருமானத்தைக் $(M_2N_2)$ காட்டிலும் அதிகமானதாக இருக்கும்; $OM_1$க்கும் அதிகமான அளவு உற்பத்தியை அந்த நிறுவனம் செய்யுமாயின், இவ்வாறு அதிகமாக உற்பத்தி செய்யும் ஒவ்வோர் அலகிலும் அந் நிறுவனத்தின் மொத்த இலாபம் குறைந்து கொண்டே செல்லும்.

இதேபோன்று, வேறு எந்தவிதமான நிலை மேற்கொள்ளப்பட்டாலும் தொழிலோ அல்லது நிறுவனமோ சமன்கேடான நிலையில் தானிருக்கும்; விலையும் தொடர்ந்து மாற்றமடைந்துகொண்டேயிருக்கும். விலையானது இறுதிநிலைச் (குறைந்தபட்ச) செலவு, சராசரிச் செலவு ஆகிய இரண்டிற்கும் சமமாக இருக்கும்போதுதான் தனி நிறுவனம், தொழில் ஆகிய இரண்டும் முற்றிலுமொரு சம நிலையில் இருக்கக்கூடும். இவைகளில் எல்லாம், சரிசெய்துகொள்ளும் சக்திகளுக்கு—உற்பத்தி அளவில் ஏற்படும் மாற்றங்கள் அல்லது நிறுவனங்களின் இடமாற்றம்—அவைகள்

இயங்குவதற்கு வேண்டிய நேரம் கொடுக்கப்படுவதாகக் கருதப்படு கிறது ; கால இடைவெளிகளால் கொணரப்படும் வேறுபாடுகளுக்கு இடமளிக்க விழைந்தால், நிச்சயமாக, இத்தகையதோர் ஆய்வினைக் குறுங்கால நெடுங்கால உற்பத்திக் கோடுகளைக்கொண்டு எளிதாக நிகழ்த்த முடியும்.

எனவே, மதிப்புக் கோட்பாட்டின் அடிப்படையான ஒரு முடிவினைக் கண்டுபிடித்துவிட்டோம் ; அதாவது, நிறைவுப் போட்டியின் கொடுக்கப்பட்டதொரு சூழ்நிலையில், ஒரு பொருளின் விலையானது அதன் இறுதிநிலை உற்பத்திச் செலவிற்குச் சமமாக இருக்கும் என்பதாம். ஏற்கெனவே நாம் பார்த்ததுபோல், விலையும் குறைந்தபட்ச சராசரி உற்பத்திச் செலவிற்குச் சமமானதாக இருக்கும். எந்த ஒரு காரணத்தாலோ விலையும் இறுதிநிலைச் செலவும் சமமாக இருப்பது நிலைபுரளுமாயின், மீண்டும் சமநிலையைக் கொணரும் வேலையினைச் செய்யச் சக்திகள் தம்மியக்கமாகக் கொணரப்படும். ஆகவே, விலையை நிர்ணயிப்பதில் பெரும்பகுதியான வேலையைத் தேவை செய்கின்றதா அல்லது அளிப்பு செய்கின்றதா என்று கூறுவது இயலாது. விலையானது தேவை, அளிப்பு இவைகளின் செயலெதிர் செயலின் (interaction) விளைவாக உள்ளது—இவைகள் ஒவ்வொன்றும் விலையை நிர்ணயிப்பதில் சமமான முக்கியத்துவம் வாய்ந்தனவாக இருக்கின்றன.

மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles,* Vol. I, Ch. VII.

Marshall, *Principles of Economics,* Book V, Chs. I—III.

Henderson, *Supply and Demand*, Ch. IV.

E. H. Chamberlin, *The Theory of Monopolistic Competition* (5th ed., Harvard University Press, Cambridge, 1946), Ch. II.

Robinson, *The Economics of Imperfect Competition,* Ch. 7.

# 12. சர்வாதீனத்தில் விலை
# (Price under Monopoly)

## 1. சர்வாதீனத்தின் தன்மை

சென்ற அத்தியாயத்தில், ஒரு பண்டத்தைப் போட்டியிடுகின்ற பல உற்பத்தியாளர்கள் உற்பத்தி செய்கின்றார்களென்றும், இவ்வாறு பல உற்பத்தியாளர்களிருப்பதால் அவர்களில் எந்த ஒரு தனித்த உற்பத்தியாளரும் தனது உற்பத்தியில் மாற்றங்களைச் செய்வதன்மூலம், விலையில் எந்த ஒரு கண்கூடான மாற்றத்தையும் உண்டுபண்ண இயலாதென்பதுமான கருதுகோளான ஒரு நிலையைப் பார்த்தோம். சர்வாதீனம் என்பது, இந் நிலைக்கு மாறு பட்டதோர் அதிதீவிர நிலையாகக் கருத்தளவில் வைத்து எண்ண இயலும்—இந்த நிலையில் தனியோர் உற்பத்தியாளர் ஒரு குறிப் பிட்ட பண்டத்தின் உற்பத்தி முழுவதையும் கட்டுப்படுத்துகின்றார். நிறைவுப் போட்டியின் கருத்தினை விளக்கியதுபோலவே, நடைமுறையில் இன்னதுதான் சர்வாதீனமென்று சுட்டி விளக்கு வதைவிடக் கோட்பாட்டளவில் விளக்குவது எளிதாக இருக்கும். இது பெரும்பாலும், ஏற்கெனவே கூறியதுபோல், ஒரு பண்டத்தின் தன்மையைப் பொறுத்திருக்கிறது—அதாவது, ஒரு பண்டமானது பதிலிப் பொருள்களைக்கொண்டதாக இல்லாமல் தனித்து விளங்கு கின்ற (அதாவது, பதிலிப் பொருள்களைப் பெற்றிராமல் தனித்து விளங்குகின்ற) பண்டமா அல்லது அப் பண்டத்தின் பல வகைகள் அல்லது சின்னங்களில் ஒன்றானதா என்பதைப் பொறுத்திருக் கிறது. ஒரு வகையில், ஒவ்வோர் உற்பத்தியாளருமே தனது சொந்த உற்பத்திப் பொருளில் சர்வாதீனத்தைப் பெற்றிருப்பதாகக் கூறலாம்—ஆனால், அவர் விற்கின்ற பொருள்களுக்கும், அவ ருடைய போட்டியாளர்கள் விற்கின்ற பொருள்களுக்குமிடையே மிகச் சிறிய வேறுபாடேனும்—உண்மையாகவோ அல்லது கற்பனை யாகவோ—இருக்கவேண்டும்; மற்றொருபுறம், ஒவ்வொரு பண்டத் திற்கும் ஏதாவதொருவகையான பதிலிப் பொருள் உலகத்தில் ஒவ்

வொரு பொருளுக்கும் இருக்கின்றதென்னும் அடிப்படையில் (உண்மையிலும் அப்படித்தானிருக்கிறது) சர்வாதீனம் இருப்பதை முற்றிலுமாக மறுதலிக்கக்கூடும்.

பொருளாதார ஆய்வில், சர்வாதீனம் என்னும் சொல் இந்த இரு அதிதீவிர நிலைகளுக்கிடையே பயன்படுத்தப்படுகிறது. ஒவ்வொரு வணிகச் சின்னத்தையும் உடைய சாக்கலெட்டு அல்லது மோட்டார் கார்கள், அல்லது சிகரெட்டுகளைத் தனியொரு பண்டமாகக் கருதுவதில்லையாகையால், இவைகளை உற்பத்தி செய்கின்றவர்கள் சர்வாதீனர்களாகக் கருதப்படுவதில்லை. மற்றொருபுறம், நிலக்கரி போன்றதொரு பொருளானது [அதற்கு நிலக்கரி வாயு, மின்சக்தி, கல்லெண்ணெய் (oil) ஆகியவைகள் ஓரளவிற்குப் பதிலிப் பொருள்களாக இருப்பினும்] தனித்த ஒரு பொருளாகவே கருதப்படுகிறது; எனவே, பிரிட்டனில் நிலக்கரியை உற்பத்தி செய்யவும் அளிக்கவும் தனி உரிமையைப் பெற்றுள்ள தேசிய நிலக்கரி சபை (National Coal Board) ஒரு சர்வாதீனமாகவே கருதப்படுகிறது.

ஒரு பண்டம் தனியான ஒரு பண்டமா, இல்லையா என்பதை முடிவு செய்வதில் இணக்கமும் பகுத்தறிவும் கலந்ததொரு வழியினைக் கடைப்பிடிப்பது போன்றே, ஓர் உற்பத்தியாளர் சர்வாதீனரா இல்லையா என்று கருதப்படுவதற்கு முன்னர் அவர் எந்த அளவிற்கு மொத்த உற்பத்தியினைக் கட்டுப்படுத்தவேண்டும் என்பதனை முடிவு செய்வதிலும் கையாளப்படுகிறது. ஒரு நிறுவனம், ஒரு பண்டத்தின் மொத்த உற்பத்தியில் 100 சதவீதத்தை உற்பத்தி செய்யாமல் 95 சதவீதத்தையே உற்பத்தி செய்வதால் அது ஒரு சர்வாதீனமாகக் கருதப்படக்கூடாதென்று கூறுவது, உண்மைக்குப் புறம்பான ஒன்றாகவே இருக்கும். ஓர் உற்பத்தியாளர் மொத்த உற்பத்தியில் பெரும்பகுதியைத் தன் ஆளுகையின்கீழ் வைத்துக்கொண்டிருந்து, தனது உற்பத்தியில் மாற்றங்களைச் செய்வதன்மூலம் அப் பண்டத்தின் அளிப்பு, விலை ஆகியவற்றைக் கட்டுப்படுத்தக்கூடிய நிலையிலிருப்பாரானால், அவர் அப் பண்டத்தில் சர்வாதீனத்தை உடையவராகக் கருதப்படுவார்.

சர்வாதீனத்தில் மிக முக்கியமாக அறியவேண்டியது யாதெனில், அதில் நிறுவனத்திற்கும் தொழிலுக்குமிடையேயுள்ள வேறுபாடு காணப்படுவதில்லை. சமநிலை ஆய்வினைப் பொறுத்தவரையிலும், ஒரு நிறுவனமானது எந்த ஓர் அங்காடியிலும் சர்வாதீன நிலையைப் பெற்றிருக்குமானால் அதுவே தொழிலாகவும் உள்ளது. விளக்கத்தின்படி, ஒரு சர்வாதீனர் இலாபங்களின் மட்டத்தை

எந்த அளவிற்கு அடைந்துகொண்டிருந்தபோதிலும், வேறு பிற உற்பத்தியாளர்கள் மொத்த அளிப்பு அல்லது விலேயில் எந்தவிதக் கண்கூடான விளைவினையும் உண்டுபண்ண இயலாத ஒரு நிலேயே சர்வாதீனமாகும். சமநிலே ஆய்வினைப் பொறுத்தவரையில், இந்த ஒரு நிறுவனம்மாத்திரமே ஆராயப்படவேண்டும்; நிறுவனம் சமநிலேயிலிருக்கும்வரையிலும் தொழிலும் சமநிலேயில் இருந்தே தீரும்.

## 2. சர்வாதீன அதிகாரத்திற்குரிய வழிகள் (Sources of Monopoly Powers)

ஒரு நிறுவனமானது—அல்லது பொதுவான ஒரு நிர்வாகத்தின்கீழ் இயங்குகின்ற நிறுவனங்களின் ஒரு தொகுதி—அங்காடியில் ஒரு பண்டத்தின்மீது ஆதிக்கஞ்செலுத்தி அதனைத் தன் வசப்படுத்திக் கொள்ளக்கூடும். மிகச் சாதாரணமாகச் சர்வாதீனங்கள் உற்பத்தியின் ஓரிரு காரணிகளைத் தங்களின் ஆளுகையின்கீழ்க் கொண்டுவருவதன்மூலமே ஏற்படுகின்றன என்பதை வரலாறு உணர்த்தும். குறிப்பாக, கச்சாப் பொருள்களின் இருப்பைச் சொந்தமாக்கிக்கொள்வதன்மூலம் ஒரு நிறுவனமானது அக் கச்சாப் பொருள் இன்றியமையாததாக இருக்கும் பண்டத்தில் சர்வாதீனத்தையுடையதாக இருக்கும். ஆனால், நெடுங்காலத்தில் இச் சர்வாதீனமானது, கச்சாப் பொருள்களின் இருப்பு தீர்ந்துபோவதாலோ அல்லது அக் கச்சாப் பொருள்களுக்குள்ள இயற்கையான அல்லது செயற்கையான பதிலிப் பொருள்களாலோ நாளடைவில் குறைந்துபடக்கூடும்.

சர்வாதீன நிலேயினை வளர்க்கும் இரண்டாவதாக முக்கியத்துவம் வாய்ந்த காரணியானது சட்டத் தடையாகும். உதாரணமாக, பிரிட்டனில் பொருளாதார நடவடிக்கையின் பல்வேறு துறைகள் தனியார் நிறுவனங்களுக்கு மூடப்பட்டுள்ளன; ஒரு நிறுவனமானது செயற்படுவதற்கான தனியுரிமையானது சட்டத்தால் அளிக்கப்படுகிறது. இதற்கு, மத்திய மின்சார சபை (Central Electricity Board), தேசீய நிலக்கரி சபை (National Coal Board), பொது அஞ்சல் நிலேயம் (General Post Office) ஆகியவைகள் சான்றுகளாகத் திகழ்கின்றன. பொதுவாக, ஒரு புதிய பொருளைச் செய்வதற்கோ அல்லது புதிய உற்பத்தி முறையினைக் கடைப்பிடிப்பதற்கோ தனியுரிமையினை உரிமைக் காப்புகளின் சட்டத்தின் (the law of patents) மூலம் ஒரு நிறுவனமானது பெறக்கூடும். கடைசியாக, சுங்கவரிகளை (tariffs) அல்லது இறக்குமதிகளின்மீது விதிக்கப்படும் வரிகளின்மூலம், உள்நாட்டிலுள்ள நிறுவனம் ஒன்ருேடு போட்டியிடும் அயல்நாட்டு உற்பத்தியாளர்களைத் தடுக்க இயலும். இதே விளைவை, இவ்வளவு

அளவு பொருள்கள்தாம் இறக்குமதியாகலாம் என்ற ஒரு கட்டு திட்டத்தை ஏற்படுத்துவதன்மூலமும் எய்தக்கூடும்.

மூன்ருவதாக, போட்டியினை நிதியக் காரணிகளும் தடை செய்வதாக உள்ளன. இரும்பு, எஃகு உற்பத்திபோன்ற அதிக அளவில் முதல் தேவைப்படும் இவற்றில் உற்பத்தியைச் செய்ய ஆரம்பிக்கு முன்னரே, மூலதனச் சாதனங்களுக்காக அதிக அளவில் முதலீடு செய்யப்படவேண்டும். அப்போதுதான், ஏற்கெனவே நிறுவப்பட்டு இயங்கிவரும் நிறுவனத்துடன் போட்டியிட இயலும். இதன் காரணமாகத்தான், போட்டியிட எண்ணுகின்ற போட்டியாளர்கள் தொழிலில் நுழைவது நடைமுறையில் இயலாததாக இருக்கின்றது. இன்னும் சில தொழில்களில் ஒரு நிறுவனமானது ஓர் அங்காடியின் நன்மதிப்பைப் பெற்றிருக்கும். அந்த அங்காடியில் புதிய நிறுவனங்கள் ஏராளமாகப் பணத்தைச் செலவழித்து விளம்பரம் செய்வதன்மூலமே நுழைய முடியும்.

கடைசியாக, சர்வாதீன நிலையானது போட்டியினைத் தடுப்பதற்கென்றே ஏற்படுத்தப்படும் பல்திறப்பட்ட வழிகளின்மூலம் ஏற்படுத்தக்கூடும். உற்பத்தியைச் செய்துகொண்டிருக்கும் உற்பத்தியாளர் ஒருவர், தனக்குப் போட்டியாக உள்ள சிறு முதலினை முதலீடு செய்துள்ள நிறுவனங்களை வக்கற்றவைகளாகச் செய்து, தொழிலைவிட்டு மருண்டோடச் செய்யும் நோக்கத்துடன் வேண்டுமென்றே தன் பண்டங்களை நஷ்டத்திற்கு விற்கக்கூடும். மேலும், ஒரு தொழிற் சங்கமானது இத்தகைய ஒரு நோக்கத்துடன் 'மூடிய கடை'க் கைக் கோளினை—இதன்படி ஒரு தொழிற்சாலையில் தொழிற் சங்கத்தில் உறுப்பினர்களாக இருக்கும் தொழிலாளர்களுக்கே வேலை கொடுக்க வேண்டுமேயல்லாது, தொழிற்சங்கத்தில் அங்கத்தினர்களாக இல்லாதவர்களுக்கு வேலை கொடுக்கக்கூடாது. அப்படி அங்கத்தினர் அல்லாதவர்க்கு வேலை கொடுக்கப்பட்டால் அத் தொழிற் சங்கத்தில் அங்கம் வகிக்கின்ற தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்வர். மற்றுமொரு பெரும்பாலான வழக்கம் ஒன்றுண்டு. அதாவது, உற்பத்தியாளர்கள் ஏதாவதொருவகை வர்த்தகக் கழகத்தை அமைத்துக்கொண்டு கூட்டு நடவடிக்கைகளின் (collective measures) மூலம் நிறைவுப்போட்டிக்குத் தடைகளை ஏற்படுத்துவதுண்டு. உதாரணமாக, இக் கழகமானது அதற்குக் கட்டுப்படாத ஒரு தொழில்முயல்வோனை அவருடைய அளிப்பு அல்லது விற்பனை வழிகளை (channels) மூடிவிடுவதன்மூலம் அவரை அதன் காலடியில் கொண்டுவந்துவிட முடியும். வர்த்தகக் கழகம் பெரியது; தனது நிபந்தனைகளை மீறி, சாதனங்களுக்கு அவ்வாறு கட்டுப்படாத ஒரு தொழில் முயல்வோனுக்கு விற்பனையாளர்களோ அல்லது சில்லறை

வியாபாரிகளோ சலுகை காட்டும்பட்சத்தில், கழகம் தனது தேவைகளையும் விற்பனைச் சரக்குகளை அனுப்புவதையும் அடியோடு நிறுத்திவிடுவதாக அவர்களை அச்சுறுத்துவதன்மூலம் இதனைச் சாதிக்க முடியும்.

## 3. சர்வாதீனச் சமநிலை (Monopoly Equilibrium)

சர்வாதீன அதிகாரம் எவ்வாறு ஏற்படுகின்றதென்பதைப் பார்த்தோம். அந்த அதிகாரத்தின் துணைகொண்டு, அங்காடியில் எந்த அளவிற்கு விலையிலும் உற்பத்தியிலும் சமநிலை காணப்படுகிறதென்பதைப் பார்ப்போம். இத்தகைய ஓர் ஆய்வு மிகவும் எளிதானதே. ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல், அங்காடி முழுவதற்குமான சமநிலைக்கான நிபந்தனையின் இலக்கணமானது, நிறுவனத்தின் (தனி) சமநிலைக்கான நிபந்தனையின் இலக்கணத்துடன் ஒத்ததாகவே இருக்கிறது. நிறுவனத்தைப் பொறுத்தவரையில், இலாபமானது அதிகபட்சமாகப் பெறப்படும்போதுதான் சமநிலை பெறப்படுகிறது; சர்வாதீனமும் இதற்கு விதிவிலக்கன்று. சர்வாதீனத்திலுள்ள தனிப்பட்டதொரு தன்மை யாதெனில், சமநிலைக்கான தேவைகளில் மாற்றம் காணப்படுகிறது என்பதன்று; நிறைவுப் போட்டியின் கீழ்த் தொழிலில் பூரணசமநிலையைக் கொண்டுவருவதற்குத் தேவைப்படுகின்ற கூடுதலான நிபந்தனைகள் இதற்குத் தேவைப்படுவதில்லையென்பதே. எனவே, சர்வாதீனத்தில் விதியானது எளிதாக இருக்கிறது. அதாவது, நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல, சர்வாதீனருக்கு இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை வருமானமும் சமமாக இருக்கின்ற நிலையில் இலாபமானது அதிகபட்சமாக இருக்கும் என்பது முற்றிலும் செல்லுபடியாகத்தக்கதொன்றாக இருக்கிறது.



படம் 31.

எனவே, சர்வாதீனச் சமநிலையானது படம் 31-ல் காட்டப்பட்டிருப்பது போன்ற ஒரு நிலையைக் குறிக்கும். சர்வாதீனரானவர் அங்காடி முழுவதற்குமே பண்டத்தை அளிப்பதால் அவர், சமாளித்தாகவேண்டிய தேவைக் கோடு (அல்லது சராசரி வருமானக் கோடு) பண்டம் முழுவதற்குமாகும்; எனவே, கோடானது எப்போதும் கீழ்நோக்கிச் சரிந்தே இருக்கும்; விற்பனைக் கோட்டிற்கும் தேவைக்கோட்டிற்கு

மிடையேயுள்ள வேறுபாடு இதில் காணப்படுவதில்லை. சர்வாதீன ரானவர் இறுதிநிலை வருமானமும் இறுதிநிலைச் செலவும் சமமாக இருக்கின்ற அளவில் உற்பத்தியைச் செய்யும்போதுதான் (கோட்டுப் படத்தில் OM என்பது இதனை உணர்த்துகிறது) தனது இலாபத்தை அதிகபட்சமாகப் பெறக்கூடும். சராசரிச் செலவுக் கோட்டில் உறுபொருளாக அடங்கியுள்ள 'இயல்பான' இலாபத் திற்கும் மேலாக, அமித உற்பத்தி செய்யப்படுவதில் ஒவ்வோர் அலகிற்கும் அல்லது சர்வாதீனத்தின் ஆளுகையின் கீழுள்ள ஒவ்வோர் அலகிற்கும் அவர் அடையும் இலாபங்கள், சராசரிச் செலவிற்கும் விலைக்குமிடையே உள்ள வேறுபாட்டுத் தொகைக்குச் சமமாக இருக்கும். (எனவே, கோட்டுப் படத்தில் RSPQ என்னும் எல்லையானது சர்வாதீனருடைய அமித உற்பத்தியின் மொத்த மாகும்).

இதுவரையில் நாம் நிகழ்த்திய வாதங்களனைத்தும், ஒன்றிணைந்த ஒரு தனி அங்காடி முழுவதிலும் சர்வாதீனர் ஒரே விலையை விதிப்பதையொட்டியே இருந்தன. இதைப்போன்ற வாதங்கள், பேதங்காட்டும் சர்வாதீனம் (discriminating monopoly) என்பதற்கும் பொருந்தும். பேதங்காட்டும் சர்வாதீனமானது, ஒரு சர்வாதீனர் தனது அங்காடியை இரண்டு அல்லது அதற்கும் அதிகப்பட்ட தனித்தனிப் பிரிவுகளாகப் பிரித்து அவைகளில் வெவ்வேறான விலைகளை விதித்தலாகும். ஹார்லி தெருவில் வசிக்கும் சிறப்புத் திறன் பெற்ற மருத்துவர் ஒருவர் இருவேறு நபர்களுக்கு ஒரேவிதமான மருத்துவப் பணியைச் செய்வதற்கு இருவேறு கட்டணங்களை (அவர் அந்த இரு நபர்களில் ஒருவர் மற்றவரைக் காட்டிலும் அதிகமான கட்டணத்தைக் கொடுக்க முடியும் என்று கருதினால்) வசூலிக்கக்கூடும்; நிறுவனங்கள் தங்கள் பண்டங்களை உள்நாட்டு அங்காடிக்கு ஒரு விலையிலும், ஏற்றுமதி அங்காடிக்கு மற்றொரு விலையிலும் விற்கின்றனவென்பது நமக்குத் தெரியும். பிரிட்டிஷ் மின்சார சபைகள் (British Electricity Boards) ஒரே பொருளை—மின்சாரத்தை—தொழிற்சாலைக்கு மின்சாரத்தைப் பயன்படுத்துகின்றவர்களுக்கு ஒரு விலைக்கும், மற்றொருபுறம் அதனை வீட்டிற்குப் பயன்படுத்தும் நுகர்வோர்களுக்கு மற்றொரு விலையிலும் அளித்துவருகிறது. இத்தகைய நிகழ்ச்சிகளில், சர்வாதீனர் தனது இலாபத்தை அதிகபட்சமாகப் பெறும்பொருட்டு, தனது மொத்த உற்பத்தியின் (total output) இறுதிநிலைச் செலவிற்குச் (marginal cost) சமமான அளவில் இறுதிநிலை வருமானத்தைக் கொடுக்கக்கூடிய உற்பத்தி அளவினையே ஒவ்வொரு பிரிவு அங்காடியிலும் விற்பார். அவரது அங்காடியின் பல்வேறு பிரிவுகளுக் கிடையே அவரது பண்டத்திற்கான தேவை நெகிழ்ச்சியானது

(elasticity of demand) வேறுபடுமானல், அவர் விதிக்கும் விலைகளும் கணிசமான அளவிற்கு வெவ்வேருகவே இருக்கும். இதற்குக் காரணம், தேவைக்கோட்டின் நெகிழ்ச்சியானது, எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக இருக்கிறதோ, அதற்கேற்ருற்போல் இறுதிநிலை வருமானமானது (marginal revenue) எந்த ஓர் உற்பத்தியின் விலைக்கும் மிக நெருங்கியே இருந்துகொண்டுவரும். நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல், தேவையின் நெகிழ்ச்சி ஒன்றுக்கும் மேம்பட்டதாக இருக்கிறதென்பது, பண்டத்தின் விலை குறையக் குறைய அதன்மீது செலவழிக்கப்படும் மொத்தச் செலவும் அதிகரிக்கின்றதென்பதையும், இதன் காரணமாக இறுதிநிலை வருமானமானது (மொத்தச் செலவில் ஏற்படும் மாற்றம்) நேர்க்கணியத்தில் (positive) இருப்பதுடன் விலைமட்டத்தின் அளவிற்கு இருக்க நேரிடுமென்பதையும் உணர்த்துகின்றது. நெகிழ்ச்சியானது ஒன்றுக்கும் கீழாக உள்ளது என்பதானது, விலை குறையக்குறைய மொத்தச் செலவும் (total expenditure) குறையும் என்பதையும் அதன் காரணமாக இறுதிநிலை வருமானமானது எதிர்க்கணியத்திலிருப்பதால் (negative) விலைக்கு மிகவும் குறைவானதாகவே இருக்குமென்பதையும் உணர்த்துகின்றது. எந்த உற்பத்தி அளவில் இறுதிநிலைச் செலவும் (marginal cost) இறுதிநிலை வருமானமும் சமமாக இருக்கின்றதோ அந்த அளவு உற்பத்தியைமட்டுமே சர்வாதீனர் உற்பத்தி செய்வாராதலால், இறுதிநிலை வருமானம் எத்தனை அளவிற்கு விரைவாகக் குறைகின்றதோ (அதாவது, தேவையின் நெகிழ்ச்சி எத்தனை அளவு குறைகின்றதோ) அத்தனை அளவிற்குச் சமமாக சர்வாதீனருடைய உற்பத்தியும் சிறிய அளவாகப் போகக்கூடுமாதலால் அங்காடி விலையும் அதிகரித்துச் செல்லும்.

படம் 32-ல் இத்தகைய ஒரு நிலை விளக்கப்பட்டுள்ளது. படம் 32(a)-யிலும், 32(b)-யிலும் உள்ள கோடுகள் (சர்வாதீனருடைய இரு வேறு அங்காடிகளில் உள்ள) முறையே சராசரி வருவாயினையும் (average revenue) இறுதிநிலை வருவாயினையும் உணர்த்துவதாகக் கொள்வோம். அவற்றில் முதலாவதாக உள்ளதில், தேவையானது சிறியதாகவும், ஆனல், நெகிழ்வற்றதாகவும் இருக்கிறது. ஆனல், இரண்டாவதாக உள்ளதில், தேவை பெரியதாகவும், ஆனல், நெகிழ்வுடையதாகவும் இருக்கிறது. படம் 32 (c)-யில் உள்ள TAR, TMR கோடுகள் இரண்டு அங்காடிகளுக்கும் சேர்த்து மொத்தச் சராசரி வருமானத்தையும், மொத்த இறுதிநிலை வருமானத்தையும் உணர்த்துகின்றன ; அவைகள், 32 (a), 32 (b) ஆகிய படங்களிலுள்ள கோடுகளைக் குறுக்கே படுகிடையாக இணைத்தலினல் ஏற்பட்டவைகளாகும். இப்போது சர்வாதீனருடைய இறுதிநிலைச் செலவின் பல்வேறு புள்ளிகளை ஒன்ருக ஒரு கோட்டினல் இணைத்

தால், அக் கோடானது மொத்த இறுதிநிலை வருமானக் கோட்டினை (total marginal revenue curve) வெட்டுமிடமானது அவரது மொத்த உற்பத்தியை உணர்த்தும்—இந்த உதாரணத்தில் அத்தகைய மொத்த உற்பத்தி 115ஆக இருக்கிறது. இந்த உற்பத்தி அளவில் இறுதிநிலைச் செலவானது (marginal cost) £ 5ஆக இருக்கின்றது; ஆகவே, அவர் ஒவ்வொரு தனித்த அங்காடியிலும் எவ்வளவு அளவு பண்டங்களை விற்ருல் இறுதிநிலை வருமானமானது £ 5 கிடைக்குமோ அந்த அளவு பண்டங்களைத்தான் விற்பார். அதாவது, இதன்படி, முதலாவது அங்காடியில் 25 பண்டங்களையும் (£ 12 விலையில்), இரண்டாவது அங்காடியில் 90 பண்டங்களையும் (£ 7·75 விலையில்) விற்கக்கூடும் என்பது புலனுகின்றது. அவருடைய மொத்த உற்பத்தியானது 115 ஆக இல்லாமல் வேறு எந்த அளவாகவேனும் இருக்குமானல், இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை வருமானமும் சமமாக இருக்கமாட்டா; அவருடைய இலாபங்களும் அதிகபட்சமாகப் பெறக்கூடியவாறு இருக்கமாட்டா. இந்த இரண்டு அங்காடிகளுக்கிடையே வேறு எந்தவிதத்தாலும் அவர் தன் விற்பனையைப் பகிர்ந்தளிப்பாரேயானல், விற்பனை குறைவாகவுள்ள அங்காடியில் கூடுதலான வருமானத்தைத் தான் தியாகம் செய்வதைக் காட்டிலும், குறைவான அளவிற்கே கூடுதலான வருமானத்தை அதிகரித்த விற்பனையுள்ள அங்காடியில் பெறுவார்.




படம் 32

தனித்தனி அங்காடிகளில் விற்பனைகள் பங்கீடு செய்யப்படுவதில் தேவை நெகிழ்ச்சியானது ஆற்றுகின்ற முக்கியமான பங்கை உணர்த்தும் இந்த உதாரணமானது சர்வாதீனருடைய விலை, உற்பத்தி அளவுக் கைக்கோள் (price and output policy of a monopolist) ஆகிய இரண்டு முக்கிய அம்சங்களில் ஒன்றினை எடுத்து விளக்குவதற்குத் துணைபுரிவதாக இருக்கின்றது. அதாவது, ஒரு சர்வாதீனரானவர், தேவை நெகிழ்ச்சியானது ஏறத்தாழ ஒன்றுக்குச் சமமாகக் குறைகின்ற புள்ளிக்குப் பிறகும் தனது உற்பத்தியை

அதிகரிக்கமாட்டார். நெகிழ்ச்சியானது ஒன்றுக்குச் சமமாக இருக்கின்றதென்பது விலைக்குறைப்பொன்றினால் மொத்தச் செலவீடு (total outlay) பாதிக்கப்படுவதில்லை என்பதனை உணர்த்துகின்றது; இதனால் இறுதிநிலை வருமானமானது (marginal revenue) —மொத்தச் செலவீட்டில் ஏற்படும் மாற்றம்—சுன்னமாக (zero) இருக்கிறதென்பதை உணர்த்துகிறது. உற்பத்தியாளர் உற்பத்தியளவை அதிகரிப்பதன்மூலம் ஏதாவது ஓர் அளவு இறுதிநிலைச் செலவை ஏற்றேயாகவேண்டுமாதலால், அவருடைய இறுதிநிலைச் செலவைச் (marginal cost) சரிக்கட்டுமளவிற்குக் கூடுதலான வருமானத்தை அவர் பெறவில்லையெனில், அவருடைய இலாபங்கள் குறையும். எனவேதான், ஒரு சர்வாதீன விவசாய நிறுவனமானது (monopolistic agricultural organization) தானியங்களை அங்காடியில் கொண்டுபோய் விற்பதைக் காட்டிலும் அழித்துவிடுவதையே சிறந்த முறையாகக் கருதுகிறது. இதற்குக்காரணம் என்னவெனில், தானியத்திற்கான தேவை நெகிழ்வற்றதாக இருக்குமானால் அங்காடியில் அதனை விற்க முனைந்தால் எதிர்க்கணிய இறுதிநிலை வருமானமே (negative marginal revenue) கிடைக்குமாதலால், இலாபங்கள் குறைந்தே இருக்கும்; அழிக்கப்பட்ட தானியங்களுக்கு இறுதிநிலைச் செலவே இல்லையெனினும் இவ்வாறு இலாபங்கள் குறையவே செய்யும்.

சர்வாதீனச் சமநிலையில் இரண்டாவது முக்கிய அம்சம் என்னவெனில், நிறைவுப் போட்டியுடன் (perfect competition) இதனை ஒப்பிடும்போது, விலையானது அநேகமாக அதனைவிட அதிகமாகவே இருக்கிறது; உற்பத்தி அளவும் அநேகமாகக் குறைவாகவே இருக்கிறது. சென்ற அத்தியாயத்தில் கூறப்பட்டதுபோல், நிறைவுப் போட்டியின்கீழ் உற்பத்தி அளவானது (output), விலையானது இறுதிநிலைச் செலவிற்குச் சமமாக இருக்கின்ற புள்ளியில், அமைகின்றது. சர்வாதீனரின் உற்பத்தி அளவானது, இறுதிநிலை வருமானமும் இறுதிநிலைச் செலவும் (marginal cost) சமமாக இருக்கும் புள்ளியில் அமைகின்றது. எந்த ஓர் இயல்பான பண்டத்திற்குமான (normal commodity) தேவைக்கோடானது கீழ் நோக்கிச் சரிந்து காணப்படுவதால் (downward-sloping), இறுதிநிலை வருமானமானது சராசரி வருமானத்திற்கு (average revenue) அல்லது விலைக்கு எப்போதும் இடப்பக்கமாகவே இருக்கும்; (அதாவது, எந்த ஓர் உற்பத்தியளவிலும் இறுதிநிலை வருமானமானது, விலையைக் காட்டிலும் எப்போதும் குறைவாகவே இருக்கும்) இதனால், இறுதிநிலை வருமானக் கோடானது (marginal revenue curve) இறுதிநிலைச் செலவுக்கோட்டினை—அக் கோட்டை விலைக்கோடு (cost curve) வெட்டும் புள்ளிக்கு இடப்பக்கத்தில்—வெட்டுகின்ற

தென்பது தெளிவாகின்றது. அதாவது, உற்பத்தி அளவானது குறைவாக இருக்கின்ற புள்ளியில் வெட்டுகின்றதென்பது தெளிவாகின்றது. வேறு வழியில் கூறப்போனல், ஒரு சர்வாதீனர் உற்பத்தியைச் சுருக்குவதன்மூலமும், விலையை அதிகரிப்பதன் மூலமும் அமிதமான இலாபங்களை (excess profits) அடைகின்ருர் என்று கூறலாம். தொழிலில் நிறுவனங்கள் அங்கு நிலவும் அமித இலாபங்களால் தூண்டப்பட்டு உள்நுழைவதென்பது சர்வாதீனத்தில் இயலாதாகையால், இவ்வாறு அமித இலாபங்களை அடைவதனின்றும் அவர் தடுக்கப்படுவதில்லை. ஆனல், நிறைவுப் போட்டியில் (perfect competition) இதற்கு மாருன நிலைமை இருக்கும்.

படம் 33-ல் இத்தகையதோர் உதாரணம் சித்திரிக்கப்பட்டுள்ளது. இதில் AR என்பது அங்காடியின் தேவைக்கோடாகும்; இதற்கிணையான இறுதிநிலை வருவாய்க் கோடு MR ஆகும். தொழிலானது நிறைவுப் போட்டியை உடையதாக இருப்பின், SS′ என்னும் கோடானது நெடுங்கால அளிப்புக் கோட்டினை (long-run supply curve) உணர்த்துவதாகக் கொள்ளக்கூடும்.




படம் 33.

சென்ற அத்தியாயத்தை ஆராய்ந்தபோது, தொழிலானது குறைந்தபட்ச சராசரிப் புள்ளியில் செயற்படும்போதுதான்—அதாவது, அப் புள்ளியில் விலையானது இறுநிலைச் செலவிற்குச் சமமானதாக இருக்கும்—சமநிலை (equllibrium) எய்தப்பெறும் என்பதைக் கண்டோம். எனவே, உற்பத்தியளவு OM ஆகவும், விலை OP

ஆகவும் இருக்கும். எனினும், தொழிலில் ஒரேஒரு சர்வாதீனரே இருப்பாரேயாகில், SS' என்பது அவருடைய சராசரிச் செலவுக் கோடாக இருப்பதுடன், அவருடைய உற்பத்தியளவானது அவருடைய இறுதி நிலை உற்பத்திக் கோடாகிய MCஆல் தீர்மானிக்கப்படும். இந்தக் கோடானது இறுதிநிலை வருமானக் கோட்டினை வெட்டுமிடத்தில் தான் அவருடைய இலாபமானது அதிகபட்சமாக்கப்படுவதுடன், அதுவே அவருடைய சமநிலைப் புள்ளியாகவும் (equilibrium point) இருக்கும். எனவே, இந்த நிகழ்ச்சியில் சர்வாதீனருடைய உற்பத்தியளவானது OM' ஆக (போட்டியின்கீழுள்ள உற்பத்தி அளவைவிடக் குறைவானதாகவே) இருக்கும்; அவருடைய விலை யானது OP' ஆக (போட்டி விலையைக் காட்டிலும் அதிகமான தாகவே) இருக்கும்.

ஆனால், இத்தகையதொரு முடிவுக்கு இரு வரையறைகளைக் கூறியாகவேண்டும். முதலாவதாக, இம் முடிவானது சர்வாதீனத் தின்கீழும் போட்டியின்கீழும் உற்பத்திச் செலவு ஒன்றாகவே இருக்குமென்ற கருதுகோளினைக் கொண்டதாகவுள்ளது. இது இவ்வாறுதான் இருக்கவேண்டுமென்பதில்லை. ஒருசர்வாதீனரானவர் உற்பத்தியைத் தன்னொருவரின் ஆளுகையின்கீழேயே செய்து வருவ தால், ஆழ்ந்த அனுபவத்தின் காரணமாக உற்பத்தியில் பேரளவுச் சிக்கன நலன்களைப் (economies of large scale) பெறக்கூடும். இதன் விளைவாக, சர்வாதீனருடைய இறுதிநிலைச் செலவுக் கோடானது (monopolist's marginal cost curve) போட்டியின்கீழ் இருப்பதைக்காட்டிலும் கணிசமான அளவிற்குத் தாழ்ந்தே இருக் கும்; ஆக, சர்வாதீனத்தில் அமித சர்வாதீன இலாபங்கள் (excess monopoly profits) காணப்படினும், விலை குறைவாகவும் உற்பத்தி அதிகமாகவும் இருக்கக்கூடும். முதற்கண் நாம் சர்வாதீனத்தை ஆராய்ந்தபோது இத்தகையன நடைபெறுது என்று கருதுகிறோம்; மேற்சொல்லப்பட்ட உண்மை, அவ்வாறு நடைபெறுவது சாத்திய மில்லை என்று நாம் முன்பு கருதியதைத் தவறு என்று சுட்டுவது போன்றுஉளது. சான்றாக, வாயு அல்லது மின்சக்தியானது, அளிப் பில் பெரும்பாலும் ஒரு நிலவாரி எல்லைக்குள்ளேயே (geographical area) வரையறுக்கப்பட்டதாக இருக்கிறது; நவீன சக்தி உண்டு பண்ணும் இயந்திரத் தொகுதி ஒன்றே எளிதாக அங்காடி முழுவதற் குமே வாயுவை அல்லது மின்சக்தியை அளித்துவிட முடியும். எனவே, போட்டியிடும் சக்தி உண்டுபண்ணும் இயந்திரத் தொகுதி களைக்கொண்டு (ஒரே தெருவில் போட்டியிடும் நிறுவனங்களின் குழாய்கள், கம்பி வடங்கள்—cables—இவற்றுடனும்) அங்காடிக்கு வாயுவை அல்லது மின்சக்தியை அளிப்பது நிச்சயமாக விரயமான தொரு நடவடிக்கையாக இருப்பதுடன், விலை அதிகமாக இருப்

பதற்கும் காரணமாக இருக்கும். புகைவண்டிகளைப் பொறுத்தும் இது உண்மையானதாகவே இருக்கிறது. ஒரே இருப்புப்பாதைக்குப் பதிலாக இரு புகைவண்டிக் கம்பெனிகள் இணையாக இருப்புப்பாதைகளை அமைத்தும், இயக்கு பணியாளர்களை (operating staff) வேலைக்கமர்த்தியும் தொழில் நடத்தவெண்டுமென்னும் கருத்து நிச்சயமாக அறிவீனமானதொரு விரயத்திற்கே அழைத்துச் செல்லும். எனவே, சர்வாதீனமும் அதிக விலைகளும் எவ்வாற்றானும் ஒத்தியங்குவன அல்ல; வேறுபட்டனவேயாகும்.

இரண்டாவது வரையறையானது, சர்வாதீனத்தைப் போட்டிக்கு எதிரானதாக ஒப்பிடுவதில் உள்ளது. சர்வாதீனமானது நிறைவுப் போட்டியுடன்தான் ஒப்பிடப்படுகிறது. நடைமுறையில் உலகத்தில் நிறைவுப் போட்டியென்பதே இருப்பதில்லை. நடைமுறையில் சர்வாதீனத்திற்கும் நிறைகுறைப் போட்டிக்குமிடையே (imperfect competition) ஒப்பிடுதல்தான் பொருத்தமானதாக இருக்கின்றது; ஏனெனில், நடைமுறையில், சர்வாதீனத்திற்கு மாற்றுப் பொருளாக (alternative) பெரும்பாலும் நிறைகுறைப் போட்டியே உளது. நிறைகுறைப் போட்டியில் பெரும்பாலும் அதிகமான விரயத்தையும் (a good deal of waste) திறமையின்மையையும் (குறிப்பாக, பண்ட வேறுபாடு செய்தலிலும்—product differentiation—போட்டி விளம்பரங்களிலும்) அளிக்கவல்லதாக இருக்கிறதென்பதையும், இத்தகையன சர்வாதீனத்தில் காணப்படுவதில்லையென்பதும் அடுத்த அத்தியாயத்தில் காணப்பெறும். எனவே, இக் காரணமானது சர்வாதீனத்தின் உற்பத்திச் செலவுகள் (விற்பனைச் செலவுகளையும் உற்பத்திச் செலவுகளையும் சேர்த்து) நடைமுறையிலுள்ளதொருவகைப் போட்டியின்கண் உள்ள உற்பத்திச் செலவுகளைக் காட்டிலும் குறைவாக இருக்கக்கூடும் என்ற கருத்துக்கு வலுவூட்டுவதாக உள்ளது.

எனினும், சர்வாதீன அதிகாரமானது (அது தூய சர்வாதீனமாக இருப்பினும் அல்லது அடுத்த அத்தியாயத்தில் ஆராயப்பட்டுள்ள அரைகுறைப் போட்டி, அரைகுறை சர்வாதீனம் ஆகியவற்றில் காணப்படும் ஓர் உறுபொருளாக இருப்பினும்) உற்பத்தியைக் கட்டுப்படுத்தும் விளைவினை உண்டுபண்ணத்தக்கதாக இருப்பதால், மற்றபடி இருப்பதைக்காட்டிலும், நுகர்வோர்களுக்கு அதிகமான விலைகளையும், உற்பத்தியாளருக்கு அதிகமான இலாபங்களையும் அளிப்பதாக உள்ளது. இது குறிப்பாகத் தேவையானது ஒப்பீடாக நெகிழ்வற்றதாக இருக்கும்போது நிகழ்கிறபடியால், இறுதிநிலை வருமானம் (marginal revenue) வெகுவாகக் குறைகின்றது; தேவைக் கோடானது செங்குத்தாகச் செல்லச்செல்ல, இறுதிநிலைச் செலவுக் கோடும் இறுதிநிலை வருமானக் கோடும் ஒன்றையொன்று வெட்டு

கின்ற புள்ளியானது இன்னும் இடப்புறமாகச் சென்றுகொண்டே யிருக்கும். இதனுல், சர்வாதீனருடைய உற்பத்தி அளவானது குறைவாக இருக்குமென்பதும், அவருடைய விலை போட்டியின்கீழுள்ள விலையைவிட அதிகமானதொன்ருக இருக்குமென்பதும் தெளிவாகிறது; சர்வாதீன அமைப்பில் கணிசமான அளவிற்கு உற்பத்திச் செலவைக் குறைக்கக்கூடிய நிலை இருப்பினும், விலை அதிகமாகவே இருக்கும். எனவே, சர்வாதீன மூலக்கூறுகள் (monopolistic elements) முக்கியமான அளவில் இடம்பெறும் எந்தப் பொருளாதார அமைப்பிலும் சர்வாதீனக் கைக்கோள்பற்றிய பிரச்சினையை அசட்டை செய்ய இயலாது.

4. சர்வாதீனமும் அரசாங்கக் கைக்கோளும் (Monopoly and Public Policy)

தற்போதுள்ள நூற்றுண்டில் சர்வாதீனத்தின் ஆபத்துகள் அனுபவவாயிலாகப் பெரிதும் காணப்பட்டே வருகின்றன; குறிப்பாக, கட்டுப்படுத்தப்பட்ட உற்பத்தி அளவினுலும் (restricted output) அதிக விலைகளாலும் நுகர்வோர்கள் சுரண்டப்படுகின்றனர். மேலும், சர்வாதீன நிலையினுல் பொருளாதாரச் சக்தியானது ஒருசில தனிநபர்களின் கைகளில் செறிந்து அமைவதாக இருக்கின்றது. இத்தகைய ஆபத்துகள் எல்லாம் உண்மையானவையே என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனுல், ஒன்றை கவனத்தில் கொள்ள வேண்டும். சர்வாதீன விலைகளைப்பற்றிய பொருளாதார ஆய்வானது (பொருளாதாரக் கோட்பாட்டில் இருப்பதுபோன்று), தொழில் முயல்வோர்கள் எப்போதுமே தங்களது இலாபங்களை உயர்ந்தபட்சமாக வைத்துக்கொள்ளவே பாடுபடுவர் என்னும் எடுகோள் அடிப்படையில் அமைந்துள்ளது. இத்தகைய எடுகோள் செயலளவில் உண்மையானதாக இல்லாதிருப்பின்—நடைமுறையில் பெரும்பாலும் அப்படி இருக்கக்கூடும்—பெரும்பாலும், விலையானது போட்டியின்கீழ் (under competition) இருப்பதைக்காட்டிலும், சர்வாதீனத்தின்கீழ்தான் அதிகமாக இருக்குமென்னும் முடிவானது வரையறைகளுக்குட்பட்டே ஏற்றுக்கொள்ளப்படத்தக்கதாகும்.

ஆயினும், மற்றவைகள் சமமாக இருக்கும்போது, ஒரு சர்வாதீனர் பெரும்பாலும் தனது இலாபங்களை உயர்ந்தபட்சமாக வைத்துக்கொள்ளவே முனைவார் என்னும் ஓர் எடுகோளைக் கொள்வோம். அப்படி இருக்கும்போது, நுகர்வோர்களுக்கு ஊறு விளைவிப்பதாகவுள்ள சர்வாதீன அதிகாரத்தினை எந்த வகையில் கட்டுப்படுத்த இயலும்? முதலாவதாக, பதிலிப் பொருள்களால் சர்வாதீனருடைய அதிகாரம் எப்போதுமே வரையறுக்கப்பட்டதாக (limited) இருக்

கிறது. சர்வாதீனத்தில் நுகர்வோர்கள் அதிக விலை கொடுக்க நேர்ந்தால், இத்தகைய பதிலிப் பொருள்களை (substitutes) நாடிச் செல்லக்கூடும். இதனை வேறு வழியில் கூறப்போனால், பதிலிப் பொருள்கள் சர்வாதீனரை நோக்கியுள்ள தேவைக்கோட்டின் நெகிழ்ச்சியை அதிகரிக்கும். நாம் முன்பு பார்த்ததுபோல், சர்வாதீன விலைக்கும் போட்டி விலைக்குமிடையேயுள்ள இடைவெளியானது எந்த அளவிற்குக் குறைவாக இருக்கின்றதோ அந்த அளவிற்குத் தேவை நெகிழ்ச்சியானது அதிகமானதாக இருக்கும். அதே நாட்டில் பதிலிப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படவில்லையாயினும், அத்தகைய பதிலிப் பொருள்களை வெளிநாடுகளினின்றும் இறக்குமதி செய்து அங்காடியில் போட்டி விலைக்கே விற்பது சாத்தியமானதாகும். சர்வாதீனர் இந்த ஒரு கருத்தினை மனத்தில் கொண்டு, அவருடைய விலையை இத்தகைய சாத்தியப் புள்ளிக்கும் கீழாக இருக்கும்படியே தனது விலையை வைத்திருக்கவேண்டும்.

இரண்டாவதாக ஒரு சர்வாதீனர் தனது இலாபத்தை அதிகபட்சமாகச் செய்யும் அதிக விலையினை விதிக்காமலிருக்கலாம். அதிக விலையை விதித்தால், இவ்வதிக விலையினால் தூண்டப்பட்டு அவருடைய போட்டி உற்பத்தியாளர்கள் அங்காடியில் உட்புகுந்து அவருக்குக் கிடைக்கின்ற அதிக இலாபத்தினைப் பகிர்ந்துகொள்ளக்கூடும். மேலும், போட்டி உற்பத்தியாளர்கள் அங்காடியில் நுழைவது அதிகம் செலவாகின்றது என்கிற காரணத்தின் அடிப்படையில் ஒரு சர்வாதீனம் நிலைபெற்றிருப்பதற்கும் வரையறை உண்டு. உதாரணமாக, இலாபமானது இயல்பான மட்டத்திற்கும் சற்றே அதிகமாக இருக்கின்றவரையிலும் போட்டியாளர்கள் தொழிலில் உட்புகுந்து தங்களின் உற்பத்தி நிறுவனங்களை நிறுவுதலென்பது அதிகச்செலவை ஏற்படுத்துகிறதொன்றாக இருக்கின்ற காரணத்தால், சொற்ப இலாபத்திற்கு விழைந்து அச் செலவுகளை ஏற்க முன்வரமாட்டார்கள். ஆனால், சர்வாதீனருடைய இலாபமானது உண்மையிலேயே மிக அதிகமாக இருக்குமானால், இவ்வதிக இலாபத்தினால் அப்போட்டியாளர்கள் தூண்டப்பட்டுத் தங்களது பழைய முடிவை மாற்றிக்கொள்ள நேரிடும்.

மூன்றாவதாக, ஒரு சர்வாதீனரானவர் அதிகபட்ச வீத இலாபத்தைக் குறைத்துப் பெறுவதே போதுமென்றும் எண்ணக்கூடும். இப்படி எண்ணுவதற்கும் காரணம் இருக்கிறது. இவ்வாறு குறைந்த இலாபத்திற்குப் பொருள்களை விற்பதன்மூலம் அங்காடியைப் பெரிய அளவில் ஏற்படுத்திக்கொண்டு (extending the market), அதன் மூலம் நீண்டகால இலாபங்களை (long-run profits) அடைய விழையலாம். குறுங்காலத்திற்கு (short-run) குறைந்த இலாபங்களை

ஏற்பதன்மூலம் தனது பொருளுக்கான தேவை தூண்டப்படும் என்று அவர் நம்பும்பட்சத்தில், தனது பொருளை வேண்டுமென்றே விலை குறைத்து விற்கக்கூடும். நிலவுகின்ற தேவை நிலைகளால் (existing demand conditions) உணர்த்தப்படுகின்ற சிறிய உற்பத்தி அளவில் கிடைக்கும் அதிக வீத இலாபத்தைக்காட்டிலும் ஒரு பெரிய உற்பத்தி அளவில் (a large output) நெடுங்காலத்தில் கிடைக்கக் கூடிய ஒப்பீடான குறைந்த வீத இலாபமே அவருக்கு உகந்ததாகத் தோன்றும்.

எனவே, இத்தகைய காரணங்களால் சர்வாதீன சக்திகள் இயக்கத்தில் இருப்பினும், அச் சக்திகள் பூரணமாகச் செயற்படுவதில்லை யென்பது தெளிவாகின்றது. பல சமயங்களில் மிதமான சர்வாதீன சக்தி பயன்படுத்தப்படுவதன் காரணமாக, நுகர்வோரால் அடையப் பெறும் நஷ்டத்தைவிட, சர்வாதீனத்தால் கொண்டுவரப்படும் குறைந்த உற்பத்திச் செலவுகளின் பயனாக அவருக்குக் கிட்டும் இலாபம் அதிகமாக இருக்கக்கூடுமாதலால், நஷ்டம் போதிய அளவிற்கு மேலாக மேற்கண்ட இலாபத்தால் சரிக்கட்டப்படும். சர்வாதீனத்தில் உற்பத்தியானது ஒரு நிறுவனத்தின்கீழ் அல்லது ஒன்றோடொன்று இணைந்து செயல்படுகின்ற நிறுவனங்களின் ஒரு கூட்டத்தின்கீழ்ச் செறிந்து அமைவதால், உற்பத்திச் செலவுகள்—உற்பத்திச் செலவுகளும் விற்பனைச் செலவுகளும்—குறைந்தே இருக்கும்.

இருப்பினும், பல சமயங்களில்—ஏன், பெரும்பாலான சமயங்களில்—நுகர்வோர், சர்வாதீனம் இருப்பதன் காரணமாக, அதிக அளவிலோ அல்லது குறைந்த அளவிலோ (சர்வாதீனருடைய அதிகாரத்திற்கு இத்தனை தகுதிகளும் வரையறைகளும் இருந்த போதிலும்) இடர்ப்பாட்டினை அடைந்தே வருகிறார். சர்வாதீனமானது தனது அதிகாரங்களைக் கணிசமான அளவிற்குத் தவறாகப் பயன்படுத்துமாகில், அரசாங்கத்தின் தலையீடு ஒன்றினால்தான் நுகர்வோருக்குப் போதிய பாதுகாப்பு கிடைக்கும் என்று கருதுவதற்கு இடம் ஏற்படும். இத்தகையதொரு தலையீடு தொழிலைத் தனியார் கைகளினின்றும் முழுவதுமாக எடுத்துவிடுவதாகவோ அல்லது குறைந்தபட்சம் தொழிலின் விலை, உற்பத்தியளவு கைக்கோளைக் கட்டுப்படுத்துவதற்கு அதனை ஒரு நேரடியான கட்டுப்பாட்டின்கீழ்க் கொணருவதாகவோ இருக்கக்கூடும். உதாரணமாக, வாயு, மின்சாரம் ஆகியவற்றை உற்பத்தி செய்வதில் ஏற்படும் ஒப்பீடான அதிகப்படியான மூலதனச் செலவுகள் (relatively high capital costs), பிரிட்டனில் இத் தொழில்களின் வரலாற்றின் ஆரம்ப நிலை முதற்கொண்டே இத் தொழில்களை ஒவ்வோர் எல்லையிலும்

சர்வாதீன அடிப்படையில் தனியோர் உற்பத்தியாளரே ஏற்று நடத்தவேண்டுமென்பதற்குத் தவிர்க்க முடியாத காரணங்களாக இருந்துள்ளன. வாயு (gas) அளிக்கும் தொழிலையோ அல்லது குடி நீர் அளிப்புத் தொழிலையோ, ஓர் எல்லையில் செய்வதற்கு, தனி யோர் உற்பத்தியாளரே போதும் (பேரளவு உற்பத்திச் சிக்கன நலன்களைப் பெறவேண்டுமாகில் இப் பணிகள் தனி உற்பத்தியாள ரால்தான் செய்யப்பட வேண்டும்); இத்தகைய தொழிலைச் செய்ய இரண்டு அல்லது மூன்று நிறுவனங்கள் ஒரே எல்லையில் செயல் படுவதனுல் ஏற்படும் விரயம், சர்வாதீனத்தின் தீவிரமான எதிரிக் கும் நன்கு விளங்கும். ஆகவேதான், வாயு, நீர் அளிப்பு ஆகிய தொழில்களை உள்ளாட்சி மன்றங்களோ (Local Government Authorities) அல்லது தனிப்பட்ட கார்ப்பரேஷன்களோ ஏற்று நடத்தி வருகின்றன. இவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் எல்லை யில் ஒரு தொழிலைச் செய்வதற்குத் தனியான உரிமைகள் வழங்கப் பட்டன. ஆனல், அவைகள், தங்களின் விலைகளை அல்லது இலாபங் களை அதிகரித்துக்கொள்ளும் அதிகாரமானது ஓரளவிற்குக் கடுமை யாகவே கட்டுப்படுத்தப்பட்டன. பின்னரே, பல தொழில்களின் தொகுப்பானது (consolidation of industries) நாடு முழுவதற்கும் இயங்குகின்ற தனித்த நிறுவனங்களாகச் செயல்பட்டபோது எழுந்த பொருளாதாரச் சிக்கன நலன்களே, அவைகளை நாட்டுரிமை யாக்கலாம் (nationalisation) என்பதற்குப் போதிய சான்ருக இருந்தன. இத்தகைய காரணங்களுக்காகவே, பெரும்பாலான நாடுகளில் அஞ்சலகப் பணிகள் அரசாங்கத்தால் மேற்கொள்ளப் பட்டுள்ளன.

ஒரு தொழிலை அரசாங்கமோ அல்லது பகுதி அரசாங்கக் குழு வொன்ருே (semi-governmental body) ஏற்று நடத்துவதென்பது எப்போதுமே விழையத்தக்கதொரு வளர்ச்சியாகக் கருதப்படமாட் டாது; இதற்கு அரசியல் காரணங்கள் காரணமாக இருக்கக்கூடும்; அல்லது தொழிலியல் காரணங்களுக்காக ஒரு குறிப்பிட்ட தொழிலை அரசாங்கக் குழுவானது ஏற்று நடத்துவது உகந்ததன்று என்று கருதப்படலாம். இத்தகைய நிகழ்ச்சிகளில் சர்வாதீனத்தைக் கட்டுப் படுத்தும் அல்லது ஒழித்துக்கட்டும் சாதனங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். இவ்வாறு கடைப்பிடிக்கப்படும் வழிவகைகள் ஒவ்வொரு நாட்டிலும் வெவ்வேருக இருக்கும். உதாரணமாக, ஐக்கிய அமெரிக் காவில் பல ஆண்டுகளாகச் சட்டத்தின்மூலம் தீவிரமான சர்வாதீன எதிர்ப்புப் போராட்டம் நடத்தப்பட்டு வந்துளது. குறிப்பிட்ட சர்வாதீன நடவடிக்கைகளும், சர்வாதீன அதிகாரத்தைக் கொணர் வதற்குச் சாதனங்களெனக் கருதப்படுகிற குறிப்பிட்ட வகையான கம்பெனி அமைப்புகளும் சட்டத்தின்மூலம் சட்ட விரோதமானவை

என்று அறிவிக்கப்பட்டன. இவ்வாறு சட்டத்தை மீறிய சர்வாதீன நடவடிக்கைகளைக் கண்டுபிடிக்கும்பொருட்டும், தண்டிக்கும் பொருட்டும் ஒரு சக்தி வாய்ந்த அரசாங்கப் பிரிவு ஒன்று ஏற்படுத்தப் பட்டது. இதனுடைய வேலை, சட்டத்தை மீறிய சர்வாதீன நடவடிக்கைகளைக் கண்டுபிடிப்பதும் தண்டிப்பதுமாக இருந்தது. இவ்வகையான சட்டங்கள் எந்த அளவிற்கு வெற்றியைத் தந்தன என்று அளவிட்டுக் கூற முடியாதாயினும் (இன்ன அளவில் இருந் தால்தான் சர்வாதீனம் என்று அளவிட்டுக் கூறுவதே இயலாததாக இருந்தபோது, அதன்மீது அரசாங்கக் கைக்கோள் செலுத்திய ஆதிக்கத்தை அளவிடுவது எவ்வாறு இயலும்) இவைகள், உற்பத்தி யாளர்கள் தங்களுக்குள் ஒன்றுபட்டுச் சர்வாதீன நிலையை ஏற்படுத் திக் கொள்வதை வெகுவாகத் தடை செய்து வந்தன.

கிரேட் பிரிட்டனில் சமீப ஆண்டுகள் வரையிலும், சர்வாதீனத் தின்மீதுள்ள போக்கு வேறுவிதமாகவே இருந்து வந்திருக் கின்றது. குறிப்பிட்ட நடவடிக்கைகள் அல்லது தொழிலமைப்பு களைப் பொதுவாகத் தடை செய்யும் (general condemnation) போக் கானது தவிர்க்கப்பட்டே வந்துள்ளது. இதற்குக் காரணம் உண்டு. ஒரு திறமையான கம்பெனி வழக்கறிஞரின் துணைகொண்டு சட்டத் தடைகளைத் தாண்டிச் சென்றுவிட முடியும். இப்படித் தப்பித்துச் செல்ல முடியாத கம்பெனிச் சட்டங்கள் அநேகமாக இல்லையென்றே கூறிவிடலாம். எனவே, இதுவும் ஒரு பகுதி காரணமாக இருக்கிறது. ஆனால், முக்கியமான ஒரு காரணமும் உண்டு. ஒரு சில தொழில் களில் எந்த நடவடிக்கைகள் விரும்பத்தக்கனவாக இல்லாமலிருக் கின்றனவோ அவையே வேறு மற்றத் தொழில்களில் முற்றிலும் நியாயமானவைகளாக இருக்கின்றன. ஆகவேதான், ஒவ்வொரு தொழிலையும் தனியாக ஆராய்ந்து தேவைப்படும்போது ஒவ்வொன் றிற்கும் தனியாகவே (ad hoc basis) சட்டமியற்றுவது சிறந்ததெனக் கருதப்பட்டது.

இக்கைக்கோளினின்றும் முக்கியமானதொரு மாற்றம் 1948ஆம் ஆண்டில் சர்வாதீனங்களின் குழு (Monopolies Commission) நிறுவப்பட்டபோது ஏற்பட்டது. இந்தக் குழுவானது, வர்த்தக சபை யினரால் (Board of Trade) பரிசீலனைக்கு அனுப்பப்படுகிற தொழில் களின் நடவடிக்கைகளையும் கைக்கோள்களையும் ஆராயவேண்டும். அவ்வாறு பரிசீலனை செய்து முடித்துப் பின்னர் தனது அறிக்கையில் தான் எந்தத் தொழில்களின் நடவடிக்கைகளைப் பொதுமக்களின் நலனுக்கு விரோதமானவை என்று கருதுகின்றதோ அவற்றைக் குறிப்பிடவேண்டும். இவற்றைச் சட்டவிரோதமானவை என்று அறிவிக்க அரசாங்கத்திற்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருந்தது.

1956ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட தடைசெய்யப்படத்தக்க வர்த்தக நடவடிக்கைகளுக்கான சட்டத்தினல் (Restrictive Trade Practices Act) இக்கைக்கோளின் நெடும்பயன் வளர்ச்சி தோற்றுவிக்கப்பட்டது. இச் சட்டத்தின்படி, சர்வாதீன நடவடிக்கைகள் பலவற்றைக் கைக்கொள்ளும் நிறுவனங்கள், தடை செய்யப்படத்தக்க நடவடிக்கைகளின் நீதிமன்றத்திற்குச் (Restrictive Practices Court) சென்று தங்களது நடவடிக்கைகள் பொதுமக்கள் நலனுக்கு விரோதமானவையல்ல என்று நிருபித்தாலொழிய, அவைகள் சட்ட விரோதமானவையென்றே கருதப்படும். ஒவ்வொரு நிறுவனமும் அறுதியிட்ட தனது நடவடிக்கைகளை, அதற்கென நியமிக்கப்படும் பதிவாளரிடம் குறித்த காலத்திற்குள் பதிவுசெய்துகொள்ளவேண்டும். இதன் பின்னர் நீதிமன்றத்தின் ஒப்புதலைப் பெறவோ அல்லது மேற்குறிப்பிடப்பட்ட காலவரையறைக்குள் அந் நடவடிக்கைகளைக் கைவிட்டுவிடவோ வேண்டும்.

இத்தகையதொரு கைக்கோளினல் ஏற்படும் பலாபலன்களை மதிப்பீடு செய்வது மிகவும் கடினமானதொன்ருகும். இக் குறுகிய கால அளவில் பலாபலன்களைக் கண்டறிவதும் இயலாது. ஆனல், ஒன்றுமட்டும் நிச்சயம். கைக்கோளின் வெற்றியானது இத்தகையதொரு நீதிச்சாதனம் எந்த அளவிற்கு நிறுவனங்களின் தொழில் முயல்வோரைச் சர்வாதீன நடவடிக்கைகளைக் கைவிட்டுவிடும்படி தூண்டுகின்றது (அல்லது அவைகளைக் கையாளுவதனின்றும் விலகி இருக்கும்படி தூண்டுகிறது) என்பதைப் பொறுத்ததேயொழிய, நீதிமன்றத்தின் துணைகொண்டு எத்தனை குற்றத் தாக்கல்கள் (prosecutions) செய்யப்படுகின்றன வென்பதைப் பொறுத்ததன்று என்பதனை நன்கு தெரிந்துகொள்ளவேண்டும். இயற்றப்படுகின்ற எந்த ஒரு சட்டத்தின் வெற்றியும் கடைசியில் பெரும்பாலான மக்கள் அதற்குத் தரும் பொதுவான ஆதரவைப் பொறுத்தேயிருக்கும். மக்களாட்சி முறையினைப் பின்பற்றுகின்ற எந்த ஒரு சமுதாயத்திலும், பெரும் பகுதி மக்கள் ஒரு சட்டத்தைத் தீய சட்டமாக மதிப்பார்களேயாகில், அச் சட்டம் வெற்றி காணவோ அல்லது நீடித்திருக்கவோ இயலாது. சர்வாதீன சம்பந்தமான சட்டத்தைப் பொறுத்த வரையிலும் இது உண்மையானதாகவே இருக்கிறது. தொழில் முயல்வோர்கள் (entrepreneurs) தாங்களே, சர்வாதீனமானது பொதுவாக விரும்பத் தகாததொன்று எனவும், அது நீண்ட காலத்தில் சமூகத்திற்கு எவ்வாறு தீங்கிழைப்பதாக உள்ளதோ அவ்வாறே தங்கட்கும் தீங்கிழைக்கவல்லது எனவும் பொதுவாக நம்புவார்களேயாகில், மேற்சொன்ன சட்டம் தனது குறிக்கோளில் வெற்றியடையும்.

மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles*, Vol. I, Ch. X.

Marshall, *Principles of Economics*, Bk. V, Ch. XIV.

Robinson, *Monopoly* (Cambridge University Press, London, 1941), Chs. I, III, VIII, XI and XII.

Beacham and Williams, *Economics of Industrial Organisation*, Chs. V–VI.

*Robinson, *The Economics of Imperfect Competition*, Chs. 3 and 11.

# 13. நிறைகுறைப் போட்டியில் விலை
# (Price under Imperfect Competition)

## 1. நிறைகுறைப் போட்டியின் தன்மை

சென்ற இரண்டு அத்தியாயங்களிலும் சில குறிப்பிட்ட அதி தீவிரமானவையும் கருதுகோளானவையுமாகிய (extreme and hypothetical) சூழ்நிலைகளில்—அதாவது, ஒருபுறம் நிறைவுப் போட்டியிலும் மற்றொருபுறம் தூய போட்டியிலும் (pure monopoly)—விலையை நிர்ணயிக்கின்ற சக்திகளைப்பற்றி ஆராய்ந்தோம். நடைமுறை உலகத்தில், நிறைவுப் போட்டிச் சூழ்நிலைகளில் மாற்றுச் செய்யப்படுகிற ஒரு பண்டத்தைக்கூடக் கண்டுபிடிப்பது அநேகமாக இயலாதென்றே கூறலாம். இதேபோன்று தூய போட்டியின் நிகழ்ச்சிகளைக் கண்டுபிடிப்பதும் கடினமே. ஏனையவற்றில் நாம் அடிக்கடி காண்பதுபோலவே, உண்மையான நிகழ்ச்சியானது இந்த இரு தீவிர நிலைகளுக்குமிடையே ஓர் இடத்தில்தான் காணப்படுகிறது. பெரும்பாலான அங்காடிகளில் சர்வாதீனம், போட்டி ஆகிய இரண்டின் தன்மைகளையும் கொண்டனவாகவே இருக்கின்றன ; ஒரு சிலவற்றில் சர்வாதீனத்தின் பண்புகள் தலைதூக்கி நிற்கின்றன; மற்றும் சிலவற்றில் போட்டியின் பண்புகள் பெரிதும் காணப்படுகின்றன. தூய சர்வாதீனமோ அல்லது நிறைவுப் போட்டியோ இல்லாமலிருக்கின்ற இத்தகைய சூழ்நிலைகளை (situations) பொருளாதார விற்பன்னர்கள் நிறைகுறைப் போட்டியென்று (imperfect competition) அழைக்கின்றனர்.

போட்டியும் (competition) சர்வாதீனமும் (monopoly) கலந்த இத்தகையதொரு கலவை நிலை எப்படி ஏற்படுகின்றது? பொதுவாக, இத்தகைய நிலை அங்காடிச் செயலமைப்பின் (market mechanism), அளிப்புப் பகுதி (supply side), தேவைப்பகுதி (demand side) ஆகிய இரண்டின்மீதும் செயல்படுகின்ற காரணிகளால் ஏற்படுகின்றது. அளிப்புப் பகுதியைப் பொறுத்தவரையில், நிறைவுப் போட்டிக்குக் கணக்கற்ற அதிக எண்ணிக்கையுள்ள உற்பத்தியாளர்கள் இருக்க

வேண்டும்; இவர்களில் ஒவ்வொருவராலும் அங்காடியின் விலையினைப் புலனுகுமளவிற்குப் பாதிக்கவே முடியாது. தூய சர்வாதீனத்தில் ஒரே ஓர் உற்பத்தியாளரே இருப்பார்; அவருக்குப் போட்டி உற்பத்தியாளர்களிருக்கமாட்டார்களாகையால் உள்ளியல்பான போட்டியினின்றும் (potential competition) அவர் விடுபட்டவராக இருப்பார். இவைகள் யாவும் கோட்பாட்டளவில் இருப்பனவாகும். நடைமுறையில், ஒரேவிதப் பண்டத்தை உற்பத்தி செய்பவர்கள் பலராக இருக்கின்றனர்; எண்ணற்றவர்களாக இருப்பதில்லை. இதன் விளைவாக அவ் வுற்பத்தியாளர்களில் ஒவ்வொருவரும் தன்னுடைய உற்பத்தியளவில் மாற்றங்களை ஏற்படுத்துவதன்மூலம் மொத்த அளிப்பில் முக்கியமான மாறுதல்களை ஏற்படுத்தக்கூடும்; இதன் விளைவாக விலையில் புலனுகுமளவிற்கு மாற்றத்தை விளைவிக்க முடியும். அதே சமயத்தில் ஓரளவு போட்டியும் இருக்குமாதலால், தொழிலின் சமநிலையினையும் (equilibrium of the industry) தனி நிறுவனத்தின் சமநிலையினையும் கணக்கில் கொள்ளவேண்டும்.

தேவைப் பகுதியில் (on the demand side) ஒரு குறிப்பிட்ட பொருளின் பல்வேறு வாணிபச் சின்னங்கள் (brands) அல்லது வகைகள் காணப்படுவதால் போட்டி, சர்வாதீனம் ஆகியவற்றின் மூலக்கூறுகள் காணப்படுகின்றன; இவைகள் தனிப்பட்ட தன்மைகளையுடையனவாக இருப்பினும், அவை ஒன்றுக்கொன்று நெருங்கிய பதிலிப்பொருள்களாகவே இருக்கின்றன. நுகர்வோர்கள் ஒரு தொழிலிலுள்ள பல்வேறு நிறுவனங்களின் பொருள்களை எல்லா வகையிலும் ஒருமித்தனவாகக் கருதுகின்றனர் என்னும் எடுகோளின் அடிப்படையில்தான் நிறைவுப் போட்டியானது (perfect competition) அமைந்துள்ளது. ஆனல், நடைமுறை உலகத்தில் விளம்பரத்தினலும் வணிகச் சின்னங்களாலும் பெரும்பாலான பண்டங்களின் நுகர்வோர்கள் (சரியாகவோ அல்லது தவருகவோ) A கம்பெனியின் மின்விளக்குக் குமிழ்கள் (bulbs) B கம்பெனியின் மின்விளக்குக் குமிழ்களினின்றும் வேறுபட்டனவாக (இந்த இரண்டு வணிகச் சின்னங்களும் பருப்பொருளியலாக ஒத்த பொருளேயே குறிப்பதாக இருப்பினும்) உள்ளனவென்று கருதும்படி செய்யப்படுகின்றனர். மற்றொருபுறம், தூய சர்வாதீனமானது C கம்பெனியின் பொருளுக்கு நெருங்கிய ஒரு பதிலிப் பொருள் இல்லை என்பதை வற்புறுத்தினும், அதே சமயத்தில் D, E கம்பெனிகளின் பொருள்கள் அநேகமாக ஏறக்குறைய நெருங்கிய பதிலிப் பொருள்களாக இருக்கின்றன. எனவே, தற்காலப் பொருளாதாரமானது, சர்வாதீனம் ஒரு பகுதியும் போட்டி ஒரு பகுதியும் கலந்ததாக இருக்கின்றது. ஒருவிதத்தில், ஒவ்வோர் உற்பத்தியாளரும் தனது சொந்தப் பொருளில் சர்வாதீனத்தையுடையவ

ராகவே இருக்கின்றனர் (கம்பெனி A ஆனது 'A வணிகச் சின்னத்தின்' மின்விளக்குக் குமிழ்களை அளிக்கும் ஒரே அளிப்போராகும்); ஆனால், இவை ஒவ்வொன்றும் நுகர்வோர்கள் ஏறக்குறைய நெருங்கிய பதிலிப் பொருள்கள் என்று கருதுகின்ற அதே பண்டத்தின் மற்ற வணிகச் சின்னங்களால் (வணிகச் சின்னங்களைத் தாங்கியுள்ள பண்டங்கள்) போட்டியினைச் சமாளிக்கவேண்டியுள்ளது.

நடைமுறை வாழ்க்கையில், போட்டியிடும் விளம்பரங்களைக் கையாண்டு(அல்லது முக்கியமாக 'விற்கும் சாதனங்களான'—selling devices—இலவசப் பரிசுச்சீட்டுகள்—free gift vouchers—போட்டிகள், தானியப் பொரி சிப்பங்களில் உள் வைக்கப்படும் எதிர்பாராத பரிசுகள் இன்னோரன்ன சாதனங்கள்) அவைமூலம் வாடிக்கைக்காரர்களைக் கவர்வது, நிறைகுறைப் போட்டியுள்ளமையை உணர்த்துவதாக உள்ளது. இத்தகைய நிகழ்ச்சி நிறைவுப்போட்டியிலோ அல்லது தூய சர்வாதீனத்திலோ ஏற்பட முடியாது. நிறைவுப்போட்டியில் உள்ள ஒரு விற்பனையாளர், தான் போட்டி விற்பனைத் தீவிர நடவடிக்கைகளைக் கையாளுவதால், எந்தவித இலாபத்தினையும் பெற்றுவிட முடியாது. ஏனெனில், நிறைவுப் போட்டியின் இலக்கணப்படி அவருடைய பொருளானது அவருடன் போட்டியிடுகின்ற அதிகமான எண்ணிக்கையுடைய போட்டியிடும் உற்பத்தியாளர்களின் பொருள்களையொத்தே இருக்கும். ஆகவே, போட்டி விற்பனைத் தீவிர நடவடிக்கையைக் கையாளுவதால், அந்த உற்பத்தியாளருக்கோ அல்லது அவருடைய போட்டியாளர்களுக்கோ எந்தவித நன்மையும் ஏற்படுவதற்கில்லை. எனவே, இத்தகைய போட்டி விற்பனைத் தீவிர நடவடிக்கைகளைக் கையாளுதல் பொருளற்றதாகவேயிருக்கும். மற்றொருபுறம், தூய சர்வாதீனருக்கு விளம்பரம் செய்யவேண்டிய தேவையேயில்லை; அவருடைய பண்டத்திற்கு அவர் ஒருவரே அளிப்போராவர் (sole suppliers); பல்வேறு விற்பனை முறைகளைக் கையாண்டு தமது போட்டியாளர்களைக் கவிழ்க்க வேண்டிய அவசியமும் அவருக்கில்லை. எனவே, தேவையின் நிமித்தம், ஒரு தொழிலில் போட்டி விளம்பரங்களும் பண்ட வேறுபாடு காட்டுதலும் இருப்பதானது, அங்கு நிறைகுறைப் போட்டி இருப்பதை உணர்த்துகின்றது. இவைகள் எந்த ஒரு தொழிலிலும் இல்லாமலிருப்பதில்லையாகையால் நிறைகுறைப் போட்டி ஆய்வானது நடைமுறை உலகத்திற்கு மிக நெருங்கியுள்ள ஒன்றாக இருக்கிறது.

## 2. அங்காடிச் சமநிலை (Market Equilibrium)

நிறைகுறைப் போட்டியானது, சர்வாதீனம், நிறைவுப் போட்டி ஆகிய இவ்விரண்டின் தன்மைகளையும் உடையதாக இருப்பதால்,

நிறைகுறைப் போட்டியின் கீழுள்ள அங்காடிச் சம நிலையைப் பற்றிய ஆய்வானது, சர்வாதீனச் சமநிலைக்கான உறுபொருள்களை யும், நிறைவுப் போட்டிச் சமநிலைக்கான உறுபொருள்களையும் சம்பந்தப்பட்டுள்ளதென்பதை இது உணர்த்துகிறது. தனி நபரின் நிறுவனத்தின் குறைந்து செல்லும் விற்பனைக் கோடானது. (falling sales curve) சர்வாதீன ஆய்வினின்றும் எடுத்தாளப்பட் டுள்ளது; நிறைவுப் போட்டியின்கண் உள்ள உற்பத்தியாளரைப் போலன்றி, நிறைகுறைப் போட்டியின்கீழ் (under imperfect competition) செயல்படுகின்ற தொழில்முயல்வோர், தன்னுடைய கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்ட சக்திகளால் நிர்ணயிக்கப்படும் ஒரே ஒரு விலையைச் சமாளிப்பதற்குப் பதிலாகப் பல்வகையான அங்காடி விலைகளைச் (a range of prices) சமாளிக்கின்றார். அவர் தனது விலையை அதிகரிப்பாரானால், தனது வாடிக்கைக்காரர்களில் சிலர், தாம் ஏறக்குறைய நெருங்கிய பதிலிப்பொருள்கள் என்று கருதப் படுவனவற்றை வாங்கத் தலைப்படுவர். இவ்வாறு அவர்கள் பதிலிப் பொருள்களுக்கு விருப்பத் தரத்தினை அளிப்பதற்குக் காரணம் அவ் வுற்பத்தியாளரின் பொருளானது ஒப்பீடாக விலை அதிகமாகச் சென்றமையே. மற்றொருபுறம், அவ் வுற்பத்தியாளர் தனது எல்லா வாடிக்கைக்காரர்களையும் இழந்துவிட மாட்டார்; இதற்குக் காரணம், அவரது வாடிக்கைக்காரர்களில் சிலர் அவரது குறிப்பிட்ட வணிகச் சின்னத்தைத் தாங்கிய பொருளையே வாங்கவேண்டுமென்ற ஒரு விருப்பத் தரத்தினை (அப் பண்டத்தின் விலை ஒப்பீடாக அதிகமாக இருந்தபோதிலும்) அளிக்கக்கூடும்.

கடத்துச் செலவுகளே (transport costs) இத்தகைய ஒரு சூழ் நிலையில், முக்கியமானதொரு காரணியாக இருக்கின்றது. ஒரே வகையான பண்டங்கள் சமீபத்திலும், தூரமான இடங்களிலும் விற்கப்படுமானால், வாடிக்கைக்காரர்கள் சமீபமாகவுள்ள அளிப்போ ரிடமே அப் பண்டங்களை வாங்குவதை விரும்புவர். மேலும், அப் பண்டங்களுக்கு அப் பண்டங்களின் போட்டிப் பண்டங்களுக்கு என்ன விலையோ அதைவிட அதிகமாகக் கொடுக்கவும் முன்வரக்கூடும்; தங்களது வாடிக்கையை வேறு இடத்தில் மாற்றிக்கொள்வதில் ஏற்படும் பணச் செலவு, அல்லது முயற்சி ஆகியவற்றை ஏற்பதற்குப் பதிலாக இவ்வதிகமான விலையை அவர்கள் பொருட்படுத்தமாட் டார்கள். ஒரு பண்டத்தின்மீது தாம் வைத்துள்ள நல்லெண்ணம் (goodwill) என்றும் புலனாகாத, ஆனால், வலிமைமிக்கதொரு சக்தியினா லும் (intangible but powerful force) அப் பண்டத்தின் ஒப்பீடான விலையில் அதிகரிப்பு ஏற்பட்டபோதிலும் அதனை அவர்கள் பொருட் படுத்துவதில்லை; வாடிக்கைக்காரர்கள், ஒரு குறிப்பிட்ட விற்பனை யாளரிடமே தம் வாடிக்கையை வைத்துக்கொள்வதற்குக் காரணம்

பழக்கம் அல்லது தொன்றுதொட்ட வழக்கமாகவும் (tradition), அல்லது உற்பத்தியாளரிடம் தாம் கொண்டுள்ள சொந்தத் தொடர்பு, சமூக உறவு காரணமாகவும் இருக்கக்கூடும்.

இக் காரணங்களில் எந்த ஒரு காரணத்தாலும் நிறைகுறைப் போட்டியின்கண் உள்ள (imperfect competition) ஓர் உற்பத்தியாளர் தனது போட்டியாளருக்கு ஒப்பீடாகத் தனது பொருளின் விலையை அதிகரிக்கும்போது, நிறைவுப் போட்டியில் இழப்பதுபோல், தனது எல்லா வாடிக்கைக்காரர்களையும் இழந்துவிடுவதில்லை. இதைப் போன்றே, அவ் வுற்பத்தியாளர், தனது பொருளின் விலையைக் குறைத்து விற்பதன்மூலம் தனது போட்டியாளரிடம் ஏற்கெனவே வாடிக்கைக்காரர்களாக இருக்கின்ற அனைவரையும் தன்பால் ஈர்த்துவிடுவதில்லை; ஒருசிலரையே அவ்வாறு ஈர்க்கமுடியும். எனவே, நிறைகுறைப் போட்டியிலுள்ள ஒரு நிறுவனமானது, சர்வாதீனத்தில் உள்ளதைப்போன்று, தனது பொருளுக்குக் குறைந்து செல்லும் விற்பனைக் கோட்டை (falling sales curve) உடையதாகவே இருக்கிறது. நிறைவுப் போட்டியில் செயல்படுகின்ற ஒரு நிறுவனத்தைப் போன்று படுகிடை விற்பனைக் கோட்டினையுடையதாகவும் இருப்பதில்லை.

சர்வாதீனத்தைப் போலன்றி, நிறைகுறைப் போட்டியில் அங்காடிச் சமநிலையானது (market equilibrium under imperfect competition) தொழிலிலும் தனிப்பட்ட நிறுவனத்திலும் (individual firm) உள்ள சமநிலைச் சூழ்நிலைகளைப் பொறுத்தேயுள்ளது. சர்வாதீனருக்குத் 'தொழிலில் சமநிலை' என்னும் பிரச்சினையே எழுவதில்லை; சர்வாதீன நிறுவனம் தொழில் முழுமையையும் குறிப்பதால் அந் நிறுவனம் சமநிலையிலிருந்தால் அதுவே தொழிலின் சமநிலையையும் குறிக்கும். இந்த ஒரு வகையில் பார்க்கும்போது, நிறைகுறைப் போட்டியின் நிலையானது (the situation of imperfect competition) சமமானதாக இருக்கிறது. நெடுங்கால அங்காடிச் சமநிலைக்கு (long run equilibrium) ஒவ்வொரு தனிப்பட்ட உற்பத்தியாளரும் சமநிலையில் இருந்தால்மட்டும் போதாது; தொழிலில் நாடு முழுவதற்குமான இயல்பான மட்டத்தைவிட அதிகமாக (அல்லது குறைவாக) இலாபங்கள் பெறப்படும்போது நிறுவனங்கள் தடையின்றி நுழைவதற்கான அல்லது வெளியேறுவதற்கான சூழ்நிலையிருக்கவேண்டும். இத்தகைய சூழ்நிலையில் தொழில் எப்போது சமநிலையிலிருக்குமெனில், அத் தொழிலிலுள்ள பல நிறுவனங்கள் மாற்றம் எதனையும் நாடாமலிருக்கின்றபோதுதான் எனக் கூறலாம். (ஆனால், தொழிலில் உள் நுழைவதற்கான தன்னுரிமை இல்லையெனில், அதிலுள்ள நிறுவனங்கள் இயல்பு மீறிய அதிக இலாபங்

களை அடைவது உறுதி எனலாம். ஆயினும், இந்த ஒரு கட்டத்தில் நடைமுறையில் ஏற்படக்கூடிய ஒவ்வொரு வகை நிலையையும் எடுத்து விளம்ப முற்படுவது தேவையற்றதாகும்.)

நிறைகுறைப் போட்டியில் சமநிலை இருப்பதற்கு, நிறைவுப் போட்டியிலுள்ளதைப் போன்றே இருவகையான நிபந்தனைகள் இருக்கவேண்டும். அவை நிறுவனத்தில் சமநிலையும் தொழிலில் சமநிலையுமாம். நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல், நிறைவுப் போட்டிக்கும் சர்வாதீனத்திற்கும், நிறுவனமானது தனது இலாபங்களை அதிகபட்சமாக அடையும்போதுதான் சமநிலையை அடைகின்றது; ஏற்கெனவே நாம் பார்த்ததுபோல, இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை வருவாயும் (marginal cost and marginal revenue) சமமாக இருக்கும்போதுதான் நிறுவனமானது சமநிலையில் இருக்கமுடியும். தொழிலின் சமநிலைக்கான நிபந்தனையும் நிறைவுப் போட்டியில் உள்ளதைப் போன்றேயுள்ளது— அதாவது, அதில் நிலவும் இலாப மட்டமானது (prevailing profit level) சம்பந்தப்பட்ட எல்லாத் தொழில்முயல்வோர்களது இயல்பான இலாப மட்டத்திற்கும் (normal profit level) சமமாக இருக்கின்றது. இத்தகைய ஒரு நிலையானது சராசரிச் செலவும், சராசரி வருமானமும் சமமாக இருக்கும்போதே ஏற்படும். எனினும், நிறைவுப் போட்டியில் உள்ளதுபோலல்லாது, நிறைகுறைப் போட்டியில் இறுதிநிலை வருமானமும் (marginal revenue) சராசரி வருமானமும் (விலை) ஒருமித்தனவாக இருப்பதில்லை; ஏனெனில், இச் சூழ்நிலையிலுள்ள சர்வாதீன மூலக்கூறுகள் (monopolistic elements) தனி நிறுவனத்திற்குப் படுகிடை விற்பனைக் கோட்டைக் காட்டிலும் (horizontal curve) குறைந்து செல்லும் விற்பனைக் கோட்டையே நல்குவதாகவுள்ளன.

படம் 34-ல் இருவகையான சமநிலைகளுள்ள ஒரு சூழ்நிலை சித்திரிக்கப்பட்டுள்ளது. உற்பத்தியானது OM அளவாக இருக்கும்போது, இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை வருவாயும் சமமாக இருப்பதன் காரணமாக, நிறுவனத்தில் சமநிலை ஏற்படுகிறது. அதே சமயத்தில் தொழிலின் சமநிலையானது (equilibrium of the industry) சராசரிச் செலவும் சராசரி வருமானமும் சமமாக இருப்பதனுல் ஏற்படுவதாக இருக்கிறது. ஆனுல், இந்த இரு சமநிலைகளும் வசதியாக இவ்வாறு ஒரே உற்பத்தி மட்டத்தில் ஏற்படுவதற்குக் காரணம் என்ன? இதற்கு எளிதாக விடையிறுக்கலாம். இரு சமநிலைகளும் AC, AR ஆகிய இரு சராசரிக் கோடுகளும் ஒன்றையொன்று (N புள்ளியில் தொட்டுச் செல்வதுபோன்று) தொட்டுச் செல்வதாக உள்ளபோது மட்டுமே அவ்வாறு ஏற்படுகின்றன. AR என்னும்

கோடானது (விற்பனைக் கோடு) AC என்னும் கோட்டினை N என்னுமிடத்தில் தொட்டுச் செல்கிறதென்பதானது (tangent), அந்தப் புள்ளியில் இரண்டு கோடுகளின் சரிவுகளும் சமமாக இருக்கின்றன என்பதைக் குறிக்கின்றது. N புள்ளிக்கு இடப்புறமிருக்கும் எந்த ஒரு புள்ளியிலும் AC யானது ARஐ விட செங்குத்து அதிகமானதாகவேயிருக்கிறது; இதனால், இறுதிநிலைச் செலவானது இறுதிநிலை வருவாயைக்காட்டிலும் குறைவாகவே இருக்கவேண்டும் என்பதாகின்றது—அது சராசரி செலவைக் (இறுதிநிலை வருவாயானது சராசரி வருவாயைக் கீழ்நோக்கி இருக்கும்படி செய்வதைக் காட்டிலும் விரைவாக) கீழ்நோக்கி இருக்கும்படி செய்கின்றது. N-க்கு வலப்புறமிருக்கும் எந்த ஒரு புள்ளியிலும் AC என்னும் கோடானது ARஐக் காட்டிலும் செங்குத்தாக இருப்பது குறை




படம் 34

வாகவே காணப்படுகிறது. இது இறுதிநிலைச் செலவானது இறுதிநிலை வருவாயைவிடக் குறைவாகவே இருக்கவேண்டுமென்பதைக் குறிக்கின்றது—இது இறுதிநிலை வருவாயானது சராசரி வருவாயைக் கீழ்நோக்கி இருக்கும்படி செய்வதைக்காட்டிலும் விரைவு குறைவாகவே, சராசரிச் செலவைக் கீழ்நோக்கிக் கொண்டு செல்கின்றது. எனவே, சராசரி உற்பத்திச் செலவுக் கோட்டின் சரிவும், சராசரி வருமானக் கோட்டின் சரிவும் சமமாக இருக்கும் N என்னும் புள்ளியில், இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை வருவாயும் சமமாக இருக்கும். இந்தப் புள்ளியில்தான் சராசரி வருவாய்க் கோடு (average revenue curve)—அல்லது விற்பனைக் கோடு—சராசரி உற்பத்திக் கோட்டினைத் தொட்டுச் செல்கின்றது. இந்தப் புள்ளியில்தான் தேவையான இரட்டைச் சமநிலை நிபந்தனைகள் நிறைவேற்றப்படுகின்றன.

இத்தகைய ஒரு நிலைக்கும், நிறைவுப் போட்டியிலுள்ள நிலைக்குமிடையேயுள்ள இரண்டு வேறுபாடான நிகழ்ச்சிகள் கவனிக்கத்தக்கனவாகும். முதலாவதாக, நிறைகுறைப் போட்டியில் விலையானது சராசரி செலவிற்குச் சமமாக இருக்குமாதலால் அது இறுதி நிலைச் செலவைக்காட்டிலும் அதிகமாகவே யிருக்கும்; நிறைவுப் போட்டியில் விலையானது இறுதிநிலைச் செலவிற்குச் சமமாக இருக்கும். இரண்டாவதும், அதிக முக்கியமானதுமான நிகழ்ச்சி, நிறைகுறைப் போட்டியின்கண் சமநிலையிலுள்ள ஒரு நிறுவனத்தின் உற்பத்தி அளவானது சராசரிச் செலவுகள் மிகவும் குறைவாகவுள்ளதொரு நிறுவனத்தின் உற்பத்தி அளவைக் காட்டிலும் மிகவும் குறைவாகவே யிருக்கும். எனவே, அந் நிறுவனத்தின் உற்பத்தியளவானது இறுதிநிலைச் செலவானது இறுதிநிலை வருமானத்திற்குச் சமமாக இருக்கின்றதும், சராசரிச் செலவு சராசரி வருமானத்திற்குச் சமமாக இருக்கின்றதுமான தொடுபுள்ளியில் அமையும். நிறுவனத்தின் விற்பனைக் கோடானது (sales curve) கீழ்நோக்கிச் சரிவதாக இருப்பதால், அதன் ஒவ்வொரு புள்ளியிலும் இறுதிநிலை வருமானமானது சராசரி வருமானத்தைக்காட்டிலும் குறைவாகவே யிருக்கும். இதனால், படம் 34-ல் OM அளவு உற்பத்தியில் காட்டப்பட்டிருப்பதுபோன்ற இரட்டைச் சமநிலையானது (dual equality) அடையப்பெறும்போது, இறுதிநிலைச் செலவானது —இது இறுதிநிலை வருவாய்க்கும் குறைவானதாகவும், அத்தகைய இறுதிநிலை வருவாயானது சராசரி வருவாய்க்கும் குறைவானதாகவும் இருப்பதால்--சராசரிச் செலவைக் காட்டிலும் குறைவாகவே யிருக்கும். இதனால், உற்பத்தியின் சமநிலை மட்டத்தில் குறைந்து கொண்டே செல்லும். [இந்தப் புள்ளியைப் படம் 34-ல் எளிதாகக் கண்டுகொள்ளலாம். படம் 34-ல் N என்னுமிடத்தில் உள்ள தொடுமிடமே (tangency) அப் புள்ளியாகும். இத் தொடுமிடமானது AR ஆனது N-க்கு வலப்புறமாகக் குறைந்து செல்லாதிருக்கும்போது ஏற்படும் குறைந்து செல்லும் விற்பனைக் கோட்டில் உள்ளது.] உத்தம உற்பத்தி அளவு மட்டம் (optimum level of output) என்பது பண்டங்கள் மிகக் குறைந்த சராசரி உற்பத்திச் செலவில் உற்பத்தி செய்யப்படுகின்றதொரு நிலையைக் குறிக்குமாதலால், நிறைகுறைப் போட்டியிலுள்ள நிறுவனமானது நிரந்தரமாக உத்தம அளவு உற்பத்திக்கும் குறைவாகவே உற்பத்தியைச் செய்துவரும்.

நிறைகுறைப் போட்டியிலுள்ள சமநிலைக்கும் சர்வாதீனத்திலுள்ள சமநிலைக்கும் ஒரு வேறுபாடு உண்டு. சர்வாதீனரானவர் பொருளாதார நிலை முழுவதிலுமுள்ள இயல்பான இலாப மட்டத்தைக் காட்டிலும் உச்சமான இலாபத்தைப் பெறுகின்றாராதலால், அவரை நோக்கியுள்ள தேவையானது நெகிழ்வற்றதாக இருக்க

இயல்பான இலாபங்களைக்காட்டிலும் சர்வாதீன இலாபத்தின் அதிகரிப்பானது அதிகரித்துக்கொண்டே செல்லும். நிறைகுறைப் போட்டியின்கீழ் இலாபங்கள் இயல்பு கடந்தனவாக இருப்பதில்லை; புதிய நிறுவனங்கள் தொழிலில் உட்புகுவது இயலுகின்ற வரையில் அவைகள் இயல்பு கடந்த இலாபங்களைத் தடை செய்யக்கூடியனவாக இருக்கும். அதேபோன்று இலாபங்கள் இயல்பான மட்டத்திற்கும் குறைவாக இருக்குமேயாகில் நிறுவனங்கள் தொழிலைவிட்டு விலகும்.

### 3. நிறைகுறையான போட்டியின்கண் உள்ள சமநிலையின் முக்கியத்துவம் (The Significance of Imperfectly Competitive Equilibrium)

இந்த ஆய்வானது நிறைகுறைப் போட்டியின்கீழுள்ளதொரு தொழிலில் உள்ள ஒருவகை நிலையைத் தெளிவாக விளக்குவதாக உள்ளது. ஒவ்வொரு நிறுவனமும் இயல்பான இலாபத்தை மட்டுமே ஈட்டுவதாக இருக்கும். ஆனால், நிறுவனங்கள் ஒவ்வொன்றும் மிகச் சிறிய அளவு உற்பத்தியையே செய்வதால் பேரளவுச் சிக்கன நலன்கள் முழுமையையும் அடைய முடியாதனவாக இருக்கும். மேலும், தொழில் முழுவதிலும் பல்வேறு வணிகச் சின்னங்களைத் தாங்கிய தனிப்பட்ட பொருள் பல உற்பத்தி செய்யப்படுவதால், ஒவ்வொரு நிறுவனமும் ஏதாவது ஒருவகையில் பயன்படுத்தப்படாத திறனை (unused capacity) தன்னகத்தே வைத்துக்கொண்டிருப்பதாக இருக்கும்.

இதனால், நிறைகுறைப் போட்டியில் கணிசமான அளவிற்கு விரயங்கள் (substantial wastes) ஏற்படுகின்றனவென்பது தெளிவாகின்றது. ஒருபுறம், நேரடியானவையும் தெற்றெனவுமாக விளங்குகின்ற போட்டி விளம்பரம் (competitive advertisement) என்னும் விரயங்களும், இன்னும் பிற 'விற்பனை' வழிகளின் விரயங்களும் ஏற்படுகின்றன. பொதுவாகப் பண்டங்கள் எல்லா முக்கிய அம்சங்களிலும் ஒரே மாதிரியாக இருப்பினும், அவற்றை உற்பத்தி செய்யும் நிறுவனங்கள் தங்களது சாதனங்களை—உழைப்பு, கச்சாப் பொருள்கள் ஆகியவற்றை—தங்களின் போட்டி நிறுவனங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களினின்றும் நுகர்வோர்களைப் பிரித்துத் தம் பொருள்களின்பால் ஈர்க்கும் நோக்கத்துடனே செலவிடுகின்றன. இத்தகைய ஒரு விற்பனை முறையை எல்லா நிறுவனங்களுமே கையாளுவதால், போட்டி முயற்சிகள் பெரும்பாலும் ஒன்றையொன்று சரிக்கட்டிக்கொள்வதாக இருக்கின்றன. கடைசியில், இதனால், விற்பனை வளர்ச்சிப் பணியில் ஈடுபட்டிருப்பவர்களைத்

தவிர்த்து, வேறு ஒருவரும் பயன் அடைவதாக இல்லை. சாதனங்களைச் செலவிடுதல் முற்றிலுமே இத்தகைய ஒன்றுக்கொன்று சரிக்கட்டிக் கொள்ளும் முறையினால் விரயம் செய்யப்படவில்லையெனினும், இந்த வகையில் அச் செலவிடுதல் மற்றோர் உற்பத்தியாளரை நஷ்டத்திற்காளாக்கி ஓர் உற்பத்தியாளரை இலாபமடையச் செய்வதாக இருப்பதால், உற்பத்தியாளர் முழுமைக்கும் கணக்குப் பார்க்கும் போது நிகரமான இலாபமெதுவும் இருப்பதற்கில்லை. இந்தவகையில் எல்லாம், நுகர்வோரே நஷ்டமடைபவராக இருக்கின்றனர். இன்னோரன்ன விற்பனைச் செலவுகளை யெல்லாம் சமாளிக்கும்பொருட்டுச் சம்பந்தப்பட்ட பொருளின் விலையானது போதிய அளவிற்குக் கூடுதலாகவே யிருக்கின்றது. செல்வத்தை உண்டுபண்ணுவதற்குப் பயன்படுத்தத்தக்க இத்தகைய ஆக்கச் சாதனங்கள் (productive resources) வீணான முறையில் விரயமாவதால் சமூக முழுமையுமே நஷ்டத்திற்காளாகின்றது.

எனினும், விளம்பரங்கள் அனைத்தையுமே விரயமானவையென்றும் சமூகத்தில் வேண்டப்படாதனவென்றும் கூறிவிட முடியாது. காலத்திற்கேற்ற நவீனத்தையும் வளர்ச்சியையும் உடைய உலகத்தில், விற்பனை வழிமுறைகள் (selling techniques) அறிவு புகட்டுவதான முக்கியமான ஒரு பணியினைப் புரிகின்றன. விளம்பரங்கள் நுகர்வோருக்கு, பதிலிப் பொருள்கள் இருப்பதையும், பண்டங்களின் புதிய பயன்படுத்து முறைகளையும், அல்லது அங்காடியின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள விலைகளைப்பற்றியும் எடுத்துக் கூறுவதனால் நுகர்வோர் தமது வரையறுக்கப்பட்ட வருமானத்தில் உச்சமான மனநிறைவை அடைவதற்கான வழிவகையினைச் செய்கின்றன. புதிய பொருள்களை உற்பத்தி செய்யும் உற்பத்தியாளர்கள், அப் பொருள்களைப்பற்றி நவீன விற்பனை முறைகள் பலவற்றாலும் நுகர்பவர்களின் கவனத்திற்குக் கொண்டுவந்து அவைகளிடம் அவர்களுக்குச் சுவையினை ஏற்படுத்தாது போனால் உண்மையில் அவைகளை அங்காடியில் நன்கு விற்க முடியும் என்று நினைத்தற்குமியலாது. இத்தகைய சூழ்நிலைகளில் விற்பனைச் செலவுகள் (selling costs) மொத்த உற்பத்திச் செலவுகளில் (total production costs), உழைப்பு (labour) அல்லது முதல் போன்ற அவசியமான உறுபொருளாகவே (element) இருக்கின்றன. ஆனால், இவ்வாறு கல்வி புகட்டுவதாக உள்ள விளம்பரங்கள் தற்காலத்தில் விளம்பரங்களில் ஒரு சிறு விகிதமேஉள்ளன. விளம்பரங்களில் பெரும் பகுதியும் போட்டி விளம்பரங்களாகவே உள்ளன; இவைகள் நுகரும் பொதுமக்களை (consuming public) எதிரி உற்பத்தியாளர்களிடமிருந்து கைப்பற்றுவதற்காகவே திட்டமிடப்பட்டு (நுகர்வோர்களின் மனநிலையைப் பக்குவமாக அடிமைப்படுத்துவதன்மூலம்)

சுரண்டுவதாக உள்ளன. குறைந்த விலைகளால் அல்லது உயர்ந்த தரத்தால் நுகர்வோர்களைக் கவர்வதற்குப் பதிலாக விளம்பரங்கள் மூலம் அவர்களைக் கவர்வதற்காகவே இத்தகைய போட்டி விளம்பரங்கள் கையாளப்படுகின்றன.

நிறைகுறைப் போட்டியின் விளைவாக ஏற்படும் இரண்டாவது வகையான விரயமும் திறமையின்மையும் பொதுமக்களின் கண்களுக்கு அவ்வளவு தெளிவாகப் புலப்படுவதில்லை; ஆனால், இவை அதிகமான அளவிலேயே காணப்படுகின்றன. இத்தகைய விரயத்திற்குக் காரணம் ஒவ்வொரு தொழிலிலும், உத்தம உற்பத்தி அளவிற்கும் (optimum output) குறைவாக உற்பத்தி செய்கின்ற நிறுவனங்கள் மிக அதிகமாக இருப்பதுவே. இது நிறைகுறைப் போட்டியில் தவிர்க்க முடியாத ஒரு விளைவென்பதை இந்த ஆய்வானது, உணர்த்துகின்றது. உற்பத்தியானது, தொழிலியல் முறைக்குத் தேவையான குறைந்தபட்ச உற்பத்திச் செலவை அதிகமான சராசரிச் செலவில் உற்பத்தி செய்யப்படும்போது சமூக முழுவதற்குமே அது ஒரு சுமையாகும். போட்டியிடுகின்ற நிறுவனங்களின் எண்ணிக்கை குறைக்கப்பட்டு அதே அளவு உற்பத்தியானது உத்தம அளவில் உற்பத்தி செய்யும் நிறுவனங்களால் அளிக்கப்படும்போது, சராசரி உற்பத்திச் செலவுகள் (average production costs) குறைக்கப்படும். அதாவது, சாதனங்கள் சமூகச் செல்வத்தினை இன்னும் கூடுதலாகச் செய்யும் பணியில் தாராளமாக ஈடுபடுவதற்கு இது வழிவகை செய்யும். சர்வாதீனக் கூறுகள் (monopolistic elements) தூய சர்வாதீன வடிவத்திலோ, அல்லது நிறைகுறைப் போட்டி வடிவத்திலோ, எங்கு இருப்பினும் உற்பத்திச் செலவுகள் குறைந்தபட்சச் செலவைக்காட்டிலும் இயன்றவரை அதிகமாகவேயிருக்கும்; இதனால் சமூகம் ஏற்கெனவே உள்ளதைக் காட்டிலும் வறியதாகச் செல்லக்கூடும்.

இவற்றையெல்லாம் கூறி முடித்த பின்னர் இரு வரையறைகளைப்பற்றிக் கூறவேண்டும். முதலாவது தகுதி யாதெனில், நுகர்வோரது மனநிறைவிற்கு மிக முக்கியமானது அவர்கள் எதை விரும்புகின்றனரோ அதனைப் பெறுவதேயாகும். பிறர் (அவர்கள் என்னதான் பரிவு உள்ளமும், ஆழ்ந்த அறிவினைப் படைத்தவர்களாகவும் இருந்தபோதிலும்) நுகர்வோர்கள் எவற்றை விரும்பவேண்டும் என்று நினைப்பதைப் பெறுவதில், நுகர்வோர்களுக்கு மனநிறைவு ஏற்படாது. தொழிலியல் கண்கொண்டு நோக்கும்போது, நிறைவுப் போட்டியைக் கொண்டுள்ள ஓர் உலகமே சிறந்ததாகையால், அதனை அமைக்க முயல்வதே சமுதாயத்திற்குக் குறிக்கோளானதென்று புலப்படுகின்றது; இந்தகைய ஒரு

நிறைவுப் போட்டியில், உற்பத்தியாளர்கள், குறைந்தபட்சச் சராசரிச் செலவில் (minimum average cost) தங்களது உற்பத்தியைச் செய்து வருவதோடு ஒருமித்த பண்டங்களையே அளிக்கின்றனர். ஆயினும், நுகர்வோர்களில் பெரும்பான்மையினர் பல்வேறு வணிகச் சின்னங்களைத் (brands) தாங்கியுள்ளனவும், ஒவ்வொன்றும் தனிப்பட்ட சொந்தமான தன்மைகளை யுடையன வாகவும் (அல்லது அவ்வாறு தனித்தன்மை வாய்ந்தன என்று நம்பவைக்கத் தகுந்தனவாகவும்) உள்ள பண்டங்களையே விரும்பு கின்றனர். நுகர்வோரின் கண்கொண்டு பார்க்குமிடத்து இவ்வாறு வணிகச் சின்னங்களைக் கடைப்பிடித்தலானது பெரும் பலனை அளிக்க வல்லதாகவேயிருக்கின்றது. ஒரு சிப்பம் X சோப்பையோ அல்லது Y சாக்லெட்டில் ஒரு பாளத்தையோ கேட்டு வாங்குவது மிகவும் எளிதாக இருக்கின்றது. அதுமட்டுமன்று. இவ்வாறு, குறிப்பிட்ட சின்னங்களைத் தாங்கியுள்ள பண்டங்களைக் கேட்டு வாங்கிக் கொள்ள இயல்வதுடன் அவை இன்ன தன்மையைப் பெற்றிருக்கும் என்று நிச்சயமாகவும் இருக்கமுடியும். இதை விடுத்து, சமூகம் பெற விழைகின்ற நிறைவுப் போட்டிக்கு மிக நெருங்கியுள்ள ஒரு நிலையில் பெயரிடப்படாதனவும் கடைக்குக் கடை தன்மையிலும் அமைப்பிலும் எண்ணற்று வேறுபட்டுமிருக்கும் பல்வகைப் பொருள் களைத் தேர்ந்தெடுப்பதென்பது அத்துணை எளிதான செயலன்று. ஒரு குறிப்பிட்ட வணிகச் சின்னத்தைத் தாங்கியுள்ள பண்டத்தை நம்பி எந்த இடத்திலும் ஒரே விலையினைக் கொடுத்து வாங்கிக் கொள்ளுதல் வசதியாகவே இருக்கிறது. யாவற்றிற்கும் மேலாக, மனித இனமானது பல்திறப்பட்ட சுவையில் மன நிறைவைப் பெறுவதாகவுள்ளது. மக்களில் பலர் ஃபோர்டு கார்கள், மாரிஸ் (Marris)கார்கள் முதலியவற்றைக் குறிப்பிட்டுத் தேர்ந்தெடுத்துத் தாம் விரும்பிய கார்களுக்கு அதிக விலை கொடுத்து வாங்கவும் தயாராக இருக்கின்றனர். இதனை விடுத்து விலை குறைவாக உள்ள ‘மக்கள் காரினை’ யாவரும் ஒரே மாதிரியாக வாங்கிப் பயன்படுத்துவதை விரும்பவில்லை. ஆயின், மக்கள் எந்த அளவிற்குப் பல்வகைச் சுவை யினை விரும்புகின்றனர்? அதனைப் பெறுவதற்கு எந்த அளவிற்குப் பணம் கொடுக்கத் தயாராக இருக்கின்றனர்? அவர்கள் நவீன விற்பனைத் தொழில் முறைகளால் (slick techniques of modern salesmanship) அவ்வாறு பல்சுவையை விரும்புமாறு செய்யப்படு கின்றனரா? வணிகச் சின்னத்தை ஏற்படுத்துவதன்மூலம் கிடைக்கக்கூடிய இலாபம் அதன் செலவைச் சமாளிக்கவல்லதாக இருக்கின்றதா? குறிக்கோளானதோர் ஆய்வு முறைக்கு (objective analysis) இத்தகைய கேள்விகள் பொருத்தமானவையல்ல. நுகர் வோர்தான் இதனைத் தேர்ந்தெடுக்கவேண்டுமேயல்லாது, இதனைக் கருதுவதும், தேர்ந்தெடுப்பதும் பொருளாதார விற்பன்னரின் வேலை

யாகாது. அவருடைய வேலையெல்லாம் அவ்வாறு தெரிதலில் உள்ள பலாபலன்களைக் குறிப்பிடுவதேயாம்.

நிறைகுறைப் போட்டியில் விரயம் ஏற்படுகிறதென்ற பொதுவான குற்றச்சாட்டிற்கு இரண்டாவதான வரையறையும் ஒன்றுண்டு. சென்ற அத்தியாயத்தில், சர்வாதீனச் சூழ்நிலைகளில் நிறைவுப் போட்டியிலிருப்பதைவிட விலை அதிகமாக இருக்கும் என்னும் கருத்து ஏற்கத் தகுந்ததன்று என்பதனைப் பார்த்தோம். சர்வாதீனருக்குப் பேரளவு உற்பத்தி சிக்கன நலன்கள் (economies of scale) கிட்டக்கூடுமாகையால் நுகர்வோருக்கு, வேறு எந்த முறையைக்காட்டிலும் குறைவான விலையில் பண்டங்களை அளித்தல் சாத்தியமாகும். நிறைகுறைப் போட்டியிலும் இத்தகைய ஓர் எச்சரிக்கை (a similar warning) பொருத்தமானதாகவேயிருக்கிறது. நடைமுறை உலகத்தில் பேரளவு உற்பத்திச் சிக்கன நலன்கள் கணிசமான அளவிற்குக் கிடைக்குமானால், ஒரு பண்டத்திற்கான அங்காடித் தேவை முழுவதும் குறைந்த எண்ணிக்கையுள்ள நிறுவனங்களினால் (அவை ஒவ்வொன்றும் பேரளவு உற்பத்தியைச் செய்வதன்மூலம்) பூர்த்தி செய்யப்படக் கூடும். தொழிலானது சிறு நிறுவனங்களை ஏராளமாகக் கொண்டுள்ள ஒரு நிறைவுப் போட்டிச் சூழ்நிலையிலிருக்குமானால், அதிலுள்ள நிறுவனங்களில் எந்தவொரு நிறுவனமும் பூரணப் பேரளவு உற்பத்திச் சிக்கன நலன்களை அடையும் அளவிற்குப் போதிய உற்பத்தியைச் செய்வதில்லை. அதிகமான அளவு போட்டியினால் நுகர்வோர் பெறுகின்ற இலாபமானது, இவ்வாறு தேவையற்ற அதிகமான உற்பத்திச் செலவுகளைச் சமாளிக்கும்பொருட்டு அதிக விலை கொடுப்பதனால் ஏற்படும் நஷ்டத்தைக்காட்டிலும், குறைவாகவே இருக்கும். எனவே, சிக்கலான பிரச்சினைகளைக்கொண்ட உலகத்தில், போட்டியானது நிறைகுறையாக இருக்கும்பட்சத்தில் அத்தகையதொரு சூழ்நிலையே, சமூகம் அடையும் பயனை எண்ணிப் பார்க்கும்போது, வெறுக்கத் தகுந்தது என்று முடிவு செய்வது அறிவீனமென்றே புலப்படுகின்றது.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்


Robertson, *Lectures on Economic Principles*, Vol. I, Ch. XI.

Ryan, *Price Theory*, Chs. 10-11.

*Robinson, *The Economics of Imperfect Competition*, Chs. 11-14.

Chamberlin, *The Theory of Monopolistic Competition*, Chs. IV, V & IX.

R. Triffin, *Monopolistic Competition and General Equilibrium Theory* (Harvard University Press, Cambridge, 1941).

# 14. விலை அமைப்பு
# (The Price Mechanism)

## 1. சாதனங்களின் பங்கீடு (Allocation of Resources)

குறிப்பிட்ட சில பண்டங்களை வெற்றிகரமாக உற்பத்தி செய்வதில் சில சமயங்களில் பிரம்மாண்டமான தொழிற்சாலைகளை வைத்து நடத்துகின்றவர்களும், ஆயிரமாயிரம் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்தி வேலை வாங்கக்கூடிய ஆற்றல் படைத்தவர்களுமாகிய தேர்ச்சிமிக்க தொழில் முயல்வோர்களைக் காண்கின்றோம். இத்தகைய மனிதர்கள் உண்மையில் அபார ஆட்சித்திறன் படைத்தவர்களாக இருப்பர்; ஒரு பண்டத்தின் பல்வேறு பகுதிகளைப் பல்வேறு வேகத்திலும், பல்வேறு நேரத்திலும், பல்வேறு இடங்களிலும் செய்து முடிக்கும் பல்திறப்பட்ட ஆற்றல் படைத்தவர்களை ஒருங்கிணைத்துத் திறம்பட வேலைவாங்கும் ஆற்றல் மிகவும் கடினமானதொன்றேயாகும். கோவைநாடாக்களிலிருந்து (assembly lines) உற்பத்தி முடிவடைந்து வெளிவரும் ஒவ்வொரு குளிர்சாதனப் பெட்டியும் (refrigerator) அல்லது மோட்டார்காரும், அல்லது தொலைக்காட்சிப் பெட்டியும் (television set) ஆட்சித்திறன், தொழில் நுட்பத்திறன் ஆகியவற்றின் அற்புத விளைவுகளே.

மிகவும் சிக்கலான ஒரு பொருளாதார அமைப்பில் ஒவ்வோர் ஆண்டிலும் எண்ணற்ற தேவைகள் எண்ணற்ற பண்டங்களால் நிறைவேற்றப்படுகின்றன. இப்பண்டங்களோ மிகவும் அதிகமான தொழில் திறனால் செய்யப்படுகின்றன. இவை யாவற்றிற்கும் நிலைக்களனாகப் பொருளாதார அமைப்பு இயங்குவது வியப்பானதொன்றாகும். தினத்தாள் ஒன்று ஒரு நாள் காலையில் வெளிவரவில்லையெனில் மக்கள் மிகவும் வியப்படைகின்றனர்; ஆனால், அந்தச் செய்தித்தாளானது அன்றாடம் ஒழுங்காக வெளிவந்துகொண்டிருப்பதில் (இவ்வாறு நாள்தோறும் வெளிவந்துகொண்டிருப்பதுதான் மிகவும் விந்தையான நிகழ்ச்சி எனினும்) யாவருமே வியப்படைவதில்லை. உதாரணமாக, காலைச் செய்தித்தாளானது அளிக்கப்படுவதில்

உள்ள வேலை ஒருங்கிணைப்பை (co-ordination of effort) ஒருகணம் சிந்தை செய்வோம். இதில் எத்தனை வேலைகள் அடங்கியுள்ளன! கானடாவில் அல்லது ஸ்காண்டினேவியாவில் மரங்கள் வளர்க்கப் பட்டு வெட்டி வீழ்த்தப்பட்டன; அவைகள் மரக்கூழாகத் தயாரிக்கப் பட்டுக் கடல்கடந்து பல ஆயிரம் மைல்களுக்கப்பால் ஏற்றிச் செல்லப் பட்டன; மரக்கூழ் காகித ஆலைகளில் செய்தித்தாள் காகிதமாகத் தயார் செய்யப்பட்டது; நாட்டு, பன்னாட்டுச் செய்தி நிலையங்கள் பல வற்றின் வாயிலாகச் செய்திகள் சேகரிக்கப்பட்டன; அச்சுக் கோக்கப் பட்டது; பின்னர் பலநூறு பொறியியல் தொழிற்சாலைகளில் செய்யப் பட்ட இயந்திரங்களின் தொகுதியால் அச்சடிக்கப்பட்டது; செய்தித் தாளை நுகர்வோரின் வீட்டுவாயிலில் கொண்டுவந்து தர சிக்கல் நிறைந்த சாலை, ரயில்வழிப் பணிகள் பயன்படுத்தப்பட்டன.

ஒரு பண்டத்தை உற்பத்தி செய்யும் வேலையை ஒரு தொழிற் சாலையில் வைத்து நடத்துவதென்பது மதிக்கப்படத்தக்கதொரு செய லாட்சித் திறனைப் பெற்றிருத்தல் வேண்டும். அறிவுத் திறனுள்ள ஒரு பொருளாதார ஒருங்கிணைப்பானது (intelligent co-ordination of an economy), பிரிட்டனில் உள்ளதுபோல், 22 மில்லியன் தொழிலாளர்களை வைத்து நிருவகிப்பதற்கே, மிக அதிகமான அமைப்புத் திறன் தேவைப்படும். ஆயினும், ஐக்கிய அரசாங்கம் போன்ற ஒரு நாட்டின் பொருளாதார அமைப்பிற்கு எந்த ஒரு தனி மனிதரும் ஒருங்கிணைப்போராகவும் (co-ordinator) கட்டுப் படுத்துபவராகவும் இருந்து செயல்புரிவதில்லை. இதற்குக் காரணம் இத்தகையதொரு பணியானது மனிதத் திறனுக்கே அப்பாற்பட்ட தொன்றாகும். அப்படியானால் குழப்பமேதுமின்றி எவ்வாறு பொரு ளாதார முறையானது இயங்கக்கூடும். உதாரணமாக, ஒரே இரயில் பாதை முறையொன்றை சைகைப் பெட்டியில் (signal box) ஒருவரு மின்றி நடத்த இயலுமா? இதேபோன்றுதான் விலையும். இரயில் பாதை முறைக்கு சைகை காட்டுபவன் (signalman) என்ன வேலை யைச் செய்கின்றானோ, அந்தப் பணியினையே பொருளாதார முறைக்கு 'விலை' (price) செய்கிறது. விலை அமைப்பு (price mechanism) என் றழைக்கப்படுகின்ற இதனால்தான் பொருளாதாரமுறை முழுவதற்கு மான ஒருங்கிணைத்தலானது (co-ordination) அடையப்பெறு கின்றது. கடந்த அத்தியாயங்களில் விளக்கப்பட்ட ஓர் ஆய்வு முறைதான் இத்தகைய ஒருங்கிணைத்தல் எவ்வாறு செய்யப்படுகின்ற தென்பதை விளக்கக்கூடும். இதனை நிறைவுப்போட்டியின் சூழ் நிலையில் மிக எளிதாக விளக்கக்கூடும். அடுத்துவரும் உட்பிரிவில் நடைமுறை உலகத்தில் நிறைகுறைப் போட்டியின் தன்மைகளுக்கு இடமளிப்பதற்காகவேண்டி, கருத்தில் சில மாற்றங்கள் செய்யப்பட் டிருக்கின்றன.

தேவைக் கோட்பாடானது (theory of demand), எவ்வாறு செல்வத்தின் நுகர்ச்சியானது விலை என்னும் மத்தியத்தால் (medium of price) வழி நடத்தப்பட்டும் பாதிக்கப்பட்டும் வருகிறதென்பதை எடுத்து விளக்குகின்றது. முதலாவதாக ஒவ்வொரு நபருக்கும் தன்னால் நுகரக்கூடிய நுகர்ச்சியின் மொத்த அளவானது, விலையினால் தான் நிர்ணயிக்கப்படுகின்றது. ஒவ்வொரு நுகர்வோரும் ஒவ்வொரு வாரம் அல்லது மாதம் அல்லது ஆண்டிலும் ஒரு குறிப்பிட்ட தொகையினை வருமானமாகக் கொண்டுள்ளனர்; ஒரு பண்டத்தின் விலை என்பது யாதெனில், அப்பண்டத்தினைத் தனக்கு உரிமையாக்கிக் கொள்வதற்காக நுகர்வோர் கொடுக்கவேண்டிய பணத் தொகையே யாகும். எனவே, அவர் நுகர இயலுகின்ற பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் மொத்த அளவானது அறுதியிடப்பட்டுள்ளன ; அவருடைய வருமானம் முழுவதும் தீர்ந்துபோகும்வரையிலும் அவர் நுகர்ச்சியினை துய்த்துக்கொண்டிருக்க முடியும். இதில் முக்கியமானதொன்று யாதெனில், விலை அமைப்பானது, நுகர்வோரானவர் எந்தெந்தப் பண்டங்கள் பணிகளில் இயன்றவரை அதிகபட்சமான மன நிறைவை (the maximum possible satisfaction) அடையக்கூடும் என்று நம்புகின்றாரோ, அவைகளில் அவருடைய வருமானத்தை நிரவிச் செலவிட வழிவகை செய்கின்றது. முன்னர் நிகழ்த்திய ஆய்வொன்றில், நுகர்வோர் தனது செலவினைத் தனக்கு ஒவ்வொரு பண்டத்திலும் கிடைக்கப்பெறுகின்ற இறுதிநிலைப் பயன்பாடானது எல்லா இடத்தும் அப் பண்டத்தின் விலையின் விகிதத்திற்குச் சமமாக இருக்கும்படி அமைத்துக்கொள்வாராகில், அவர் இயன்றவரை மிக உச்சமான மன நிறைவைப் பெறக்கூடுமென்பதைப் பார்த்தோம். ஆகவே, நுகர்ச்சிப் பகுதியைப் பொறுத்தவரையில், விலை முறையானது, ஒரு நபர் நுகரக்கூடிய மொத்த நுகர்ச்சி அளவைக் கட்டுப்படுத்துவதாக இருக்கிறது. ஆனால், அதே சமயத்தில், அவரது செலவுப் பாணியைப் பொறுத்தவரையில், அது அவருக்குப் பூரண தெரிந்தெடுத்தல் தன்னுரிமையை (சென்ற அத்தியாயத்தில் கூறியுள்ளதைப்போன்று, தெரிந்தெடுத்தலானது விளம்பரம், இன்னும் மற்ற விற்பனை வளர்ச்சித் தொழில் முறைகளாலும் பாதிக்கப்படுவதாக இருந்தபோதிலும்) அளிப்பதாக உள்ளது.

உற்பத்திக் கோட்பாடானது (the theory of production) பல்வேறு பண்டங்களுக்கிடையேயுள்ள நுகர்வோர்களது விருப்பத் தரங்கள் எவ்வாறு உற்பத்தியாளர்களைப் பாதிக்கின்றனவென்பதையும் இதன் மூலம் அவை எவ்வாறு ஒவ்வொரு தொழிலிலும் உற்பத்திக் காரணிகள் சென்று அமைவதைப் பாதிக்கின்றனவென்பதையும், எடுத்து விளக்கியது. நுகர்வோர்கள் ஒரு பண்டத்தின் பல்வேறு கணியங்களுக்குப் பல்வேறு விலைகளைக் கொடுக்கத்தயாராக இருப்பர்; எனவே,

தொழில் முயல்வோர்கள் (entrepreneurs) பல்வேறு உற்பத்தி மட்டங்களினின்றும் கிடைக்கக்கூடிய இறுதிநிலை வருமானத்தைக் கணக்கீடு செய்துகொள்ள முடியும். உற்பத்தியையும் பல்வேறு உற்பத்திக் காரணிகளின் விலைகளையும் ஆளுகின்ற, கொடுக்கப்பட்டுள்ள தொழில்நுணுக்கச் சூழ்நிலைகளில், தொழில் முயல்வோர்கள் உற்பத்தியின் பல்வேறு மட்டங்களின் இறுதிநிலைச் செலவைக் கணக்கீடு செய்ய இயலும். ஒவ்வொரு தொழில்முயல்வோரும் ஒவ்வொரு பண்டத்தையும் எந்த அளவில் உற்பத்தி செய்வார் என்பதனை இறுதிநிலை வருமானம், இறுதிநிலைச் செலவு ஆகிய இரண்டும் சேர்ந்து நிர்ணயிக்கின்றன.

விளக்கம் தற்போது முற்றுருப்பெற்றுவிட்டது. நுகர்ச்சியின் மொத்த அளவானது விலைமுறையினால் தீர்மானிக்கப்படுகின்றது; நுகர்ச்சி, உற்பத்தி இவைகளின் அமைப்பானது ஒப்பீடான விலைகளின் அமைப்பில் பிரதிபலிக்கப்படுவதாக உள்ளது; அதே சமயத்தில் மொத்த வருமானமானது, உற்பத்தியிலீடுபட்டுள்ள பல்வேறு உற்பத்திக் காரணிகளின் அலகுகளினது எண்ணிக்கையாலும், அவைகளின் முறையான விலைகளாலும் (their respective prices) தீர்மானிக்கப்படுவதாக உள்ளது. ஒவ்வொரு நிலையிலும் விலையானது, ஒவ்வோர் உற்பத்தித்துறையிலுமுள்ள தேவை, அளிப்பு ஆகியவற்றின் செயல்வினையின் பயனாக உற்பத்தி முறையில் அடங்கியுள்ளது. ஒவ்வொரு நுகர்வோரும், ஒவ்வோர் உற்பத்தியாளரும் தனது சாதனங்களைப் பயன்படுத்துவதில் தனது தனிப்பட்ட தெரிதலையே கையாளுகின்றனர். அடுத்து வரும் உட்பிரிவில், இவ்வாறு தெரிதலில் அரசாங்கம் குறுக்கிடுகின்ற சில நிகழ்ச்சிகளும் கூறப்பட்டுள்ளன. எனவே, விலைமுறையினால் நுகர்வோர்களுடையனவும் உற்பத்தியாளர்களுடையனவுமான முடிவுகள் ஒன்றாகக் கொண்டுவந்து நிறுத்தப்படுகின்றன; நுகர்வோர்களது தேவைகளை (needs of the consumers) அதிகமான அளவிற்கு நிறைவேற்றும் வகையில் உற்பத்திக் காரணிகள் பயன்படுத்தப்படுவதன் குறிக்கோளை அம் முடிவுகள் கொண்டுள்ளன.

## 2. உத்தம அளவுப் பங்கீடு (Optimum Allocation)

கருத்தியலாக நிறைவுப் போட்டியிடுகின்றதோர் உலகத்தில் (இத்தகையதொரு நிலை அதிருஷ்டவசமாகவோ அல்லது துரதிருஷ்டவசமாகவோ நடைமுறை உலகத்திற்கும் அப்பாற்பட்டதாக இருக்கிறது) விலை அமைப்பின் நடையற்ற இயக்கமானது, எந்தவொரு சமயத்திலுமுள்ள எண்ணற்ற பொருளாதார நடவடிக்கைகள் யாவற்றையும் ஒருங்கிணைப்பதோடு, அச் செயலை ஓர் எடுத்துக்

காட்டான முறையிலும் செய்கின்றது. கடைசியாக, அது எல்லாப் பொருளாதார சாதனங்களின் உத்தம அளவினை (optimum allocation) பெறும்—அதாவது, இது எல்லா உற்பத்திக் காரணிகளையும் அவைகளின் மிக அதிகமான உற்பத்திப் பயன்களை நோக்கிச் செலுத்துவதாக இருப்பதுடன், சமூகம் தன்னிடமுள்ள சாதனங்களி னின்றும் (resources) அதிகபட்சமான மனநிறைவை அடையும் படியும் செய்கின்றது.

நிறைவுப் போட்டியின் சூழ்நிலைகளில் விலையானது எங்கும் இறுதிநிலைச் செலவிற்குச் சமமாகவே இருக்குமென்பதையும், ஒவ்வோர் உற்பத்தியாளரும் தனது குறைந்தபட்ச சராசரி உற்பத் திச் செலவுப் புள்ளியில்தான் (at his point of minimum average cost) உற்பத்தியைச் செய்வார் என்பதையும் ஈண்டு நினைவுகூர்தல் வேண்டும். சராசரி உற்பத்திச் செலவுகள் எங்கேயும் அவைகளின் குறைந்தபட்சப் புள்ளியில் (at their lowest point) இருக்கின்றன வென்பது, ஒவ்வொரு நிறுவனமும் உச்சகட்டத் திறமையுடன் (peak efficiency) செயற்படுகின்றன என்பதை உணர்த்துகின்றது. நிறுவனங்கள் மிகக் குறைந்த உற்பத்தியளவை உற்பத்தி செய்வ தாலும் (பேரளவு உற்பத்தியில் கிடைக்கக்கூடிய சிக்கன நலன்கள் சிலவற்றை அடையப்பெறுது விட்டுவைப்பதால்), அல்லது மிக அதிக மான உற்பத்தியளவை உற்பத்தி செய்வதாலும் (குறைந்துசெல் விளைவு விதியின் பயனை அடைவதால்), எங்குமே நஷ்டம் ஏற்பட்டு விடுவதில்லை.

ஒவ்வொரு நிறுவனமும் தனது உத்தம அளவு உற்பத்தியில் செயற்படுகிறது என்பது மட்டுமன்று. நாடு முழுவதற்குமே கணக் கிடும்போது, இறுதிநிலைச் செலவும் விலையும் சமமாக இருப்பதானது உற்பத்திச் சாதனங்கள் (productive resources) பண்டங்களுக் கிடையே சரியான முறையில் பகிர்ந்தளிக்கப்படுகின்றன என்பதனை உணர்த்துகின்றது. விலையென்பது (price), நுகர்வோர்கள் அவர்கள் நுகருகின்றதொரு பண்டத்தின் கடைசி அலகினின்றும் (last unit) அவர்கள் கிடைக்கப்பெறுகின்ற கூடுதலான மனநிறைவைப் (extra satisfaction) பிரதிபலிப்பதாக உள்ளது; இறுதிநிலைச் செலவென்பது, உற்பத்தி செய்யப்படுகின்றதொரு பண்டத்தின் கடைசி அலகினுல் (the last unit of a commodity produced) பயன்படுத்தப்படுகிற சாதனங்களின் அளவைக் குறிப்பிடு வதாக உள்ளது. ஒரு பண்டத்தின் இறுதிநிலைச் செலவானது அதன் விலையைக் காட்டிலும் அதிகமாக இருக்குமானுல், சமூகமானது தான் கூடுதலான மனநிறைவைப் பெறுவதன்மூலம் பெறுகின்ற இலாபத்தைவிடப் பயன்படுத்தப்படுகின்ற சாதனங்கள் வாயிலாக

அதிகமான இழப்பையே பெறுவதாக இருக்கும்; ஆகவே, பண்டத்தின் உற்பத்தியளவும் மிக அதிகமாகவே இருக்கும். இதேபோன்று விலையானது இறுதிநிலைச் செலவைக் காட்டிலும் அதிகமாக இருக்குமானால், சமூகமானது உற்பத்தி முறையில் ஏற்படும் சாதனங்களின் இழப்பின்மூலம் தான் பெறுகின்ற நஷ்டத்தைவிட அதிகமான மனநிறைவைப் பெறுவதன் காரணமாக ஏற்படுகின்ற இலாபம் அதிகமாக இருக்கும்; ஆகவே, உற்பத்தி அளவும் மிகக் குறைவாகவே இருக்கும். எந்தத் தொழில்களில் சாதனங்களின் உற்பத்தியால் நுகர்வோர்களுக்கு ஏற்படும் கூடுதலான மனநிறைவானது அவைகளின் உற்பத்திச் செலவைக் காட்டிலும் குறைவாக இருக்கிறதோ, அந்தத் தொழில்களினின்றும் சாதனங்களை எடுத்துவிட்டு, எந்தத் தொழில்களில் உற்பத்தியினால் அளிக்கப்படும் கூடுதலான மனநிறைவானது (extra satisfaction) அவைகளின் உற்பத்திச் செலவைக்காட்டிலும் அதிகமாக இருக்கின்றதோ அந்தத் தொழில்களில் அச் சாதனங்கள் புகுத்தப்படுமானால், மொத்த மனநிறைவானது எப்போதுமே அதிகரிக்கப்படும். இத்தகைய இலாபங்கள், இறுதிநிலைச் செலவானது விலைக்குச் சமமாக இருக்கின்றவரையில் எங்கும் தொடர்ந்து கிடைத்துக்கொண்டே இருக்கும். ஆக, நிறைவுப் போட்டியின்கீழ் சாதனங்கள் யாவும் இயன்றவரை மிகச் சிறந்த வழியிலும், மிகச் சிறந்த பயனை நோக்கியும் பயன்படுத்தப்படும்.

இதனால், 'போட்டி'யும் தடையிலா நிறுவனப் பொருளாதாரச் சூழ்நிலையும் உள்ள நடைமுறை உலகத்தில் இத்தகையதொரு குறிக்கோளான நிலை உண்மையில் அடையப்பெறுகின்றதென்று பொருளாகுமா? ஆனால், இவ்வாறு அடையப்பெறுவதில்லை. ஆகவே, தான், எல்லாப் பொருளாதார நடவடிக்கைகளும் தடையிலா அங்காடிச் சக்திகள் செயல்படுவதன்மூலமாகமட்டுமே—அதாவது, விலை அமைப்பு—நிர்ணயிக்கப்படுமானால் மிகச் சிறந்த உலகத்தில் மிகச் சிறந்தனவாக இருப்பனவற்றை ஏற்படுத்தத் துணை செய்யும் என்னும் கருத்து முடிவினைக் கொணர்வது இயலாததாகின்றது. இதற்கு மூன்று காரணங்கள் உள.

முதலாவதும் மிகத் தெளிவானதுமான காரணம், நிறைவுப் போட்டியானது (perfect competition) எங்கும் நடைமுறையில் இருப்பதில்லை. நிறைவுப் போட்டிக்குப் பல முக்கிய நிபந்தனைகள் தேவைப்படுவதால், அந்த நிபந்தனைகளை இவ்வுலகத்தில் காண்பது அரிதாக இருப்பதே இதற்குக் காரணமாகும். எனவே, அநேகமாக எல்லாத் தொழில்களிலும் ஏதாவதோர் அளவில் சர்வாதீனமானது இருந்தே வருகிறது. இதனால் ஏற்படும் சிக்கலான விளைவு யாதெனில், விலையும் இறுதிநிலை வருமானமும் சமமாக இருப்பது

ஒழிகின்றது. தொழில்முயல்வோர்கள் இறுதிநிலைச் செலவும் இறுதிநிலை வருமானமும் சமமாக இருக்கின்ற வரையிலும் (இது விலையைக் காட்டிலும் எப்போதுமே குறைவாக இருக்கும்) உற்பத்தியைச் செய்துகொண்டிருப்பர். இதன் விளைவாக நிறைகுறைப் போட்டி உள்ளதோர் உலகத்தில் இறுதிநிலைச் செலவானது விலையைக்காட்டிலும் குறைவாக இருக்கும். இறுதிநிலைச் செலவானது விலையைக்காட்டிலும் எவ்வளவு குறைவாக இருக்குமென்பது விற்பனைக் கோட்டின் (sales curve) சரிவைப் பொறுத்திருக்கும் (அதாவது, அது அனுபவிக்கின்ற சர்வாதீன அதிகாரத்தின் அளவைப் பொறுத்து இருக்கும்); ஆனால், அது விலைக்கும் குறைவாக இருக்கின்றவரையிலும் சாதனங்கள் உத்தம அளவில் பயன்படுத்தப் பட்டிருப்பதாகக் கூற முடியாது. விலையானது இறுதிநிலைச் செலவிற்குச் சமமாக இருக்கின்றவரையிலும் உற்பத்தியானது அதிகரிக்கப் படுமாயின், சமூகத்தின் பொருளாதார நலன் (economic welfare of the society), அத்தகைய சூழ்நிலை இல்லாமலிருந்தால் உள்ளதைக் காட்டிலும் குறைவாகவே இருக்கும். சென்ற அத்தியாயத்தில் பார்த்ததுபோல், போட்டியானது நிறைகுறையாக இருக்கும்போது, இன்னும் மற்ற நேரடியான விரயங்களும்—விளம்பரம் முதலியவை—ஏற்படும்.

இரண்டாவதாக உள்ள காரணியானது சமூகத்திற்குக் கிடைக்கும் இலாபங்கள் அல்லது நஷ்டங்களைப் பொறுத்ததாகும். இவற்றைத் தனிப்பட்ட நுகர்வோர்கள் விழைய முடிவதில்லை; விரும்பவும் மாட்டார்கள். எனவே, இவற்றை விலையின்மூலம் மதிப்பிட்டுக் கூறுவது இயலாது. உதாரணமாக போர்ப்படைகளை (armed forces) வைத்துப் பராமரிப்பதைத் தனியார்துறைக்கு (private enterprise) விட்டுவிட இயலாது. ஏனெனில், எந்த ஒரு நபராலும் அத்தகைய பணிகளால் சமூகம் முழுமைக்கும் ஏற்படும் நன்மையை மதிப்பிட்டுப் பார்க்கவியலாது. தங்களின் குழந்தைகளின் கல்விக்காகப் பணம் செலவிடுவதற்கு எல்லாப் பெற்றோர்களுமே முன்வருவதில்லை; ஏனெனில், எல்லாப் பெற்றோர்களுமே தங்களின் குழந்தைகள் அல்லது சமூகத்தின் வருங்காலச் சந்ததியர் கல்வி கற்பதிலுள்ள பயனை உணர்வதில்லை. யாதொரு தொடர்புமின்றித் தனியாகத் துண்டிக்கப் பட்டிருந்த இடங்களுக்குப் பாதைகளை அமைத்தலைத் தனிநபரின் முனைப்பாற்றலுக்கு (private initiative) விட்டுவிட முடியாது; ஏனெனில், அவ்வாறு அந்த இடங்களுக்குப் பாதைகளை அமைத்தலினால் கிடைக்கப்பெறும் பண வருமானம் இலாபமற்றதாக இருக்கும்.

எனவே, பல துறைகளில் சமூக அல்லது அரசியல் காரணங்கள் முக்கியத்துவம் வாய்ந்தனவாக அல்லது ஆதிக்கம் செலுத்துவன

வாக இருக்கின்றன. இத்தகைய துறைகளில், தடையிலா அங்காடிச் சக்தி செயற்படுவதில் ஏதாவதொருவகையில் குறுக்கிடுவது அரசாங்கத்தின் உரிமையாகவும் கடமையாகவும் உள்ளது. அரசாங்கமானது ஒரு பண்டத்தின் நுகர்ச்சியிலின்றும் சமூகம் முழுமைக்கும் (வருங்காலச் சந்ததியையும் சேர்த்து) கிடைக்கக்கூடிய இலாபத்தை, சாதாரண அங்காடிச் சக்திகளால் நிர்ணயிக்கப்படும் விலையினுல் சரிநுட்பமாக அளவிட முடியாது என்று நம்பினுல், தானே விலைமுறை (price mechanism) ஒன்றைக் கொணர்ந்து அதன் மூலம் செயலாற்றும். சான்ருக, ஏதாவதொரு காரணத்தால் ஒரு பண்டத்தின் நுகர்ச்சி விரும்பத்தகாததென்று அரசாங்கம் கருதுமாஞல், அப் பண்டத்தின்மீது அது வரியினை விதிக்கும் (உதாரணமாக, மோட்டார் கார்களின் நுகர்ச்சியை உள்நாட்டில் குறைப்பதற்காகவும், அவைகளின் ஏற்றுமதியைஅதிகரிப்பதற்காகவும் அவற்றின் மீது விதிக்கப்படும் வரியினைக் கூறலாம்). இதற்கு எதிரிடையாக அரசாங்கமானது, எந்தப் பண்டங்களைச் சமூகம் அதிக அளவில் பயன்படுத்தவேண்டுமென்று விழைகின்றதோ (உதாரணம்—பால்), அப் பண்டங்களுக்குப் பணமானியங்களை (subsidies) வழங்கக்கூடும். சில சமயங்களில் சில பண்டங்களைத் தனிப்பட்டவர்கள் உற்பத்தி செய்வதையும் விற்பனை செய்வதையும் அரசாங்கம் தடைசெய்யக்கூடும். இவற்றிற்கு உதாரணமாக, மருந்துகள் அல்லது நஞ்சுகள் உற்பத்தியினைக் கூறலாம்.

கடைசியாக, நிலவுகின்றதொரு பொருளாதார நிலையில் வருமானப் பகிர்வானது உத்தம அளவுப் பகிர்வாக இருக்கும்போது மாத்திரமே, நிறைவுப் போட்டியினுல் அடையப்பெறும் சாதனப் பங்கீடானது, உண்மையான கருத்தில், உத்தம அளவில் இருக்கும். ஒரு பண்டத்தை நுகருகின்ற ஒவ்வொருவரும் அதற்கு ஒரே விலையினைக் கொடுக்க இசைந்தபோதிலும், அந் நுகர்வோர்கள் யாவரும் அதனின்றும் சமமான இறுதிநிலைப் பயன்பாட்டினை அடைவர் என்று கூறமுடியாதென்பதனை ஈண்டு கவனத்தில் கொள்ள வேண்டும். ஒரு செல்வந்தர் ஒரு பண்டத்தினின்றும் குறைந்த இறுதிநிலைப் பயன்பாட்டினை (low marginal utility) அடைந்தமாத்திரத்திலேயே மனநிறைவினைப் பெறக்கூடும்: ஏனெனில், அப் பொருளின் விலையில் அடங்கியுள்ள தியாகமானது (sacrifice implied by its price) அவருக்கு மிகச் சிறியதாகவே இருக்கும். அதே பண்டத்தினின்றும், அதே விலையில், ஏழை மனிதரொருவர் அதிகமான இறுதிநிலைப் பயன்பாட்டினை (high marginal utility) அடையக்கூடும். விலைமுறை, தேவையானது காட்டுகின்ற வழியில் சாதனங்களைப் பங்கீடு செய்கின்றது. செல்வந்தர் ஒருசிலரையும், பெருவாரியான ஏழைகளையும் கொண்டதொரு பொருளாதாரத்தில், சாத

னங்கள் தேவையினால் உந்தப்பட்டு உல்லாசப் படகுகளையும் நீச்சல் குளங்களையும் உண்டுபண்ணப் பயன்படுத்தப்படும் ; ஆனால், அதே நேரத்தில் அச் சாதனங்கள் (ஒத்துக்கொள்ளத்தக்க எந்த நியதிகளின்படியும்) நகரின் கழிசடைப் பகுதிகளைப் (slums) போக்குவதற்கும், மருத்துவமனைகளுக்கு வேண்டிய பொருள்களை வாங்கி அவற்றைச் செம்மைப்படுத்துவதற்கும் சிறந்த முறையில் செலவிடப்பட்டிருக்கக்கூடும்.

இன்னோரன்ன காரணங்களால், பெரும்பாலான நாடுகளில், நிறைகுறைப் போட்டிகள், அல்லது வருமானத்தின் சமன்கேடான பங்கீடு (maldistribution of income) அல்லது சமூகம், போர் அல்லது அரசியல் தேவைகளுக்கு வழிவகை அமைத்தல் ஆகியவைகளால் பொருளாதார நடவடிக்கையில் ஏற்படும் ஏடாகூடங்களைக் (distortions) களைந்து செம்மைப்படுத்தும் நோக்கத்துடன் ஏதாவதொரு வகையில் அரசாங்கத்தின் தலையீடு இருந்தே வருகிறது. இத்தகைய தலையீடு எவ்வாறு செயல்புரியவேண்டுமென்பது தனிப்பட்டவர்களின் முடிவுபற்றியதொரு பிரச்சினையேயாகும். (இத்தகைய முடிவினை எடுக்கும் பொறுப்பு அந்தந்த அரசியல் அமைப்புகளைச் சார்ந்ததாகும்.) முதலாவதாக, சமூகமானது தனியார்துறை, அரசாங்கத்துறை (private and public enterprise) ஆகியவை முற்றிலும் பொருளாதாரம் சம்பந்தப்பட்ட நோக்கங்களை எய்துவதில் அவைகளுக்குள்ள ஒப்பீடான திறமைகளைக் குறித்துத் தனது சொந்த முடிவுகளை எடுக்கவேண்டும். இரண்டாவதாக, பொருளாதாரம் சம்பந்தப்பட்ட நோக்கங்களுக்காகவும், பொருளாதாரம் சம்பந்தப்படாத நோக்கங்களுக்காகவும் சாதனங்கள் பயன்படுத்தப்படுவதில் அவைகளின் ஒப்பீடான மதிப்பு குறித்தும் சமூகம் தன் முடிவுகளை எடுக்கவேண்டும். அநேகமாக எல்லா நாட்டிலும், பாதுகாப்புச் சட்டம், அமைதி இவைகளை நிலைநாட்டுதலில் சாதனங்களைத் திறமையாகப் பங்கீடு செய்யக்கூடியது அரசாங்கம் ஒன்றே என்னும் கருத்து ஏற்கப்பட்டுள்ளது. ஒருசில நாடுகளில் பொருளாதார நடவடிக்கைகள் யாவற்றையும் அரசாங்கமே கட்டுப்படுத்துவதாக இருக்கிறது; அங்குத் தனியார் துறைக்கு (private enterprise) இடமில்லை. பெரும்பாலான நாடுகளின் நிலை மேற்சொல்லப்பட்ட இருவேறு நிலைகளுக்கும் இடையேயுள்ளதொன்றாக இருக்கிறது—இந் நிலை 'கலப்புப் பொருளாதாரம்' (mixed economy) என அழைக்கப்படுகிறது. இத்தகையதொரு கலவையில் தனியார் துறையின் ஆதிக்கம் எவ்வளவு இருக்க வேண்டும், அரசாங்கத் துறையின் ஆதிக்கம் எவ்வளவு இருக்க வேண்டுமென்பதைத் தீர்மானிப்பது நிச்சயமாக அரசியலைச் சார்ந்ததொன்றாகும். ஏனெனில், இத்தகைய முடிவில் சம்பந்தப்பட்

டுள்ளவை முடிவுகளே (ends) தவிர வழிகளல்ல (means). இத்தகைய முடிவுகள் சம்பந்தமான கருத்துகளைத் தெரிவிக்கப் பொருளாதார விற்பன்னருக்கு, ஒரு சாதாரணக் குடிமகனுக்கு (citizen) என்ன உரிமை இருக்கின்றதோ, அதைத் தவிர வேறு எந்த உரிமையு மில்லை.

3. அளிப்பு, தேவை இவற்றில் ஏற்படும் மாற்றங்கள் (Changes in Supply and Demand)

தற்காலப் பொருளாதார முறைகள் பெரும்பாலும் 'கலப்புப் பொருளாதார முறைகளாக' (mixed economies) இருப்பதால்—சாதனங்களில் ஒரு பகுதி தனிப்பட்ட நபர்கள், நிறுவனங்களின் முடிவுகளாலும், மற்றொரு பகுதி அரசாங்கத்தின் ஏதாவதொரு வகைத் தலையீட்டினாலும் பகிர்வு செய்யப்படுகின்றன என்னும் கருத்தில்—தனியார் துறையிலும் அரசாங்கத் துறையிலும் சரிசெய்தல்கள் (adjustments) எவ்விதத்தில் ஏற்படுகின்றனவென்பதை ஆராய்வது பயனுடையதாகும். இந்த உட்பிரிவு தனியார் துறையினைப்பற்றிய தாகும்—அதாவது, தடையிலா அங்காடி செயற்படுவதன் மூலம் நிறைவேற்றப்படும் சரிசெய்தல்களைப் (adjustments carried out through the operation of a free market) பற்றியதாகும்.

தனியார் துறையில் ஏதாவது ஓரளவிற்குப் போட்டி (some degree of competition) இருப்பதாகக் கருதுவோம். அதில் ஒரு தொழிலில் அத் தொழிலின் பெருக்கம் காரணமாக அல்லது தொழில் முறை வளர்ச்சி காரணமாக (technical development) தற்போதுள்ளதைவிட அதிகமான அளவு உற்பத்தி செய்யப்படுகின்றதெனக் கொள்வோம். அவ்வாறு அதிகமாக உற்பத்தி செய்யப்படும் பண்டத்திற்கு இணையாகத் தேவையில் எவ்வித மாற்றமும் இல்லையெனவும் கொள்வோம். அதிகமான அளவு உற்பத்தியை அங்காடியில் விற்க வேண்டுமெனில், இயல்பாக விலையானது குறைக்கப்படவேண்டும். குறைந்துசெல் பயன்பாட்டு விதியானது, ஒரு பண்டத்தின் அளிப்பு அதிகரித்துச் செல்லச்செல்ல அப் பண்டத்தை நுகர்வோர்கள் அதனின்றும் பெறுகின்ற இறுதிநிலைப் பயன்பாடானது குறைந்துகொண்டே செல்லுமென்றும், எனவே, இத்தகைய அதிகப்படியான அலகுகளை (extra units) அப் பண்டத்தின் விலை குறைந்தால்தான் நுகர்வோர்கள் வாங்குவார்கள் என்றும் கூறுகின்றது. அதிகரிக்கப்பட்ட உற்பத்தியானது குறைந்த உற்பத்திச் செலவுகளின் விளைவாக இல்லாமல் உற்பத்தித் திறனின் பெருக்கத்தால் ஏற்படுவதாக இருக்குமாயின், விலை குறைவானது அத் தொழிலிலுள்ள இலாபங்களை இயல்பான மட்டத்திற்கும் குறைவாக இருக்கும்படி செய்யும்; நிறுவனங்கள் தொழிலைவிட்டேகும்; அளிப்பு,

விலை ஆகிய இரண்டும் மெதுவாக அவற்றின் ஆரம்பத்திலிருந்த மட்டத்திற்கே (to their original level) பின்னோக்கிச் செல்லும். எனவே, படம் 35 (a)-ல், தொழில்நுணுக்க நிலைகளில் (technological conditions) மாற்றமேதும் இல்லாதிருக்கும்போது (அதாவது, மாற்றமேதுமற்ற $S_1S'_1$ என்னும் அளிப்புக் கோடு) உற்பத்தியானது OM-லிருந்து $OM_1$ ஆக அதிகரிக்கப்படுகிறதோடு, விலையானது MP-லிருந்து M′P′ ஆகக் குறைக்கப்படுகிறது; இந்த விலையில் தொழில் முழுவதுமே P′QRS′-க்குச் சமமான நஷ்டங்களை அடையும். இத்தகைய நஷ்டங்களால் நெருக்கப்பட்டு உற்பத்தியானது மீண்டும் OM அளவிற்கே இருக்கும்படி செய்யப்படும். எனினும்,




படம் 35

தொழில்நுணுக்கத் திறனில் ஏற்படும் வளர்ச்சிகள் சிலவற்றால் உற்பத்திச் செலவுகள் குறைக்கப்பட்டிருந்திருக்குமானால், விலையிறக்கமானது புதிய (குறைந்த) சராசரி உற்பத்திச் செலவு மட்டத்திற்குச் சமமாக இருக்கின்றவரையிலும் நீடித்துச் செல்லும். இந்தப் புள்ளியானது அடையப்பெற்றதும், உற்பத்தியானது (output) பெருகுவது நிற்பதுடன், அங்காடியானது தனது புதிய சமநிலைச் சூழ்நிலையில் (new equilibrium position) வந்தமையும். இது படம் 35 (a)-ல் $S_2S'_2$ என்னும் கீழ்நோக்கி இடம்மாறியுள்ள அளிப்புக் கோட்டினால் சித்திரிக்கப்பட்டுள்ளது. உற்பத்தியானது நிலையானதாக இருந்தால், அப்போது விலையானது சராசரி உற்பத்திச் செலவைக் காட்டிலும் மிக அதிகமாகவே இருக்கும்; இயல்பு கடந்த இலாபங்கள் (abnormal profits) மறைந்துபோகும். இத்தகைய தொரு நிலையினால் ஏற்கெனவே உந்தப்பட்டுள்ள உற்பத்தியாளர்கள் தங்களது உற்பத்தியை அதிகரிப்பர் அல்லது புதிய நிறுவனங்கள் தொழிலை நோக்கி ஈர்க்கப்படும். அவைகள், புதிய சம

நிலை உற்பத்தியாகிய (new equilibrium output) OM′ஐ அடைகின்றவரையிலும், விலையானது M′P′-ல் நிலைபெறுகின்றவரையிலும் இத்தகைய புதிய நிறுவனங்கள் தொழிலை நோக்கி ஈர்க்கப்படுதல் நடைபெறும்.

அளிப்பானது யாது காரணத்தாலோ சுருங்குமானால், இதற்கு எதிரிடையான விளைவே ஏற்படும். பண்டமானது மற்றப் பண்டங்களைக் காட்டிலும் கிடைப்பருமையாகப் போகக்கூடுமாதலால், நுகர்வோர்களும் அதனுடைய அங்காடி விலையதிகரிப்பினால் எச்சரிக்கை செய்யப்பட்டவர்களாக அப் பண்டத்தினைத் தாம் நுகர்வதைக் குறைத்துக்கொள்ளுமாறு தூண்டப்படுவர். ஆகவேதான், படம் 35 (b)-ல் அளிப்புக் கோடானது $S_2S'$ என்னும் கோடாக மேல் நோக்கி இடம் மாறி அமைந்துள்ளது. இதனால் $OM_1$-க்கும் அதிகமான எந்த ஓர் உற்பத்தியளவிலும் சராசரி உற்பத்திச் செலவு விலையைக் காட்டிலும் அதிகமாக இருக்கும்; தொழிலில் நஷ்டங்கள், உற்பத்தியும் அங்காடி விலையும் MP-லிருந்து M′P′ ஆக மேல் நோக்கிச் செல்கின்றவரையிலும் இருந்துகொண்டேயிருக்கும். மற்றொருபுறம், உற்பத்திச் செலவுகள் அதிகரித்திருக்கவில்லையெனில், உற்பத்தியாளர்கள் சராசரி உற்பத்திச் செலவிற்கு அதிகமாக விலை அதிகரிப்பதனாலும், இதன் காரணமாக அதிகமான இலாபங்கள் கிடைப்பதனாலும் தொழிலில் உட்புகுவதற்குத் தூண்டப்படுவர். புதிய நிறுவனங்கள் தொழிலில் நுழைந்ததும், விலையானது அதன் பழைய மட்டத்திற்கே கீழ் நோக்கிச் செலுத்தப்பட்டு, பழைய சமநிலை மீண்டும் திரும்பக் கொணரப்படும்.

மாற்றமடைந்துள்ள அளிப்பின் நிலைகளுக்கேற்பச் சரிசெய்து கொள்ளும் இத்தகைய முறையில் இரண்டு முக்கிய அம்சங்கள் கவனிக்கத்தக்கனவாகும். முதலாவதாக, இத்தகையதோர் ஆய்வானது ஏதாவதொருவகைப் போட்டி—நிறைவுப் போட்டி அல்லது வேறுவிதப் போட்டி நிலவுகின்றதென்னும் கருத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது. எனவேதான், இலாப மட்டங்களில் ஏற்படும் மாற்றங்களுக்கேற்ப ஒரு தொழிலைவிட்டு நிறுவனங்கள் நுழையக்கூடும் அல்லது வெளியேறக்கூடும் என்பது கருதப்படுகிறது. ஆயினும், போட்டி இல்லையெனில், சர்வாதீனருடைய விலையிலும் உற்பத்தியளவிலும் ஏற்படுகின்ற மாற்றங்களின் வாயிலாக மாத்திரமே சரிசெய்தல் ஏற்படக்கூடும். பொதுவாக சர்வாதீனத்தின் கீழுள்ள அளிப்புச் சூழ்நிலைகளில் (in supply conditions under monopoly) ஒரு குறிப்பிட்ட மாற்றத்திற்கேற்ப நிகழும் விலை, உற்பத்தியளவு ஆகியவற்றின் போக்கானது ஏதாவதோர் அளவில் போட்டி இருப்பின் ஏற்படுவதைக் காட்டிலும் குறைவாக இருக்கு

மென எதிர்பார்க்கலாம். இரண்டாவதாக, உற்பத்தியாளர்களிடையே உற்பத்தித் திறமையில் வேறுபாடுகள் இருக்குமானால், அவர்களுள் ஒப்பீடாகத் திறமையற்றதொரு தொழில்முயல்வோரே, உற்பத்தி சுருக்கப்படும்போது, முதலில் வெளியேற்றப்படுவாரென்பதையும், உற்பத்தியின் பெருக்கத்தின்போது அவரே கடைசியாக சேர்த்துக்கொள்ளப்படுவாரென்பதையும் சரிசெய்தல் முறையானது (அது தடையேதுமின்றிச் செயற்படுமானால்) தெளிவுபடுத்துகின்றது. உற்பத்திச் செலவுகளுக்கொப்பீடாக விலைகள் குறைவாக இருக்குமானால், முதலாவதாக உற்பத்திச் செலவுகள் எந்த உற்பத்தியாளர்களுக்கு அதிகமாக இருக்கின்றனவோ அந்த உற்பத்தியாளர்க்கு இலாபங்கள் ஒழிந்து நஷ்டங்கள் ஏற்படும். எனவே, தொழிலைவிட்டு வெளியேறும்படியான நிர்ப்பந்தம் இந்த உற்பத்தியாளர்களின்மீது குறிப்பாக அதிகமாக இருக்கும். இதற்கு எதிரிடையாக, உற்பத்திச் செலவுகளுக்கொப்பீடாக விலைகள் அதிகரிக்குமானால், ஒப்பீடான திறமை குறைந்த தொழில் முயல்வோர்களுக்கு (relatively inefficient producers) இயல்புக்கு அதிகமான இலாபங்கள் (super-normal profits) மிகவும் குறைவானவையாக இருக்கும்; உற்பத்தியைப் பெருக்குவதில் அல்லது தொழிலினுள் நுழைவதில் ஏற்படும் ஊக்கம் (incentive) ஒப்பீடாகக் குறைவாகவே இருக்கும்.

தேவையில் ஏற்படும் மாற்றங்களின்போதும் நிகழ்ச்சி ஒரே மாதிரியாகவே இருக்கின்றது. தேவையில் ஏற்படும் விலையதிகரிப்பானது விலைகளை அதிகரிக்கச் செய்வதுடன், சம்பந்தப்பட்ட தொழிலின் இலாபங்களை அதிகரிக்கச் செய்யும். இந்நிலை, சம்பந்தப்பட்ட பண்டமானது அதிகமாகத் தேவைப்படுவதை உற்பத்தியாளர்களுக்கு உணர்த்தும்; அதிக வீத இலாபங்களால் இருக்கின்ற உற்பத்தியாளர்கள் உற்பத்தியை அதிகரிக்கத் தூண்டப்படுவர். இதே காரணத்தால், தொழிலில் புதிய நிறுவனங்கள் ஈர்க்கப்படும். நுகர்வோர்களின் மொத்தச் செலவானது இந் நிலை முழுவதிலும் மாறாமல் நிலையாக இருக்குமானால், இவ்வாறு ஒரு பண்டத்தின் தேவையில் ஏற்படும் அதிகரிப்பானது அதற்குச் சமமாக மற்றப் பண்டங்களின் தேவையில் குறைவை உண்டுபண்ணும். நுகர்வோர்கள் ஒரு நிலையான மொத்த வருமானத்தில் ஒரு பண்டத்திற்கு அதிகமாகச் செலவிடுவார்களேயானால், அவர்கள் மற்றப் பண்டங்களின்மீது குறைத்தே செலவு செய்தாகவேண்டும். இன்னும், மற்றத் தொழில் அல்லது தொழில்களில் இதற்கு முற்றிலும் எதிரிடையானமுறை ஏற்படும். தேவை, விலைகள், இலாபங்கள் அவற்றில் குறைந்திருக்கும். எனவே, அவைகளிலுள்ள உற்பத்தியாளர்கள் தங்கள் பண்டங்களை உற்பத்தி செய்யக் குறைந்த சாதனங்களையே பயன்படுத்துவர்; எஞ்சியுள்ள சாதனங்களை எந்தத்

தொழிலில் அதன் பெருக்கத்திற்கான தேவை அதிகரித்திருக்கின்றதோ அந்தத் தொழிலில் அச் சாதனங்களைத் தாராளமாகப் பயன்படுத்தும் நோக்கத்திற்கு ஒதுக்கிவைப்பர்.

தேவை, அளிப்பு (demand and supply) ஆகியவற்றில் ஏற்படும் மாற்றங்களுக்கேற்பப் பொருளாதார முறை சரிசெய்து கொள்ளுதலில் உள்ளதொரு முக்கியமான அம்சம் யாதெனில், நெகிழ்ச்சியானது ஆற்றுகின்ற பணியேயாகும். இந் நெகிழ்ச்சியானது ஒருபுறம் விலைக்கும், மற்றொருபுறம் உற்பத்திக்குமிடையே சரிசெய்தல் முறையாகிய சுமையைப் பங்கீடு செய்யும் பணியினை ஆற்றுகின்றது. இவ்வாறு பங்கீடு செய்வதில் ஆற்றும் பணியே மேற்கூறியவாறு சரிசெய்தல் முறையில் முக்கியமான அம்சமாகும். பொதுவாக, ஒரு பண்டத்தின் அளிப்பானது அதன் தேவைக்கொப்பீடாகக் குறைந்து செல்லச் செல்ல அது கொடுக்கப்பட்டுள்ளதோர் அங்காடி விலைத் தேவை மாற்றத்தில் அதிகமான விளைவுகளை




படம் 36.

உண்டுபண்ணுவதாக இருப்பதோடு, இதற்கொப்பாக விற்கப்படும் கணியத்தில் ஏற்படும் சரி செய்தலும் குறைவாகச் சென்றுகொண்டேயிருக்கும்; இதற்கு எதிரிடையாக, அளிப்பிற்கொப்பீடாகத் தேவையானது நெகிழ்வற்றதாக இருக்கும்போது ஏற்படும் இத்தகையதொரு மாற்றமானது, பண்டத்தின் விற்பனை அளவில் ஒப்பீடாக அதிகமானதொரு விளைவையும் விலையில் குறைவானதொரு விளைவையும் உண்டுபண்ணும். படம் 36, இத்தகைய உதாரணங்களை விளக்குவதாக உள்ளது. படம் 36 (a)யில் தேவையானது ஒப்பீடாக நெகிழ்வுடையதாகவும் (relatively elastic) அளிப்பானது நெகிழ்வற்றதாகவும் (inelastic) உள்ளன. எனவே, தேவைக் கோடானது $D_1D_1'$-லிருந்து $D_2D'_2$ ஆக இடம் மாறுவதால் உணர்த்தப்படுகிற

தேவைக் குறைவானது உற்பத்தியையும் நுகர்ச்சியையும் மிகக் குறைந்த அளவில்தான் குறையச் செய்கின்றது—அதாவது OM-ல் இலிருந்து OM′ ஆகக் குறைகின்றது. ஆனுல், விலையானது குறிப் பிடும்படி அதிகமாகக் குறைகின்றது—அதாவது, OP-யிலிருந்து OP′ ஆகக் குறைகின்றது. இதற்கு நேரெதிரானதொரு நிலையை படம் 36(b) சித்திரிக்கின்றது. இதில் தேவையானது அளிப்பிற்கு ஒப்பீடாக நெகிழ்வற்றதாகவே இருக்கின்றது. தேவையில் மேற் கூறியது போன்று ஏற்படும் ஒரு மாற்றமானது விலையில் மிகக் குறைவான மாற்றத்தையே உண்டுபண்ணுவதாக இருப்பதுடன் விற்பனைகளில் ஏற்படும் மாற்றம் அதாவது OM-லிருந்து OM′ ஆகக் கணிசமான அளவிற்கு ஏற்படுகிறது. நடைமுறை உலகத்தில் தேவை மாற்றங்களால் ஒருபுறம் செய்பொருள்களிலும் (manufactured goods) மற்றொருபுறம் அடிப்படைப் பண்டங்களிலும் (உதாரணம், விவசாய உற்பத்திப் பொருள்களிலும்) ஏற்படும் விளைவு களை ஒப்பிடுவதன் மூலம் சரி செய்தல் முறையில் உள்ள வேறு பாடானது மிகத் தெளிவாகச் சித்திரிக்கப்படுகிறது. பருப்பொருளிய லான காரணங்களால் அடிப்படையான பண்டங்களின் உற்பத்தி யானது (output of primary products) எளிதாகச் சரி செய்யப்படுவ தில்லை; நடப்பிலிருக்கும் உற்பத்தியை அங்காடிக்குச் செல்லாமல் தடுத்து நிறுத்தி வைக்கவேண்டுமென விழைந்தாலும் அவற்றை நீண்ட நாளைக்குச் சேகரம் செய்துவைப்பது கடினம். எனவே, பெரும்பாலும் நெகிழ்வற்றதாகக் காணப்படும் தேவையோடு ஒப்பு நோக்கும்போதும் அப் பண்டங்களின் அளிப்பு அதிகமாகவே நெகிழ் வற்றதாகக் காணப்படுகிறது. இதன் விளைவாக அவைகளின் விலைகள் நிலையற்றனவும் அவ்வப்போது ஏற்ற இறக்கங்களை (fluctuations) உடையனவாகவும் காணப்படுகின்றன. மற்றொரு புறம், செய்பொருள்களின் தேவையில் ஏற்படும் மாற்றங்கள், அவை களின் விலைகளில் பெரும்பாலும் குறைந்த விளைவினை உண்டு பண்ணுவனவாகவே இருக்கின்றன ; அளிப்பானது, ஒப்பீடாக நெகிழ்வுடையதாக (relatively elastic) இருப்பினும் தேவையில் ஏற் படும் மாற்றங்களுக்குக் கூடியவரையில் விரைவாக ஈடுகொடுக்க அதனுல் முடிவதுடன், அங்காடி விலைகளின் போக்கையும் நிதானப் படுத்துவதாக (moderate) இருக்கின்றது.

ஆக, தேவை, அளிப்பு ஆகியவற்றில் ஏற்படும் மாற்றங்கள் மூலம், பொருளாதார முறையானது பல்வேறு பண்டங்களின் ஒப்பீடான கிடைப்பருமையினுல் (relative scarcity of different commodities) ஏற்படும் மாற்றங்களுக்குத் தக்கவாறு தன்னை அவ்வப்போது சரி செய்து கொள்கிறது. இம் மாற்றங்கள் ஒரு பண்டத்தின் அளிப்பு நிலைகளாலோ அல்லது பொதுமக்கள் அப்

பண்டத்தைத் தீவிரமாக விழைவதாலோ ஏற்படக்கூடும். இத்தகைய சரிசெய்தல் முறையில் அதிக முக்கியப் பங்கினை ஆற்றுவது இலாபங்களே என்பது அறியப்படத்தக்கதாகும். இலாப வீதத்தில் ஏற்படும் அதிகரிப்பு அல்லது குறைவின் காரணமாகவே உற்பத்தியைப் பெருக்குவதற்கு அல்லது குறைப்பதற்குத் திட்டங்கள் திட்டமிடப்படுகின்றன. தேவையில் ஏற்படும் மாற்றங்களுக்கொப்பாக உற்பத்தியின் மற்றக் காரணிகளின் (உழைப்பு, நிலம் முதலியவை) ஊதியங்களும் (rewards) ஏற்ற இறக்கங்களையுடையனவாக இருக்கும். ஊதியத்தில் ஏற்படும் இத்தகைய ஏற்ற இறக்கங்கள், எந்தவிதப் பயன்களுக்குக் காரணிகள் முன்பிருந்ததுபோன்று அவ்வளவு அவசரமாகத் தேவைப்படுவதில்லையோ அவைகளுக்குக் காரணிகளைப் பயன்படுத்தாதுவிடுதலை ஊக்குவிப்பதோடு, எந்தப் பயன்களில் அவைகளின் அளிப்பு அளவுக்கு மீறிக் குறைவாகவும் அதிகமான உற்பத்திக் காரணிகள் தேவைப்படுவனவாகவும் இருக்கின்றனவோ அங்குப் பயன்படுத்தப்படுதலை ஊக்குவிப்பதாகவும் உள்ளது. ஆனால், ஏனைய காரணிகளை ஒருமுகப்படுத்தித் தொழில் செய்யும் பணியைத் தொழில் முயல்வோன் செய்துவருவதால், இலாபங்கள் என்பதன் மூலம்தான், மாற்றமடைந்துள்ள தேவை அல்லது அளிப்பு நிலைகளிலிருந்து ஏற்படும் விளைவுகள் வெளிக்காட்டப்படுகின்றன. தற்கால உலகத்தில் கூலிகள், வாரம், வட்டி ஆகியவைகளைக் கொடுக்கவேண்டியதில் அவ்வளவு எளிதாக மாற்றத்தை உண்டு பண்ணிவிட முடியாது. (இதற்கான காரணங்கள் பின்னர் ஆராயப்படும்.) விலையில் ஏற்படும் மாற்றமானது முதலில் இலாபங்களையே பாதிக்கும்—அதுவும் மிக அதிகமான அளவில் பாதிப்பதாக இருக்கும். தொழில்துணிவு (enterprise) என்னும் காரணியில் மட்டுமே ஊதியமானது (rewards) சுன்னமாகப் (zero) போவதுடன் ஊதியம் எதிர்க்கணியத்திலும் இருக்கக்கூடும்—இந்த உண்மையைத் தொழில்துணிவு என்னும் காரணியை முதன்முதலில் விவாதித்த போதே கண்டோம். ஒரு மனிதனின் கூலியானது ஒரு வேலையில் சுன்னமாகக் குறைந்துவிட்டதெனில், அவன் அந்த வேலையை விட்டுக் கடிதில் விலகிக்கொள்வான். அதே மனிதன், தன்னுடைய வேலையை வேறு ஒருவரின் தொழிற்சாலையில் செய்வதற்கு வாரமாகக் கட்டணம் செலுத்தவேண்டியதொரு நிலையிலிருப்பானேயாகில், தனது வேலையை இன்னும் வெகுசீக்கிரத்தில் உதறித் தள்ளுவான். இந் நிலையில்தான் தொழில்முயல்வோரும் இருப்பார். அவருக்கேற்படும் தண்டத்தொகை, ஊதியம் கிடைக்காததால் ஏற்படுவதோடு அப்பட்டமான நஷ்டத்தாலும் ஏற்படுகிறது. ஆகவே, அவரே கூட்டுணர்ச்சிப் புள்ளியாக (the sensitive point) இருக்கின்றார்—இப் புள்ளியின்மூலமாகவே சரிசெய்தல் சக்திகள் மிக விரைவாகவும் தீவிரமாகவும் செயற்படுகின்றன.

4. வரிவிதிப்பும் பங்கிட்டு முறையும் (Taxation and Rationing)

பொருளாதாரச் சாதனங்கள் (economic resources) பயன்படுத்தப்படுவதை அரசாங்கம் எந்த முறைகளால் கட்டுப்படுத்துகின்றது என்பதனைச் சுருக்கமாகக் கூறுவது கடினமாகும்; இதற்குச் சரிநுட்பமான காரணம் என்னவெனில், அம் முறைகள் ஏராளமானவைகளாக இருப்பதுடன் அவைகள் பொருளாதாரச் சிந்தனையின் எல்லைக்கு அப்பாற்பட்டவையாயும் இருப்பதுவே. அரசாங்கமானது தனது சாதனங்களை நேரடியாகப் பயன்படுத்தும்போது—உதாரணமாக, போர்த்துறை தவிர்த்த மற்றப் பணிகளிலும் (civil services) இராணுவத்துறைப் பணிகளிலும் (armed forces), பொருளாதார இலாபத்தினை அதிகபட்சமாகக் கொள்ளவேண்டுமென்னும் உட்கோளால் (motive) வலியுறுத்தப்படுவதில்லை. தனியார் நிறுவனங்களில் (privately owned enterprises) இவ்வாறு பொருளாதார இலாபத்தினை அதிகபட்சமாகக் கொள்ளவேண்டுமென்னும் உட்கோள் செயற்படுகிறதென்னும் கருதுகோளைப் பொருளாதார ஆய்வு கொள்கின்றது. அரசாங்கம் இவ்வாறு பொருளாதார இலாபத்தினையே கருதாது மக்களின் சமூக நலனை அல்லது நாட்டின் பாதுகாப்பை நிலைநாட்டவோ அல்லது இன்னும் சில சமயங்களில் மக்களின்மீது தனது அதிகாரத்தை நிலைக்கச் செய்யவோ அல்லது அதிகரித்துக் கொள்ளவோ சாதனங்களைப் பயன்படுத்துகிறது. இத்தகைய உட்கோள்கள் பொருளாதார ஆய்வின்பாற்படமாட்டா. பொருளாதார விற்பன்னர், சாதனங்கள் இத்தகைய நோக்கங்களுக்குப் பயன்படுத்தப்படுவதை இழப்பு எனவே கூறுவார். ஏனெனில், அவை நேரடியான செல்வ உற்பத்திக்கு (direct creation of wealth) பயன்படுத்தப்படுவதில்லை என அவர் கூறுவார். இவ்வாறு சமூக, அரசியல் நலன்களால் ஏற்படும் நலன்கள் பொருளாதார நலன்களைக் கைவிடுவதால் ஏற்படும் இழப்பை (ஏதாவது சில வழிகளில்) ஈடுசெய்து சமன்செய்யவேண்டிய பொறுப்பு அரசாங்கத்தினுடையதாகும்.

இதுபோன்றே, அரசாங்கமானது அரசியல் நோக்கங்களைப் பூர்த்திசெய்துகொள்வதில், இயல்பான பொருளாதார நடவடிக்கையில் இன்னும் பலவகையில் குறுக்கிடுகின்றது. உதாரணமாக, ஒரு தொழிலின் (விவசாயம் போன்ற) சுபீட்சம் அரசாங்க அல்லது சமூகக் காரணங்களுக்காக இன்றியமையாததெனக் கருதப்படின், அத்தொழிலுக்குப் போட்டியாக உள்ள வெளிநாட்டுப் பொருள்களின் இறக்குமதிகள்மீது சுங்கவரிகள் (tariffs) விதிக்கப்படலாம். போர்க் கருவிகளை உற்பத்தி செய்தலை ஊக்குவித்தல், ஏற்றுமதிகளைப் பெருக்குதல், அல்லது குறிப்பிட்ட பகுதிகளை வளர்ச்சியடையச் செய்தல் (development of particular regions) ஆகிய நோக்கங்களுக்கு

அரசாங்கமானது கச்சாப் பொருள்கள், அல்லது உழைப்பு இவற்றைக் கட்டுப்படுத்தலாம். இங்கேயும், அரசியல் அல்லது சமூக இலாபமானது பொருளாதார நஷ்டத்தினை ஈடுசெய்யவேண்டிய பிரச்சினை எழுகின்றது. இப் பிரச்சினைகள் தனி மனிதனின் முடிவுபற்றியனவாகவே இருக்கின்றனவேயன்றி, பொருளாதார விற்பன்னர்கள் கையாள விழையும் ஓர் அரசியல் ஆய்வுபற்றியனவாக இல்லை.

ஆயினும், (சமாதான காலத்திற்காவது) அரசாங்கத்தின் பரந்த வகையானதொரு தலையீடானது (more extensive form of intervention) உள்நாட்டு வரிவிதிப்பு அல்லது பணமானியங்கள் (subsidies) அளித்தல்மூலம் அங்காடி விலைகளைக் கையாளுதல், சற்றுக் குறைந்த அளவில், பங்கீட்டு முறையினால் தேவையினைக் கட்டுப்படுத்துதல் ஆகிய வழிகளில் இருந்துவருகிறது. முன்னர் கூறியவகையில் விளைவுகள் (உட்கோள்கள் இவ்வாறு இல்லையாயினும்) பொருளாதார ஆய்வுக்கு ஏற்றனவாக உள்ளன. ஏனெனில், அங்காடி விலை என்பதன்மூலம் (through the medium of the market price) சரிசெய்தல் நிகழ்கின்றது. ஒரு வரிவிதிப்பானது உற்பத்திச் செலவில் ஏற்படுகின்ற அதிகரிப்பு எனவும், ஒரு பணமானியமானது உற்பத்திச் செலவில் ஏற்படுகின்ற குறைவு (reduction in the cost of production) எனவும் கொள்ளலாம். ஆரம்பத்தில் முன்பு கூறியதுபோல, ஒரு பண்டத்தின்மீது வரி விதித்தலால் கிடைக்கும் மொத்த வருவாயானது—இதற்கு எதிரிடையாக, பணமானியங்களை அளித்தலினால் ஏற்படும் மொத்தச் செலவானது—அப் பண்டத்தின் தேவை நெகிழ்ச்சியானது மாற்றமடைவதற்குத் தகுந்தாற்போல் மாறும். சம்பந்தப்பட்ட விலை அமைப்பில் பண்டத்தின் தேவையானது ஒப்பீடாக நெகிழ்ச்சியுடையதாக இருப்பின், அப் பண்டத்தின்மீது வரி விதித்தால் அப் பண்டத்தின் நுகர்ச்சி வெகுவாகப் பாதிக்கப்படும்; அப்படியே அப் பண்டத்தின் மீது வரி விதித்தாலும், வருவாய் குறைவாகவே இருக்கும். நெகிழ்வற்ற தேவையினையுடையதொரு (inelastic demand) பண்டத்தின் உற்பத்தி, நுகர்ச்சி (consumption) இவற்றை அப்பண்டத்தின்மீது விதிக்கப்படும் ஒரு மறைமுக வரியானது (indirect tax) சற்றும் பாதிக்காது; எனவே, மொத்த வரிவருவாயானது ஒப்பீடாக அதிகமாகவே இருக்கும். நுகர்ச்சி, உற்பத்தியளவு ஆகியவற்றைப் பொறுத்தவரையிலும் பணமானியத்தின் விளைவுகள் இதைப் போன்றே உள்ளன; தேவை நெகிழ்ச்சி அதிகமாக இருப்பின் விளைவுகளும் அதிகமாக இருக்கும்; இதனால், தேவை நெகிழ்ச்சி அதிகமாக இருப்பின் பணமானியங்களின் தொகையும் அதிகமாகும் என்பது தெளிவாகின்றது.

ஒரு பண்டத்தின் விலையானது, அதனுடன் தொடர்புகொண்டுள்ள வரி அல்லது பணமானியத்தில் ஏற்படும் மாற்றத்தின் அளவிற்கே (to the same extent) மாறுமா? இது இருவகையான சக்திகளைப் பொறுத்து இருக்கின்றது. தேவைப்படுவதில், வரிவிதிப்பொன்றின் விளைவாக எந்த அளவிற்குப் பண்டத்தின் உற்பத்தியளவு (output) குறையும் (விலை அதிகரிக்கும்) என்பதனைத் தீர்மானிப்பது தேவை நெகிழ்ச்சியாகவும், இதன் காரணமாக இறுதிநிலை வருவாய்க் கோட்டின் சரிவுமாகவும் (slope of the marginal revenue curve) இருக்கின்றன; இறுதிநிலை வருமானமும், இறுதிநிலைச் செலவின் புதிய மட்டமும் மீண்டும் சமநிலைக்குக் கொண்டுவரப்படும்வரையில் விலை உயர்ந்தேயாகவேண்டும். பொதுவாக, ஒரு மறைமுக வரியின் விளைவாகப் பண்டத்தின் தேவையில் நெகிழ்ச்சி அதிகரித்துச் செல்லச்செல்ல, விலையதிகரித்தலானது குறைந்துகொண்டே செல்லும் (பண்டத்தின் உற்பத்தியளவும் அதிகமாகக் குறையும்). ஆனால், இதற்கு இரண்டு வரையறைகள் உண்டு; தேவை நெகிழ்ச்சியானது சுன்னமாக இருக்கும்போது வரி முழுமையும் விலையுடன் சேர்க்கப்படும்; பண்டத்தின் உற்பத்தியளவும் பாதிக்கப்படாது. இதேபோன்று, பண்டத்தின் தேவையானது எல்லையின்றி நெகிழ்ச்சியுடையதாக இருக்குமானால், விலையானது சற்றும் பாதிக்கப்படாமல் வரி முழுவதும் உற்பத்தியாளரால் சுமக்கப்படும், அல்லது உற்பத்தியளவானது சுன்னமாக (நடைமுறை உலகத்தில் இத்தகையதொரு நிகழ்ச்சிகளின் கோவை நடைபெறும் என்று நினைப்பதற்கு இடமில்லையாயினும்) குறைக்கப்படும்.

இரண்டாவதாக, ஒரு வரியானது விலையில் ஏற்படுத்தும் விளைவுகள், அளிப்புச் சூழ்நிலைகளைப்பொறுத்தே இருக்கும். ஒரு பண்டமானது குறைந்துசெல் விளைவுச் சூழ்நிலைகளில் உற்பத்தி செய்யப்படுமாயின், வரியினால் ஏற்படுத்தப்படும் விலையதிகரிப்பானது, உற்பத்தியளவு குறைவதால் ஏற்படும் குறைந்த உற்பத்திச் செலவுகளால் அதே அளவிற்குச் சரிக்கட்டப்படும்; இதற்கு எதிரிடையாக, வளர்ந்துசெல் விளைவின்கீழ் உற்பத்தியானது இருக்குமானால், உற்பத்தி குறையக்குறைய சராசரி உற்பத்திச் செலவுகள் அதிகரிக்குமாதலால், வரியைக்காட்டிலும் அதிகமாக விலையானது அதிகரிக்க நேரிடும். இதைப்போன்றதொரு முறையிலேயே, பணமானியத்தின் விளைவுகளையும் ஆராயலாம்; ஏனெனில், பணமானியம் என்பதும் ஓர் எதிர்முக வரியே (a negative tax) ஆகும்.

படம் 37-ல் இத்தகையதோர் உதாரணம் கொடுக்கப்பட்டுள்ளது. இதில், விற்கப்படுகின்ற பண்டத்தின் அலகு ஒவ்வொன்

றின்மீதும் RT என்று ஒரு வரி விதிக்கப்பட்டுள்ளது. எனவே, அளிப்புக் கோடானது (supply) அதே அளவில் இடம்பெயர்த்து, SS-லிருந்து $S_1S_1'$ ஆக அமைக்கப்பட்டுள்ளது. உற்பத்தியளவானது OM-லிருந்து OM′ ஆகக் குறைகின்றது. விலையானது OP-யிலிருந்து OP′ ஆக அதிகரிக்கின்றது. எனினும், விலையில் ஏற்படும் இவ்வதிகரிப்பானது (PP′ = RS) விதிக்கப்படும் வரியை விடக் குறைவாகவே இருக்கின்றது. இவை இரண்டுக்குமிடையேயுள்ள வேறுபாடாகிய ST என்பது, குறைந்த உற்பத்திச் செலவினால் (இக் குறைந்த அளவு உற்பத்தியில்தான் உற்பத்தியானது தற்போது செய்யப்படுகிறது) சரிக்கட்டப்பட்டுவிடுகிறது. இவை யாவற்றையும் பொதுமைப்படுத்தி, ஒரு மறைமுக வரியின் ஒரு பகுதியானது விலை அதிகரிப்பின் ஒரு பகுதியாக இருப்பது அவ்வரியின் எச்சமாக உள்ள அளவிற்குச் சமமாக இருக்குமென்றும், இது சம்பந்தப்பட்ட புள்ளியில் அளிப்பின் நெகிழ்ச்சிக்கும் தேவையின் நெகிழ்ச்சிக்குமிடையேயுள்ள உறவினையேயொக்குமென்பதனையும் எடுத்துக்கூறலாம்.




படம் 37

படம் 37-ன்படி இதனை வேறுவிதமாகக் கூறப்போனால், RS/ST ஆனது, X என்னும் புள்ளியில் உள்ள அளிப்பு நெகிழ்ச்சியானது (elasticity of supply) X என்னும் புள்ளியிலுள்ள தேவை நெகிழ்ச்சியால் (elasticity of demand) வகுத்துவரும் தொகைக்குச் சமம் எனலாம்.

வரியானது அது நேர்முக வரியாக இருப்பினும் அல்லது எதிர்முக வரியாக இருப்பினும், நுகர்ச்சியானது விலையினால் கட்டுப்படுத்

தப்படுவதற்கு ஒரு சாதனமாக விளங்குகின்றது. தேவையைக் கட்டுப்படுத்துவதன்மூலம், பங்கீட்டு முறையும் இத்தகையதொரு நோக்கத்தினை எய்தும் ஒரு முயற்சியாக இருந்துவருகிறது. ஒரு பண்டமானது குறைவான அளிப்பை (short supply) உடையதாக இருப்பின் (பங்கீட்டு முறை அவசியம் என்று கருதப்படும் போது நிலை இவ்வாறாகத்தான் இருக்கும்), அளிப்புக் கோடானது இடப்புறமாக இடம்மாறி அமைக்கப்படும்; விலையானது இயல்பாக அதிகரிக்கப்படும். பங்கீட்டின் விளைவு யாதெனில், இதேவிதமாகத் தேவைக்கோட்டினை இடப்புறமாக இடம் மாறி இருக்கச் செய்யும்; இப்படிச் செய்வதன்மூலமாக விலைகளின் அதிகரிப்பைத் தடுக்கவோ அல்லது குறைக்கவோ கூடும். இவ்விதமாக ஒரு பொருளின் பற்றுக்குறை ஏற்படின், செல்வந்தர்கள் சமுதாயத்தின் ஏழை மக்களைத் தள்ளிவிட்டுத் தாங்களே அப் பொருளை வாங்கி நுகர்வது என்பது இயலாமற்போகின்றது. இவ்வாறு செல்வந்தர்கள் ஏழைகளைத் தள்ளிவிட்டுத் தாங்கள் அப் பொருளை வாங்கிக்கொள்ள இயலுகின்றதொரு நிலை, தேவை-அளிப்புச் சக்திகள் (demand and supply forces) தடையேதுமின்றிச் செயற்படும்படி விடப்படும்போது தான் ஏற்படுகின்றது. போர்க்காலங்களில், மக்களின் உடல்நலத்திற்கு இன்றியமையாதனவாக இருக்கக்கூடும் பண்டங்களின் அளிப்புக் குறைவாக இருக்கும்போது, அத்தகைய குறைந்த அளவு பண்டங்களைப் பங்கீட்டு முறையினால் (as per rationing) ஒவ்வொருவரும், ஆணாயினும் அல்லது பெண்ணாயினும், தங்களது உடல்நலத்திற்கு அவசியமான அளவிற்கு அப் பொருள்களை வாங்கிப் பயனடைய முடிகின்றது. பங்கீட்டு முறை இல்லையானால், இப் பொருள்களை அதிக விலை கொடுத்து வாங்கக்கூடிய செல்வந்தர்களே பெறக்கூடும்.

ஆயினும், இயல்பான காலங்களில் பங்கீட்டு முறையானது பல தீமைகளை யுடையதாகவே இருக்கின்றது. அவற்றில் ஒன்று பங்கீட்டு முறையினைச் செயற்படுத்தவும் நிருவகிக்கவும் கணிசமான அளவிற்குப் பணியாளர்களும், இன்னும் மற்றச் சாதனங்களும் தேவைப்படும். இவைகளை ஆக்கமான பயன்களுக்கு அமர்த்தினால் அவை சமூகத்தின் செல்வத்தினை அதிகரிக்கக்கூடும். இரண்டாவதாக, ஒவ்வொருவருடைய நுகர்ச்சியையும் நன்முனைப்பாக வரையறுக்கும்போது (arbitrarily limiting), தடையிலாத் தெரிதலின் மூலம் (through free choice) மனநிறைவை உச்சப்படுத்திக் கொள்ளும் கோட்பாடானது (the principle of maximising satisfaction) குறுக்கிடப்படுகின்றது. பங்கீட்டு முறையானது எனக்கு அனுமதித்திருக்கும் அளவைக் காட்டிலும், அதிகமான பன்றி இறைச்சியும் (bacon), குறைவான சர்க்கரையும் எனக்குத்

தேவைப்படக்கூடும். வேறொருவருக்குக் குறைந்த அளவு பன்றி இறைச்சியும் அதிக அளவு சர்க்கரையும் தேவைப்படக்கூடும். ஒவ்வொரு நுகர்வோருக்கும் தடையில்லாமல் தெரிந்தெடுக்கக்கூடிய உரிமையளிக்கப்படும்போது (given a free choice), ஒரு நுகர்வோர் தனது பணத்தைத் தனக்குகந்தவாறு செலவழித்து அதன்மூலம் தனது வரையறுக்கப்பட்ட வருமானத்திலிருந்து மிக அதிகமான மனநிறைவைப் பெறக்கூடும். பங்கீட்டுமுறை கொண்டுவரப்படும் போது, நுகர்வோர்கள், அவர்கள் சட்ட விரோதமானவும் திறமையற்றனவுமாகிய முறைகளான பண்டமாற்றுச் செய்தல் (bartering), பங்கீட்டு அட்டைகளை விலைக்கு விற்றல் ஆகியவைகளைச் செய்வதில் (வழக்கமாக) ஈடுபட்டாலொழிய, உத்தம அளவு நுகர்ச்சியினைப் பெறமுடியாது. மூன்றாவதாக, ஒரு பற்றுக்குறையின் (shortage) இயல்பான விளைவாகிய விலையில் ஏற்படும் அதிகரிப்பைத் தடுத்து நிறுத்தலினால், பங்கீட்டு முறையானது இயல்பான சரிசெய்தல் சக்திகளை (normal forces of adjustment) (அதிகமான இலாபங்கள் அதிகமான உற்பத்தியைத் தூண்டுவதுடன் புதிய உற்பத்தியாளர்களையும் தொழிலை நோக்கி ஈர்க்கும்) செயற்படாவண்ணம் தடைசெய்வதாக உள்ளது. தனிச் சூழ்நிலைகளில் (போர், அல்லது இன்னும் மற்ற நெருக்கடி காலங்கள்போன்ற) இத்தகைய சரிசெய்தல் முறை செயற்பட முடியாமற் போகலாம், அல்லது மிகவும் மெதுவாகச் செயற்படவே இயல்வதாக இருக்கலாம். எனவே, இத்தகைய சூழ்நிலைகளில் விலையில் ஏற்படும் ஓர் அதிகரிப்பானது மேற்சொன்ன பயனுள்ள நோக்கத்தை நிறைவேற்ற முடியாது. ஆயினும், இயல்பான காலங்களில் இத்தகைய விளைவு மிக முக்கியமானதொன்றாக இருக்கக்கூடுமாதலால், இதனை அவ்வளவு எளிதாகப் புறக்கணித்துவிடுவதற்கில்லை. தவிர்க்கமுடியாததொரு நிலை ஏற்பட்டாலொழிய, மற்றபடி ஒரு பண்டத்தின் பற்றுக்குறையைச் சமாளிக்கும் எந்த நடவடிக்கைகளும் அப் பற்றுக்குறையைப் போக்குவதைத் தடைசெய்வனவாக இருத்தல் கூடாது.

எனவே, நுகர்வோரின் போக்கினை ஆய்ந்ததன் விளைவாகக் கீழ்க்காணும் ஒரு முடிவுக்கு நாம் வரக்கூடும். அரசாங்கமானது, சமுதாயத்தின் ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்கு (a particular section of the community) நலன் பாதுகாப்போ அல்லது சலுகையோ அளிக்க விரும்பினால், சம்பந்தப்பட்ட பிரிவினரின் வருமானங்களைச் சரிசெய்தலின்மூலம் அளிப்பதே சிறந்ததாகும். ஒரு பண்டத்தின் விலையில் குறுக்கிடுவதன்மூலம் விளையும் நன்மை அல்லது சுமை (benefit or burden) சிதறுண்டு பாரபட்சமின்றி நுகர்வோர் அனைவருக்குமே சென்று பயனளிப்பதாகத்தான்

உள்ளது. மேலும், இம்முறை, தடையிலாத் தெரிதலை யாவர்க்கும் பொதுவானதாக ஏற்படுத்தித் தருகின்றது. இப்படிக் கூறுவதால், சில குறிப்பிட்ட விவகாரங்களில், அங்காடி விலைகளைக் கட்டுப்படுத்துவது நியாயமற்றது என்று பொருள்படாது. உதாரணமாக, அரசாங்கம், குழந்தைகள் பாலினை நுகர்வதை அதிகரிக்க விழையலாம்; அல்லது தீமை பயக்கும் பண்டங்களின் நுகர்ச்சியைக் குறைக்கவும் விழையலாம். இத்தகைய நோக்கத்திற்கு, அந்தக் குறிப்பிட்ட பண்டங்களின் அங்காடி விலையில் தலையிடுவது அவசியமாக இருத்தல் கூடும். ஒவ்வொரு விவகாரமும் அதற்குரிய தகுதிகளின்பேரில் தீர்வுகாணப்படல் வேண்டும். பொதுவாக, மறைமுக வரியை விதித்தலானது (the use of indirect taxation)—உதாரணமாக, குறிப்பிட்ட பண்டங்களின்மீது வரி விதித்தல்—குறிப்பிட்ட சூழ்நிலையில்தான் சரியானதாக இருக்கும். அரசாங்கமானது தனக்கு வேண்டிய எல்லா வருவாயையும் நேர்முக வரியின்மூலமே (உதாரணமாக, பண்டங்களின்மீது விதிக்கப்படாமல் நபர்கள் அல்லது தொழில் நிறுவனங்கள்மீது விதிக்கப்படும் வரி) பெறுமானால், அது பொருளினை நிறைய ஈட்டவேண்டுமென்னும் ஊக்கிகளை (incentives) ஓங்கவொட்டாமல் அவைகளுக்குப் பெரும் ஊறு விளைவிக்கக்கூடும்.

### மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles*, Vol. I, Ch. XIV.

Ryan, *Price Theory*, Chs. 4 and 8.

Marshall, *Principles of Economics*, Bk. V. Ch. 13.

Sir D. H. Robertson and S. R. Dennison, *The Control of Industry* (Cambridge University Press, London, 1960).

Robbins, *The Economic Problem in Peace and War* (Macmillan, London, 1947), Chs. I and III.

J. E. Meade, *Planning and Price Mechanism* (Allen and Unwin, London, 1948), Ch. I.

மடல் V

# வருமானப் பகிர்வுக் கோட்பாடு
# (The Theory of Income Distribution)

## 5. கூலிகள்
## (Wages)

### 1. உழைப்பிற்கான தேவை (The Demand for Labour)

இதுகாறும், பல்வேறு பண்டங்களின் விலை அல்லது மதிப்பு இவற்றை நிர்ணயிக்கும் காரணிகளைப்பற்றியே நாம் ஆராய்ந்தோம். தற்போது, இம் மதிப்பானது, அப் பண்டங்களின் உற்பத்தியில் சம்பந்தப்பட்டுள்ள பல்வேறு உற்பத்திக் காரணிகளுக்கிடையே எவ்வாறு பகிர்ந்தளிக்கப்படுகின்றதென்பதனைப் பார்ப்போம். பண்டங்களின் விற்பனைமூலம் கிடைக்கின்ற மொத்த ஆதாயத்திலிருந்தே உழைப்பிற்கான கூலி (கூலியென்பதில் சம்பளமும் அடங்கும்), நிலத்திற்கான வாடகை, முதலுக்கான வட்டி ஆகியவை கொடுக்கப் படுகின்றனவென்பதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். இவை யாவற்றையும் கொடுத்துவிட்ட பின்னர், ஆதாயத்தில் என்ன எச்சமாக உள்ளதோ அது, தொழில் துணிவு (enterprise) என்னும் காரணியின் ஊதியமாக (reward)—அதாவது, இலாபம்—இருக்கின்றது. இத்தகைய பலவகையான பங்குகள் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றன? வட்டியைப்பற்றி ஆராய்வதைத் தற்சமயம் சற்று ஒதுக்கி வைப்பது நலம். வட்டியென்பது முற்றிலும் ஒரு பண நிகழ்ச்சியாதலாலும், இந் நூலில் ஆறும் மடலில் கூறப்பட்டுள்ள பண முறை (monetary system) என்பதனை ஆராய்ந்தபின்னரே இதனை நன்குபுரிந்து கொள்ளக்கூடுமாதலாலும், இது பின்னதாக ஆராயப் பட்டுள்ளது.

நாம் இதற்கு முன்னர் நிகழ்த்திய ஆய்வினின்றும், பண்டங்களின் விலைகளைத் தேவை, அளிப்பு ஆகிய இவ்விரண்டும் சேர்ந்து

நிர்ணயிக்கின்றன என்பதைக் கண்டோம். இதைப்போன்றே காரணிகளின் விலைகளையும்—அதாவது, கூலிகள், வாடகை, இலாபங்கள் ஆகியவற்றை—அளிப்பு, தேவை ஆகிய இவ்விரண்டுமே ஒன்று சேர்ந்து நிர்ணயிக்கின்றன. எனவே, ஏற்கெனவே நிகழ்த்திய ஆய்வினையே தற்போதும் கையாளுவோம். முதலில் கூலிகளைப் பற்றி ஆராய்வது நலம். மொத்த உற்பத்திச் செலவுகளில் மிக முக்கியமான கூறாக (most important element) இருப்பது கூலியேயாகும்; தற்போது ஐக்கிய அரசாங்கத்தின் (United Kingdom) ஆண்டு தேசீய வருமானத்தில் (annual national product) மூன்றில் இரண்டு பங்கிற்குமேல் கூலிகளாகவும் (wages) சம்பளங்களாகவுமே கொடுபடப்படுகின்றது. ஈண்டு ஒன்றை நமது கவனத்தில் கொள்ள வேண்டும். கூலிகளென்பவை உற்பத்திச் செலவில் ஒரு கூறு என்பதோடல்லாமல், மக்கள்தொகையில் பெரும்பான்மையினருக்கு முக்கியமான வருமானமாகவும் இருக்கின்றன. இதன் விளைவாகப் பொருளாதாரம் சம்பந்தப்படாத பல சக்திகள், கூலிகளை நிர்ணயிப்பதில் இடம்பெறுகின்றன. பல்வகையான உழைப்பிற்குக் கூலிகளை அளிப்பதில் சம்பந்தப்பட்டுள்ள பொருளாதாரக் காரணிகளைமட்டும் நமது ஆய்விற்கு எடுத்துக்கொண்டு கூலி நிர்ணயிக்கப்படுவதை ஆராயக்கூடும். ஆனால், நடைமுறை உலகத்தில், பொருளாதாரச் சார்பற்ற காரணிகளும் இடம்பெறுகின்றனவாதலால், மேற்கூறிய முறையில் கூலி நிர்ணயம் சம்பந்தமாகக்கொள்ளப்படும் முடிவுகளை மாற்றியமைக்கவே நேரிடும். மேலும், இவ்வாய்வினை, கூலிகளைப் பற்றிப் பொதுப்படையாக விளக்குவதன்மூலமே நிகழ்த்தக்கூடும். ஆயினும், பல்வேறு வகையான உழைப்பிற்கு வெவ்வேறு அளவு கூலிகள் கொடுக்கப்படுவதற்குக் காரணமாக இருக்கின்ற சக்திகளையும் ஆராய்வது அவசியமாக உள்ளது.

உழைப்பின் தேவைக்கோட்டினை அமைப்பது எது என்பதனைப் பார்ப்போம். பண்டங்களைப் பொறுத்தவரையில், சம்பந்தப்பட்ட பண்டத்தை, வாங்கப்படும் கணியத்தை அப் பண்டத்தினின்றும் நுகர்வோர் அடைகின்ற பயன்பாட்டுடன் தொடர்புபடுத்திக் கூற முடிந்தது. உழைப்பினை வாங்குகின்றவர்கள், அதாவது, தொழில் நிறுவனங்களில் தொழிலாளர்களின் வேலைக்குக் கூலி கொடுக்கின்ற தொழில்முயல்வோர்கள்—அவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள உழைப்பினின்றும் நேரடியான பயன்பாட்டினைப் (direct utility) பெறுவதில்லை. அவர்கள் உழைப்பினை விரும்புவது அதனையே நுகர்வதற்கன்று; உழைப்பினால் உற்பத்தி செய்யப்படுகின்ற பண்டங்களுக்கு உழைப்புத் தேவையாக இருப்பதால்தான் அவர்களுக்கு அது தேவைப்படுகின்றது. தொழில்முயல்வோருக்குஉழைப்பினுடையஓர் அலகின் பயன்பாடானது, அந்த உழைப்பானது உற்பத்தி செய்யக்

கூடிய உற்பத்தியளவின் மதிப்பால் (value of the output) உணர்த்தப்படும். ஒரு குறிப்பிட்ட மனிதன் தனது ஒரு வார உழைப்பின் மூலம், தனக்குக் கொடுக்கப்படும் கூலியைவிட அதிகமான அளவு மதிப்புடைய பண்டங்களை உற்பத்தி செய்வானேயாகில், அந்த மனிதனின் உழைப்பைத் தொழில்முயல்வோன் வாங்கிக்கொள்வர். இதனை வேறு வழியில் கூறப்போனால், ஒரு மனிதனின் உழைப்பு, அவனுக்குக் கொடுக்கப்படும் கூலியளவிற்கும் குறைந்த மதிப்புடைய பண்டங்களின் உற்பத்தியளவையே நல்குமாயின், தொழில்முயல்வோன் அத்தகைய மனிதரை வேலைக்கமர்த்திக்கொள்வதில் யாதொரு பயனுமில்லையெனக் கருதி வேலைக்கமர்த்திக்கொள்ள மாட்டார்.

பண்டங்களின் தேவை, அளிப்பு இவற்றை ஆராய்வதற்குக் கையாண்ட முறைகளைக் கையாண்டே, உழைப்பின் தேவையையும் ஆராயலாம்.




படம் 38

படம் 38 (a)-யில் உள்ள QQ′ என்பது ஒரு சமகணியக் கோடாகும். இதில், கொடுக்கப்பட்டுள்ள ஓர் உற்பத்தி மட்டத்தில் ஒரு குறிப்பிட்ட உற்பத்தியாளர், பண்டங்களை உற்பத்தி செய்வது காட்டப்பட்டிருக்கின்றதெனக் கொள்வோம். ஈண்டு, இக்கோடானது குறிப்பிட்டதோர் உற்பத்தியளவினை (given output) அதனுடைய பருப்பொருள் கணியத்திலல்லாது (physical quantity) அதன் அங்காடி மதிப்பில் குறிக்கின்றதெனக் கொள்வது, ஆராய்ச்சியினை நமக்கு மிகவும் எளிதுபடுத்திக்கொள்ள உதவும். இதே போன்று, மிகவும் எளிதுபடுத்துவான்வேண்டி முதல், உழைப்பு

ஆகியவைமட்டும் உற்பத்தியில் மாறும் காரணிகளாக (variable factors) உள்ளன எனக் கொள்வோம். இத்தகையதோர் எடுகோளை நாம் கொள்வோமாகில், உழைப்பின் ஒப்பீடான விலையானது (the relative price of labour)—நடப்பு மூலதனச் செலவிற்கு (current cost of capital) ஒப்பீடான அதனுடைய நடப்புக் கூலி வீதம் (current wage-rate) $P_1A_1$ என்னும் விலைக்கோட்டால் காட்டப்பட்டுள்ளது. கூலிகளின் இம் மட்டத்தில் (at this level of wages) தொழில்முயல்வோன் $OL_1$ அளவிய உழைப்பினை வேலைக்கமர்த்திக்கொள்வார். தற்போது, மற்றவைகள் சமமாக இருக்கும் போது, கூலி வீதமானது குறைந்தால், விலைக்கோடானது (price line) $P_2A_2$-க்கு மேற்புறமாகச் செல்லும்; வேலைக்கமர்த்திக்கொள்ளப்படும் உழைப்பும் $OL_2$ ஆக அதிகரிக்கும்; இதைப்போன்றே, மேலும், கூலி வீதமானது குறையுமானல், வேலைக்கமர்த்திக்கொள்ளப்படும் உழைப்பானது $OL_3$ ஆக அதிகரிப்பதுடன், விலைக் கோடும் $P_3A_3$ ஆக மாறும். எளிதானதொரு, மொத்தக் கணக்கீட்டு முறை மூலம் (by simple aggregation), தொழில் முழுவதற்குமானதொரு தேவைக்கோட்டினை (demand curve) வரைதல் தற்போது சாத்தியமாகும். படம் 38 (b)-யில் DD′ என்பது இத்தகையதொரு தேவைக் கோடாகும். இக் கோடு, கூலிகளின் மட்டத்தில் வேலைக்கமர்த்தப்படும் தொழிலாளர்களின் எண்ணிக்கையை உணர்த்துகின்றது. இக் கோட்டின் பயனை நோக்கும்போது, இது உழைப்பின் ஓர் இறுதிநிலை ஆக்கக் கோடாகவே (a curve of the marginal productivity of labour) இருக்கின்றது. உழைப்பின் ஒரு கூடுதலான அலகானது எப்போது உற்பத்தியிலீடுபடுத்தப்படுமெனில், அது கூடுதலாக உற்பத்தி செய்யும் உற்பத்தியின் மதிப்பு—அதனுடைய இறுதிநிலை ஆக்கம்—அதனுடைய கூலிச்செலவினைச் (wage cost) சரிக்கட்டுமளவிற்கு இருக்கும்போது எனலாம். கூலிகள் இறுதிநிலை ஆக்கத்திற்கும் குறைவாக இருக்குமானல், தொழில்முயல்வோர்கள் நடப்பிலுள்ள எந்த ஒரு கூலி வீதத்திலும் உழைப்பினை வேலைக் கமர்த்திக்கொள்ளப் போட்டியிடுவர் (ஒவ்வோர் அலகும் செலவைக் காட்டிலும் அதிகமான வருவாயினைக் கூடுதலாக அளிப்பதால்); இதன் காரணமாகத் தேவைக்கோடானது (demand curve) மேல் நோக்கி இடம் மாறும். இறுதிநிலை ஆக்கமானது, கூலி வீதத்துடன் சமமாக இருக்குமளவிற்கு வரும்வரையிலும் இவ்வாறு தேவைக் கோடு மேல்நோக்கியே இடம் மாறி அமைந்திருக்கும்.

படம் 38 (b)-யில் உழைப்பிற்குள்ள தேவைக் கோடானது (the demand curve for labour) இடமிருந்து வலமாகக் கீழ்நோக்கிச் சரிந்துள்ளதாகக் காட்டப்பட்டுள்ளது. இதற்குக் காரணம் என்ன? இதற்கு ஒரு பகுதி விடையானது, நாம் ஏற்கெனவே ஆராய்ந்த

குறைந்துசெல் விளைவு விதியில் அடங்கியுள்ளது. இந்தக் கோடானது, (எல்லாத் தேவைக் கோடுகளைப்போலவே) மற்றவை கள் சமமாக இருக்கும்போது என்னும் எடுகோளில் வரையப்பட்டுள்ளது. இச் சான்றில் தொழிலில் பயன்படுத்தப்பட்டிருக்கும் மற்றக் காரணிகளின் அளவுகள் மாருமல் நிலையாயிருக்கின்றனவென்பதும், பண்டத்திற்கான தேவை நிலையில் மாற்றமெதுவுமில்லை யென்பதும், தொழில்நுட்ப அறிவுத் திறனில் மாற்றமெதுவுமில்லையென்பதுமான எடுகோள் கொள்ளப்பட்டுள்ளது. ஒரு காரணியின் அதிகமான எண்ணிக்கைகள் (நிலையான தரத்தினையுடையவை) மற்ருெரு காரணியின் அல்லது காரணிகளின் தொகுதியின் நிலையான எண்ணிக்கைகளுடன் செலுத்தப்படும்போது விளையும் கூடுதலான பருப்பொருளியலான உற்பத்தி வளர்வீதமாகக் குறைந்துகொண்டே செல்லுமென்பதை (progressively diminish) நாம் ஏற்கெனவே பார்த்தோம். எனவே, பயன்படுத்தப்படும் உழைப்பின் அளவு அதிகரிக்க அதிகரிக்க, உழைப்பின் இறுதிநிலை ஆக்கக் கோடானது சரிந்துகொண்டே வரும். (ஆரம்பநிலைகளில், இக் கோடானது நிச்சயமாக உச்சமான அளவிற்கு உயர்ந்தே காணப்படும்.)

உழைப்பின் ஆக்கக் கோடானது (labour productivity curve) கீழ்நோக்கிச் சரிந்து காணப்படுவதற்கு இரண்டாவது காரணம், தொழில் முழுமைக்குமே (நிறைகுறைப் போட்டி இருக்குமாளுல் தொழில்முயல்வோனுக்கும்), உற்பத்தியானது அதிகரிக்க அதிகரிக்க, உற்பத்தியின் ஒவ்வோர் அலகினின்றும் கிடைக்கப்பெறும் மொத்த வருவாயின் கூடுதலானது குறைந்துகொண்டே செல்லும். ஏனெனில், அதிகரித்த உற்பத்தியளவை விற்ருகவேண்டுமேயாளுல் பண்டத்தின் விலை குறைக்கப்படவேண்டும். உற்பத்தியில் முதல் அலகிற்கும் பின்னருள்ள ஒவ்வோர் அலகினின்றும் கிடைக்கப்பெறும் இறுதிநிலை வருவாயானது, நான்காம் மடலில் கூறப்பட்டதுபோல், விலையைக்காட்டிலும் குறைவாகவே இருந்தாக வேண்டும்; இத்துடன், உற்பத்தியளவு அதிகரிக்கும்போதும், விலை இறங்கியேயாகவேண்டும். தொழில் முயல்வோர் கருதுவதெல்லாம், உழைப்பு விற்கப்படும் விலையை அன்று; அவ்வுழைப்பு கொணருகின்ற கூடுதலான வருவாயினையே பின்னதாகக் கூறப்பட்டுள்ள இவ் வருவாயைக்காட்டிலும் உழைப்பிற்கு அளிக்கப்படும் கூலியானது அதிகமாயிராதவரையிலும், உழைப்பானது வேலைக்கமர்த்திக் கொள்ளப்படும். உழைப்பானது அதிகமான அளவில் வேலையிலமர்த்தப்பட்டுக்கொண்டே செல்லச்செல்ல, இக் கூடுதலான வருவாயானது (additional revenue) உழைப்பின் பொருளியலான ஆக்கம் (physical productivity) நிலையானதாக இருப்பினும் வளர்வீதத்தில் குறைந்துகொண்டே செல்லும்.

மற்றவைகள் சமமாக இருக்கும்போது (other things being equal) என்ற எடுகோள் (assumption) நீக்கப்படுமானால், ஒரு பண்டத்தின் தேவைக்கோட்டிற்கு என்ன முறை கையாளப்படுகின்றதோ அதே முறையே பின்பற்றப்பட வேண்டும். கோடு முழுவதுமே மீண்டும் மாற்றி வரையப்பட வேண்டும். உதாரணமாக, சம்பந்தப்பட்ட நிறுவனத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள முதலின் அளவு அதிகரிக்கப்படுமானால், உழைப்பின் பொருளியலாக்கம் (physical productivity of labour), பெரும்பாலும் நிச்சயமாக அதிகரிக்கப்படும். ஆகவே, கோடு முழுவதும் வலப்பக்கமாக இடம் மாறி அமையும். மற்றொரு புறம், உற்பத்தி செய்யப்படும் பண்டத்தின் விலை குறையுமானால், கோடு முழுவதுமே இடப்புறமாக இடம் மாறி அமையும். இதற்குக் காரணம், பருப்பொருளியலான கணக்குப்படி (அதாவது, வாரமொன்றுக்கு உற்பத்தி செய்யப்படும் இத்தனை டன்கள் நிலக்கரி அல்லது இத்தனை சோடி சறுக்கு விளையாட்டு உருளைகள் என்ற கணக்குப்படி) ஆக்கத்தின் மதிப்பானது குறைந்திருந்திருக்க வேண்டும். தொழில்முயல்வோரைப் பொறுத்த அளவில், உழைப்பினுடைய ஆக்கத்தின் மதிப்பே (the value of labour's productivity) முக்கியமானதாக இருக்கிறது.

கொடுக்கப்பட்டுள்ள ஒரு குறிப்பிட்ட கூலி வீதத்தில், தேவைக் கோடானது தொழில்முயல்வோன் அந்தக் கூலி வீதத்தில் எவ்வளவு தொழிலாளர்களை வேலைக்கமர்த்திக்கொள்ள விழைவார் என்பதனை உணர்த்தும். படம் 38(b)-ல் சம்பந்தப்பட்ட உழைப்பின் வகைக்கு அமலில் உள்ள கூலி, வாரமொன்றுக்கு £ 10 எனக் கருதப்பட்டுள்ளது. இதே கூலி வீதத்தைத் தொழில்முயல்வோன் (enterpreneur) உழைப்பின் எல்லா அலகுகளுக்கும், அவைகளுடைய இறுதிநிலை ஆக்கம் எந்த அளவாக இருந்தபோதிலும், கொடுத்தாகவேண்டும். ஒரு நுகர்வோரானவர் ஒரு பண்டத்தின் எல்லா அலகுகளினின்றும் பெறுகின்ற இறுதிநிலைப் பயன்பாடானது (marginal utility) எந்த மட்டத்திலிருந்தபோதிலும், அவர் அவ்வலகுகள் யாவற்றையும் நடப்பிலிருக்கும் அங்காடி விலைக்கே பெறுவதுபோன்று, தொழில்முயல்வோனின் மேற்கூறிய நிலையுள்ளது. படத்திலுள்ள கோடானது, இந்தக் கூலி மட்டத்தில் 120 மனிதர்கள் வேலைக்கமர்த்தப்படுவார்களென்பதைச் சுட்டுகின்றது. தொழில்முயல்வோர்கள் இந்த எண்ணிக்கைக்கும் குறைவாக மனிதர்களை வேலைக்கமர்த்துவார்களேயாகில், அவர்கள் உச்சமான இலாபத்தைப் பெற இயலாது. காரணம், வேலைக்கமர்த்தப்பட்டுள்ள ஒவ்வொரு மனிதரும், தொழில்முயல்வோர்கள் அம் மனிதருக்குக் கொடுக்கவேண்டிய கூலிக்கும் அதிகமாக உற்பத்தியின் மதிப்பிற்குக் கூடுதலை இன்னும் உண்டுபண்ணிக்கொண்டிருப்பதே. இதே

போன்று, தொழில்முயல்வோர்கள் 120-க்கும் அதிகமான மனிதர்களை வேலைக்கமர்த்துவார்களாயினும் இலாபங்களை அதிகபட்சமாகப் பெறத் தவறுவர்; ஏனெனில், 120-க்கும் மேற்பட்டு மனிதர்களை வேலைக்கமர்த்தும்போது ஒவ்வொரு மனிதருக்கும், அவர் மொத்த உற்பத்தியின் மதிப்பிற்குக் கூடுதலை உண்டுபண்ணும் அளவிற்கும் மேலாகவே, கூலியினைத் தொழில்முயல்வோர்கள் கொடுத்துக் கொண்டிருப்பர்.

## 2. உழைப்பின் அளிப்பு (The Supply of Labour)

ஒரு நாட்டின் மொத்த உழைப்பின் அளிப்பானது (total supply of labour), ஏறக்குறைய அதன் மொத்த மக்கள்தொகையைப் பொறுத்தே இருக்கிறது. இவ்வளிப்பினை நிர்ணயிக்கும் சக்திகள் சிக்கலானவைகளாக இருப்பதுடன், அவை முற்றிலும் பொருளாதாரத்தின்பாற்படுவதாகவும் இல்லை. இவற்றில், குடும்ப வாழ்க்கையின் மதிப்புக் குறித்துச் சமூகம் கொண்டுள்ள கருத்துகள் குழந்தை வளர்ப்பு, குழந்தைக் கல்வி ஆகியவற்றிற்கு ஏற்படும் செலவுகள், நோயுற்றவருக்கும் வயதுவந்தவருக்கும் அளிக்கப்பட்டுள்ள நலத்திட்டங்கள் (welfare provisions), பெண்கள், சிறுவர்கள் ஆகியவர்களை வேலைக்கமர்த்திக்கொள்வதில் உள்ள பொதுவான மனப்பான்மை, வேலை நேரத்தை நிர்ணயிக்கும் சட்டதிட்டங்கள், வேலையினின்றும் ஓய்வு பெறுவதில் கடைப்பிடிக்கப்படும் கைக்கோள்கள் ஆகிய இன்னோரன்ன காரணங்களைக் கொண்டனவாக இருக்கின்றன. இச்சக்திகள் யாவும், ஒரு நபர் தான் ஒரு குறிப்பிட்ட கூலி வீதத்திற்கு எவ்வளவு உழைப்பினை நல்கவேண்டும் என்று முடிவு செய்வதில் அடங்கியுள்ளன.

இம் முடிவினை, பண்டங்களுக்குள்ள தேவையினை (demand of commodities) ஆராய்ந்ததுபோலவே, ஆராயக்கூடும். இந்நிகழ்ச்சியில், ஒரு நபரானவர் தான் ஓய்வு மணிகளைத் தியாகம் செய்கின்றார். அவ்வாறு தியாகம் செய்வதன்மூலமாக அந்த ஓய்வு மணிகளில் வேலை செய்து கூலியினைப் பெறுகின்றார். அவருடைய கூலி வீதம் எவ்வாறு உள்ளதெனில், ஓய்வினைத் தியாகம் செய்து பெறக்கூடிய வருமானத்தின் விலையாக இருக்கிறது. இதைப் போலவே ஓய்வு நேரத்தை அதிகமாகப் பெறவேண்டுமெனில், வருமானத்தைத் தியாகம் செய்தாக வேண்டும். படம் 39 (a)-ல் உள்ள சமநோக்குக் கோடுகள் (indifference curves), அவருக்குச் சம மனநிறைவைக் கொடுக்கும் ஓய்வு (leissure), வருமானம் (இவையிரண்டும் ஒரு குறிப்பிட்ட கால இடைவெளியில்—உதாரணமாக, ஒரு வாரம்—கணக்கிடப்பட்டவை) ஆகிய இவ்

விரண்டின் சேர்க்கைகளைக் காட்டுகின்றன. விலைக் கோடானது அமலில் உள்ள கூலி வீதத்தை உணர்த்துகின்றது; அதனுடைய சரிவு குறைவாகச் செல்லச்செல்லக் கூலி வீதம் அதிகமாக இருக்கும்—அதாவது, கூடுதலாக எடுத்துக்கொள்ளப்படும் ஒவ்வோர் ஓய்வு மணிக்கும் அதிகமான வருமானம் தியாகம் செய்யப்படுகிறது (அல்லது தியாகம் செய்யப்படும் ஒவ்வொரு மணிக்கும் அதிகமான வருமானம் ஈட்டப்படுகிறது). ஆரம்பநிலையில் உள்ள கூலி வீதமானது PA என்னும் கோட்டினுல் உணர்த்தப்பட்டுள்ளது ; இந்தக் கூலி மட்டத்தில் சம்பந்தப்பட்ட நபரானவர் $OH_1$ ஓய்வு மணிகளை எடுத்துக்கொண்டு—அதாவது, வாரமொன்றுக்கு அவர் $PH_1$ மணிகள் வேலை செய்வார்—$OM_1$ வார வருமானத்தை ஈட்டுவார். கூலி வீதமானது, தற்போது அதிகரிக்குமானுல், ஓய்வானது விலையதிக




படம் 39

மானதாகப் போகும்; விலைக்கோடானது PB ஆகச் சென்றமையும் போது, அந் நபர் தனது ஓய்வினை $OH_2$ மணிகளாகக் குறைத்துக் கொண்டு (அதாவது, அவர் கூடுதலாக $H_1$ $H_2$ மணிகள் வேலை செய்வார்) தனது வருமானத்தை $OM_2$ ஆக அதிகரித்துக் கொள்வார்.

இவ்வாருக, அங்காடியிலுள்ள எல்லாத் தனிநபர்களுடைய விளைவுகளையெல்லாம் தொகுத்துத் தொழிலுக்குள்ள உழைப்பின் அளிப்புக் கோட்டினை (the supply curve of labour for the industry) அமைத்தல் சாத்தியமாகும். இதற்குச் சான்ருகப் படம் 39 (b)-யில் உள்ள SS′ என்னும் கோடு அமைந்துள்ளது. இது ஓர் இயல்பான—அதாவது, மேல்நோக்கிச் செல்லும்—அளிப்புக் கோடாகும். கூலிவீதம் அதிகமானுல் தொழிலுக்குக் கிடைக்கும் உழைப்பும் அதிக

மாக இருக்கும். கூலியில் ஏற்படும் அதிகரிப்பானது தொழிலில் ஏற்கெனவேயுள்ள உழைப்புச் சக்திகளை நீண்ட மணிகள் வேலை செய்யும்படி ஊக்குவிக்கும். மேலும், வேறு பிற இடங்களில் வேலை செய்பவர்களையும் அதிகக் கூலிவீதத்தை அளிக்கும் நிறுவனத்தை அல்லது தொழிலை நோக்கி வரச்செய்யும். இவர்கள் அதிகரித்த கூலியினால் இவ்வாறு ஈர்க்கப்படுகின்றனர். ஆனால், நாடு முழுமைக்கும் கணக்குப் பார்க்கும்போது, இவ்வாறு இரண்டாவதாகக் கூறிய முறையில் மொத்த உழைப்பின் அளிப்பு அதிகரிக்கப்படுவதில்லை. ஆயினும், அதிகரித்த கூலிகள் (higher wages) ஏற்கெனவே வேலை தேடிக்கொண்டிராத மக்களை—உதாரணமாக, மணமாகிய பெண்கள் அல்லது வேலையைவிட்டு ஓய்வு பெற்றுள்ளவர்களை—வேலைக்கு ஈர்க்கக்கூடும்.

ஆயினும், தனிப்பட்ட பண்டத்தின் தேவையில் ஏற்படும் மாறுதல்களைப்போன்று பல்வேறு கூலி வீதங்களில் அளிக்கப்படுகின்ற உழைப்பு மணிகளில் ஏற்படுகின்ற இந்த மாற்றங்களும், ஒரு பதிலீட்டு விளைவையும் (a substitution effect), ஒரு வருமான விளைவையும் (income effect) உள்ளடக்கியனவாக உள்ளன. படம் 39 (a)-யில் முன்னதாகக் கூறியுள்ள விளைவு, PA என்னும் விலைக் கோடானது PB ஆக மாறியதில் ஏற்படுகின்ற சரிவினால் அளவிடப்பட்டுள்ளது; பின்னதாகக் கூறப்பட்டுள்ள விளைவானது $1_1 1_1'$ ஆகிய சமநோக்குக் கோடானது (indifference curve) $1_2 1_2'$ ஆகிய உயரமான சமநோக்குக் கோட்டினால் காணப்படுகின்றது. புதிய கூலி வீதத்திற்கிணையானதொரு விலைக் கோட்டினை முதல் சமநோக்குக் கோட்டினைத் தொட்டுச் செல்வதுபோல் (as a tangent to the first indifference curve) வரைவதன்மூலம்—படம் 39 (a)-யில் உள்ள PB′ வரையப்பட்டுள்ளதைப்போன்று—வருமான விளைவானது விலக்கப்படுமானால், உடனிகழ்ச்சியான (simultaneously) வருமான விளைவு இல்லாதிருந்தால் கூலிவீத மாற்றத்தால் ஏற்படும் பதிலீட்டு விளைவு (the substitution effect of the change in the wage rate) என்னவாக இருந்திருக்குமென்பதை ஆராய்வது சாத்தியமாகும். படத்தை நோக்கும்போது, வேலை செய்யப்பட்ட மணிகள் $H_1H_2$ஐக் காட்டிலும் அதிகமாக இருந்திருக்கக்கூடும் என்பது—உண்மையில் $H_1H_3$ ஆக அதிகரித்திருக்கிறது—காணப்படும். இதனால், ஒரு நபர் பெறுகின்ற அதிகமான வருமானமானது ஒரு பகுதி அதிகரித்த ஓய்வினால் (வருமானம் அதிகரிக்கப்படாமலிருந்தபோதுள்ள கூலி வீதத்தின்போது எடுத்துக்கொள்ளப்படும் ஓய்விற்கு ஒப்பீடாக) எடுபட்டுப்போகின்றது.

இந்த உதாரணத்தில், வருமான விளைவானது, பதிலீட்டு விளைவினைக் குறைவாக இருக்கும்படி செய்கின்றதாக உள்ளதே

தவிர அந்த முற்றிலுமாகச் சரிக்கட்டுமளவிற்கு வலிமையுள்ளதாக இல்லை—உண்மையில், ஏற்கெனவே வேலைசெய்ததைக் காட்டிலும் அதிகமான கூலியின்போது அதிகமான மணிகள் வேலைசெய்யப்பட்டுள்ளன. எனவே, வருமான விளைவானது (income effect) பதிலீட்டு விளைவினைச் சரிக்கட்டுவதற்கும் அதிகமான அளவிற்கு (more than offset the substitution effect) வலிமை வாய்ந்ததாக இருக்கவேண்டுமென்று கருதுவதற்கும் இடமுள்ளது. கூலிகள் அதிகரித்தால், தற்போது ஒருவர், குறிப்பிட்டதொரு வருமானத்தைக் குறைந்த மணி நேரம் வேலைசெய்து பெறக்கூடும். அம் மனிதர் இயன்ற அளவு அதிகபட்சமான வருமானத்தை அடைவதைக் காட்டிலும் ஒரு குறிப்பிட்ட வாழ்க்கைத் தரத்தை—ஒரு வாரம் அல்லது ஒரு மாதத்திற்கு ஒரு குறிப்பிட்ட வருமானத்தை விரும்புவதன்மூலம்—நோக்கமாகக் கொண்டிருப்பாரானால், கூலிகளின் அதிகரிப்பு அவர் எண்ணிய வாழ்க்கைத்தர 'இலக்கை' (target) அவர் அடைந்து மகிழத் துணைசெய்வதாக இருக்கும். இதனால் உழைப்பின் அளிப்பானது (supply of labour) அதிகரிப்பதற்குப் பதிலாகக் குறைவாகவே இருக்கும். உண்மையில் பார்க்கப்போனால், கூலி அதிகரிப்பானது தொழிலாளியைப் பணம் மிக்கவராகச் செய்திருப்பதால், தனது கூடுதலான செல்வத்தை அதிகமான ஓய்வினைப் பெறுவதற்குச் செலவிடுவார். உதாரணமாக, சனிக்கிழமை காலைகளை அல்லது ஒரு நடுவாரப் பிற்பகலை (a mid-week afternoon) ஓய்வு நிமித்தம் பெறுவதில் அவர் செலவிடுவார். ரொட்டி விலை இறங்கியதால் ஏற்படும் வருமான விளைவினை ரொட்டியின் நுகர்ச்சி குறைந்ததால் தரத்திலுயர்ந்த உணவுப் பொருள்களின் நுகர்ச்சி அதிகமானதைப் பார்த்தது போன்று மேற்கூறிய கூடுதலான கூலி கூடுதலான ஓய்வினை ஏற்படுத்துவதையும் கண்டு தெளியலாம். இதற்கு மாறாகக் கூலி வீதங்கள் குறையும்போது ஏற்கெனவே இருந்ததைக் காட்டிலும் அதிகமான அளவு உழைப்பானது அளிக்கப்படும்; காரணம், கூலிகள் குறைந்தாலும் அதிகமான மணி அளவு வேலை செய்து தொழிலாளர்கள் தங்களின் வருமானத்தை நிலைநிறுத்த முனைவர்.

படம் 40-ல் ஓர் உதாரணம் கொடுக்கப்பட்டுள்ளது. படம் 40 (a)-யில் உள்ள சமநோக்குக் கோட்டின் வடிவமானது கூலிவீதமானது அதிகரித்துச் செல்லச்செல்ல—அதாவது, விலைக்கோடானது PA-யிலிருந்து PB-யாகவும் பிறகு PC-யாகவும் இடம்மாறும்போது—நபர் தெரிந்தெடுக்க விழையும் ஓய்வு நேரமும் $OH_1$-லிருந்து $OH_2$ ஆகவும், பிறகு $OH_3$ ஆகவும் அதிகரிக்கும். இதனால் கிடைக்கப்பெறுகின்ற உழைப்பு அளிப்புக் கோடானது (the derived supply curve of labour) படம் 40 (b)-யில் உள்ளதைப்போன்று SS′ போன்றதொரு

பின்புறமாகச் சரியும் (backward sloping) கோடாக இருக்கும். எளிதாகத் தெளிவுபடுத்தும் நோக்கத்துடன், இக் கோடானது அதன் நீளம் முழுமையுமே பின்புறமாகச் சரிந்துள்ளதாகக் காட்டப் பட்டுள்ளது; ஆனால், அத்தகையதொரு கோடானது, உண்மையில், கிடைக்கப்பெறமாட்டாது; ஆயினும், தனது நீளத்தின் ஒரு பகுதி மட்டும் பின்புறமாக நோக்கிச் சரிந்திருக்கும் கோட்டினைக் கருத்தில் கொள்வது முற்றிலும் சரியானதாகும். எந்த ஒரு தனிப்பட்ட நிறுவனம் அல்லது தொழிலுக்கும், வருமான விளைவானது வலுப் பெற்றிருப்பது சாத்தியமில்லை; அத்தகைய விளைவானது அதிகரித்த கூலிகளால் தூண்டப்பட்டுப் பிற தொழில்களினின்றும் வந்து உட்புகுகின்ற தொழிலாளர்களால் சரிக்கட்டப்பட்டுவிடும்; இவ்வாறு சரிக்கட்டுவதற்கும் மேலாகவே ஏராளமான தொழிலாளர்கள் உட்புகுவர் (அல்லது இதற்கு எதிர்மாறான நிலையும் ஏற்படும்). ஆயினும், பொருளாதாரம் முழுமைக்கும் பார்க்கும்போது, அல்லது வெளியிலிருந்து புதிய தொழிலாளர்களை எளிதில் ஈர்க்கவியலாத




படம் 40.

தொழில்களில் பார்த்தால் (உதாரணமாக, நிலக்கரி வெட்டி எடுக்கும் தொழிலைக் கூறலாம்), வருமான விளைவானது முக்கியமானதாக இருக்கக்கூடும். உண்மையில், முன்னேறியுள்ள பொருளாதார நாடுகளில் உழைப்பின் வேலை மணிகள் (working hours of labour) குறைவாகவேயுள்ளன; அதிகமான உற்பத்தி ஆக்கமானது (high productivity) அதிகமான கூலிகளையும்,—நல்ல வாழ்க்கைத் தரங்களையும் ஏற்படுத்துகின்றது—அத்துடன் இவற்றையெல்லாம் துய்ப்பதற்கு வேண்டிய அதிகரித்த ஓய்விற்கான ஒரு தேவையையும் அது ஏற்படுத்துகின்றது.

## 3. போட்டியில் கூலிகளை நிர்ணயித்தல் (The Determination of Wages under Competition)

எந்த ஒரு தொழிலிலும் கூலிகளின் மட்டம் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றதென்பதைத் தேவைக்கோடு (demand curve), அளிப்புக் கோடு (supply curve) ஆகிய இவ்விரண்டு கோடுகளையும் வைத்துக்கொண்டு கண்டுபிடித்துவிடலாம். படம் 41-ல் DD′ என்னும் ஒரு தேவைக்கோடு காட்டப்பட்டுள்ளது. இக்கோடானது வேலைக்கமர்த்தப்பட்டிருப்பவர்களின் எண்ணிக்கையில் உள்ள உழைப்பின் இறுதிநிலை ஆக்கத்தை (marginal productivity of labour) உணர்த்துகிறது; இது, வேலையளிப்போர்கள் (employers) உழைப்பின் பல்வேறு அளவுகளுக்கு (different amounts of labour) எவ்வளவு கூலி கொடுக்கத் தயாராக இருக்கின்றனரென்பதை உணர்த்துகின்றது.



படம் 41

SS′ என்னும் அளிப்புக் கோடானது பல்வேறு கூலி வீதங்களில் எவ்வளவு அளவு உழைப்பு முன்வருகின்றதென்பதனை உணர்த்துகின்றது. கூலிகள் போட்டியின்கீழ் நிர்ணயிக்கப்படுமானால்,–அதாவது, தற்சமயத்திற்குத் தொழிற்சங்கங்களின் சக்தியையும், கூலி சம்பந்தமான அரசாங்கத்தின் சட்டம் முதலியவற்றையும் இல்லையென்று கருதுதல் வேண்டும்—கூலி வீதமானது OP ஆக இருக்கும். ஏனெனில், இந்தக் கூலியில்தான், தொழிலில் உழைப்புக்குள்ள தேவையானது (the demand for labour in the industry) அளிக்கப்படுவதற்குமுன் வரும் உழைப்பின் அளவிற்குச் (அதாவது, OM அலகுகள்) சமமாக இருக்கும். கூலியானது இந்த மட்டத்திற்கும் அதிகமாக இருப்பின், தேவையானது இந்தக் கூலி மட்டத்தில் அளிக்கப்படுகின்ற உழைப்பின் மொத்த அளவினையும் (total amount of labour being offered at that wage) பெறுகின்ற அளவிற்குப் போதுமானதாக இருக்காது. இதனால் வேலையின்மை ஏற்படும். வேலைகளுக்கான போட்டியானது கூலியை பலவந்தமாக மீண்டும் குறையச் செய்யும்வரையிலும் வேலையின்மை இருக்கும். கூலியானது இந்த மட்டத்திற்கும் குறைவாக இருப்பின், அத்தகைய கூலியில் உழைப்பின் அளிப்பானது (supply of labour) தேவைக்கும் குறைவாகவே (fall below the demand) இருக்கும்; உழைப்பினைப் பெறுவதற்கு வேலையளிப்போர்கள் தங்களுக்

குள்ளேயே போட்டியிட்டுக்கொள்வாராகில், அப் போட்டியின் சக்தியானது கூலிகளை சமநிலைப் புள்ளிக்கு உயர்த்தும். இவை யாவும், கூலிகள், போட்டிச் சக்திகள் தடையின்றி இயங்குவதன் காரணமாகவே நிர்ணயிக்கப்படுகின்றன என்னும் கருத்தில் முடிவு செய்யப்பட்டுள்ளன. ஆனால், நடைமுறை உலகத்தில் இது எப்போதும் உண்மையாக இருப்பதேயில்லை. எனவே, இதன் காரணமாகக் கூலி நிர்ணய முறையானது நிறைய சிக்கல் நிறைந்ததாகவே இருக்கின்றது.

நிறைவுப் போட்டி உள்ளதொரு சூழ்நிலையில் தனி நிறுவனமானது—தொழில் மிகச் சிறியதோர் உறுப்பாக இருக்கின்ற காரணத்தால்—தொழிலில் பயன்படுத்தப்படுகின்ற தொழிலாளர்களுக்கான நடப்பு அங்காடி விலையைக் கொடுக்கும்படி நேரிடும். அந் நிறுவனமானது, தான் தேவைப்படுகின்ற உழைப்பின் அளவை அதிகரிப்பதன்மூலமோ அல்லது குறைத்துக்கொள்வதன்மூலமோ கூலிகளின் மட்டத்தை வசப்படுத்த இயலாது. ஆகவே, உழைப்பின் அளிப்புக்கோடானது (the supply curve of labour) அங்காடிக் கூலி வீதத்தின் வழியாகச் செல்லும் ஒரு படுகிடைக்கோடாக (a horizontal line) இருக்கிறது. ஆயினும், தொழில் முழுமைக்கும் பார்க்கப் போனால், உழைப்பிற்குள்ள தேவைக்கோட்டில் ஏற்படும் மாற்றமானது (a shift in the demand curve for labour) கூலிகளின் மட்டத்தை வெகுவாகப் பாதிக்கும். தேவையில் ஏற்படும் ஒரு மாற்றத்திற்கேற்பக் கூலிகளில் ஏற்படும் மாற்றத்தின் சரியான அளவு (the exact degree of movement in wages) உழைப்பு அளிப்புக் கோட்டின் நெகிழ்ச்சியைப் (the elasticity of the labour supply curve) பொறுத்திருக்கும்.

மற்றும், இரு கருத்துகள் சற்று முக்கியம் வாய்ந்தனவாக இருக்கின்றன. முதலாவதாக, ஒரு தனி நிறுவனமானது அல்லது ஒரு தொழிலிலுங்கூட, தனது கூலி மட்டத்திற்கு அதனுடைய பண்டத்தின் தேவையை உத்தேசிப்பதில்லை. அந்தத் தொழிலில் கூலிகள் அதிகரிக்குமானால், அதனுடைய தொழிலாளர்களுடைய வருமானமும் அதன் காரணமாக அவர்கள் செலவழிக்கும் தொகையும் அதிகரிக்கும். ஆயினும், ஒரு குறிப்பிட்ட தொழிலின் தொழிலாளர்கள் அத் தொழில் உற்பத்தி செய்கின்ற பண்டத்திற்கான அங்காடியில் கணிசமானதொரு கூறாக (a considerable element in the market) இருப்பதில்லை. எனவே, அத் தொழிலில் கூலி அதிகரிப்பானது அத் தொழிலை நோக்கியிருக்கும் அங்காடித் தேவைக்கோட்டில் ஏற்படுத்தும் விளைவானது சொற்பமாகவேயிருக்கும். ஆயினும், பொருளாதார முறை முழுமைக்கும் இந்நிலை வேறானதாக இருக்கும்.

ஒரு கூலி அதிகரிப்பானது தேவையிலும் பொதுவானதோர் அதிகரிப்பை ஏற்படுத்தும். எனவே, தேவை முழுமைக்கும் பார்க்கும் போது, அதற்கும் உற்பத்திச் செலவுகளுக்கும் (costs of production) தொடர்பில்லை என்று கூறிவிட முடியாது. இந் நூலின் ஏழாம் மடலில் காணப்போவதுபோல், இந்த நிகழ்ச்சியானது, அரசாங்கம், பொதுவான விலைமட்டத்தை நிலைப்படுத்துதல் (securing stability of the general price level), வேலை வாய்ப்புகளை நிலைப்படுத்துதல் ஆகிய நோக்கங்களுக்காகச் சட்டமியற்றுவதில் பெரும் பங்கு கொள்கிறது.

இரண்டாவதாக உள்ள கருத்துக் கூலிகளுக்கும் உழைப்பின் ஆக்கத் திறனுக்கும் உள்ள தொடர்பினை விளக்குகின்றது. இது வரையிலும் இவை தனியானவைகளாகவே கருதப்பட்டு ஆராயப் பட்டன. ஆக்கத்திறனானது கூலிகளை நிர்ணயிக்கும் மாறுங் காரணிகளில் ஒன்றாகக் கருதப்பட்டுவந்துள்ளது. ஆயினும், பல நிகழ்ச்சிகளில் இந் நிலை வேறுவிதமாக உள்ளது; கூலிகள் ஆக்கத் திறனைப் பாதிப்பனவாக உள்ளன. குறைந்த கூலிகள், போதிய குடியிருப்பு, கல்வி, ஊட்டவளம் (nutrition) இவற்றைப் போதிய அளவிற்குத் தர இயலாதனவாகையால், குறைந்த வாழ்க்கைத் தரத்தையே அளிப்பனவாக இருக்கின்றன; இதன் காரணமாக உழைப்புச் சக்திகளுக்கிடையே குறைந்த உற்பத்தித் திறமையே நிலவுகின்றது. வேலையளிப்போர் பலர் அதிகக் கூலி கொடுப்பதில் உள்ள சிக்கன நலன்களை முன்மொழிகின்றனர். ஒரு மனிதனுக்கு நல்ல கூலி கொடுக்கப்படுமானல் அவனுடைய வாழ்க்கைத்தரம் உயரும். இத்துடன் அவனுடைய வேலைத்திறன் அதிகரிப்பதோடு ஆக்கத்திறனும் அதிகரிக்கும் என்பது அவர்கள் கருத்து. எனவே, குறைந்த கூலிகள்—குறைந்த வாழ்க்கைத்தரம் ஆகிய இந் நச்சு வட்டத்தை (vicious circle) உடைத்தெறிதல் சில சமயங்களில் அவசிய மாகவே இருக்கிறது. இந் நூற்றுண்டின் ஆரம்பத்தில் பிரிட்டனில் கூலி நிர்ணயம் சம்பந்தமாக அரசாங்கம் தலையிட்டதற்கு இதுவே காரணம். ஒரு சமயம் ஐக்கிய அமெரிக்காவில் உலகத்திலேயே அதிகக் கூலி தரப்பட்டுவந்ததோடு, அங்குதான் அதிகமான ஆக்கத் திறனும் இருந்துவந்தது. இதனை ஓர் ஒத்த நிகழ்ச்சி (coincidence) என்றுமட்டும் கூறுவதற்கில்லை; அதிகக் கூலி அதிக ஆக்கத்திறனை உண்டுபண்ணும் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும். அமெரிக்காவில் கூலிகள் அதிகமாக இருப்பதற்குக் காரணம் அங்குள்ள அதிகமான ஆக்கத் திறனேயாகும்; இதேபோன்று அதிகமான ஆக்கத்திறன் அங்குக் கொடுக்கப்படும் அதிகமான கூலி களுக்குக் காரணமாக இருந்துவருகிறது.

தொகுத்துக் கூறுமிடத்து, கூலிகளுக்கும் உற்பத்தியின் ஓர் அலகின் கூலிகளுக்கும் உழைப்புச் செலவுகளுக்கும் இடையே உள்ள வேறுபாட்டினைக் கூர்ந்து கவனிப்பது மிகவும் அவசியமாகும். தொழிலாளி தான் வாங்கும் மொத்தக் கூலிகள் அல்லது சம்பளத்தைப்பற்றி அக்கறை கொண்டவராகவும், அதே சமயத்தில் வேலையளிப்போர் உற்பத்தியின் ஒவ்வோர் அலகிற்குமான உழைப்புச் செலவினை முதன்மையாகக் கருதி அதில் அக்கறை செலுத்துபவராகவும் இருப்பர். ஆக, இவையிரண்டும் எதிரிணையானவை (corelatives) அல்ல. உதாரணமாக, ஒரு தொழிற்சாலையில் வாரமொன்றுக்கு ஒரு தொழிலாளிக்கு £ 10 கூலி கொடுக்கப்படுகிறதென்று வைத்துக்கொள்வோம்; அப்போது ஒவ்வொரு தொழிலாளியும் சராசரியில் வாரமொன்றுக்கு 250 அலகுகளை உற்பத்தி செய்வதாகக் கொள்வோம். மற்றொரு தொழிற்சாலையொன்றில் அதே பண்டத்தை உற்பத்தி செய்வதற்குத் தொழிலாளர்கள் வாரமொன்றுக்கு £ 8 கூலி கொடுக்கப்படுவதாகவும், ஒவ்வொரு தொழிலாளரும் சராசரியில் 160 அலகுகளே உற்பத்தி செய்வதாகவும் கொள்வோம். முதலாவதாகக் கூறிய தொழிற்சாலையில் இரண்டாவதாகக் கூறிய தொழிற்சாலையைக் காட்டிலும் அதிகமான கூலி மட்டம் உள்ளபோதிலும், உற்பத்தியின் ஓர் அலகிற்கான உழைப்புச் செலவுகள் (labour costs per unit of output) குறைவாகவே யிருக்கின்றன. ஒரு நாட்டில் கூலிகளின் மட்டம் அதிகமாக இருக்கிறதென்பதால், அந் நாட்டில் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் வேறு இடங்களில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களைக் காட்டிலும் விலையதிகமானவைகளாக இருக்கக்கூடுமென்று கூறுவதற்கில்லை. அவ்வாறு அதிகக் கூலிகள் பண்டங்களின் விலைகளை அதிகப்படுத்துமெனில், இன்று உலக அங்காடிகளில் ஐக்கிய அமெரிக்காவின் ஏற்றுமதியாளர்கள் வெற்றி நடைபோட முடியாதல்லவா ?

## 4. ஒப்பிடான கூலி மட்டங்கள் (Relative Wage-levels)

கூலி வீதங்கள் (wage - rates) உழைப்பின் அளிப்பு (supply of labour), அதனுடைய இறுதிநிலை ஆக்கம் (marginal productivity) ஆகிய இவ் விரண்டின் விளைவெதிர்விளைவினால் (interaction) தீர்மானிக்கப்படுகின்றனவெனில், கூலி வீதங்கள் நாளடைவில் சமமாகப் போகக்கூடும் என்பதனை எதிர்பார்த்தலும் நியாயமாகவே தோன்றக்கூடும். ஏனெனில், வேறுபாடுகள் குறுகி அவை இல்லாமல் போகும்வரையிலும், குறைந்த கூலிகள் வழங்கப்படும் தொழில்களை விட்டு அதிகக் கூலிகள் தரப்படும் தொழில்களை நாடி உழைப்பானது சென்றுகொண்டேயிருக்கும். ஆயினும், அப்போதும் ஓரளவிற்குக் கூலிகளில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கும்

என்று எதிர்பார்க்கலாம். மக்களில் சிலர் உடன்பிறந்த புத்தி கூர்மையை (innate mental ability) அல்லது கைத்திறனை (phyical ability) உடையவர்களாக இருப்பதே இதற்குக் காரணம். இன்னோரன்ன காரணங்களால் ஒரு தொழிலுக்குள் நிலவுகின்ற பெரும்பாலான வேறுபாடுகளுக்கு விளக்கந்தர இயலும்.

ஆயினும், இதன் அடிப்படையில் பல்வேறு தொழில்களுக்கிடையே நிலவுகின்ற பெருங் கூலி வேறுபாடுகளுக்கு விளக்கந்தர இயலாது—பிறவித் திறன்படைத்த மனிதர்கள் யாவரும் ஓரிரு தொழில்களில் குவிந்து காணப்படுவதற்கும், சில தொழில்களை அவர்கள் அடியோடு விட்டு விலகி நிற்பதற்கும் எவ்விதச் சிறப்பான காரணமும் காணப்படவில்லை. எப்படியிருந்தபோதிலும் இத்தகைய வேறுபாடுகள் இருக்கவே செய்கின்றன. சான்றாக, பிரிட்டனில் 1961ஆம் ஆண்டில் ஒரு பண்ணையாள் (agricultural labourer) ஆண்டொன்றுக்கு, தான் £ 500 சம்பாதிப்பதையே பேறு பெற்றதாக நினைத்துக்கொள்வார். பொறியியல் தொழில்களில் உள்ளதொரு கைதேர்ந்த தொழிலாளி, ஆண்டொன்றுக்குக் குறைந்தது £ 800ஐ யாவது எதிர்பார்ப்பார்; சராசரி மருத்துவரொருவர் (an average doctor) தனக்கு ஆண்டொன்றுக்கு £ 2500 வருமானத்திற்கும் குறைவானதொரு வருமானம் கிடைக்குமானால் ஏமாற்றமடைவார். இத்தகைய ஆண்டு வருமானங்களிலுள்ள வேறுபாடுகளுக்கு வேலை நேரங்களிலுள்ள—அதாவது, ஒரு நபரால் அளிக்கப்படும் உழைப்பு அலகுகளின் எண்ணிக்கை—வேறுபாடுகளும் ஓரளவிற்குக் காரணமாக இருக்கக்கூடும். ஆனால், இக் காரணத்தின் துணை கொண்டு மாத்திரமே சம்பாதனைகளிலுள்ள ஏற்றத்தாழ்வுகளுக்கு (inequalities) விளக்கம் கூறிவிட முடியாது. அப்படியாகில், வேறுபாடுகளுக்குள்ள காரணங்கள் யாவை?

முதலாவதாக, கூலி வீதம் என்பதும் உழைப்பிற்குக் கொடுக்கப்படும் ஊதியத்தின் மதிப்பும் ஒன்று என்று கூறிவிட முடியாது. ஒருபுறம், தொழிலாளர்கள் பெறுகின்ற கூலி வீதத்தில் சில குறிப்பிட்ட ஊதியங்கள் அடங்கியிராமலிருக்கக்கூடும். சான்றாக, நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளி (coal miner) சலுகை விலையில் நிலக்கரியினையும் (concessionary coal), ஒரு பண்ணை வேலையாள் (farm worker) சலுகை விலையில் பால், மாமிசம் அல்லது முட்டைகள் ஆகியவற்றையும் பெறக்கூடும். அதுபோல, போக்குவரத்துத் தொழிலில் (transport service) உள்ள ஒரு தொழிலாளி கட்டணமில்லாத பயணத்தையும், அரசாங்க சிப்பந்தி மதிப்புள்ள ஓய்வுச் சம்பளச் சலுகைகளையும் பெறுகின்றனர். மற்றொருபுறம் நிலைமை வேறாக இருக்கிறது. சில தொழில்களில் உள்ள தொழிலாளரின் கூலிகளில்

கூலிப்பிடிப்புகள் (deductions) இருக்கும்—இவை ஆயுதங்கள் அல்லது சீருடை (uniform) வாங்குவதற்காகவும் பயன்படுத்தப்படும்; பயணம் அல்லது பயிற்சி அல்லது கல்வி முதலியனவற்றை அத் தொழிலாளி பெற்றதில் அல்லது அத் தொழிலாளியின் சார்பில் வேறு யாராவது பெற்றதில் ஏற்பட்ட செலவினை ஈடு செய்வதற்காகவும் இப் பிடிப்புகள் பயன்படுத்தப்படும்.

இரண்டாவதாக, வேலையின் தன்மையையும் கணக்கிட்டுப் பார்க்கவேண்டும். அதிகரித்த கூலி கொடுக்கப்படுவது, அதிகமான ஆக்கத்தின் பொருட்டு (high productivity) மாத்திரமே கொடுக்கப்படுவதில்லை; தொழிலாளியின் நலக்குறைவான வேலை நிலையை ஈடுசெய்யும்பொருட்டும் கொடுக்கப்படுகின்றது. வேலையானது ஆபத்து நிறைந்ததாயும் அல்லது உடல்நலக்கேட்டை விளைவிப்பதாயும் (நிலக்கரி வெட்டி எடுக்கும் தொழிலைப்போன்று) அல்லது அசுத்தமானதாயும், அருவருக்கத்தக்கதாயும் (சாக்கடைத் துப்புரவு செய்யும் தொழில்போன்று), அல்லது தேவை, உற்பத்தி ஆகியவற்றில் ஏற்படும் பருவ ஏற்ற இறக்கங்கள் (seasonal fluctuations) அல்லது மற்ற ஏற்ற இறக்கங்கள் காரணமாக நிலையற்றதாகவும் இருக்கக்கூடும். மற்றொரு காரணம், ஒரு வேலையானது மிக அதிகமான பொறுப்புடையதாக இருப்பதன் காரணமாகச் சிறப்பு ஊதியம் அளிக்கப்படத்தகுந்ததாக இருக்கக்கூடும் அல்லது வேலையானது நீண்ட, செலவுமிக்க பயிற்சி தேவைப்படுவதாகவும் இருக்கக்கூடும். பின்னதாகச் சொல்லப்பட்ட இந்தக் காரணி 'வாழ்க்கைத் தொழில்' திறனுடைய (professional skill) மக்கள் 'கிடைப்பருமையாக' இருப்பதற்குச் (அமைப்பில் உள்ள தேவைக்கு ஒப்பீடாக நோக்கும் போது) சிறப்பு முக்கியத்துவம் வாய்ந்ததாக உள்ளது—வழக்குரைஞர்கள், பொறியியல் வல்லுநர்கள், சிற்பிகள் முதலியவர்களை வாழ்க்கைத் தொழில் திறனுடைய மக்களுக்கு உதாரணமாகக் கூறலாம். இதற்கு எதிரிடையாக, ஒருவர் ஒரு வேலையானது கவர்ச்சியானதாக இருப்பதன் காரணமாக ஒப்பீடானதொரு குறைந்த கூலிக்கு (relatively low wage) அவ் வேலையை மனமுவந்து ஏற்றுக் கொள்ளக்கூடும்; அவ் வேலை சமூகத்தில் அதிக மதிப்புவாய்ந்த தொன்றாக இருக்கலாம்; அத்தகையதொரு சமூக மதிப்பினை அவ் வேலையை விழைகின்ற அம் மனிதர் விரும்புவதாக இருக்கலாம்; அல்லது ஒரு வேலையானது திறமைமிக்க ஒருசிலருக்கு மிக அதிகமான வருமானத்தை ஈட்டும் வாய்ப்பினை நல்குவதாக இருக்கலாம். (இந்த ஒருசிலரில் தாமும் ஒருவராக இருக்கவேண்டுமென்று கருதி தன்னியக்கமாகப் பலர் அந்த ஒருசிலரில் ஒருவராகச் சேர்ந்துகொள்ளுகின்றனர்.) பெருவழக்கறிஞர்கள் (baristers) பெரும்பாலும் போதுமான வருமானத்தை ஈட்டுவதில்லை; ஆயினும், பலர் இத்

தொழிலில் நுழைவதற்குக் காரணம் அதில் மிகச் சிறுபான்மையினர் வியக்கத்தக்க அளவிற்குப் பொருள் ஈட்டுவதேயாகும்.

மூன்றாவதாக, வேலையானது இருக்குமிடத்தைச் சுற்றியுள்ள சூழ்நிலையில் பல நன்மைகள் அல்லது பல தீமைகள் இருக்கக்கூடும்; ஒருசில நிலவியல் பகுதிகள், மற்றப் பகுதிகளைக் காட்டிலும், வேலை செய்வதற்கும் வசிப்பதற்கும் ரம்மியமானவைகளெனப் பலராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றன. மனைவிகளுக்கும் குழந்தைகளுக்கும் வேலை கிடைக்கும் வாய்ப்பு, இடத்திற்கு இடம் வேறுபடுகின்றது. இத்தகைய வாய்ப்பு குடும்பத்திற்கு மிகவும் முக்கியமானதொரு வாய்ப்பாகும். கிராமப் பகுதிகளில் பொதுவாக வீட்டு வாடகை, பெரிய நகரங்களைக் காட்டிலும் குறைவாக இருக்கின்றது. சில பகுதிகளில், பிற பகுதிகளைக் காட்டிலும், வீடு கிடைப்பது எளிதாக இருக்கும். இக் காரணிகள் யாவும், ஒரு தொழிலாளி பல்வேறு வேலைகளின் கவர்ச்சி நலனைச் சீர்தூக்கிப் பார்க்கும் வேளையில், அவருடைய மனத்தில் இடம்பெறுவனவாகும்.

எனவே, தொழிலாளர்கள் பல்வேறு வேலைகளிலுள்ள நிகர நன்மைகளையே சீர்தூக்கிப் பார்க்கின்றனரென்றும், பணக்கூலி வீதங்கள் (money wage-rates) மட்டுமே தொழிலாளர்களுக்கு ஒரே கவர்ச்சிப் பொருளாக இருப்பதில்லை என்றும் கருதுவது பெரிதும் உண்மையாகும். ஆராய்ந்து பார்க்குமிடத்து, இத்தகைய பிற காரணிகள் யாவும் அளிப்புக் கோட்டின் (supply curve) வடிவம் (shape), நிலை (position) ஆகியவற்றில் இடம்பெறுகின்றன. ஒரே விதமான கூலிகளையும், ஆனால், வெவ்வேறு அளவில் பணமல்லாத நன்மைகளையும் (non-monetary advantages) இரு தொழில்களுக்கு, ஒவ்வொன்றுக்கும் தனியான அளிப்புக் கோடுகள் இருக்கும்; தொழிலாளர்களின் கருத்தில் நிகர நன்மையை (net advantage) அதிக அளவில் பெற்றுள்ள தொழிலினுடைய அளிப்புக் கோடானது மற்றத் தொழிலின் அளிப்புக் கோட்டைவிட வலப்பக்கமாகத் தள்ளியிருக்கும்.

சிக்கலான இப் பிரச்சினைகளை ஆராய்ந்த பின்னரும், நடைமுறை உலகத்தில் உழைப்பானது நிகர நன்மை (net advantage) எல்லா வேலைகளிலும் ஒரே மட்டமாகக் கொண்டுவரப்படுகின்றவரையிலும், தொழிலைவிட்டுத் தொழில் மாறிக்கொண்டேயிருக்கும் என்று கூறுவதற்கும் இல்லை. தொழிற்சங்க சக்திகளும், அரசாங்கத் தலையீடுகளும் போட்டிச் சக்திகளை முழுவதும் செயல்படுவதனின்றும் தடைசெய்வனவாக இருக்கக்கூடும். பின்னர் வரும் உட்பிரிவுகளில் இவற்றை நெடிது ஆராய்வோம். கூலி வேறுபாடுகளென

அழைக்கப்படும் குறிப்பிட்ட வேறுபாடுகள் பல ஆண்டுகளாக இருந்துவந்திருக்கின்றன. தொழிலாளர்கள் வேலையளிப்போர் ஆகிய இரு சாராரும் அவற்றை அவசியமானவையெனவும் (necessary), இயல்பானவையெனவும் கருதிவந்துள்ளனர். மூன்றாவதாக, பொதுமக்களின் கருத்தும் இவற்றில் இடம்பெறுகிறது; ஆசிரியர் தொழில் (teaching) அல்லது மருத்துவம்போன்ற குறிப்பிட்ட தொழில்கள் தனிப்பட்ட பொறுப்பு வாய்ந்தனவாக (special responsibility) மதிக்கப்படுவதால், அவைகளுக்கு ஒப்பீடான ஓர் அதிகமான ஊதியத்தை (a relatively high reward) அடையும் உரிமையினை அப் பணிகளுக்கு அளிக்கவேண்டும் என்னும் கருத்து (கருத்து திட்டவட்டமாக விளக்கப்படுவதில்லையாயினும்) நிலவி வருகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக முக்கியம் வாய்ந்தனவாக உள்ளவை ஐந்தாம் அத்தியாயத்தில் விளக்கப்பட்ட, தொழிலிடப் பெயர்ச்சிக்கு (mobility) இருக்கும் தடைகளாகும். இத் தடைகள், எல்லை நிலப்பகுதிகளுக்கிடையே ஏற்படும் தொழிற்பெயர்ச்சிகளிலும், தொழில்களுக்கிடையே ஏற்படும் தொழிற்பெயர்ச்சிகளிலும் ஏற்படுவனவாகும். இதுகாறும் கூறப்பட்டுவந்த சக்திகள் யாவும் மொத்தத் தொழில் சக்தியைப் பிரித்தெடுத்துப் பல போட்டியிடாக் குழுக்களாக (non-competing groups) அமைத்துள்ளன. இவை தொழிலாளர்களின் இடப்பெயர்ச்சியில் தடைகளை ஏற்படுத்துவதன்மூலம் பல்வேறு பணிகளில் கிடைக்கக்கூடிய நிகர நன்மைகள் சமமாக நிரவப்படுதலை (equalisation) தடுப்பதாகவுள்ளன. முக்கியமாக இதன் காரணமாகத்தான், மிகவும் கவர்ச்சியாகவுள்ள தொழில்களே மிகவும் அதிகமான ஊதியத்தை அளிப்பனவாகவும் உள்ளன என்னும் பொதுமையில் (generalisation) இன்றும் ஓரளவிற்கு உண்மை இருந்துவருகிறது.

## 5. காலவிதக் கூலிகளும் (Time rates) வேலைவீதக் கூலிகளும் (Piece rates)

கூலிகள் என்னும் சொல், உழைப்பின் பல்வகையான சம்பாத்தியங்களைக் குறிக்கின்றது. வீதக்கூலிகளையும் சம்பாத்தியங்களையும் வேறுபடுத்திக் கூறுவது வழக்கம். முன்னர் கூறப்பட்டது குறிப்பிட்டதொரு வேலைக்கு இவ்வளவு என்று அறுதியிடப்பட்ட அடிப்படையான குறைந்தபட்ச வீதக் கூலியாகும் (பொதுவாக ஒரு மணிக்கு இவ்வளவு கூலி என்று கூறப்படுகின்றது). பின்னதாகச் சொல்லப்பட்டது, எல்லாவகையான மிகைநேரச் சம்பளம் (over-time pay,) விருப்பூதியம் (bonus) இவைகளையும் கொண்ட உழைப்பிற்குக் கொடுக்கப்படும் மொத்தத் தொகையைக் குறிக்கின்றது. மற்றொரு முக்கியமான வேறுபாடு, காலவீதக் கூலிகளுக்கும் (time

rates of wages) வேலைவீதக் கூலிகளுக்கும் (piece rates) இடையேயுள்ள வேறுபாடாகும். காலவீதக் கூலிகளென்பவை, அச் சொற்றொடர் உணர்த்துவதுபோல், ஒரு குறிப்பிட்ட கால அளவிற்குக் கொடுக்கப்படும்—ஒரு மணி நேரத்திற்கு அல்லது இத்தனை வேலை மணிகள் என்று ஒப்புக்கொள்ளப்பட்ட வாரமொன்றுக்கு—கூலியாகும். இவ்வாறு கொடுக்கப்படும் கூலியில், அந்த நேரத்தில் எத்தனை அளவு உற்பத்தி செய்யப்படுகிறதென்பதைக் கணக்கிடுவதில்லை. மற்றொருபுறம் காலவீதக் கூலிகளென்பவை (time rates) தொழிலாளி உற்பத்தி செய்கின்ற அலகுகளின் எண்ணிக்கை அடிப்படையில் (on the basis of number of units produced) கொடுக்கப்படுகின்றன. இவ்வகைக் கூலியில் அலகுகளை உற்பத்தி செய்வதற்கு எடுத்துக்கொள்ளப்படும் நேரத்தைப் பொருட்படுத்துவதில்லை. ஆயினும், நடைமுறையில் காலவீதக் கூலிகளை நிர்ணயிக்கும்போது வேலையளிப்போர்—அத்துடன் தொழிலாளியும்—தனது மனத்தில் கூலிக்கேற்ப ஒரு குறிப்பிட்ட உற்பத்தியைப் பெறவேண்டுமென்று நினைக்கின்றரென்பதனை ஈண்டு முக்கியமாகக் கவனிக்கவேண்டும். இதைப்போன்றே, வேலைவீதக் கூலிகளை நிர்ணயிக்கும்போது, உற்பத்தியின் ஒவ்வோர் அலகையும் (each unit of output) உற்பத்தி செய்வதற்கு எடுத்துக்கொள்ளப்படும் நேரமும் ஓரளவிற்குக் கருதப்படுவது வழக்கமாக உள்ளது. வேறுவகையில் கூறுவோமாகில், இவ்விருவகையான கூலியளிப்பு முறைகளிலும் அடங்கியுள்ள கைக்கோள்கள் ஒருமித்தனவாகவேயுள்ளன.

இந்த இருவகையான கூலியளிப்பின் ஒப்பீடான நன்மைகள் பற்றி சர்ச்சை இருந்துகொண்டேயிருக்கிறது. வேலைவீதக் கூலிகள் கீழ்க்காணும் சூழ்நிலைகளில்தான் பொருத்தமானவைகளாக இருக்கும்; தொழிலாளர்களில் ஒவ்வொரு நபரின் உற்பத்தியளவும் சிக்கலேதுமின்றித் தெளிவாகக் கணக்கிடும்படியாக வேலையின் தன்மை இருக்குமானல் அதிலும், தொழிலாளருடைய கட்டுப்பாட்டிற்கும் புறம்பாகவுள்ள காரணங்களால் உற்பத்தியில் ஏற்படுகின்ற வேறுபாடுகளை—உதாரணமாக, கச்சாப் பொருளின் தரத்தில் உள்ள வேறுபாடுகள், தொழிலாளியை அடைகின்ற அரைகுறையாக உற்பத்தி செய்யப்பட்ட பொருளின் (semi-finished product) தரத்தில் உள்ள வேறுபாடுகள், அல்லது பயன்படுத்தப்படும் இயந்திரங்களின் தரத்தில் உள்ள வேறுபாடுகள்—குறைந்தபட்சமாகச் செய்ய இயலும்போதும், அல்லது இவைகளுக்கு ஒப்புக்கொள்ளப்பட்டதொரு தள்ளுபடி செய்வது இயலும்போதும் வேலைவீதக் கூலி அளிப்பு சாத்தியமாகும். இத்தகைய சூழ்நிலைகளில் வேலையளிப்போர் வேலைவீதக் கூலிகளை அளிப்பதைக் கடைப்பிடிப்பதில்தான் ஆர்வம் காட்டுவர். இத்தகையதொரு கூலியளிப்பில், அவர் செய்து

முடிக்கப்பட்ட வேலைக்குமட்டுமே கூலி கொடுக்கின்றார். அதிக உற்பத்தியைத் தூண்டுவதன்மூலம் தனது மூலதனச் சாதனம் தீவிரமாகப் பயன்படுத்தப்படுவதால், அவருடைய பொதுச் செலவுகள் (overhead costs) உற்பத்தியில் இயன்றவரை அதிகமான அலகு களின்மீது (the largest possible number of units of output) பரவலாக்கப்படுகின்றன.

கடமை உணர்ச்சியும் (diligent) திறமையும் உள்ளதொரு தொழிலாளி சரியான முறையில் கையாளப்படும் வேலைவீத முறையினால் நன்மையை அடையக்கூடும். தனது வேலைக்கேற்ற கூலி கொடுக்கப்படுவதை அவர் நன்குணர்கின்றார்—கூலி அதிகமாகவோ அல்லது குறைவாகக் கொடுக்கப்படாத ஒரு நிலையுள்ளமையையோ தொழிலாளி நன்கு தெரிந்து வைத்திருக்கின்றார். இத்தகைய கூலி யளிப்பு முறை வேலையளிப்போருக்கும் தொழிலாளிக்கும் பெருமளவு மனநிறைவை அளிப்பதாக உள்ளமையால் (இத்தகைய முறை குறிப் பாக அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அமுலில் உள்ளன), தொழிற் சங்கங்கள் இம் முறையின்மீது சில சமயங்களில் பகைமை பாராட்டு கின்றன. அனுபவ வாயிலாகவும், உணர்வின் வாயிலாகவும் (by instinct) தொழிற்சங்கங்கள் இத்தகைய வேலைவீதக் கூலிகள் தொழிலாளர்களுக்குத் தீய விளைவுகளைக் கடந்த காலங்களில் உண்டு பண்ணினவெனக் கருதிப் பயந்து, அவற்றை வெறுத்தொதுக்கு கின்றன. இத்தகைய முறை வயதாகியவரும் நிதானமாக வேலை செய்யக்கூடியவருமாகிய தொழிலாளருக்கு (திறமை குறைந்த தொழிலாளராக இருக்கவேண்டுமென்று அவசியமில்லையாயினும்) மிகுந்த உடல் அழற்சியையும், உள்ள அழற்சியையும் (physical and mental strain) ஏற்படுத்துவதாக இருந்தமையால், இம் முறை தீமைகளைப் பயப்பதாகவே இருக்குமெனத் தொழிற்சங்கங்கள் சில சமயங்களில் கருதுகின்றன. ஆனால், தற்காலங்களில் இவற்றை யெல்லாம் தொழிற் சங்கங்கள் கருதுகின்றனவென்று கூறிவிட முடியாது. இரண்டாவதாக, வேலைவீதக் கூலிகளில் உற்பத்தியை அளத்தல் (output measurement) கூலிவீதத்தை நிர்ணயித்தல் (rate setting) ஆகிய சிக்கலான பிரச்சினைகள் நிருவாகம்—தொழி லாளர் உறவுக்குப் பெருங் குந்தகம் விளைவிப்பனவாக உள்ளன. கடைசியாகக் கடந்த காலங்களில் வேலையளிப்போர் வேலை வீதக் கூலி முறையினைப் பல சமயங்களில் தங்கள் சுயநலத்துக்குப் பயன்படுத்திக்கொண்டு தொழிலாளர்களை அம் முறையின்மூலம் பல வழிகளில் சுரண்டி வாழ்ந்தனர். உதாரணமாக, ஓர் அலகிற்கான வீதம் (rate per unit) ஆரம்பத்தில் வழக்கத்திற்குப் புறம்பான விரைவில் உற்பத்தி செய்யக்கூடிய ஆற்றலுடையதொரு தொழி லாளியின் உற்பத்தித் திறனின் அடிப்படையில் நிர்ணயிக்கப்படு

வதால் சராசரித் தொழிலாளியானவர் (average worker) தனது வழக்கமான ஈட்டமட்டத்தை (level of earnings) நிலைநிறுத்த மிக அதிகமான சக்தியுடன் செயல் புரியுமாறு கட்டாயப்படுத்தப்படுகிறார்.

மற்றொருபுறம் காலவீதக் கூலிகளைப்பற்றிப் பார்ப்போம். இம் முறையில் உள்ள குறைபாடு யாதெனில், செலவு மிக்க மேற் பார்வையினை (expensive supervision) வேலையளிப்போர் அமர்த்த வில்லையெனில், அவர், தொழிலாளர்கள் சோம்பலாகக் கழித்த நேரத் திற்கும் ஊதியம் அளித்தவராகிவிடுவார். இம் முறையில் திறமை மிக்க தொழிலாளரும் இடர்ப்பட நேரிடுகிறது; ஏனெனில், சோம்பலும் திறமையின்மையும் பொருந்திய தனது கூட்டாளி என்ன கூலியைப் பெறுகின்றாரோ, அதே கூலியைத்தான் திறமை மிக்க தொழிலாளியும் பெறுகின்றார். வேலையளிப்போரில் பலர், பெரும்பாலும் காலவீதக் கூலிகளை அளிப்பதற்கே விரும்புவதற்குக் காரணம், இம் முறையில் தொழிலாளி வேலையின் தரத்தைக் குறைத் துக்கொண்டோ அல்லது இயந்திரங்களின் நீடித்த உழைப்பைப் பாழ்செய்தோ உற்பத்தியை அதிகரிப்பதில்லை. வேலையானது மிக்க தொழில் திறமையைத் தேவைப்படுவதாக இருக்கும்போதோ அல்லது வேலைக்கு விலையுயர்ந்த இயந்திரங்கள் அல்லது மூலப் பொருள்கள் (materials) பயன்படுத்தப்படும்போதோ, இவை முக்கிய மாகக் கவனிக்கத்தக்கனவாகும். மேலும், செய்யவேண்டிய வேலையின் தன்மையானது ஓர் அலகிற்கும் மற்றோர் அலகிற்கும் வேறுபடுமானால் (உதாரணமாக, பழுதுபார்க்கும் தொழில் அல்லது வெவ்வேறான அளவுகளில் பண்டங்கள் உற்பத்தி செய்யப்படும் போது), வேலைவீதக் கூலிகளை அளிப்பது நிச்சயமாக நடைமுறை யில் சாத்தியமானதாக இராது. எனவே, எந்த முறை சிறந்த தென்னும் கேள்வியினுக்கு ஒரே விடையினை அளித்துவிட முடியாது. வேலைவீதக் கூலிகள் திரும்பத் திரும்ப ஒரேவிதமான வேலையைக் கொண்ட அதிவிரைவு உற்பத்திக்குச் சாதகமானதாக உள்ளது; கால வீதக் கூலிகள் கவனமுள்ள வேலையையும் தனிப்பட்ட அக்கறையை யும் வளர்ப்பதாக உள்ளது. எந்த முறை அதிகமாகக் கையாளத் தக்கது என்பது வேலையின் தன்மை, வேலையளிப்போர், உழைப்புச் சக்தி ஆகியவற்றைப் பொறுத்ததாகும்.

### 6. உண்மைக் கூலிகளும் (Real wages) பணக் கூலிகளும் (Money wages)

மக்கள் பணத்தைப் பெறுவதற்காகமட்டுமே, தங்களது உழைப்பினை வேலையளிப்போர்க்கு நல்க முன்வருவதில்லை; அவர்கள் வாங்கும் பணக்கூலிகளைக்கொண்டு பண்டங்களையும் பணிகளையும் தாம் பெறுவதற்காகவே தங்களது உழைப்பினை அளிக்கின்றனர்.

ஆக, பணக்கூலிகளுக்கும் உண்மைக் கூலிகளுக்கும் இடையே ஒரு முக்கியமான வேறுபாடு உள்ளது. பின்னதாகக் கூறப்பட்ட உண்மைக் கூலிகளென்பவை, பணக் கூலியின் பண்டங்கள் பணிகள் இவற்றை வாங்குவதில் உள்ள வாங்குந்திறனை உணர்த்துகின்றன; ஒருவருடைய பணக் கூலிகள் 5 சதவீதம் அதிகரித்தபோது அவர் நுகருகின்ற பண்டங்களின் விலைமட்டம் 10 சதவீதமாக அதிகரித்ததெனில், அவருடைய ஊதியம் பண அளவில் அதிகரித்தபோதிலும் உண்மைக் கூலிகள் குறைந்து விட்டனவென்றே பொருள். இத்தகைய சூழ்நிலையில், தான் ஏற்கெனவே இருந்ததைக் காட்டிலும் வறிய நிலையில் உள்ளதாகவே அவர் கருதுவார். எனவே, தான் பெறுகின்ற பணக் கூலிகளுக்கு முன்னர் இருந்த உண்மை மதிப்பினைக் கொணரும்பொருட்டு மேற்கொண்டும் பணக்கூலிகளின் அதிகரிப்பினை அவர் வற்புறுத்துவார்.

தற்போது கூலி நிர்ணயிப்பதில் இக் காரணியே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கிறது. பொதுவான விலை மட்டத்தில் ஏற்படும் ஓர் அதிகரிப்பானது (a rise in the general price level) கூலி பெறுபவர்களை (wage earners) இவ்வதிகரிப்பைச் சரிக்கட்டும் பொருட்டு அதிகப் பணக்கூலிகளைக் கேட்கும்படி தூண்டும். கூலியதிகரிப்பு கொடுக்கப்படின் சம்பந்தப்பட்ட தொழில்களின் உற்பத்திச் செலவுகள் அதிகரிக்கும். இத்தகைய 'பணவீக்கச் சுழலை'ப் (inflationary spiral) பற்றி விரிவாகப் பின்னர் ஆராய்வோம். தற்சமயத்திற்கு ஒரு கருத்தைமட்டும் கவனத்தில் வைப்போம். தொழிலாளர்கள் விவேகமுடையவர்களாக இருப்பார்களேயாகில், தங்களது உழைப்பிற்குப் பதிலாக, நிலையான பணக் கூலியினை (fixed money wages) விரும்புவதற்குப் பதிலாக, ஒரு குறிப்பிட்ட உண்மைக் கூலியினையே வேண்டுவர்.

உண்மைக் கூலிகளுக்கும் பணக்கூலிகளுக்கும் உள்ள வேறுபாட்டின் முக்கியத்துவம் யாதெனில், அது தொழிற்சங்கங்களைக் கூலி முடிவு சம்பந்தமானதொரு முறையினைக் கடைப்பிடிக்க உதவுகிறது. அதாவது, விலைகளின் மாற்றங்களுக்கேற்பத் தன்னியக்கமாகச் சரி செய்துகொள்ளும் ஒரு முறையினை—சம்பந்தப்பட்ட உற்பத்தி செய்யப்பட்ட பொருளின் விலைகளோடு கூலிகளை சம்பந்தப்படுத்தியோ (பிரிட்டிஷ் நிலக்கரித் தொழிலில் கடந்த காலங்களில் பெரிதும் பயன்படுத்தப்பட்ட முறையினைப்போன்று) அல்லது, இன்னும் பொதுப்படையாகச் சில்லறை விலைகளின் (retail price) பட்டியலோடு தொடர்படுத்தியோ—கடைப்பிடிக்க இவ் வேறுபாடு உதவுகிறது. இத்தகைய முறைக்கு ஏறும்-இறங்கும் கூலி வீதங்கள் (sliding sca les) முறை எனப் பெயர். இம் முறைகளில் தெளிவானதொரு

நன்மை காணப்படுகிறது. விலைகள் அதிகரிப்பதனால் தன்னுடைய கூலிகளின் உண்மை மதிப்பு அரிக்கப்பட்டுத் தேய்வடையாமல் தொழிலாளி தன்னைப் பாதுகாத்துக்கொள்ள இம்முறை துணைசெய்கின்றது. எனவே, விலைகளில் மாற்றங்கள் ஏற்படும் ஒவ்வொரு சமயத்திலும் கூலி சமரசங்கள் செய்துகொண்டிருக்க வேண்டிய தேவையில்லை.

ஆயினும், பொருளாதார முறை முழுமைக்கும் பார்க்கும்போது, ஏறும்-இறங்கும் கூலி வீதங்களினால் ஏற்படும் நன்மைகள் ஐயுறவானவையாகவே (dubious) உள்ளன. அவைகள் வேலையளிப்போருக்கும் தொழிலாளர்களுக்குமிடையேயுள்ள மனவேறுபாடுகளைக் களைவதாக இருப்பதிலும், அவர்களுக்கிடையே அடிக்கடி தோன்றும் பிணக்குகளைத் (frictions) தீர்த்துவைப்பனவாக இருப்பதிலும் நிச்சயமாக நன்மையானவைகளாகவே யுள்ளன. மற்றொருபுறம், அவைகள் சில கடுமையான தீமைகளையும் பயப்பனவாக உள்ளன. முதலாவதாக, விலைகள் அதிகரிப்பதற்கேற்பக் கூலிகள் தன்னியக்கமாக அதிகரிப்பதானது உற்பத்திச் செலவுகளில் அதிகரிப்பை இயற்கையாக உண்டுபண்ணுகிறது. இதனால் விலைகளில் மேலும் அதிகரிப்பும், கூலிகளில் மேலும் அதிகரிப்பும் வழக்கமாக ஏற்படுகின்றன. இந் நூலின் ஏழாம் மடலில் ஆராயப்பட்டுள்ள வருமானங்கள், விலைகள் ஆகியவற்றின் பொதுவான மட்டத்தை நிர்ணயிக்கும் சக்திகளை ஆராயு முன்னரே, இத்தகையதொரு கூலி வீதம் ஒரு சீர்கேட்டை விளைவிக்கும் குவிதல் முறையினை ஏற்படுத்தி நிலைமை கட்டுக்கடங்காமல் போகும் ஒரு நிலையையும் உண்டுபண்ணும். இரண்டாவதாக உள்ளதோர் ஆபத்தைக் கவனிப்போம். விலையதிகரிப்பினால் தன்னியக்கமாக அதிகரிக்கும் சில கூலி வீதங்கள், பிற தொழிலாளர்களையும் அதே அதிகரித்த கூலி வீதங்களைக் கேட்கத் தூண்டும். பிற தொழிலாளர்கள் என்று ஈண்டு குறிப்பிடுவது, மற்றத் தொழில்களில் உள்ள தொழிலாளர்களுக்குச் சமமான நிலையைத் தாங்களும் அடையவேண்டுமென்ற குறிக்கோளைக்கொண்ட தொழிலாளர்களை என்றும், அல்லது தொன்றுதொட்டு வழக்கத்திலுள்ள கூலி வேறுபாடுகளைக் கடைப்பிடிக்கும் நோக்கத்துடன் கூலியதிகரிப்பை விழையும் தொழிலாளர்களை என்றும் கொள்ளவேண்டும். எனவே, இவ்வாறு ஒரு தொழிலில் ஏற்படும் கூலி அதிகரிப்பானது மற்றத் தொழில்களிலும் கூலி அதிகரிப்பை உண்டுபண்ணும் ஆகையால், விலைகள் கூலிகளைத் துரத்துவதும், கூலிகள் விலைகளைத் துரத்துவதும் அடங்கியதொரு சுழலாக (spiral) நிலை சீர்கேடடையும். இத்தகையதொரு நிலையில் கூலி பெறுவோர் யாவருமே தங்கள் வருமானங்களில் எவ்வித உண்மையான அதிகரிப்பையும் ஒரு குறுகிய காலத்திற்குமேல்

பெறுவதில்லை; சமூகமும் விலை நிலையின்மையால் (price instability) அல்லலுறும். கடைசியாக, ஏறும்-இறங்கும் கூலிவீத முறைகள் இருவழிகளிலும் சமூகமாக இயங்குவதாக இல்லை. விலைகள் அதிகரிக்கும்போது கூலிகள் எளிதாக உயர்ந்துவிடுகின்றன. ஆனால், தொழிற்சங்கங்கள் கூலிவீதங்கள் விலைகளோடு தொடர்பு படுத்தப்பட்டு இருப்பினும், இல்லாவிட்டாலும், கூலி குறைப்பை ஏற்பதற்கு எதிர்ப்பு தெரிவித்தே வருகின்றன. இதனால் 'முன்சுழலும்–பின்சுழலா'ப் பொருளாதார முறை உண்டாகும் ஓர் ஆபத்து நிலை விளைகின்றது. இந் நிலையில் காரணங்கள் அற்பமாக இருப்பினும் உற்பத்திச் செலவுகள் உயர்ந்து செல்லுகின்றன. உயர்ந்த உற்பத்திச் செலவுகள் இறங்குவதென்பது அரிதாகவோ அல்லது இறங்குவதே இல்லையென்பதாகவோ இருக்கின்ற நிலை ஏற்படுகின்றது. இதனால் வரும் தீமைகளை எட்டாம் மட்லில் கூறப்பட்டுள்ள அயல்நாட்டு வாணிபப் பிரச்சினைகள்பற்றி ஆராய்ந்த பின்னரே தெளிவாகப் புரிந்துகொள்ள முடியும்.

### 7. தொழிற்சங்கங்களின் பணி

இதுகாறும், போட்டி உலகத்திலுள்ள சக்திகளால் எவ்வாறு கூலிகள் நிர்ணயிக்கப்படுகின்றனவென்று பார்த்தோம். ஆனால், நடைமுறையில் இப் போட்டிச் சக்திகள் பூரண தன்னுரிமையுடன் செயல்பட (நீண்ட காலத்தில் இச் சக்திகளே கூலிகளின் போக்கை நிர்ணயித்தாகவேண்டுமெனினும்) அனுமதிக்கப்படுவதில்லை. இவ்வாறு அனுமதிக்கப்படாததற்குரிய பெருவாரியான காரணம் தொழிற் சங்கங்களின் சக்தியும் செல்வாக்குமேயாகும். தொழிற்சங்கத்தின் அடிப்படையான நோக்கமென்னவெனில், வேலையளிப்போரோடு (employers) தொழிலாளர்கள் தங்களின் கூலிகளுக்காகப் பேரம் செய்யும் சக்திக்கு வலுவூட்டுவதேயாகும். தொழிலாளி தனது உழைப்பாகிய பங்கை அளித்து உற்பத்தி செய்யும் பொருள்களில் நியாயமான பங்கு பெறுவதும், நல்ல வேலை நிபந்தனைகளைப் பெறுவதும் இவ்வாறு பேரம் செய்வதன் குறிக்கோளாகும். தன்னுடைய தோழத் தொழிலாளர்களுடன் சேர்ந்து அமைக்கப்பட்ட ஏதாவதொரு வகையான சங்கம் இல்லையெனில், தனி நபரான ஒரு தொழிலாளி தன்னுடைய வேலையளிப்பாரோடு ஒப்புநோக்கும்போது பேரம் செய்வதில் வலுவற்றவராகவே இருப்பார். சராசரித் தொழில் முயல்வோர் ஒருவருக்கு அவர் மேற்கொண்டும் ஒரு தொழிலாளரை நியமிப்பதா வேண்டாவா என்னும் பிரச்சினை அவ்வளவு பெரிய முக்கியம் வாய்ந்ததொன்றாக இருப்பதில்லை; ஆயினும், இதில் சம்பந்தப்பட்டுள்ள தொழிலாளிக்கு அது அளவுகடந்த முக்கியத்துவம் வாய்ந்ததாக உள்ளது. இதற்குக் காரணம் தொழிலாளி (வேலை

யளிப்போரைப்போலல்லாது) தான் வேலையின்றி சோம்பிப் பொழுது கழித்தலுக்கு வேண்டிய சேமிப்பு நிதிகளை வைத்திருப்பதில்லை. இதன் காரணமாக நியாயமில்லாத பேரமாகத் தனக்குத் தோன்றுகின்ற பேரத்தினையும் தான் ஏற்று நிறைவேற்றவேண்டிய அவலநிலை யுள்ளது.

கோட்பாட்டளவில், போட்டிச் சக்திகள் (ஏற்கெனவே நிகழ்த்திய ஆராய்ச்சி அறிவித்ததைப்போன்று) உழைப்பானது அதனுடைய இறுதிநிலை உற்பத்தியின் மதிப்பிற்குச் சமமான அளவிற்குக் கூலி யளிக்கப்படுமாறு செய்கின்றன என்பதும், எனவே நியதியற்றபேரம் என்னும் பிரச்சினையே தோன்றுவதில்லை என்பதும் தெளிவாகின்றது. நடைமுறையில், உழைப்பானது தன்னுடைய இறுதிநிலை உற்பத்தியின்(marginal product) முழுமதிப்பையும் கூலியாகப் பெறுவதற்கு எந்தவிதமான உத்தரவாதமுமில்லை. முதலாவதாக, உழைப்பின் இறுதிநிலை உற்பத்தியின் மதிப்பு இவ்வளவுதான் என்று (சுமாராகப் பரந்த வரையறைகளுக்குட்பட்டுக் கணக்கீடு செய்வது தவிர்த்து) கணக்கீடு செய்வது இயலாது. உழைப்புச் சக்தி அதிகரிக்கப்படும்போது அதிகரிக்கும் உற்பத்தியில் உழைப்பினுல் கூடுதலாக அதிகரித்த உற்பத்தி எவ்வளவு, பயன்படுத்தப்பட்டுள்ள முதலினுல் உற்பத்தி செய்யப்பட்டது எவ்வளவு அல்லது தொழில் முயல்வோனுடைய திறமையின் காரணமாக அதிகரித்தது எவ்வளவு என்று அறுதியிட்டுக் கூறுவது பொதுவாக மிகவும் கடினமானதொரு வேலையாகும். இரண்டாவதாக, உழைப்பானது ஒரு தொழிலை விட்டு மற்ருெரு தொழிலுக்கு இடம்மாறிச் செல்லுதல், பல காரணிகளால் தடைப்படுகின்றதாகையால், தொழிலாளர்களின் இறுதிநிலை உற்பத்தியிலும் ஈட்டங்களிலும் பெருமளவு சமன்கேடுகளுள்ளன வென்பதை ஏற்கெனவே ஆராய்ந்துள்ளோம். (எப்படியாயினும், எல்லா வேலையளிப்போர்களுமே தொழிலாளர்களுடைய இறுதிநிலை உற்பத்திக்கும் குறைவாகவே கூலியளிப்பார்களாயினும் இந்நிலையைத் திருத்தியமைக்க பூரண இடப்பெயர்ச்சியும் போதுமானதாக இராது.) ஆகவே, எந்த ஒரு தொழிலிலும் சரியான கூலி மட்டமானது வேலையளிப்போர் தொழிலாளி (worker) ஆகிய இருவருக்குமிடையே நிகழும் பேரத்தினைப் பொறுத்தேயிருக்கிறது. தொழிற்சங்கங்களின் அடிப்படை நோக்கமானது யாதெனில், தொழிலாளர்கள், குறைந்தபட்சம் வேலையளிப்போருக்குச் சமமான பலத்துடன் பேரம் செய்வதேயாகும். தனிப்பட்ட வேலையளிப்போரைவிடத் தொழிற்சங்கமானது கணிசமான அளவிற்கு அதிக பலம் வாய்ந்ததாக இருக்கின்ற காரணத்தால் கூலி உயர்வுக்காக பேரம் நிகழ்த்தும் வேலையில் பல சமயங்களில் அது வெற்றி பெற்றுள்ளது. எனவே, வேலையளிப்போரும் தாம் கூலியளிப்பதில் நிகழ்த்தும் பேரங்களுக்கு

ஒரு கூட்டு அமைப்பினை (organisation) அமைத்துக்கொள்ள முனைகின்றனர்.

ஒரு தனிப்பட்ட தொழிலாளியைக் காட்டிலும் எவ்வாறு ஒரு தொழிற்சங்கமானது தனது அங்கத்தினர்களுக்கு அதிகக் கூலி பெறுவதில் வெற்றியடைகின்றது ? இவ்வாறு வெற்றியடைவதற்கான காரணம் யாதெனில், தொழிற்சங்கமானது தொழிலாளர்களின் அளிப்பைக் கட்டுப்படுத்துவதோ அல்லது கட்டுப்படுத்துவதாக பயமுறுத்துவதோ ஆகும்—அதாவது, அளிப்புக் கோட்டை (supply curve) இடப்புறமாக இடம்மாறச் செய்வதன்மூலம் எனக் கூறலாம். சில சமயங்களில் அவை தொழிலில் நுழையும் தொழிலாளர்களின் எண்ணிக்கையில் வரையறைகளை ஏற்படுத்துவதன் மூலம் உழைப்பின் அளிப்பைக் கட்டுப்படுத்தும். (பயிற்சி நிபந்தனைகளை விதிப்பதன்மூலமும் அல்லது தொழிற்சங்கத்தில் அங்கத்தினர்களாக உள்ளவர்களின் புதல்வரும், புதல்வியருமே தொழிலில் உள் நுழையலாம் என்னும் நிபந்தனையை விதிப்பதன் மூலமும் தொழிலுக்குப் புதியதாக வருபவர்களைத் தடை செய்யலாம்,) அல்லது தொழிலில் உள்ள தொழிலாளர்களின் உழைப்பு அளிப்பைக் கட்டுப்படுத்துவதன் மூலமும் (தொழிலாளர்களின் வேலை மணிகளைக் கட்டுப்படுத்துவதன்மூலம் அல்லது அவர்களின் பருப்பொருளியலான உற்பத்தி வீதத்தைக் கட்டுப்படுத்துவதன்மூலம்) மேற்காணும் சாதனையை சாதித்துக்கொள்ளும். ஆயினும், உழைப்பின் அளிப்பைச் சுன்னமாகக் குறைத்துவிடும் திறமையில்தான் (குறைந்தபட்சம், தனது அங்கத்தினர்களைப் பொறுத்த மட்டிலுமாவது)— அதாவது, வேலை நிறுத்தம் செய்வதன் மூலம்—தொழிற்சங்கத்தின் அடிப்படையான சக்தி அடங்கியிருக்கின்றது. இத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்வதில் தொழிற்சங்கத்தின் சக்தியானது, தொழிலின் உழைப்புச் சக்தியில் எத்தனை பேர் அதனிடம் அங்கத்தினர்களாக இருக்கின்றார்களென்பதையும், அவ்வாறு அதனிடம் அங்கத்தினர்களாக இருக்கின்ற தொழிலாளர்களின் ஒழுக்கம், மன உறுதி ஆகியவற்றின் அளவையும், தொழிற்சங்கத்தின் காப்பு நிதிகளையும் (financial reserves), அதன் தலைவர்களின் ஆற்றலையும் பொறுத்துளது.

ஒரு தொழிற்சங்கமானது எவ்வளவுதான் ஆற்றல் வாய்ந்ததொன்றாக இருப்பினும், கோட்பாட்டளவில் அது தனது அங்கத்தினர்களின் கூலிகளை அதிகரிக்கும் அளவில் நிச்சயமான வரையறைகள் உள்ளன. முதலாவதாக, உழைப்பின் இறுதிநிலை உற்பத்தியின் சரிநுட்பமான மதிப்பு (the precise value of labour's marginal product) இவ்வளவு என்று தெரிந்துகொள்ள

முடியாதாயினும், கூலிகள் இன்னும் அதிகரிக்குமானல் நடப்புக் கூலி வீதத்தில் தொழிலாளர்களை வேலைக்கமர்த்திக்கொள்வது இலாபமற்றதாக இருக்கும் ஒரு நிலை ஏற்படுவதை வேலையளிப் போர் நன்குணர்வார். சங்கமானது இந்தப் புள்ளிக்குப் பிறகும் அதிகக் கூலிகளைக் கேட்பதில் பிடிவாதமாக இருக்கும்பட்சத்தில் வேலையின்மை வந்தே தீரும். இதன் காரணமாக சங்கமானது அதிகக் கூலி கோருவதைச் சற்று விட்டுக்கொடுக்கவேண்டிவரும். [அதேசமயத்தில் ஏற்கெனவே ஆராய்ந்தவாறு அதிகக் கூலிகள் உற்பத்தித் திறனை அதிகரிக்கும் ஒரு தூண்டுகோலாக (stimulus) இருக்குமென்பதையும், ஈண்டுக் கவனத்தில் கொள்ள வேண்டும்.]

இரண்டாவதாக உள்ளதும், இன்னும் நெருங்கிய தொடர்பும் உள்ளதொரு காரணி, தொழிலில் இருக்கும் பதிலீட்டு நெகிழ்ச்சி யாகும்—அதாவது, சம்பந்தப்பட்ட பண்டத்தின் உற்பத்தியில் உழைப்பிற்குப் பதிலாக மற்றக் காரணிகளை எவ்வளவு எளிதாகப் பதிலீடு செய்தல்கூடும் என்பதனைப் பொறுத்ததாகும். கூலிகள் உயரும்போது, தொழில்முயல்வோர்கள், குறைந்த அளவு உழைப் பையும் அதிகமான நிலம் அல்லது முதல் இவற்றைப் பயன்படுத்தி உற்பத்தி செய்வது இலாபகரமாக இருப்பதை உணரக்கூடும்-- பின்னதாகக் கூறப்பட்ட காரணிகள் உழைப்பிற்கு ஒப்பீடாக மலிவாக இருப்பதே இதற்குக் காரணம். எனவே, தொழிலுக்கு அளிக்கப்படுகின்ற கூலியானது இந்த மாற்றுக் காரணிகளின் அளிப்பு நெகிழ்ச்சியையே (elasticity of supply of these alternative factors) பெரிதும் எதிர்பார்த்திருக்கிறது. உதாரணமாக, தொழிலில் பயன்படுத்தப்படும் முதலானது மிகவும் தொழிற் சிறப்புத் திறன் வாய்ந்ததொன்ருக இருப்பின் (specialised nature), காலதாமதமின்றியோ அல்லது அதன் விலையில் கணிசமான அளவிற்கு விலை அதிகரிப்பு இன்றியோ அதனை அதிகம் பெறுவது இயலாமற் போகக்கூடும். எனவே, தொழிலில் எந்த அளவிற்குப் பதிலீட்டு நெகிழ்ச்சி (elasticity of substitution) அதிகமாக இருக் கின்றதோ அதே அளவிற்குத் தொழிற்சங்கம் அதிகக் கூலிகளைப் பெறுவதில் உள்ள அதிகாரங்கள் கட்டுப்படுத்தப்படும்.

கடைசியாக, சம்பந்தப்பட்ட பண்டத்தின் தேவை நெகிழ்ச்சியை இது பெரிதும் எதிர்நோக்கியுள்ளது. தொழில்முயல்வோன் சமாளிக் கின்ற தேவையானது மிகவும் நெகிழ்ச்சியற்றதாக இருப்பின், அவர் அதிகக் கூலிகளை நுகர்வோர் தலையில், விலைகளை அதிகரிப்பதன் மூலம், சுமத்துதல் இயலும். இவ்வாறு செய்வதில் தனது விற்பனை களுக்கு அதிகமாக ஊறு நேராமலும் அவர் பாதுகாத்துக்கொள்ள முடியும். எனவே, இத்தகையதொரு நிலையில் அவர் தொழிற்

சங்கத்தின் வலுக்கட்டாயத்தை எதிர்ப்பது என்பது வலுவிழந்த செயலாகவே இருக்கும். இதற்கு எதிரிடையாகத் தொழில்முயல் வோருக்குள்ள தேவையானது மிகவும் நெகிழ்வுடையதாக (highly elastic) இருக்குமானால், தன் பண்டத்தின் விலையை அதிகரித்தால் அது தனது விற்பனையை வெகுவாகக் குறைக்குமென்பதை அவர் நன்கறிவார். அதிக உற்பத்திச் செலவுகளை ஏற்பதென்பது, அவைகளுக்கு இணையான குறைந்த இலாபங்களைப் பெறுவதன் மூலமே இயலும். எனவேதான், தொழில்முயல்வோர், கூலி அதிகரிப்புக் கோரிக்கைகளுக்கு எளிதில் சம்மதித்துவிடுவதில்லை. ஆகவே, ஒரு தொழிற்சங்கம் எவ்வளவுதான் சக்தி வாய்ந்ததொன்றுக இருப்பினும், ஒரு குறிப்பிட்ட புள்ளிக்குப் பிறகு அதிகக் கூலிகளைப் பெறுவதென்பது அதனுடைய அங்கத்தினர்களுக்கு வேலையின்மையை ஏற்படுத்துவதன்மூலமே இயலும்; இத்தகையதோர் ஆபத்தினை எந்த ஒரு பொறுப்புள்ள தொழிற்சங்கத் தலைவரும் மனமுவந்து ஏற்கமாட்டார்.

இது முழுமையிலும் கோட்பாட்டளவில்தான் செல்லுபடியாகத் தக்கதாக இருக்கின்றது; நீண்ட காலத்திலும், உண்மைக் கூலிகளோடு ஒப்பீடு செய்து பார்க்கும்போதும், நடைமுறையில் இயங்குகின்ற சக்திகளின் நல்லதொரு விளக்கமாகவும் இது அமைந்துள்ளது. எனினும், சமீப ஆண்டுகளில், பணக் கூலிகளைப்பற்றியதொரு விளக்கமாக இது அமையும்போது அத்துணை முழுமையானதோர் உண்மையாகக் காணப்படவில்லை. தற்கால பிரிட்டனில் (இன்னும் பல தொழில் நாடுகளிலும்) தொழிற்சங்க இயக்கமானது பேரளவில் அரசியல் சக்தியையும் தொழிலியல் சக்தியையும் பெற்றிருக்கின்றது. இத்துடன் அது, பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் அளிப்பின் அளவிற்கும் அதிகமான தேவையைக் கொண்டதோர் அங்காடி நிலையையும் உடையதாக இருக்கிறது. இந்த நிலையானது, தேவைக் கோடுகளும் அளிப்புக் கோடுகளும் ஒன்றையொன்று எதிர்பார்த்திருப்பனவல்ல என்னும் எடுகோளின்—கோட்பாட்டு ஆய்வில் உள்ளடங்கியுள்ள எடுகோள்—உண்மை நிலைக்கு வரையறையை உண்டுபண்ணுவதாக உள்ளது. ஒரு தொழில் முயல்வோன் தான் கொடுக்கப்போகும் கூலி உயர்வானது, நாடு முழுவதிலும் பரவலாகவும் திரும்பத்திரும்ப நிகழ்வதாகவும் உள்ள கூலி அதிகரிப்பு முறையில் ஒரு கூறு என்றே நினைப்பாராகில், அத்தகைய எண்ணம் அதிகக் கூலியினைத் தருவதில் அவருக்குள்ள நாட்டத்தை நெடிதும் உருவாக்கும். கூலிகளின் பொதுவான அதிகரிப்பானது (general increases in wages), அங்காடித் தேவையையும் அதிகரிக்கும். இந்த அங்காடித் தேவை மேற்சொன்ன தொழில்முயல்வோரது பண்டத்திலும் அதிகரிக்கும். ஆகவேதான்

அதிகக் கூலிகளைக் கொடுப்பதால் ஏற்படும் அதிகமான உற்பத்திச் செலவினை அவ்வளவாக அவர் பொருட்படுத்துவதில்லை; இதற்குக் காரணம், வளரும் ஓர் அங்காடியில் அதிகமான உற்பத்திச் செலவு களை நுகர்வோர் தலையில் அதிக விலைகளாக எளிதாகச் சுமத்தி விடலாம் என்று அவர் நம்பிக்கையுடன் எதிர்பார்ப்பதேயாகும்.

எனவே, இத்தகைய சூழ்நிலையில் தொழிற்சங்கங்கள், அதிக உழைப்புச் செலவுகள் இலாப அளவுகளை ஆபத்தான முறையில் சுருங்கச் செய்துவிடும் என்னும் வருவதுரைத்தலை ஐயமுடன் தான் நோக்குகின்றன. உழைப்புச் செலவுகளைப்போன்றே இலாப அளவுகளும், வளரும் ஓர் அங்காடியில் (buoyant market), விலைகளை ஏற்றுவதன்மூலம் நுகர்வோர் தலையில் சுமத்தப்பட இயலும். இதன் காரணமாகத்தான் உற்பத்திச் செலவு-விலைச் சுழல் ஏற் படுகிறது. இச் சுழலைப்பற்றி முன்பே ஆராய்ந்தோம். அதிலும் குறிப்பாக, குறைந்த கூலிகளையும் விலைகளையும் உடைய பிற நாடு களுடன் அயல்நாட்டு அங்காடிகளில் போட்டியிட்டுப் பண்டங்களை விற்க முனையும் ஒரு நாட்டில், இத்தகைய சுழலால் ஏற்படக்கூடிய ஆபத்தையும் முன்னர் ஆராய்ந்துள்ளோம். பின்னர் வரும் அத்தியாயமொன்றில் இதனை இன்னும் ஆழமாக ஆராய்வோம். நெடுங்காலத்தில் (in the long-run), பண வருமானங்களில் அதிகரிப் பினால் (உண்மையான வருவாய் அதிகரிக்கப்படாத) நிச்சயமாக ஒருவருமே நன்மை அடைவதில்லை (அவர்கள் தீமையை அடையக் கூடும்). ஆயினும், சுழல் ஆரம்பித்ததும் சமூகத்தின் எந்த ஒரு தனி பிரிவினரும் சுழலைத் தடுத்து நிறுத்துவது தங்களது சொந்தத் தனிப் பொறுப்பென்பதை எண்ணுவதே இல்லை.

## 8. பிரிட்டனில் கூலி நிர்ணயித்தலில் அரசாங்கத்தின் தலையீடு (State Intervention in Wage Determination in Britain)

தற்கால பிரிட்டிஷ் அரசாங்கங்களின் பொதுவான கைக்கோள் யாதெனில், கூலிபேர முறையானது (the process of wage bargaining) சம்பந்தப்பட்ட தனிப்பட்ட தொழிற்சங்கங்கள், வேலையளிப் போர் கைகளில் ஒப்படைக்கப்பட்டுள்ளது. தொழிற்சங்கங்களின் அதிகாரங்கள், அவைகளின் சட்டரீதியான நிலை இவற்றை விளக்கு வதில் சட்டங்கள் வரையறுக்கப்பட்டுள்ளது. எனினும், இத்தகைய பரந்த கூற்றுக்கு இருவகையான விதிவிலக்குகளைக் கூற வேண்டும். (அ) எந்தக் குறிப்பிட்ட தொழில்களில் தொழிற்சங்கங்கள் வளர்ச்சி யடைய முடியாது கிரமமான அளவிற்கு வலிமையைப் பெற்றிருக்க வில்லையோ அத் தொழில்களிலும் (ஆ) எந்தத் தொழில்களில் ஏற்கெனவே உள்ள சமரசக் குழுவின்மூலம் சர்ச்சையானது தீர்வு

காண இயலாமல் இருக்கின்றதோ அத் தொழில்களிலும், அரசாங்கங்கள் கூலி நிர்ணயித்தலில் தலையிட்டு வந்துள்ளன.

முதலாவதாகக் கூறிய தலைப்பில், 1909ஆம் ஆண்டில் பிரிட்டனில் இயற்றப்பட்ட தொழில் சபைகளின் சட்டம் (Trade Boards Act) இத்தகைய அரசாங்க நடவடிக்கையை விளக்குகின்றது. இந்தச் சட்டம் நான்கு 'மெய் வருத்தத்' தொழில்களில் (sweated trades) குறைந்தபட்சக் கூலியை ஏற்படுத்துவதற்கும் அமல் நடத்துவதற்கும் குழு ஒன்றினை நியமிக்க தொழில் சபைக்கு (Board of Trade) அதிகாரத்தை வழங்கியது. இத் தொழில்களில் ஏராளமான பெண்களும் சிறுவர்களும் மிகக் குறைந்த கூலிகளிலும் மனம் நெகிழும் அவல நிலைகளிலும் வேலைக்கமர்த்தப்பட்டிருந்தனர். இந்தத் தொழில்களில் ஒரு பகுதி, உழைப்புச் சக்திகளின் தன்மையும், தொழில்கள் சிறியனவாகவும் சிதறுண்டும் இருந்த காரணம் மற்றொரு பகுதியுமாகச் சேர்ந்து, தொழிற்சங்கங்கள் இவைகளில் வளர்ச்சியடைய வொட்டாமல் செய்து வந்தன. தொழிற்சங்கங்கள் இவைகளில் பங்கு பெறாததால் அத் தொழில்களிலிருந்த அவல நிலைகளும் மாற்றி யமைக்கப்படவில்லை. இந்தத் தொழில்கள் ஏற்கெனவே கூறிய நச்சுச் சுழலிற்கு (குறைந்த உற்பத்தித் திறன்—அதன் காரணமாகக் குறைந்த கூலிகள்—அதன் காரணமாகக் குறைந்த உற்பத்தித் திறன்) சிறந்த எடுத்துக்காட்டுகளாக இருந்தன.

குறைந்தபட்சக் கூலிகளை (minimum wages) ஏற்பாடு செய்ததனால் ஏற்பட்ட விளைவு, வேலைக் குறைப்பினை ஏற்படுத்தவில்லை, அதற்குப் பதில் தொழிலாளருடைய திறமையை அது அதிகரித்தது. இதற்கு ஒரு பகுதி காரணம், அதிகக் கூலிகள் உணவு முறையைத் திருத்தி வாழ்க்கை வசதிகளையும் பெருக்கின என்பதாம். மற்றொரு பகுதி காரணம், அதிகக் கூலிகளால் விலை உயர்ந்துவிட்ட உழைப்பு அளிப்பை வேலையளிப்போர் சிறந்த பயனை அளிக்கும்வகையில் பயன்படுத்திக்கொண்டமையாகும். தொழில் சபை முறையினால் ஆளப்பட்ட தொழில்களின் எண்ணிக்கை கொஞ்சங் கொஞ்சமாக அதிகரித்துக்கொண்டே வந்தது. 1945ஆம் ஆண்டில் கூலி மன்றங்களின் சட்டம் (Wages Councils Act) தொடர்ந்து செயலாற்றப்பட்டதுடன், ஏற்கெனவே உள்ள சட்டங்களும் ஓரளவிற்கு விரிவாக்கப்பட்டன. தொழில் சபைகளுக்குக் 'கூலி மன்றங்கள்' (Wages Councils) என்ற புதிய பெயர் கொடுக்கப்பட்டது. விவசாயம் சம்பந்தமாகவும்' உணவு அளித்தல் தொழில் சம்பந்தமாகவும் இயற்றப்பட்டுள்ள மற்றச் சட்டங்களுடன் இத்தகைய சட்ட முறையான மன்றங்கள் (statutory councils) தற்போது 'குறைந்தபட்சக் கூலிகள்

(minimum wages) என்பதனைக் கொண்டுவந்துள்ளன. இச் சட்டம் ஐக்கிய அரசாங்கத்தில் வேலையிலமர்த்தப்பட்டுள்ள மக்களின் தொகையில் மூன்றிலொரு பகுதியினருக்குக் குறைந்தபட்சக் கூலியினை நிலைநாட்டி வருகிறது.

இரண்டாவது தலைப்பின்கீழ் பிரிட்டனில் நடக்கும் நிகழ்ச்சியினைப் பார்ப்போம். பிரிட்டனில் உள்ள அரசாங்கமானது, தொன்று தொட்டே தொழில் தகராறுகளுக்குத் தீர்வு காணுவதற்கு வேண்டிய சாதனங்களை அளித்து வந்துள்ளது. சாதாரண சமரச முயற்சிகள் யாவும் செய்தான பிறகும் உள்ள தொழில் தகராறுகளை இவை தீர்த்து வைக்கின்றன. தொழில் தகராறில் சம்பந்தப்பட்டுள்ள இரு தரப்பினரும் விரும்பும்பட்சத்தில் தொழில் அமைச்சருக்குச் சார்பற்ற நடுவர்கள் (independent arbitration) அல்லது நடுவர் உயர்முறை மன்றங்களை (arbitration tribunals) நியமிக்க அதிகாரம் வழங்கப் பட்டது. இவைகள் இருதரப்பினருடைய வாதங்களையும் தீர விசாரித்துத் தம் இறுதி முடிவினை அறிவிக்கின்றன. தற்போது இம் முடிவினை ஏற்பதில் இருதரப்பினரில் எவருமே கட்டாயப்படுத்தப் படுவதில்லையாயினும், தொழிற்சங்கங்கள் அல்லது வேலையளிப்போர்கள் இத்தகைய முடிவுகளைப் பிடிவாதமாக மறுதலிப்பதுமில்லை. நடுவர் தீர்ப்புக்கு விடுதல் ஒருபுறமிருக்க, தொழில் தகராறில் ஈடுபட்டுள்ள தரப்பினர் மேற்கொண்டு சமரசப் பேச்சு வார்த்தைகள் நடத்தவும் விவாதிக்கவும் வேண்டிய வசதிகளைத் தொழில் அமைச்சர் அளித்து வருகிறார். வேலைநிறுத்தம் அல்லது கதவடைப்பு இவற்றை அறிவிப்பதற்கு முன்னர், மேற்சொன்ன சமரச ஏற்பாடுகளை முயற்சி செய்தாக வேண்டும்.

எனவே, அரசாங்கத்தின் அதிகாரம் குறிப்பிட்ட தொழில்களில் மட்டுமே குறைந்தபட்சக் கூலிகளை நிர்ணயித்தல் அல்லது தொழில் தகராறுகளில் தலையிடுதல் ஆகியவற்றுக்குள்ளடங்கி உள்ளது. பிரிட்டனில் தற்போது தேசீயக் கூலிக் கைக்கோள் ஒன்றும் அமலில் இல்லை. பொதுவாக எல்லாத் தொழில்களிலும் நிலவியுள்ள கூலிகளின் மட்டமானது பல்வேறு தொழில்களில் ஏற்பட்ட தனிப்பட்டனவும் ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாதனவுமாகிய கூலி ஒப்பந்தங்களினால் ஏற்பட்ட விளைவாகவேயுள்ளது. சமீப ஆண்டுகளில், கொடுக்கப்பட்டுள்ளதொரு வேலை நிறைவிலும் அதன் காரணமாக ஏற்படும் தொழிற்சங்கத்தின் அதிகமான அதிகாரத்திலும் எந்த ஓர் ஆண்டிலுமுள்ள கூலிகள் முழுவதற்குமான மொத்த அதிகரிப்பானது ஒப்புக்கொள்ளப்படுவதற்கானதொரு நிறுவனம், (machinary) இருக்கவேண்டியதன் அவசியம் உணரப்பட்டு வருகின்றது. அத்தகைய நிறுவனத்தால் ஏற்கெனவே கூறப்பட்ட

கூலி-விலைச்சுழல் (wage-price spril) ஏற்படாமல் தடுக்கப்படக் கூடுமென்பதும் கருதப்பட்டு வருகிறது.

அத்தகையதொரு நிறுவனத்தை அமைப்பதில் உருப்படியான செயல், முதன் முதலில் 1962ஆம் ஆண்டில்தான் துவங்கியது. அந்த ஆண்டில் அரசாங்கமானது, 'நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக் கழகம்' (National Economic Development Council) ஒன்றை நிறுவியது. இது ஒரு தன்னியக்கமான செயலாண்மையாக இயங்கி வந்தது. இக் கழகம் ஒரு நிருவாகக் குழுவினையும் தன்னகத்தே கொண்டதாக இருந்தது. அரசாங்கத்தின் உயர்மட்டப் பிரதிநிதிகளும், வேலையளிப்போர்களும், தொழிற்சங்கங்களும் (Trade Unions), பயிற்சி பெற்ற பொருளாதார நிபுணர்களின் செயலகமும் (Secretariat) பங்கு பெற்றதாக இந் நிருவாகக் குழு அமைந்திருந்தது. நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக் கழகத்தின் (National Economic Development Council) பணிகளுள் தலையாய பணியாக இருந்தது, பிரிட்டிஷ் பொருளாதார வளர்ச்சியினைத் தூண்டும்பொருட்டு அதற்கான கைக்கோளை உருவாக்குவதும், இக் கைக்கோளிற்கிசைந்தவாறு 'வருமானங்களின்'—அதாவது கூலிகளை—கைக்கோள் ஒன்றினை உருவாக்குவதுமே. நடைமுறையானதோர் இரண்டாவது நடவடிக்கை யாதெனில், அதே ஆண்டில் நாட்டு வருமானங்களின் குழு (National Incomes Commission) தோற்றுவிக்கப்பட்டதாகும். இக் குழு, தொழில் தகராறுகளில் குறிப்பிட்ட வழக்குகளில் (particular cases in wage disputes) மேற்சொல்லப்பட்ட கைக்கோளைக் கடைப்பிடித்தும் செயல்படுத்தியும் வந்தது. இத்தகையதோர் ஏற்பாடு தொழிற்சங்க வளர்ச்சியை ஆதரிப்பதாக இல்லை; ஒன்றுபட்ட தொழிலாளர்களின் ஒத்துழைப்பின்றி இத்தகையதொரு குழு எத்தகைய உண்மையான சாதனையையும் நிறைவேற்ற இயலாது. இப் பிரச்சினை இரு பக்கங்களையுடையதாக இருக்கிறது; ஒன்று நடைமுறையானவையும் போதுமானவையுமான சட்டங்களை ஆராய்தலும் உருவாக்குதலுமாகும்; மற்றொன்று அவைகளை யாவரும் ஒப்புக்கொள்ளுமளவிற்கு வகைப்படுத்தி செயல்படுத்தலாகும். இவைகளில் எது மிகவும் கடினமானதென்று அநுபவம்தான் கூற இயலும்; எவ்வகையில் பார்த்தாலும் இவைகளில் எந்த ஒன்றுமே எளிதானதாகத் தோன்றவில்லை.

மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles*, Vol. II, Chs. VIII, IX and XI.

Ryan, *Price Theory*, Chs. 5 and 6.

Marshall, *Principles of Economics*, Book VI, Chs. III—V.

M. Dobb, *Wages* (Cambridge University Press, London, 1948), Chs. II—IV, VII—VIII.

Sargant Florence, *Labour*, Chs. VII—VIII

M. P. Fogarty, *The Just Wage*, Chapman, London, 1961.

D. J. Robertson, *The Economics of Wages*, Macmillan, London, 1961.

# 16. வாரம்
## (Rent)

1. வாரமென்பது நிலத்திற்காகச் செலுத்தப்படும் ஒரு செலுத்துநிலை (Payment)

வழக்கமாக 'வாடகை' என்னும் சொல், ஒருவர் பிறருக்குச் சொந்தமான சொத்தை ஒரு குறிப்பிட்ட கால அளவிற்குப் பயன்படுத்தும் உரிமைக்காகச் செலுத்தும் ஒரு செலுத்தையே குறிக்கும். ஒருவர் பிறரொருவரின் வீடு அல்லது நிலத்தைப் பயன்படுத்துவதற்கு 'வாடகை' கொடுக்கின்றார். இதைப்போன்றே மனிதர்கள் கார் அல்லது சமையற்கருவி (cooker) அல்லது தொலைக்காட்சிப் பெட்டி (television set) ஆகியவற்றை வாடகைக்குப் பெறுகின்றனர். பொருளாதாரத்தில் இந்தச் சொல் ஆரம்பத்தில் நிலத்தைச் சொந்தமாக வைத்திருத்தலின்மூலம் பெறுகின்ற வருமானத்தையே குறித்தது—அதாவது 'வாரம்' என்ற கருத்தில்தான் ஆளப்பட்டு வந்தது. ஆனால், சமீப ஆண்டுகளில், இச் சொல் ஒரு செயல் நுணுக்கப் (technical) பொருளினையும் உணர்த்துவதாக உள்ளது. இதனை அடுத்த உட்பிரிவில் ஆராய்வோம்.

முதலாவதாக எளிதாகவுள்ள நில உடைமையினால் கிடைக்கப் பெறும் 'வாரம்' என்னும் சொல்லை எடுத்துக்கொள்வோம். பேச்சு வழக்கிலுள்ள 'வாடகை' என்னும் சொல்லைக்காட்டிலும் 'வாரம்' என்பது பொருளளவில், வரையறுக்கப்பட்ட எல்லையினையே உடையதாக இருக்கிறது. மக்கள், வீட்டிற்கான வாடகையைப் பற்றிப் பேசும்போது அவர்கள் அவ் வீடு கட்டப்பட்டுள்ள நிலத்திற்கான வாரத்தினையே குறிப்பிடுகின்றனர் என்று நிச்சயமாகக் கூறலாம். ஆயினும், இந்தச் செலுத்தின் பெரும் பகுதியும் அக் கட்டடத்தில் முடங்கியுள்ள சாதனங்களைப் பயன்படுத்துவதற்கான ஒரு கட்டணத்தையே குறிக்கின்றது—அதாவது, முதலினைப் (capital) பயன்படுத்தியதற்குச் செலுத்தப்படும் ஒரு செலுத்

தாகும். இதைப்போன்றே, தொலைக்காட்சிப் பெட்டிக்கான வாடகைக்கும் நிலத்திற்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை; உண்மையில் அது, அத் தொலைக்காட்சிப் பெட்டியின் உரிமையாளர் அப் பெட்டியில் முதலீடு செய்துள்ள முதலினைப் (capital) பயன் படுத்துவதற்காகச் செலுத்தப்படும் ஒரு செலுத்தாகும். குத்தகை தாரர் ஒருவர் தனது நிலச்சுவான்தாருக்கு அளிக்கும் 'வாரத்திலும்' ஒரு பகுதியே மண்ணின் 'இயற்கையான அழியாச் சக்திக்கு' செலுத்தாக உள்ளது. மற்றொரு பகுதி அந் நிலத்தில் உள்ள பண்ணைக் கட்டடங்கள், வேலிகள், பாசன வசதிகள் போன்றவற்றில் முதலீடு செய்யப்பட்டுள்ள முதலினைப் பயன் படுத்தியதற்காக அளிக்கப்படுவதாகும். நடைமுறையில் 'வாரம்' என்று செலுத்தப்படுகின்ற செலுத்தில், எவ்வளவு அளவு செயல் நுட்பக் கருத்தில் 'வாரம்' என்று அழைக்கப்படுவதன்பாலடங்கும், எவ்வளவு அளவு முதலுக்கான வட்டியின்பாற்படும் என்று கூறுவது பெரும்பாலும் இயலாதெனினும், பொருளாதார ஆய்வில் 'வாரம்' என்னும் சொல்லை நில உடைமையினின்றும் பெறுகின்ற வருமானம் என்பதைக் குறிப்பதற்குமட்டுமே பயன்படுத்துவதில் கவனமாக இருக்கவேண்டும்.

நிலத்தின் வாரம் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றது? கூலிப் பிரச்சினைக்கு சரியாக பதிலளித்ததுபோல் இதற்கும் தேவை, அளிப்பு ஆய்வே (demand and supply analysis) பதிலளிக்கக் கூடும். அளிப்புப் பகுதியை முதலில் ஆராய்வோம். அளிப்புக் கோட்டின் தத்துவம் (the concept of the supply curve), நில முழு வதற்கும் பார்க்கும்போது, குறிப்பிட்ட நிலங்களுக்குப் பொருத்தமாக இருப்பதுபோல், அத்துணைப் பொருத்தமானதாக இருப்பதில்லை. அளிப்புக் கோடானது வரவிருக்கும் ஒரு பண்டத்தின் அல்லது காரணியின் பல்வேறு அளவுகளையும் இவ் அளவுகளைப் பெறுவதற்கு அளிக்கப்படவேண்டிய விலைகளையும் இணைக்கின்றது. மிகக் குறுகிய அளவில் மாத்திரமேயல்லாது (except within narrow limits) நிலத்தின் மொத்த அளிப்பில் மாற்றம் ஏற்படுவதில்லை. நிலத்தின் மற்றொரு தன்மை யாதெனில், அதற்கு உற்பத்திச் செலவு இல்லை [நிலத்தின் மொத்த அளிப்பில் உள்ள இத்தகைய தனித்தன்மை களின் (peculiarities) விளைவுகள் அடுத்த உட்பிரிவில் நெடிதும் ஆராயப்பட்டுள்ளன]. எனவே, ஓர் அளிப்புக் கோடு வரையப் பட்டால் அது கோதுமை பயிரிடுதல் அல்லது ஆடு வளர்த்தல் அல்லது கட்டடம் கட்டுதல்போன்ற குறிப்பிட்ட தொழில்களுக்குப் பயன்படுத்தப்படும் நிலத்தின் அளவுகளைமட்டுமே குறிக்கும். உதாரணமாக, மேய்ச்சல் நிலத்திற்கு அளிக்கப்படும் வாரம் அதிகரிக்குமாயின், நிலச் சொந்தக்காரர்கள் தாம் பயிரிடுவோர்க்கு

வாரத்திற்கு விடப்பட்டுள்ள தம் நிலங்களைத் திரும்பப் பெற்று அவற்றை ஆடு வளர்ப்போர்க்கு வாரத்திற்கு விடுவர். இதைப் போன்றே, மேய்ச்சல் நிலத்திற்குக் குறைந்த வாரமே அளிக்கப் படும்போது நிலச் சொந்தக்காரர்கள் தம் நிலங்களை அதிக வாரம் கொடுக்க முன்வரும் கட்டடம் கட்டுபவர்களுக்கோ அல்லது கோதுமை பயிரிடுவோர்களுக்கோ வாரத்திற்குவிட விழைவர். ஆகவே, குறிப்பிட்ட பயன்களுக்குப் பயன்படுத்தப்படும் நிலத்திற்கான ஓர் அளிப்புக் கோடானது, முற்றிலும் கிரமமானதும் பயனுள்ளதுமானதொரு கருத்தைப் பிரதிபலிப்பதாக உள்ளது.

கீழ்க்காணும் வழக்கமான கோடுகளின்மூலம் மேற்சொல்லப் பட்ட அளிப்பு விளக்கப்படுகிறது. படம் 42 (a)-யில் உள்ள கோடுகள் 50 ஏக்கர் நிலத்தினையுடைய ஒரு நிலச் சொந்தக்காரரின் சமநோக்குப் படத்தை (indifference map) உணர்த்துவதாக உள்ளன. அந் நிலச் சொந்தக்காரர் 50 ஏக்கர் நிலத்தைத் தனது




படம் 42

சொந்தப் பயனுக்கோ அல்லது விவசாயிகளுக்கு வாரத்திற்கு விடவோ இயலும். அவரது எல்லையில் பயிரிடும் நிலங்களுக்கு ஏக்கர் ஒன்றுக்கு £ 4 ஆண்டு வாரம் தரப்படும்போது விலைக்கோடு PAவாக உள்ளது; இந் நிலையில் அவர் 20 ஏக்கர் நிலத்தை வாரத்திற்கு விடுவார். வாரமானது ஏக்கர் ஒன்றுக்கு £ 6 ஆக அதிகரிக்குமானால், அவர் 30 ஏக்கர் நிலத்தை வாரத்திற்கு விடுவார். இப்படியே வாரம் அதிகரிக்குமானால், அதிகமான நிலத்தை வாரத்திற்கு விட்டுக்கொண்டே இருக்கக்கூடும். ஆயினும், ஈண்டு வருமான விளைவு மிக அதிகமாக இருப்பதும் சாத்தியமில்லை; ஏனெனில், நிலக்கிழார் அதிக வருமானத்தை அடையும்போது தான்

ஏற்கெனவே தன் சொந்தப் பயனுக்காக வைத்திருந்த நிலத்தைக் காட்டிலும் சற்று அதிகமான அளவு நிலத்தை வைத்துக்கொள்ள விழையக்கூடும். ஆனால், பதிலீட்டு விளைவுடன் ஒப்பு நோக்கும் போது இது அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததொன்றாக இருப்பதில்லை. எனவே, படம் 42 (b)-ல் உள்ள SS′ என்னும் கோட்டைப் போன்றதோர் அளிப்புக் கோட்டினை, எல்லா நிலக்கிழார்களும் பல்வேறு வார மட்டங்களில் அளிக்க முன்வரும் நிலத்தின் அளவைத் தொகுத்து வரைதல் சாத்தியமாகும்.

தேவைப் பகுதியில் எவ்வித தனிச் சிறப்பான இடர்ப்பாடும் ஏற்படுவதில்லை. உற்பத்திப் பயனை நோக்கிப் பயன்படுத்தப்படும் ஒவ்வோர் அலகு நிலமும், அவற்றைப் பயன்படுத்தும் தொழில் முயல்வோனுடைய மொத்த விற்பனை வரவுகளுக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைக் கூடுதலாகச் சேர்க்கும்; இந்தத் தொகை அவ் அலகின் இறுதிநிலை ஆக்கமாகும். ஒரு தொழில்முயல்வோன் எந்த ஓர் அலகிற்கும் கொடுக்கச் சம்மதிக்கும் தொகையானது அதன் இறுதி நிலை ஆக்கத்தால் நிர்ணயிக்கப்படும். இதனால் நிலத்தின் தேவைக் கோடானது (the demand curve for land) உழைப்புத் தேவைக் கோட்டினைப்போன்று ஓர் ஆக்கக் கோடாக உள்ளது. பின்னதாகக் கூறப்பட்ட கோட்டைப்போன்றே, நிலத்தின் தேவைக்கோடும் கீழ்நோக்கிச் சரிந்து (downward sloping) காணப்படும். இவ்வாறு கீழ்நோக்கிச் சரிந்து காணப்படுவதற்கு இரு காரணங்களுண்டு: ஒன்று, குறைந்துசெல் விளைவாகும் (diminishing returns)— அதாவது, பருப்பொருளியலான இறுதிநிலை ஆக்கமானது குறைந்து செல்வதாகும்; மற்றொன்று எந்த ஒரு பருப்பொருளியலான பொருளின் மொத்த அளிப்பானது அதிகரித்துச் செல்லச்செல்ல அதன் மதிப்பு குறைந்துகொண்டே செல்லுவதும் அதன் அங்காடி விலை குறைந்து செல்லுவதுமாகும்.

ஒரே அச்சுகளில் தேவை, அளிப்புக் கோடுகளை அமைப்பதன் மூலம் ஒரு குறிப்பிட்ட பயனுக்காகப் பயன்படுத்தப்படும் நிலத்திற்கு எவ்வளவு வாரம் அளிக்கப்படுகிறதென்பதை, இவ் வழக்கமான முறையில் ஆய்ந்துணரக் கூடும். வார மட்டமானது தேவைக் கோடு இடம் மாறுவதாலோ அல்லது அளிப்புக் கோடு இடம் மாறுவதாலோ பாதிக்கப்படக்கூடும். தேவைக்கோடு இடம் மாறுவதானது சம்பந்தப்பட்ட பண்டத்தின் அங்காடித் தேவையில் ஏற்படும் மாற்றத்தால் ஏற்படுகிறது. அளிப்புக் கோட்டின் இடமாற்றம் நிலத்தின் மற்றப் பயன்கள் ஈட்டுகின்ற வருமானங்களில் ஏற்படுகின்ற மாற்றத்தால் ஏற்படுகிறது; இத்தகைய வருமானங்களில் ஏற்படும் மாற்றமானது, நிலமானது ஒரு குறிப்

பிட்ட வாரத்திற் (a specified rent) ஒரு குறிப்பிட்ட தொழிலுக்காக அளிக்கப்படும் நிலத்தின் அளவை பாதிக்கச் செய்யும்.

## 2. வாரம் ஓர் எச்சப்பாடு என்பது (Rent as a surplus)

இதுகாறும் வாரம் நிர்ணயிக்கப்படுதல், கூலிகள் நிர்ணயிக்கப் படுதலைப் போன்றே, நான்காம் மடலில் விளக்கப்பட்டுள்ள போட்டி விலைப் பொதுக் கோட்பாட்டின் ஒரு தனிவகை இனமாகவே கருதப்பட்டு ஆராயப்பட்டது. இத்தகைய வாரத்தின் எல்லையை விரிவாக்கி நில முழுமைக்குமான வார நிர்ணயத்திற்குப் பயன் படுத்தும்போது—அதாவது, ஒரு குறிப்பிட்ட பயனுக்குப் பயன் படுத்தப்படும் நிலத்திற்கு மட்டுமேயல்லாமல்—ஒரு சிக்கலான பிரச்சினை தோன்றுகிறது. நிலமல்லாத மற்றக் காரணிகளைப் பொறுத்தவரையில் ஒரு காரணி முழுவதற்குமான அளிப்புக் கோடு உண்டென்பதைக் கருதுவதற்கு இடமுண்டு. இத்தகைய அளிப்புக் கோடானது, அக் காரணிக்குக் கொடுக்கப்படும் சராசரி விலைக்கும் அக் காரணி அளிக்கப்படும் மொத்தக் கணியத்திற்கும் இடையேயுள்ள தொடர்பைப் புலப்படுத்துவதாக உள்ளது. பொது வான கூலி மட்டமானது வெறும் பராமரிப்பு அளவிற்கும் குறை வானதாக மிகவும் குறையுமானால், கிடைக்கின்ற உழைப்பின் மொத்த அளவும் குறையும். காரணம், அத்தகையதொரு குறைந்த கூலியினால் பட்டினி ஏற்பட்டு மக்கள்தொகை குறையும். இதைப் போன்றே, வட்டி வீதம் குறையும்போது அளிப்பதற்கு முன்வரும் முதலின் அளவும் குறையும். இப்படியே, நிலம் தவிர்த்த, பிற காரணிகளுக்கும் கூறிக்கொண்டே போகலாம். நிலம் தவிர்த்த, மற்றக் காரணிகளுக்கெல்லாம், ஏதாவது ஒரு கருத்துப்படி, உற்பத்திச் செலவு உண்டு. காரணியின் விலை இவ்வுற்பத்திச் செலவிற்கும் குறைவாக இருக்குமெனில் அதனுடைய அளிப்பு குறையும். உழைப்பின் உற்பத்திச் செலவோ அல்லது தொழில் துணிவின் உற்பத்திச் செலவோ, பிறந்த குழந்தையைத் திறமையான தொழி லாளியாகத் தயார் செய்வதற்கான முயற்சிக்கும் பயிற்சிக்கும் ஏற்படும் செலவாகும்; முதலுக்கான உற்பத்திச் செலவு யாதெனில், முதலானது, எதிர்கால வருமானத்தைக் கருதிப் பயன்படுத்தப்படும் போது அம் முதலுக்குரியவர் அதனை உடனடிப் பயனுக்குச் செலவிட முடியாமல் ஏற்கும் தியாகத்தின் விலையாகும். ஆனால், நிலத்திற்கோ உற்பத்திச் செலவென்பதே கிடையாது. அது இயற்கை தரும் இலவசப் பரிசு. அதனை உற்பத்தி செய்ய யாவரும் எவ்வித தியாகமும் செய்தாரல்லர். மேலும், நாம் ஆறும் அத்தியாயத்தில் அறிந்ததுபோல், நிலத்தின் மொத்த அளிப்பானது மிகவும் குறுகிய வரையறைகளுக்குள், நிலையானதாகவே உள்ளது. அதனுடைய விலை

எவ்வளவுதான் அதிகமாக இருப்பினும் அல்லது எவ்வளவுதான் குறைவாக இருப்பினும் அதன் கணியம் மாறுமல் நிலையானதாகவே இருக்கிறது. இதற்குச் சரிநுட்பமான காரணம் யாதெனில் நிலத்தின் அளிப்பைத் தோற்றுவிக்க யாதோர் அவசியமான அளிப்பு விலையும் வேண்டுவதில்லை.

இத்தகைய தனித்தன்மையான தன்மைகளால் (unique characteristics) நிலம் முழுவதற்குமாகப் பார்க்கும்போது, வாரம் என்பது ஓர் எச்சமாகவே தோன்றுகிறது. இது எந்தக் கருத்தில் இவ்வாறு தோன்றுகிறதெனில் அதனுடைய அளிப்பைப் பெறுவதில் எந்தவித முயற்சியோ அல்லது தியாகமோ தேவையில்லாமலிருப்பதாகும். நிலம் எந்த ஊதியத்தையும் தேவைப்படுவதில்லை. கூலிகள் அல்லது இலாபங்கள் அல்லது வட்டிகள் சுன்னமாகக் குறைந்துபடின் அவைகளின் அளிப்பு வற்றிப்போகும். எனவே தான், இத்தகைய செலுத்துகள் ஒரு முக்கியப் பணியினைப் புரிவனவாகவுள்ளன. ஆனால், வாரத்திற்கோ அத்தகைய பணியொன்றுமில்லை. அது எவ்வித உற்பத்திச் செலவுமற்ற அல்லது எவ்வித உற்பத்திச் செலவிற்கும் ஈடுசெய்வதாக இல்லாததோர் எச்சமாகும். இத்தகைய உண்மையின் கண்டுபிடிப்பே பொருளாதார வாரம் என்னும் கருத்து எழுவதற்குக் காரணமாக இருந்தது; அதாவது வாரம் என்னும் சொல்லானது இத்தகைய தனிச் சிறப்பான கருத்தில், ஒரு காரணியின் தேவையான அளிப்பு விலைக்கும் புறம்பாக அளிக்கப்படும் ஒரு செலுத்து என்பதை விவரிப்பதாக உள்ளது.

வாரம் என்பது இவ்வாறு விளக்கப்படுமாயின், அது எந்த ஒரு காரணியாலும் அடையப்பெறுமென்றும், நிலம் ஒன்றினுல்மட்டுமே அடையப்பெறுவதொன்ருக இருக்காதென்பதும் தெற்றென விளங்கும். காரணிகளின் மொத்த அளிப்பிற்குக் கணக்கிடும்போது நிலத்திற்கு அளிக்கப்படும் செலுத்துமட்டுமே முற்றிலும் பொருளாதார வாரமென்று அழைக்கப்படுவதற் குகந்ததாகவுள்ளதென்பதும், மற்றவை அவ்வாறு அழைக்கப்படத் தகுந்தனவல்லவென்பதும் விளங்கும்; ஏனெனில், நிலம் என்னும் காரணிக்கு மட்டுமே உற்பத்திச் செலவு இல்லை. ஆனல், எந்த ஒரு குறிப்பிட்ட தொழிலுக்கும் எந்த ஒரு காரணியும் அல்லது காரணிகள் யாவும் சிறிது வாரத்தைப் பெறுகின்றன. ஒரு பண்டத்தின் உண்மைச் செலவு, அதன் உற்பத்தியில் பயன்படுத்தப்பட்டுள்ள காரணிகளின் மாற்றுப் பயன்களின் தியாகமாகும். இதைப்போன்றதொரு கருத்து உற்பத்திக் காரணிகளுக்கும் பொருந்தும். ஒரு தொழில் முயல்வோன் எந்த ஒரு காரணியின் பயனையும் பெறுவதற்கு

முன்னர் அக் காரணிக்குக் குறைந்தது அதற்குண்டான மிகப் பொருத்தமான மாற்றுத் தொழிலில் அது என்ன சம்பாதிக்கக் கூடுமோ அதனைக் கொடுத்தாக வேண்டும். இந்தத் தொகை யானது, அதாவது, அது வேறு எந்தத் தொழிலிலும் சம்பாதிக்கக் கூடிய உச்சமான சம்பாத்தியமானது, அத் தொழிலுக்கு அக் காரணி யின் தேவையான அளிப்பு விலையாகும்; இது மாற்றுச் செலவு (transfer cost) என வழங்கிவருகிறது. ஒரு காரணிக்கு அளிக்கப் படும் ஊதியமானது குறைந்தது அதனுடைய மாற்றுச் செலவிற்குச் சமமான அளவிலாவது இருக்கவேண்டும். இல்லாவிடில், (விளக்கத் தின்படி) அது வேறு பிற தொழில்களை நாடிச் செல்லும்; இம் மாற்றுச் செலவிற்கும் அதிகமாக, ஒரு காரணிக்குக் கொடுக்கப்படும் எந்தத் தொகையும் எச்சம் எனப்படும்—அதாவது, பொருளாதார வாரம் எனப்படும். இத்தகைய எச்சம், அல்லது வாரமானது, ஒரு காரணி ஈட்டுகின்ற ஈட்டங்களுக்கும், அதன் தேவையான அளிப்பு விலை அல்லது மாற்றுச் செலவிற்குமிடையேயுள்ள வேறுபாடாகும்.

ஆக, எந்தக் குறிப்பிட்ட தொழிலிலும் பொருளாதார வாரம் என்பது உழைப்பு, தொழில்துணிவு அல்லது முதல், நிலம் ஆகிய வற்றால் பெறப்படுதல் கூடும். சான்றாக, தன் தொழிலில் பெற்று காண்கின்ற பெருவழக்கறிஞர் (Barrister) ஒருவர் ஆண்டொன்றுக்கு £ 2,500 வருமானத்தை ஈட்டுகின்றாரெனக் கொள்வோம். அவர் வழக்கறிஞர் தொழிலை விட்டுவிடுவதாக இருந்தால், அவருக்கு அதிகமான வருமானத்தைத் தரக்கூடிய மாற்றுத் தொழில், ஆண்டொன்றுக்கு £ 1,500 வருமானத்தை அளிக்கக்கூடிய சிவில் சிப்பந்தியாக பணியாற்றுதல் எனக் கொள்வோம். வழக்கறிஞர் தொழிலில் ஆண்டொன்றுக்கு £ 1,500-க்கு அதிகமாக ஈட்டுகின்ற வரையிலும், அவர், வழக்கறிஞர் தொழிலில் நீடித்திருக்க மனம் சம்மதிப்பார். அவருடைய ஈட்டமானது £ 1,500-க்கும் குறைந்தால் தான் அவர் அத் தொழிலை விட்டேகுவார். இதனை வேறு வழியில் கூறுவோமெனில், அவருடைய மாற்றுச் செலவு £ 1,500 எனலாம். இதற்கு மேற்கொண்டு அவர் ஈட்டுகின்ற ஈட்டம் வாரமாகும். ஏனெனில், இந்தத் தனி மிகையான ஊதியம் இல்லையெனினும் அவர் அந்தத் தொழிலில் நீடித்திருப்பார். இதைப்போன்றே திரு. X என்னும் தொழில் முயல்வோரொருவர், கலவைப் பொறிகளை உற்பத்தி செய்வதில் நுண்திறம் உடையவராக இருக்கும் காரணத் தால், அத் தொழிலில் ஆண்டொன்றுக்கு £ 5,000ஐ ஈட்டுகின்றா ரெனக் கொள்வோம்; அவர் வேறு தொழிலை நாடிச் செல்வாராகில் ஆண்டொன்றுக்கு £ 800ஐயே ஈட்டுவாரெனவும் கொள்வோம். இவ்வாறு ஆண்டொன்றுக்கு ஈட்டக்கூடிய £ 800-க்கும் £ 5,000-க்கு

மிடையேயுள்ள வேறுபாடு, பொருளாதார வாரமெனப்படும். இதனைச் சில சமயங்களில் 'திறன் வாரம்' என அழைப்பதுண்டு. இவ்வாறு 'திறன் வாரம்' என்று அழைக்கப்படுவதற்குக் காரணம், மாற்றுச் செலவிற்கும் மிக அதிகமான அளவில் பெறக் கூடிய ஈட்டங்கள் சம்பந்தப்பட்ட காரணிகள் சில தனிச் சிறப்பு வாய்ந்த திறனை உடையனவாக இருப்பதேயாம். இத் திறன் பிறரால் தோற்றுவிக்கப்பட இயலாததொன்ருக இருப்பதும் மேற் சொன்ன காரணத்திலடங்கும். உதாரணமாக, திரு. X என்பவருக்கு ஏனைய பிற தொழில்முயல்வோர்களைக் காட்டிலும் தனிப்பட்ட சிறப்புத் திறனென்றும் இல்லையெனில், இரு சாத்தியக் கூறுகள் உடனடியாகத் தோன்றும்; ஒன்று, மற்றத் தொழில்களிலுள்ள தொழில்முயல்வோர் யாவருமே ஆண்டொன்றுக்கு £ 5000 வருமானத்தை ஈட்டக்கூடும், அல்லது அவர்கள் சலவைப் பொறித் தொழிலுக்குள் நுழைதல் கூடும். அவர்களும் திரு. X போன்றே திறமையுடையவர்களாதலின், X பெறுகின்ற அதிக இலாபங்களைத் தாமும் பெற விழைவதே, அவர்கள் அத் தொழிலில் நுழைவதற்குக் காரணமாகும். முன்னதாகவுள்ள சாத்தியக்கூறில், X-ன் மாற்றுச் செலவு £ 5,000-மாக இருக்கும்; ஏனைய தொழில்முயல்வோர்களது திறமையைப் போன்றே தானும் பெற்றிருத்தலால்,தான் இத் தொகையை வேறு எந்தத் தொழிலிலும் ஈட்டுதல் கூடும். பின்ன தாகவுள்ள சாத்தியக்கூறில் X-ன் ஈட்டங்கள் தொழிலுக்குள் ஈர்க்கப் படுகின்ற தொழில்முயல்வோர்களது போட்டியினுல் குறைக்கப் படும். மேற்கூறப்பட்ட இரு நிகழ்ச்சிகளிலும், பெறப்படுகின்ற ஈட்டங்களுக்கும் மாற்றுச் செலவிற்குமிடையேயுள்ள இடைவெளி போக்கப்படும்; பொருளாதார வாரமும் நில்லாது நீங்கிவிடும்.

முதலினைச் சொந்தமாக வைத்திருத்தலினின்றும் பொருளாதார வாரம் கிடைக்கின்றதென்று கூறுவது கடினமான தொன்ருகவேயிருக்கிறது. ஏனெனில், (மனிதனின் பிறவித்திறனைப் போலன்றி) மூலதனச் சொத்துகளின் எத்தச் சிறப்புத் தன்மை களாலும் ஈட்டப்படும் வழக்கத்திற்குப் புறம்பான அதிக ஈட்டங்கள் பொதுவாக மற்ற மூலதனச் சொத்துகளாலும் ஈட்டப்படக்கூடும். வாடகைக்கு விடப்படும் வீடுகளுக்கான தேவையானது திடீரென அதிகரிக்குமாயின் அது அவ் வீடுகளின்மீது முதலீடு செய்யப்பட் டுள்ள முதலின் வருமானத்தை அதிகரிக்குமெனில், மற்றப் பயன் களில் பயன்படுத்தப்படும் முதலானது திருப்பப்பட்டு இன்னும் அதிகமான வீடுகள் (இயல்பான காலங்களில் என்று கொள்ளுதல் வேண்டும்) கட்டப்படும். இவ்வாறு முதலானது இடமாற்றம் செய்யப் படுதல், அதிக வாடகை இல்லாது போகும்வரையிலும் அல்லது மற்றப் பயன்களுக்கு ஈடுபடுத்தப்பட்ட முதலினுடைய வட்டியானது

வீட்டு வாடகைத் தொழிலிலுள்ள வாடகையின் மட்டத்திற்குச் சமமாக உயருகின்றவரையிலும் நீடிக்கும். எனினும், சில விதி விலக்கான சந்தர்ப்பங்களில் முதலானது வாரத்தைப் பெறுகிற தென்று கருத இடமிருக்கிறது. உதாரணமாக, ஸ்டீஃபன்சன் அவர்க ளால் முதன்முதலில் செய்யப்பட்ட 'வாணம்' பல ஆண்டுகளாகக் காட்சிப் பொருளாகப் பொதுமக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டத னின்றும் கிடைக்கப்பெற்ற வருமானமானது, ஆரம்பத்தில் அவ் வாணம் செய்யப்பட்டதன் உற்பத்திச் செலவைவிடவோ அல்லது அவ் வாணத்தின் மறுபகர்ப்பை அமைத்தலில் ஏற்பட்ட உற்பத்திச் செலவைவிடவோ நிச்சயமாக மிக அதிகமானதாக இருந்திருக்கும். இவ் வதிகமானது பொருளாதார வாரத்தின் தன்மையது எனக் கூறலாம்.

எனவே, பொருளாதார வாரமென்பது ஒரு காரணியானது அதன் தேவையான அளிப்பு விலைக்கு அல்லது மாற்றுச் செலவிற்கு அதிகமான ஊதியத்தைப் பெறும்போது, பொருளாதார வாரம் தோன்றுகிறது. ஆனால், அத்தகைய காரணிக்கு இன்றியமையாத தொரு தகுதி இருக்கவேண்டும். அதாவது, அதனுடைய அதிகமான ஈட்டங்களுக்கொப்ப அதனுடைய அளிப்பு அதிகரிக்கப்படாத தொன்றாக இருத்தல் வேண்டும். நிலமானது, அதனுடைய இயல்பான தன்மைகளுடன் அளிப்பின் மாறாத தனிச் சிறப்பினையும் பெற்றுள்ளது. ஆனால், மற்றக் காரணிகள்கூடப் பொருளாதார மதிப்பின் தனிச் சிறப்பியல்புகளைப் பெற்றிருக்கக்கூடுமாதலால், அவைகளும் பொருளாதார வாரத்தினைப் பெறக்கூடும். இக் கருத்து வரிவிதிப்புக் கைக்கோளிற்கு முக்கியப் பிரச்சினைகளை உண்டுபண்ணு வதாகவுள்ளது. கூலிகள், இலாபங்கள் அல்லது வட்டி ஆகியவைகள் ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேலும் வரி விதிக்கப்படும்போது, காரணிகளின் அளிப்பில் கடுமையான விளைவுகள் ஏற்படக்கூடும்; தொழிலாளர்கள் நீண்ட நேரம் வேலை செய்வதற்கு மனமின்றி இருக்கக்கூடும். தொழில்முயல்வோர்கள் அதிகமான இலாபங் கருதித் தொழில் ஆபத்துகளை மேற்கொள்ள விருப்பமின்றி இருக்கக்கூடும்; முதலீடு செய்பவர்கள் பணத்தைக் கடன் கொடுக்கத் தயங்கக்கூடும். ஆனால், பொருளாதார வாரத்தின்மீது விதிக்கப்படும் வரியானது ஊக்கிகள் அல்லது முயற்சிமீது எந்தவித விளைவையும் உண்டு பண்ணாது என விளக்கம் கூறலாம். ஏனெனில், காரணியின் அளிப்பைப் பொறுத்தவரையில் அது ஒரு தேவையற்ற செலுத்தே யாகும். அவப்பேற்று வசமாகப் பொருளாதார வாரத்தையும், இன்னும் பிறவகை வருமானங்களையும் நடைமுறையில் வேறு படுத்திக் கூறுவது கடினமானதாகவே இருக்கிறது.

### 3. போலி வாரம் (Quasi Rent)

உற்பத்திக் காரணிகளின் அளிப்பு நெகிழ்ச்சியைப் பார்க்கும் போது, ஒரு முனையில், அளிப்பில் முற்றிலும் மாருமல் நிலையாக வுள்ள காரணிகளும், மற்றொரு முனையில், அதாவது, சாதாரண பயிற்சி பெரு உழைப்பைப் போன்று தனிப்பட்ட தொழிலைப் பொறுத்தவரையில்—சுமாராக நெகிழ்வுடைய அளிப்பை உடைய காரணிகளும் உள்ளன. இத்தகைய தீவிரமான வேறுபாடுகளுக் கிடையே, குறுங்காலத்தில் அளிப்பு மாருமல் நிலையாக உள்ளனவும், ஆனுல், அந்தக் கால இடைவெளி தீர்ந்த பிறகு தேவை மாறுதல் களுக்கேற்ப மாற்றமடைகின்ற அளிப்பை யுடையனவுமாகிய காரணிகள் உள்ளன. குறுங்காலத்தில் இத்தகைய காரணிகள் தங்களது அளிப்பு விலையைக் காட்டிலும் கணிசமான அளவிற்கு அதிகமான ஊதியங்களை அடையக்கூடும். இவ்வாறு நிகழுமாயின், அவைகள் பொருளாதார வாரத்தினை அடையும் என்று கூறலாம். இவைகளுக்கும், இதற்கு முன்னருள்ள உட்பிரிவில் ஆராயப்பட்ட சாதனங்களுக்கும்—பொருளாதார மதிப்பின் தனித்தன்மையான வையும் இயல்பானவையானவுமான தன்மைகளையுடைய நிலம் இன்னும் மற்றக் காரணிகள்—இடையேயுள்ள வேறுபாடு யாதெனில், இவைகள் ஈட்டும் வாரமானது முக்கியமாகத் தாற்காலிக மாக இருப்பதே; இவைகளின் அதிகமான ஈட்டங்களுக்கான காரணங் களைக் காலத்தின் பயணமே போக்க முடியும்.

போலி வாரமானது ஏன் தோன்றுகிறது; எவ்வாறு தோன்று கின்றதென்பதை ஓர் உதாரணத்தின்மூலம் விளக்கலாம். ஐக்கிய அரசாங்கத்தில் நாட்டு உடல்நலப் பணித் திட்டம் (National Health Service) ஏற்படுத்தப்பட்டதன் விளைவாக இலவசப் பல்மருத்துவம் அமலாக்கப்பட்டது. இவ்வாறு இலவசப் பல்மருத்துவம் அமலாக்கப் பட்டதும் தகுதிபெற்ற பல்மருத்துவர்களின் பணிகளுக்கான தேவை வெகுவாக அதிகரித்தது. அதுசமயம் அத்தகைய தகுதிகளைப்பெற்ற வர்கள் குறைந்த எண்ணிக்கையில் இருந்தபடியால், இத்தகைய தேர்ச்சித்திறன் பெற்ற உழைப்பின் ஈட்டங்கள் கணிசமான அளவிற்கு அதிகரித்தன. இத்தகைய உழைப்பு, அதற்குள்ள வேறு மாற்றுத் தொழில்களில் ஈட்டியிருக்கக்கூடும் ஈட்டங்களைக் காட்டிலும் கணிசமான அளவிற்கு அதிகமான ஈட்டங்களை ஈட்டியது எனக் கூறலாம்—அதாவது, அம் மருத்துவர்களின் ஈட்டங்கள் அவர்களின் மாற்றுச் செலவைக் காட்டிலும் அதிகரித்தன எனலாம். எனினும், இத்தகைய அதிகரித்த வருமானங்களால் கவரப்பட்டு இத் தொழிலில் நுழைய விழைபவர்களின் பயிற்சி பெற்றுத் தேறும் காலம் கடந்தவுடன், இத் தொழிலில் உள்ள

உழைப்பின் அளவு அதிகரித்தது; பல்மருத்துவர்களின் ஈட்டங்களும் வெகுவாக இயல்பான மட்டத்திற்குத் திரும்பின. ஆக, தேவையின் ஆரம்ப அதிகரிப்பிற்கும், புதிய சூழ்நிலைகளில் உழைப்பின் அளிப்பு பூரணமாகச் சரிசெய்துகொள்ளுதற்கும் இடையே பெறப்படும் எச்சமான ஈட்டங்களைப் போலி வாரம் என அழைக்கலாம்.

இதைப்போன்றே ஒரு பண்டத்தின் தேவை அதிகரித்தலானது பொதுவாக அதன் விலையிலும் அதிகரிப்பை உண்டுபண்ணும். அதன் உற்பத்தியில் சம்பந்தப்பட்டுள்ள மூலதனச் சாதனங்கள் ஓரளவிற்குச் சிறப்புத் திறன் வாய்ந்தவையாக இருப்பின்,—பெரும்பாலும் அவ்வாறேயுள்ளது—இவ்வாறு அதிகரித்த தேவையைச் சமாளிப்பதற்கு அதிகப்படியான சாதனங்கள் தயாரிக்கப்பட்டு நிறுவப்படுவதற்குச் சில காலம் பிடிக்கும். இவ்வாறு தொழிலின் உற்பத்தித் திறனானது தேவையை முற்றிலுமாகச் சமாளிக்குமளவிற்குச் சரிசெய்யப்படும்வரை இருக்கின்ற நிறுவனங்களின் தொழில்முயல்வோர்கள் வழக்கத்திற்குப் புறம்பாக அதிகமான இலாபங்களை ஈட்டுவர். இவ்வாறு, சம்பந்தப்பட்ட சாதனத்தின் தேவையான அளிப்பு விலையைக் காட்டிலும் அதிகமாகவுள்ள இந்த இலாபங்களின் அதிகரிப்பு ஒரு போலி வாரமாகும்.

ஆகவே, தூய பொருளாதார வாரத்தினைப்போன்று (like pure economic rent) போலி வாரமென்பது, ஒரு காரணியின் தேவையான அளிப்பு விலைக்கும் மேலாகக் கிடைக்கும் ஓர் எச்சமாகும். இத்தகைய வாரம், சம்பந்தப்பட்ட காரணியின் சில தனிச் சிறப்பான தன்மைகள் (special quality), (அல்லது)திறன் ஆகியவற்றினின்றும் தோன்றுவதாகும். தூய வாரத்தைப்போலன்றிப் போலி வாரமானது தாற்காலிகமானதொன்றாகவே இருக்கிறது. அதனை விளைவிக்கும் தன்மைகளின் அல்லது திறன்களின் அளிப்பு அதிகரிக்கப்படக் கூடும். ஆனால், இவ்வாறு அதிகரிக்கப்படுவது ஒரு குறிப்பிட்ட கால அளவு கடந்த பிறகே சாத்தியமாகும். இக்கால அளவின்போது தான் போலி வாரம் ஈட்டப்படுகின்றது.

எனவே, நிலம் அல்லது இன்னும் மற்ற இயற்கைக் காரணிகளைப் பயன்படுத்துவதற்காகச் செலுத்தப்படும் ஒரு செலுத்தே வாரம் என்கிற இக் கருத்து, பொருளாதாரத்தில் ஒரு முக்கியத்துவத்தை ஏற்படுத்திவிட்டது. தற்போது வாரம் என்கிற இச் சொல்லானது (அதன் பூர்வமான கருத்தில்) நில உடைமையினின்றும் பெறப்படுகின்றதொரு வருமானம் என்பதை உணர்த்தவோ, அல்லது ஒரு காரணிக்கு அதன் தேவையான அளிப்பு விலைக்கும் அல்லது மாற்றுச் செலவிற்கும் அதிகமாகச் செலுத்தப்படுகின்ற

ஒரு வருமானம் என்பதை உணர்த்தவோ பயன்படுத்தப்படுகிறது. பின்னதாகவுள்ள கருத்தில்தான் தற்காலத்தில் போலி வாரம் என்னும் சொல் ஆளப்படுகிறது—அதாவது, தேவையின் மாறிய சூழ்நிலைகளுக்கேற்பக் காரணிகளின் அளிப்பு அமைவதற்கான கால இடைவெளியின்போது தோன்றுகின்ற தாற்காலிகமான வாரங்கள் என்பதனைக் குறிக்கின்றது. எந்தக் கருத்தில் 'வாரம்' என்னும் சொல் ஆளப்படுகிறதென்பதனைத் தெளிவுபடுத்துதல் மிக முக்கியமானதாகும்.

மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles,* Vol. II, Ch. III.

Marshall, *Principles of Economics,* Book VI, Ch. IX and Appx. K.

*Robinson, *The Economics of Imperfect Competition,* Ch. 8.

Ryan, *Price Theory*, Ch. 7, pp. 209-226.

# 17. இலாபங்கள்
## (Profits)

### 1. இலாபம் ஒரு கணித எச்சப்பாடு என்பது (Profits as an Accounting Surplus)

வாரம் என்னும் சொல்லைப்போலவே 'இலாபங்கள்' என்னும் சொல்லும், பொருளாதார ஆய்வில் பயன்படுத்தப்படுவதைக் காட்டிலும் அதிகமாகப் பரவலாகவும் தாராளமாகவும் பேச்சு வழக்கில் பயன்படுத்தப்படுகிறது. பலர், இலாபமென்பது ஒரு பண்டத்தின் விற்கப்படுகின்ற விலைக்கும், அதனை உற்பத்தி செய்வதில் பயன் படுத்தப்பட்டுள்ள உழைப்பு, கச்சாப் பொருள்கள் ஆகியவற்றின் செலவுக்குமிடையேயுள்ள வேறுபாடு எனக் கூறுவர். பொருளா தாரத்தில் 'இலாபம்' என்னும் சொல் தொழில்துணிவு என்னும் காரணியின் ஊதியங்களை உணர்த்தும். ஆனால், சற்று உற்று நோக்கின், மேலே கூறியபடி கணக்கிடப்பட்ட வேறுபாட்டுத் தொகை இந்த ஊதியங்களைக் காட்டிலும் கணிசமான அளவிற்கு அதிகமாக இருப்பது புலப்படும். இத் தொகையானது தொழில் முயல்வோர் தாம் தொழிலில் பயன்படுத்தியுள்ள முதலின் தேய் மானத்தை ஈடுசெய்வதற்காக ஒதுக்கிவைக்கும் தொகையையும் அடக்கியுள்ளதாகும். நாம் ஏழாம் அத்தியாயத்தில் பார்த்தது போல், அநேகமாக எல்லா உற்பத்தியிலும் ஒரு குறிப்பிட்ட அளவு முதலின் நுகர்ச்சி நிகழ்கிறது. இதனை ஈடுசெய்து முதல் சேத முறாமல் பராமரிக்கப்படுவதற்கு, மொத்த வரவுகளிலிருந்தும் ஒரு தொகை கழிவுசெய்து, அது தனியாக அந் நோக்கத்திற்காக ஒதுக்கப் படுகிறது.

இரண்டாவதாக ஒரு தொகையையும் மேற்சொன்ன மொத்த வரவுகளிலிருந்து கழிவு செய்யவேண்டும். அதாவது, தொழிலில் பயன்படுத்தப்பட்டுள்ள முதலுக்கான வட்டி கழிவு செய்யப்பட வேண்டும். முதலானது சேதமுறாமல் பராமரிக்கப்படுவதோடுகூட, அம் முதலினைக் கடன் கொடுத்து உதவியவர்களுக்கு ஒரு தொகை

செலுத்தப்பட வேண்டும். இந்தத் தொகை ஏன் செலுத்தப்பட வேண்டுமெனில், முதலினைக் கடன் கொடுப்பவர்கள் அம் முதலானது உற்பத்தியில் பயன்படுத்தப்படும் கால அளவில் தமது செல்வத்தையே தாம் எடுத்தாள முடியாது. இத்தகைய தியாகத்தை அவர்கள் செய்யவேண்டியிருப்பதால், அத் தியாகத்திற்கு ஈடாக அவர்களுக்கு ஒரு தொகை செலுத்தப்படவேண்டும். தொழில் முயல்வோர் ஒருவர் தனது தொழிலில் தன் சொந்த முதலினையே வைத்துத் தொழில் செய்பவராக இருக்கலாம்; அப்படியும், அவருக்குக் கிடைக்கின்ற மொத்த இலாபத்தில் ஒரு பகுதி அவரது முதலுக்கான வட்டியாக இருக்கும். அவர் இவ்வாறு முதலுக்கான வட்டி என்று தனியாகக் கணக்குப் பார்த்துக் கணக்கிடுவதில்லையாயினும், அவ் வட்டி அந்த இலாபத்தில் இடம்பெற்றேயுளது.

மூன்றாவது, இலாபம் என்று கணக்கிடப்படுவதில் ஒரு பகுதியானது, உண்மையில் நிருவாகமானது நிறுவனத்திற்கு நல்கும் உழைப்பின் கூலிகளாக இருக்கக்கூடும். ஒரு பொதுக் கூட்டுப் பங்குக் கம்பெனியொன்றில் நிர்வாகிகள் பொதுவாகச் சம்பளம் பெறும் அலுவலர்களாகவே இருப்பர். அவர்களுக்குக் கொடுக்கப் படும் சம்பளமும் தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்படும் கூலிகளைப் போன்றே உற்பத்திச் செலவில் ஒரு கூறாகக் காட்டப்படுகிறது. எனினும், தொழில்முயல்வோரொருவர் நிருவாகப் பணிகளைத் தாமே செய்வாராகில், அவருக்கு மேற்சொல்லப்பட்ட பிரிவின்கீழ்த் தனிப்பட்ட சம்பளம் கொடுபடாமல் வேண்டுமானால் இருக்கலாம். ஆயினும், மொத்த இலாபத்தில், நிருவாகக் கூலிகள் என்பது தனியே கணக்கிடப்பட்டுக் கழிக்கப்படவேண்டும். சான்றாக, ஒரு குடியானவனுடைய நிகர வருமானமானது, இலாபத்தையும் அவன் (அவனுடைய மனைவியும்) உற்பத்திக் கால அளவில் அளித்த உழைப்பிற்கான கூலிகளையும் கொண்டதாக இருக்கும். இதே போன்று, அவன் தனது சொந்த நிலத்தையே பயிர் செய்வானாகிலும், நிகர வருமானத்தின் ஒரு பகுதி, அவன் தனது விவசாயத்திற்காகத் தனது சொந்த நிலத்தையே அளித்திருந்தபோதிலும் அந்த நிலம் பெறக்கூடிய வாரத்தினை உணர்த்துவதாக இருக்கும்

எனவே, உண்மை இலாபமென்பது உற்பத்தியின் மதிப்பிலிருந்து உற்பத்தியில் பயன்படுத்தப்பட்ட நிலம், உழைப்பு, முதல் ஆகியவற்றிற்கான (அவற்றிற்கு உள்ளபடியாக உள்ள அல்லது காட்டப்படுகின்ற) ஊதியங்களைக் கழித்த பின்னர் எச்சமாக உள்ள தொகையாகும். ஈண்டு குறிப்பிட்டுள்ள காரணிகளில், தொழில் முயல்வோன் உற்பத்திக்கு எந்த ஒரு காரணியையாவது அளித்திருப்பாராகில், அக் காரணிக்கான ஊதியத்தையும் கழித்தே எச்சத்

தொகையைக் கணக்கிடல் வேண்டும். கழிக்கப்படவேண்டியவற்றில் மற்றுமொன்றுளது. மூலதனத் தேய்மானத்தை ஈடுசெய்வதற்கானதொரு தொகையையும் கழிக்கவேண்டும். இவ்வாறு எச்சமாகக் கிடைத்த தொகையே தொழில்முயல்வோனுக்கு அளிக்கப்படும் ஊதியமாகும். இந்த ஊதியமானது தொழில்முயல்வோன் உழைப்பு, நிலம் அல்லது முதல் இவற்றை அளிப்பவர் என்ற முறையில் பெறும் ஊதியத்தினின்றும் முற்றிலும் வேறுபட்டதொன்றாகும்.

## 2. இலாபம் ஓர் உற்பத்திச் செலவு என்பது (Profits as a Cost)

இலாபமானது உற்பத்தியின் விற்பனையிலிருந்து நிலம், உழைப்பு, முதல் ஆகிய காரணிகள் தமக்குரிய பங்கினைப் பெற்ற பிறகு மீதியுள்ள தொகையாதலின், இவ் விலக்கணப்படி இதனை ஓர் எச்சப்பாடு எனக் கருதுதல் கூடும். மற்றக் காரணிகளின் ஊதியங்கள் உற்பத்தி முடிவடைவதற்கு முன்பே நிர்ணயிக்கப்பட்டு விடுவதால், இக் கருத்தின்படி, இலாபமானது, ஒரு மீதித் தொகையாகும். மேலும், இலாபங்கள் நடப்பு உற்பத்தியின் விற்பனை வரவுகளுக்கேற்ப ஏற்ற இறக்கங்களையுடையனவாகும். மற்றக் காரணிகளின் விலைகளைப்போலன்றி இலாபமானது எதிர்க்கணியத்திலுமிருக்கும். தொழில்முயல்வோன் கடைசியில் கணக்குப் பார்க்கும் போது, தனது பொருளாதார நடவடிக்கையானது தான் தொழிலைத் தொடங்கியபோது இருந்ததைக் காட்டிலும் தன்னை ஏழ்மையாகச் செய்துவிட்டதை அறியக்கூடும்.

ஆயினும், பொருளாதார நிபுணரின் கருத்துப்படி, இலாபமானது ஓர் உற்பத்திச் செலவேயாகும். செல்வத்தை ஆக்குவதற்கு மற்ற எந்தக் காரணியையும்போலத் தொழில் துணிவு என்னும் காரணியும் அவசியமாகும். இக் காரணியின் அளிப்பைத் தோற்றுவிக்க இலாபமென்பது தேவைப்படுவதால் அது ஓர் உற்பத்திச் செலவு எனக் கருதப்படுகிறது. சரிநுட்பமாகக் கூறப்போனால், ஒரு தொழில்முயல்வோன் உற்பத்தியை மேற்கொள்ளும்படி தூண்டப்படுவதற்குக் காரணம், அவர் தான் இவ்வளவு இலாபத்தை அடையலாமென எதிர்பார்ப்பதே. அவரது முடிவினை அவர் அடைகின்ற இலாபமானது தீர்மானிப்பதாகாது; ஏனெனில், இலாபமானது அவரது முடிவுக்குப் பின்னர் தோன்றும் நிகழ்ச்சியாகும். எனினும், நடைமுறையில், தொழில்முயல்வோர்கள் தாம் ஏற்கெனவே இதைப்போன்ற உற்பத்தி நடவடிக்கைகளில் அடைந்த இலாபத்தை அடிப்படையாகக்கொண்டே தற்பொழுது தொடங்கும் உற்பத்தியில் இலாபங்களை எதிர்பார்க்கின்றனர். எனவே, இலாப

எதிர்பார்த்தலென்பது செயல்படும் ஒரு கூறாக இருப்பினும், இலாபத்தைத் தொழில் துணிவின் உற்பத்திச் செலவாகக் கருதுதல் கூடும்.

உண்மையான இலாபமெனப்படுவது ஓர் உற்பத்திச் செலவாகும். ஏனெனில், தொழில்முயல்வோர்களின் அளிப்பை நிச்சயமானதாகச் செய்ய அதற்கு ஒரு விலை கொடுத்தேயாகவேண்டும். சென்ற அத்தியாயத்தில் நாம் கண்டதுபோல் இலாபமானது, மற்றக் காரணிகளின் வருமானங்களைப்போன்று, வாரம் அல்லது போலி வாரத்தினைத் தன்னுள் கொண்டதாக இருக்கக்கூடும்; எனினும், தொழில்துணிவு என்னும் காரணி அளிக்கப்பட வேண்டுமாயின், அதற்கு ஒரு குறைந்தபட்ச விலை எப்போதும் இருந்தேயாக வேண்டும். இலாபங்களானவை அளவுக்கு மீறிக் குறைவான மட்டத்திலிருக்குமானால், தொழில்முயல்வோர்களாகப் பணிபுரியக்கூடியவர்கள் தொழிலாளர்களாக நிருவாகப் பணி அல்லது வேறு பணிகளைச் செய்பவர்களாக வேலை தேடிச் செல்வர்; அல்லது நிலம் அல்லது முதல் இவற்றைச் சொந்தமாக வைத்திருத்தலின்மூலம் கிடைக்கக்கூடிய எந்த ஒரு வருமானத்தைக்கொண்டும் வாழ மன நிறைவு கொண்டவர்களாக இருப்பர். ஆனால், வேறு எந்தக் காரணிக்குக் கொடுக்கப்படும் ஊதியத்தைக் காட்டிலும் இலாபமே அதிகமான ஏற்ற இறக்கத்தைக்கொண்டதாக இருக்கிறது. அது, தொழிலுக்குத் தொழில், காலத்திற்குக் காலம் வேறுபாடான ஏற்ற இறக்கங்களைக்கொண்டதாக இருக்கிறது. சில சமயங்களில் இலாபமானது எதிர்கணியத்திலிருக்கக்கூடுமாதலால், எம் மருங்கிலும் அதன் ஏற்ற இறக்கம் வரையறையின்றியே காணப்படுகிறது. இதற்குக் காரணம் என்ன ?

### 3. நிலையின்மையைத் தாங்குதல் (Bearing of Uncertainty)

எட்டாம் அத்தியாயத்தில் தொழில்முயல்வோரின் சிறப்பான பாகத்தைப்பற்றி விளக்கியபோது, மற்றக் காரணிகளை ஒருங்கிணைத்து ஓர் உற்பத்தி அமைப்பினை அமைத்தலும், மாற்றத்தை யுடையதும் நிலைபேறற்றதுமானதோர் உலகத்திலுள்ள உற்பத்தி முறையில் தவிர்க்க முடியாததாக இருக்கின்ற நிலையின்மையைத் தாங்குதலும் ஆகிய பணிகள் முக்கியமானவையாகக் கூறப்பட்டன. உழைப்பு, அல்லது நிலம், அல்லது முதல் ஆகியவற்றின் அளிப்போர்கள் இக் காரணிகள் பயன்படுத்தப்படும் ஒப்பந்த கால அளவில் பெறப் போகும் ஊதியங்களைக் குறைந்தபட்சம் முன்கூட்டியே தெரிந்து வைத்துள்ளனர். இதனால் இக் காரணிகளின் உரிமையாளர்கள் ஆபத்து ஒன்றையும் மேற்கொள்ளவில்லையென்பதாகாது.

முதலினைக் கடன் கொடுத்த ஒருவர் அம் முதல் ஓர் எத்தனுக்குக் கொடுக்கப்பட்டுவிட்டதையும், அவன் அம் முதலினைத் திருப்பித் தராமல் ஏமாற்றுவதையும் உணரக்கூடும்; நில உரிமையாளருக்கு வெள்ளம் (அல்லது) நில நடுக்கம் இவற்றால் பெருஞ் சேதம் விளையக் கூடும். தொழிலாளிக்குத் திடீரெனத் தன் வேலை போய்விடக்கூடும். இதனால் அவர் தொடர்ந்து பல காலம் வேலையின்மையால் அல்லலுறக்கூடும். ஆனால் ஒன்று, இத்தகைய ஆபத்துகள் யாவும்—நாணயமின்மை, இயற்கையின் விளைவால் நேரும் சேதம், அல்லது பொருளாதார மந்தம் (போர் அல்லது தனிப்பட்ட வன்முறைச் செயல் அல்லது பிணி இவற்றால் விளைவது) இவற்றால் விளையும் ஆபத்துகள்—ஏதாவது ஓர் அளவில் சமூகத்தின் எல்லா அங்கத்தினர்களாலும் பகிர்ந்துகொள்ளப்படுகின்றன. தொழில்முயல்வோரானவர்—அவர் தனி மனிதராயினும் அல்லது பத்தாயிரக் கணக்கில் அங்கத்தினர்களைக் கொண்டதொரு குழுவாயினும்—தொழிலில் காலவண்ண மாற்றங்கள், (அல்லது) தொழில்நுணுக்க வளர்ச்சி, (அல்லது) அங்காடியைப்பற்றித் தவறாகக் கணக்கிடுதல் ஆகியவற்றால் ஏற்படும் நிலையின்மைகளின் விளைவுகளை ஏற்றேயாக வேண்டும். இன்னோரன்ன ஆயிரமாயிரம் காரணிகள் ஒரு பண்டத்தின் விற்பனை, அப் பண்டம் பெறக்கூடிய விலை, அதனை உற்பத்தி செய்வதற்கான உற்பத்திச் செலவு இவ்வளவாக இருக்குமென்று எதிர்பார்த்தலைப் பொய்த்துவிடச் செய்யக்கூடும்.

தடையற்றதும் விரைவாக மாறுதலை அடைந்துகொண்டிருப்பதுமானதொரு (dynamic) பொருளாதார முறையில் இக் காரணிகள் செயல்படவே செய்யும். நுகர்வோர்கள் தங்களுக்கு விருப்பமானவற்றைத் தடையின்றித் தெரிந்தெடுத்தல் என்னும் உரிமையை வலுக்கட்டாயமாகப் போக்கினாலொழிய, தேவையானது ஒரு குறிப்பிட்ட பண்டத்திலிருந்து மற்றொரு பண்டத்திற்கு எதிர்பாராதவிதமாகத் தாண்டவே செய்யும். இதைப்போன்றே தொழில்நுணுக்க முன்னேற்றமானது எப்படியாவது வளரவொட்டாமல் செய்யப்பட்டாலொழிய, புதிய கண்டுபிடிப்புகள் பொறிகளையும் செய்முறைகளையும் வழக்கற்றவைகளாகவும் விரயமானவைகளாகவும் செய்துவிடக்கூடும். மனிதர்கள் எதிர்கால நிகழ்ச்சிகளைச் சரிநுட்பமாகக் கணக்கிடும் திறனைத் திடீரெனப் பெற்றாலொழிய, எதிர்காலத்தைப் பற்றிய முடிவுகள் பொய்த்துவிடக்கூடும். தேவையை எதிர்பார்த்து உற்பத்தியினைச் செய்வதில் எப்போதும் நிலையின்மைகள் நிகழவே செய்யும்; அப்படியும் உற்பத்தியானது செய்யப்படவே வேண்டுமாயின், யாராவது அந் நிலையின்மைகளைச் சுமப்பதற்கு முன்வந்தாக வேண்டும். தேவை, புதிய கண்டுபிடிப்பு, நுகர்வோர் விருப்பம் எதிர்காலத்தில் என்ன மாற்றங்களை அடையக்கூடுமென்பதனை

உய்த்துணரும் பணியினை யாராவது ஏற்றேயாக வேண்டும்; அத்துடன் ஒரு புதிய பண்டம் அல்லது செய்முறையைத் தோற்றுவித்தலில் நிகழக்கூடிய பலாபலன்களையும் ஏற்றாக வேண்டும். இவ்வாறானவைகளில் ஒரு 'சிறந்த ஊகம்' செய்யப்பட வேண்டுவதோடு, அத்தகைய ஊகமானது சாதனங்களால் தாங்கப்பட வேண்டும்; ஊகம் தவறானதாகப் போகுமாயின் அச் சாதனங்கள் இழக்கப்படக்கூடும். உற்பத்தியின் விளைவு எதுவாயினும் உழைப்பு, நிலம், முதல் ஆகியவற்றின் அளிப்போர்களுக்கு ஊதியம் கொடுக்கப்படவே வேண்டும்; ஒரு பண்டத்தின் விலையினின்றும் அடையப்பெறும் வருவாயானது இத்தகைய ஊதியங்களை அளிப்பதற்குப் போதியதாக இல்லாவிடில் தொழில்முயல்வோன் தனது சொந்தச் சொத்துகளிலிருந்தே பற்றாக்குறையைச் சமாளிக்க வேண்டும்; இவ்வாறு ஒருவருடைய சொத்தை நஷ்டமென்னும் பேராபத்துப் பலிபீடத்தில் நிறுத்துவது, இதனை ஈடுசெய்யுமளவிற்கு இலாபத்தைப் பெறக்கூடுமென்னும் நம்பிக்கை இருந்தாலொழிய, தொழில்முயல்வோனது பணியைப் பல பேர்களைக் கவரும் ஒரு வாய்ப்பாக வைத்திருக்காது. எனவே, தொழில்முயல்வோனின் தனிச் சிறப்பானதும் முக்கியமானதுமான பணியினை ஏற்க மக்களைத் தூண்டுகின்ற ஊதியம் இலாபமேயாகும்.

ஆக, நிலையின்மையே இலாபத்திற்கு ஆதாரமாக உளது. உலகமானது பழையபடி மாறா இயக்கநிலையை உடையதாக இருக்குமாயின், அத்தகையதொரு நிலையில் தேவையோ அல்லது உற்பத்திச் செலவுகளோ மாற்றமடைவனவாக இருக்கமாட்டாதாகலின், நிலையின்மையானது பொருளாதாரக் காட்சியைவிட்டு விலகும்; அத்துடன் இலாபத்திற்கான அவசியமும் விலகும். ஆயினும், நடைமுறை உலகத்தில், நிலையின்மை நிச்சயமாக எப்போதும் இருந்துகொண்டுதானிருக்கிறது. சமூகம் முழுவதிலும் பல்வேறு விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் (உதாரணமாக, தீ, அல்லது திருட்டு, அல்லது புயலினால் ஏற்படும் இழப்புகள்) காலக்கிரமமாக நிகழுவதால், இவற்றினால் தனி மனிதர்களுக்கு ஏற்படக்கூடிய இழப்புகளைக் காப்புறுதிக் கம்பெனிகள் ஒரு குறிப்பிட்ட அளவு கட்டணத்தைப் பெற்றுக்கொண்டு தடுத்துவருகின்றன. இத்தகைய நிகழ்ச்சிகளால் விளையும் இழப்புகள் காப்புறுதி செய்துகொள்வதால் தடுக்கப்படுகின்றன என்பதனைப் பொறுத்தவரையில், தொழில்முயல்வோர் காப்புறுதி வட்டங்களை (premiums) வேறு எந்த உற்பத்திச் செலவையும்போல் ஓர் உற்பத்திச் செலவாகக் கருதக்கூடும். இதனால், தொழில் ஆபத்துகளைச் சமாளிக்கும்படி தொழில்முயல்வோர்களைத் தூண்ட இலாபங்கள் தேவைப்படுவதில்லை என்பதுபோல் தோன்றுகிறது. ஆயினும், சில நிகழ்ச்சிகள்—உதாரணமாக, தேவையில்

அல்லது தொழில்நுணுக்க வளர்ச்சியில் ஏற்படும் ஏற்ற இறக்கங்கள் காலக்கிரமமாக நடைபெறுவதில்லை ஆகையால், தொழில்முயல்வோர்களை அந் நிகழ்ச்சிகளால் ஏற்படும் ஆபத்துகளினின்றும் காப்பாற்றக் காப்புறுதிக் கம்பெனிகள் உத்தரவாதமளிக்க இயலும்படியாகச் செய்வதில்லை. இன்னும் கூறப்போனல், காப்புறுதிக் கம்பெனிகளே அவைகள் பாதுகாப்பளிக்கின்ற எதிர்பாராத நிகழ்ச்சிகளில் விளைகின்ற மிச்ச நிலையின்மைகளைத் தாங்கிக்கொள்ள வேண்டியவைகளாக இருக்கின்றன. சமூகத்தில் நிகழக்கூடும் இறப்புகள் அல்லது தீவிபத்துகளைப்பற்றிய அவைகளின் கணக்கீடு, கொள்ளைநோய் (plague) அல்லது தீ மூளுதல் இவற்ருல் தவருனவைகளாகப் போகக்கூடும். இத்தகைய சூழ்நிலையில் இலாபம் பெறுவது என்பது நிச்சயமானதொன்ருக இராமல் ஒரு தற்செயலான வாய்ப்பாகவே இருக்கக்கூடுமாதலால், அத்தகைய வாய்ப்பினைத் துணிந்து மேற்கொள்ளக் காப்புறுதிக் கம்பெனிகளுக்கு இலாபம் என்பது ஓர் ஈடு செய்யும் தொகையாகத் தேவைப்படுகிறது.

இதனுல், இலாபமென்பது தொழில்முயல்வோர்களின் அளிப்பினைப் போதிய அளவிற்குத் தூண்டுவதற்காக அவசியம் என்பதும்—'இயல்பான இலாபமானது' விலைக் கோட்டின் ஒரு கூருக உள்ளது—அதன் அளவு தொழிலுக்குத் தொழில் நிலையின்மை வேறுபாடாக உள்ளதற்கேற்ப வேறுபட்டிருக்குமென்பதும் தெளிவாகின்றது. சில பண்டங்கள் (உதாரணமாக, பெரும்பாலான உணவுப் பொருள்கள்) நெடுங்காலங்களுக்குக் கணக்கிட்டுப் பார்க்கும்போது நிலையான தேவையையுடையனவாக இருக்கும்; அவைகளின் உற்பத்தி முறையிலும் உடனடியானவையும் தீவிரமானவையுமான மாறுதல்கள் இருக்கமாட்டா. இத்தகைய தொழில்களில், ஒப்பீடாகக் குறைந்த அளவு இலாபமே நிலவுமெனக் கூறப்படுகிறது. இதற்கு மாருக, புதியதாக உற்பத்தி செய்யப்படும் ஒரு பொருளின் எதிர்காலத்தைப்பற்றி நிச்சயமாக ஒன்றும் கூறுவதற்கில்லை; அப்பண்டம் வெகுவான வெற்றியதைத் தருவதாகவோ அல்லது தோல்வியைத் தருவதாகவோ இருக்கக்கூடும். இத்தகைய முதலீடுகளில், குறிப்பாக அதிக வீத இலாபம் எதிர்பார்க்கப்படுகிறது. எங்கெல்லாம் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் நிலையின்மைகளை அதிகமாகப் பெற்றிருக்கின்றனவோ, அத் தொழில்களிலெல்லாம் தொழில்முயல்வோர்கள் உற்பத்தியினை ஏற்க முன்வரவேண்டுமாயின் அதிகமான இலாப வீதம் இருக்கவேண்டும். இத்தகைய நிலையின்மைகள் பொருளின் தன்மை, அல்லது உற்பத்தி முறை, அல்லது சாதனங்களை அளித்தல்—உற்பத்தியை விற்பதன்மூலம் அவற்றைத் திரும்பப் பெறுதல் ஆகிய இவ்விரண்டிற்குமிடையே

யுள்ள கால இடைவெளி (time-lag), அல்லது நிலவுகின்ற சூழ்நிலை ஆகியவற்ருல் ஏற்படுவதாக இருக்கலாம்.

## 4. இலாபங்களும் சாதனங்களின் பங்கீடும் (Profits and the Allocation of Resources)

போட்டிப் பொருளாதார அமைப்பில் விலை அமைப்பானது எவ்வாறு சாதனங்களைப் பல்வேறு பயன்களுக்குப் பங்கீடு செய்கின்றது என்பதனைப் பதினுன்காம் அத்தியாயத்தில் விவரித்தோம். இந்த ஒரு வேலையில் இலாபங்கள் சிறப்பாகப் பங்குகொண்டுள்ளன என்பதனை வலியுறுத்திக் கூறுதல் பொருத்தமேயாகும். ஒரு போட்டிச் சமூகத்தில், தொழில்முயல்வோன் தான் முனைந்தாற்றி உற்பத்தியினைச் செய்பவராக இருக்கிருர். அவரே எந்தப் பொருளை எந்தக் கணியத்தில் உற்பத்தி செய்யவேண்டுமென்பதையும், உற்பத்திக்கு எவ்வளவு உழைப்பு, நிலம், முதல் தேவையென்பதையும் அவைகள் எந்த விகிதத்தில் தேவையென்பதையும் முடிவு செய்கின்ருர். தொழில் முயல்வோனின் செயலுக்கு மூலகாரணமாக இருப்பது இலாபமே. இதனல், சாதனங்கள் பங்கீடு செய்யப்படுதலில் முக்கியப் பணியினைச் செய்வது இலாபமென்பது தெளிவாகிறதல்லா ?

இலாப வீதத்தில் உள்ள மாற்றங்களால்தான் போட்டியின் வேகம் முதலாவதாக உணரப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் உற்பத்தியளவானது, நுகர்வோரானவர் இவ்வளவாக இருக்க வேண்டுமென்று விழைதற்கு மேலாக இருக்குமாயின் [அதாவது, அப் பண்டத்தின் உற்பத்தியில் உள்ளடங்கியுள்ள கிடைப்பருமையான சாதனங்களுக்கு (scarce resources) ஒப்பீடாக அதனின்றும் கிடைக்கப்பெறும் பயன்பாடு குறைவானதாக இருக்குமானல்], அங்காடியில் அப் பண்டம் விற்கப்படும் விலை குறையும். பண்டமானது எந்த விலைக்கு விற்றபோதிலும், நிலம், உழைப்பு, முதல் ஆகியவைகளுக்குத் தொழில்முயல்வோன் தான் ஏற்கெனவே ஒப்பந்தம் செய்தபடி ஊதியங்களைத் தரவேண்டுமாகையால், விலை குறைந்தால் இலாபம் குறைவது தவிர்க்கமுடியாததாகும். இவ்வாறு விலையானது நெடிதளவு குறைந்துகொண்டுசெல்லுமாயின், இலாபங்களொழிந்து நஷ்டங்களேற்படும். இது தொழில்முயல்வோனுக்கு ஓர் எச்சரிக்கையாகும். சமுதாயத்திற்கு இயன்ற அளவு உச்சமான மனநிறைவை அளிக்கும் வகையில் அவர் சாதனங்களைப் பயன்படுத்தவில்லையென்பதனை இது எச்சரித்துக் காட்டுகின்றது. எனவே, தொழில்முயல்வோன் தனது ஆளுகையிலுள்ள சாதனங்களை ஒன்று வேறுவகையில் பயன்படுத்த வேண்டும் அல்லது உற்பத்தியை விட்டேகவேண்டும்.

மாருக, சமுதாயம் தீவிரமாக விழைகின்ற புதியதொரு தேவையினை நிறைவேற்றுவதில் ஒரு தொழில்முயல்வோன் சாதனங்களைப் பயன்படுத்துவாராகில் தான் உற்பத்தி செய்கின்ற பண்டத்திற்கு அதிக விலையினைப் பெற்று அதிக இலாபங்களை அடைதல் கூடும். அதிக இலாபங்கள், உற்பத்தியை இன்னும் அதிகரிக்குமாறு தூண்டும்; இலாபங்கள் இன்னும் அதிகரிக்க வழிசெய்யும். எனவே, இலாப மட்டத்தில் ஏற்படும் இந்த ஏற்ற இறக்கங்களே (fluctuations), சில துறைகளில் அதிகமான சாதனங்கள் பயன்படுத்தப்படவேண்டுமென்றும், மற்றும் சிலவற்றில் மிகக் குறைந்த அளவில் மட்டுமே அவை பயன்படுத்தவேண்டுமென்றும் சமுதாயமானது தீர்மானிப்பதற்குக் காரணமானவைகளாக இருக்கின்றன; தொழில்முயல்வோர்களும் இவைகளால் தூண்டப்படுகின்றனர் அல்லது தடுக்கப்படுகின்றனர்.

எனவே, இலாபமானது, எந்தத் தொழில்களில் தொழில்முயல்வோர்கள் உற்பத்தியினைப் பெருக்கவேண்டும், எவைகளில் சுருக்க வேண்டுமென்பதற்கு ஒரு வழிகாட்டியாகப் பணி புரிகின்றது. திறமைமிக்க தொழில்முயல்வோர்கள் திறமையற்ற தொழில்முயல்வோர்களிடமிருந்தும் சாதனங்களைப் பயன்படுத்திக்கொள்ள ஒரு வழிவகையாக அமைந்துள்ளது. எந்த ஒரு குறிப்பிட்ட அங்காடி விலையிலும், மிகத் திறமையானதொரு தொழில்முயல்வோன், ஒப்பீடான குறைந்த உற்பத்திச் செலவுகளைக் கொண்டவராக இருப்பாராதலால், அவர் அதிவீத இலாபத்தினை அடைவார். ஆகவே, உற்பத்தியினை அதிகரிப்பதற்கு அதிகமான காரணிகளைப் பெறுவதற்குத் தூண்டப்படுவார்; அவைகளைப் பெறுவதற்குக் கூலிகள், வாரம், வட்டி இவற்றை அதிகமாக அளிப்பதற்கும் அவர் தயாராக இருப்பார். இதற்கு மாருக, திறமையற்ற தொழில் முயல்வோரொருவர் மிகக் குறைந்தபட்ச இலாபத்தினையே பெறுவார்; அவரது போட்டியாளர்கள் காரணிகளின் விலைகளை ஏற்றி விலை பேசக்கூடுமாகையால், இவ்வதிகரித்த காரணி விலைகளால் இத்தகைய குறைவீத இலாபமும் மறையக்கூடும்; முடிவில் இலாபமானது முற்றிலும் இன்றிக் கட்டாயமாகத் தன் தொழிலைவிட்டு ஏகும்படி நேரிடும். இதனுல், அவர் ஏற்கெனவே பயன்படுத்திய சாதனங்கள் தற்போது விடுபட்டுத் திறமைமிக்க தொழில்முயல்வோர்கள் பயன்படுத்துவதற்குக் கிடைப்பனவாக இருக்கும்.

ஆக, இவ்வகையில் இலாபமானது தொழில் துணிவு என்னும் காரணியின் அளிப்பினைப் போதிய அளவில் வருவித்தலுக்கு உறுதியளிப்பதுடன் நில்லாது, மேற்கொண்டும் சில பணிகளைச் செய்வதால் அமைந்துள்ளது. நிறைவுப் போட்டியுள்ளதோர் உலகத்தில்

இருக்கின்ற காரணிகளைக்கொண்டு எந்தப் பொருள்களை எந்தக் கணியத்தில் உற்பத்தியாளர்கள் உற்பத்தி செய்யவேண்டுமென்பதனைச் சமுதாயம் விழைகின்றதென்பதனைச் சுட்டுகின்ற ஒரு சுட்டியாக அது அமைந்துள்ளது. நுகர்வோர்கள் தங்களது செலவினங்களை உச்சமான மனநிறைவைப் பெறும் நோக்கத்துடனே பகிர்வு செய்து கொள்கின்றனரென்னும் அடிப்படையானதோர் எடுகோளினைக் (basic assumption) கருத்தில் கொண்டு நோக்குவோமாயின், ஒப்பீடான இலாப மட்டங்களே, சமூகமானது தன்னிடமுள்ள கிடைப்பருமையான சாதனங்களை, உச்சமான மன நிறைவைப் பெறும் நோக்கத்துடன், பல்வேறு தொழில்களில் பகிர்வு செய்கின்றமைக்குக் காரணமானவைகளென்பது விளங்கும்; இலாபமானது மேலும் ஒரு பணியினைச் செய்கின்றது. திறமையற்ற தொழில் முயல்வோர்களைக் களையெடுத்தல்போன்று தொழிலினின்றும் நீக்கி, உற்பத்தியானது ஒப்பீடான வெகு திறமையுள்ள தொழில்முயல்வோர்களின்கீழ் இயங்குவதற்கு உறுதுணையாகவுள்ளது.

ஆயினும், இவை யாவும் நிறைவுப் போட்டியுள்ளதோர் உலகம் உள்ளதென்னும் கருத்து அடிப்படையில் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. ஏற்கெனவே கூறியுள்ளதைப்போன்று நடைமுறை உலகம் நிறைவுப் போட்டிக்கும் அப்பாற்பட்டதாகவேயுள்ளது. ஆகவே, சர்வாதீனம் உள்ளதென்னும் கருத்திற்கு இடமளிப்பான் வேண்டி, கருத்துப் படம் மாற்றியமைக்கப்படல் வேண்டும்.

## 5 சர்வாதீன இலாபங்கள் (Monopoly Profits)

ஒரு பண்டமானது நிறைகுறைப் போட்டியின்கீழ் உற்பத்தி செய்யப்படும்போதுதான், நிறைவுப் போட்டியின்கண் உற்பத்தி செய்யப்படுவதைக் காட்டிலும் அதிகமான விலையினைப் பெறுகின்றதென்பதனை முன்பே பார்த்தோம். உற்பத்தியாளர்கள் ஒப்பீடான அதிக இலாபங்களைப் பெறுவது இதற்குக் காரணமன்று. நிறைகுறைப் போட்டி நிலவும் தொழிலொன்றில் சமநிலை தோன்றுமாயின், அப்போது எல்லாத் தொழில்முயல்வோர்களும் தங்களது திறமைக்கேற்ப இயல்பான இலாபங்களை ஈட்டுவர். விலையானது, இத்தகைய சூழ்நிலையில், வெகு அதிகமாக இருப்பதற்குக் காரணம், பல நிறுவனங்கள் மிகக் குறைந்த உற்பத்தி மட்டத்தில் உற்பத்தி செய்வதேயாகும். மேலும், அது, இயன்ற அளவு குறைந்தபட்ச உற்பத்திச் செலவுக் கோட்டிற்கும் மேலாகச் செல்லும் சராசரி உற்பத்திச் செலவுக் கோட்டில் ஏதாவது ஒரு புள்ளியில் அமைந்துள்ளது. நிறைகுறைப் போட்டியில் உற்பத்திச் செலவுகள் அதிகமாக இருப்பதால் விலைகளும் அதிகமாக இருக்கின்றன; இத்தகையதொரு நிலையின் தீமை அதிக வீத இலாபங்களல்ல;

பயன்படுத்தப்படாத திறனானது இன்னும் விரயமாக்கப்படுவதாலேயேயாகும். (நிறைமுறைப் போட்டியில் உள்ள நன்மைகள் இத்தகைய தீமையைப் போக்குமளவிற்குப் போதுமானவைகளாக இருக்குமா என்னும் பிரச்சினையானது, குறிக்கோளானதொரு ஆய்வினைச் சாரும் என்பதைவிடத் தனிப்பட்டதொரு கருத்து எனக் கூறுவதே பொருத்தமுடையதென்பதனை ஈண்டு ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும்.)

ஆயினும், சர்வாதீனச் சூழ்நிலைகளில், வேறுவிதமான கருத்துகளும் பொருந்துவனவாக உள்ளன. ஒரு சர்வாதீனர் மொத்த உற்பத்தியையும் கட்டுப்படுத்தக்கூடியதொரு நிலையிலிருக்கின்ற காரணத்தால், அவர் தனது பொருள்களுக்குச் சராசரி உற்பத்திச் செலவைக்காட்டிலும் அதிகமான விலையை நிர்ணயிக்க முடிகின்றது. இதற்குக் காரணம், உற்பத்தியானது ஒப்பீடான அதிக உற்பத்திச் செலவு மட்டத்தில் (வழக்கமாக இவ்வாறு அதிகமாகவே இருக்கும்) செய்யப்படுகிறதென்பதோடு. உற்பத்தியாளர் தனது சர்வாதீன அதிகாரத்தால் வெகு அதிகமான இலாபத்தைப் பெறுகின்றாரென்பதுமாகும்.

தற்போது ஆராய்ந்த இலாபத்தின் தன்மை, பணிகள் ஆகியவற்றை நிர்ணயிக்கும் காரணிகளே இத்தகைய அமித இலாபங்களுக்கும் காரணமாக இருக்கின்றன என்று கூறுவது பொருத்தமுடையதாகுமா? இதற்குச் சரியான விடை, சர்வாதீனர் பெறுகின்ற அமித அல்லது இயல்பு மீறிய இலாபங்கள், ஒருவகையான பொருளாதார வாரம் என்பதாகும். மாற்றச் செலவிற்கும் மேலாகக் கிடைக்கும் ஓர் எச்சப்பாடு என்னும் கருத்தில் இவ்வாறு அழைக்கப்படுகின்றது. பொருளாதார வாரம் என்பது எந்த ஒரு காரணியாலும்,அளிப்பு அதிகரிக்கப்பட முடியாத அதன் தன்மையால் பெறப்படுவதென்பது ஏற்கெனவே உறுதியாக்கப்பட்டது. சர்வாதீனருக்கு அத்தகையதொரு தன்மை தெளிவாகவே காணப்படுகிறது—ஒரு பண்டத்தின் அளிப்பைக் கட்டுப்படுத்தக்கூடிய திறமை (இத்திறமையானது இயற்கை அல்லது செயற்கைக் காரணிகளினின்றும் பெறப்படுகிறது) அவருக்கிருப்பதால், அதன்மூலம் அப் பண்டத்திற்கு அதிகமான விலையைப் பெறுவதற்குமான ஆற்றலும் அவருக்குள்ளது. பொருளாதார வாரமென்பது, உடன்பிறந்தனவும் (innate), தோற்றுவிக்கப்பட முடியாதனவுமான தன்மைகளால் ஏற்படுகின்றதென்பதை ஏற்கெனவே பார்த்தோம். அதேபோன்று போலி-வாரமானது குறுங்காலத்தில் ஒரு குறிப்பிட்ட காரணியின் அளிப்பானது பருப்பொருளியலாக அதிகரிக்கப்பட முடியாமையால் தோன்றுவதென்றும் கண்டோம். கோட்பாட்டளவில், வாரம்

ஈட்டும் தன்மையொன்றின் அளிப்பானது பருப்பொருளியலாக அதிகரிக்க முடியாததால் ஏற்படும் கிடைப்பருமையால் விளையும் வாரத்திற்கும், சர்வாதீனத்திற்கு அடிகோலுகின்ற இயற்கையானவையும் செயற்கையானவையுமான வரையறைகளினின்றும் தோன்றுகின்ற வாரத்திற்கும் வேறுபாடு ஒன்றுமில்லை. சர்வாதீன நிலையானது நிரந்தரமானதொன்ருக இருக்குமானுல், தொழில் முயல்வோருக்கு இயல்பான மட்டத்திற்குமேல் கிடைக்கும் இலாபங்கள் ஒருவகையான தூய வாரமாகும்; சர்வாதீன அதிகாரமானது தாற்காலிகமானதொன்ருக இருப்பின் [காப்பு உரிமைகளினின்றும் (patent rights) ஒரு குறிப்பிட்ட கால அளவிற்குக் கிடைக்கின்ற அதிகாரத்தைப்போல] கிடைக்கின்ற அமித இலாபம் ஒரு போலிவாரமாகும்.

சாதனங்கள் பங்கீடு செய்யப்படுவதில் சர்வாதீன இலாபம் ஏற்படுத்தும் சாதன விளைவுகள் என்ன ? நடைமுறை உலகத்தில் அதிக மட்ட இலாபங்கள் நிலவுவதை உத்தேசித்து சம்பந்தப்பட்ட தொழிலில் அதிக அளவில் நிலையின்மை உள்ளதென்ருே அல்லது சம்பந்தப்பட்ட தொழில்முயல்வோன் தனிச் சிறப்பான திறனையுடையவராக இருக்கின்ருரென்ருே முடிவுசெய்துவிட முடியாது. அதிக இலாபங்கள் அத் தொழிலில் ஏதாவதொரு வகையில் சர்வாதீன அதிகாரம் நிலவுவதைப் பிரதிபலிப்பனவாக இருக்கக்கூடும். இவ்வதிகாரத்தின் துணைகொண்டு தொழில்முயல்வோன், நுகர்வோரைச் சுரண்டி, ஒரு பொருளாதார வாரத்தினை அடைதல்கூடும். இலாபங்கள், தொழில் முயல்வோர்களைச் சமூகத்தின் கிடைப்பருமையான சாதனங்களை உத்தமமான அளவில் பயன்படுத்தும்படி தூண்டுமெனவும் எப்போதும் எதிர்பார்க்க முடியாது. ஒரு சர்வாதீனரானவர், ஆய்வானது ஏற்கெனவே காட்டியதுபோல், உற்பத்தியை, சராசரிச் செலவுகள் குறைந்தபட்சமாக இருக்கும் புள்ளியை அடையும்வரையிலும், செய்துகொண்டேயிருப்பதில்லை. அதிக இலாபமென்பது அதிக உற்பத்திக்கு வழிகோலுவதாக இருக்காது. ஏனெனில், சர்வாதீனரே தனக்கு உச்சமான இலாபத்தைத் தரவல்ல உற்பத்தியளவில் ஏற்கெனவே உற்பத்தி செய்துகொண்டுதானிருப்பார். இதற்கு மற்றுமொரு காரணம், சர்வாதீனத்தில் ஏனைய பிற தொழில்முயல்வோர்கள் தொழிலுக்குள் புகுந்து (அதிகமான இலாபத்தைப் பகிர்ந்துகொள்ளும் நோக்கத்துடன்) தொழில் செய்து உற்பத்தியைப் பெருக்கவும் வழியில்லை. எனவே, பொருளாதார முறையில் சர்வாதீனங்கள் இருக்குமாயின் (நடைமுறை உலகத்தில் அவ்வாறே உள்ளன) இலாபமென்னும் அமைப்பானது சாதனங்களின் உத்தம அளவுப் பகிர்விற்கு வழிகோலுவதாக இருக்காது; உற்பத்தியளவு மிகக் குறைவாகவும், இலாபங்கள் காரணமின்றி மிக

அதிகமாகவும் இருக்கக்கூடும். சர்வாதீனங்களுள்ள பொருளாதார முறையில், நுகர்வோரானவர் தனது சமுதாயத்தின் ஆக்கம் உண்டுபண்ணும் சக்திகளின் முழுப்பயனையும் துய்க்கவொட்டாமல் தடுக்கப்பட நேரலாம்.

மேலும் படித்தற்குரிய நூல்கள்

Robertson, *Lectures on Economic Principles,* Vol. II, Ch. VII.

Ryan, *Price Theory,* Ch. 10, pp. 308—319.

Marshall, *Principles of Economics,* Book VI, Chs. VII—VIII.

F. H. Knight, *Risk, Uncertainty and Profit* (London School of Economics Reprints, No. 16, London, 1940), Chs. I—II, IX—X.

*B. S. Keirstead, *An Essay in the Theory of Profits and Income Distribution* (Blackwell, Oxford, 1953), Ch. II.

# 18. நாட்டு வருமானம்
## (National Income)

**1.** நாட்டு வருமானத்தை அளவிடல்

பொருளாதார முறை இயங்குவதுபற்றிய ஆரம்பமான ஆய்வில் மேற்கொள்ளப்படும் வழிப்பயணம் தற்போதெல்லாம் மிக முன்னேற்றத்தையுடையதாக இருக்கின்றது. பொருளாதார நடவடிக்கையானது, சமூகம் தான் பெற்றுள்ள வரையறுக்கப்பட்ட சாதனங்களைக்கொண்டு இயன்றவரை அதன் அளவற்ற தேவைகள் பலவற்றை நிறைவேற்றுவதை நோக்கமாகக்கொண்டிருக்கிறது; நுகர்வோர்கள், தங்களது வருமானங்களினின்றும் வெகு அதிகமான மனநிறைவைப் பெறும் நோக்கத்துடன், தங்களது செலவினங்களைப் பகிர்வுசெய்து வைப்பர்; நுகர்வோர்களின் தேவைகளை எல்லாம் நிறைவேற்றும்பொருட்டு சாதனங்கள் ஒருங்கிணைக்கப்படுகின்றன; கடைசியாக, எவ்வாறு இவ் ஆய்வானது, ஒவ்வொரு பண்டத்தின் மதிப்பும் கூலிகள், வாரம், வட்டி (வட்டியினைப்பற்றிப் பிறிதோர் இடத்தில் ஆராய்வோம்), இலாபங்கள் ஆகியவைகளுக்கிடையே பகிர்ந்தளிக்கப்படுகிறதென்பதனையும் விளக்கியது.

இவை யாவற்றையும் ஒன்றுசேர்த்தால், நாட்டு வருமானம் என்னும் கருத்து முன்வந்து நிற்கும். நாட்டு வருமானம் என்பதானது, உற்பத்தி செய்யப்பட்ட மொத்தச் செல்வத்தின் ஓட்டமாகும்; இது பொருளாதார முறை முழுவதும் பகிர்வு செய்யப்பட்டு நுகரப்படுவதாகும். ஒரு தனி மனிதன் எவ்வாறு தனது தொழில் அல்லது சொத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட கால அளவில் தான் பெறுகின்ற ஒவ்வொன்றையும் சேர்த்துத் தனது மொத்த வருமானத்தைக் கணக்கிடுகின்றானோ, அதேபோன்று நாடானது, ஒரு குறிப்பிட்ட கால அளவில் அதன் குடிமக்கள் ஈட்டும் வருமானங்களையெல்லாம் சேர்த்துக் கூட்டி, அதனுடைய நாட்டு வருமானத்தைக் கணக்கிடுகிறது.

இது, உண்மையில் எவ்வாறு கணக்கிடப்படுகிறது? ஒவ்வொரு நிலையினின்றும் கிடைக்கப்பெறும் ஒவ்வொரு பென்னியும் யாராவது ஒருவருடைய வருமானமென்பதும், முடிவில் வருமானம் என்பது ஏதாவது ஒரு பொருளின் உற்பத்தியிலிருந்தே தோன்றுகின்றதென்பதும் நமக்குத் தெரிந்ததே. இதனால், சமூகம் முழுமையும் பெறுகின்ற மொத்த வருமானத்தை, உதாரணமாக, ஓர் ஆண்டுக் காலத்திற்கான வருமானத்தை, உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் விற்பனைகளின் மதிப்பைக் கூட்டியோ அல்லது எல்லாவகையான உற்பத்திகளின் மதிப்பையெல்லாம் கூட்டியோ அல்லது எல்லாத் தனிப்பட்டவர்களின் அல்லது தொழில் அமைப்புகளின் வருமானங்களையெல்லாம் கூட்டியோ கணக்கிட முடியும் என்பது தெளிவாகின்றது. இம் மூன்றும்—அதாவது, மொத்தச் செலவு, மொத்த உற்பத்தி, மொத்த வருமானம் ஆகியவை—பல்வேறு கோணங்களில் கண்ணுறும்போது ஒன்றாகவே காணப்படுகின்றன. நடைமுறையில், இம் மூன்று முறைகளுமே, நாட்டு வருமானத்தைக் கணக்கிடுவதற்குப் பயன்படுத்தப்படுகின்றன. இம் மூன்று முறையிலும் கிடைக்கப்பெறும் புள்ளிவிவரங்களுக்கிடையே பல்வேறு அளவு வேறுபாடுகள் காணப்படுவதால், ஒவ்வொரு முறையாலும் கிடைக்கப்பெறும் புள்ளிவிவரமானது மற்றதைச் சரிபார்த்துச் செம்மைப்படுத்தத் துணைசெய்வதாயுள்ளது.

பிரிட்டனில் ஒவ்வோர் ஆண்டிலும் வெளியிடப்படும் நாட்டு வருமான மதிப்பீடுகளை எவ்வாறு புள்ளிவிவர அலுவலர்கள் தொகுக்கின்றனரென்பதை ஈண்டு பொதுப்படையாகவேனும் கூறுதல் பயனுடையதாக இருக்கக்கூடும். முதலாவது முறையானது, உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின்மீது செலவிடப்பட்ட மொத்தச் செலவைக் கணக்கிடுதலாகும். நுகர்வோர் பண்டங்கள்மீது செலவிடப்பட்ட மொத்தத் தொகைகளை, மொத்த வியாபாரிகள், சில்லறை வியாபாரிகள் ஆகியவர்களின் ஆண்டு விற்பனைப் புள்ளிவிவரங்களினின்றும் கணக்கிடுகின்றனர். இத்தகைய புள்ளிவிவரத்திற்கு அடிப்படையான ஆதாரமாக இருப்பது காலாகாலத்தில் எடுக்கப்படும் பகிர்வுக் கணிப்பாகும்; இக் கணிப்பிற்காக, ஒவ்வொரு கடையும் ஓர் அறிக்கையை வெளியிடவேண்டும். இவ் அறிக்கையில், மற்ற விவரங்களுடன், அக் கடையின் விற்பனைகளின் மொத்த மதிப்பு இவ்வளவு என்பதும் அடங்கியிருக்கும். இடையிடையே உள்ள ஆண்டுகளில் புள்ளிவிவர நிபுணர்கள் குறைந்த எண்ணிக்கையுடைய கடைகளின் புள்ளிவிவரங்களைச் சேகரித்து அதன்மூலம் மொத்த விற்பனைகளின் மதிப்பை ஊகித்தறிகின்றனர்; இக் கடைகளின் புள்ளிவிவரங்களைஅவர்கள் ஒரு பகர மாதிரியாகக் கருதுகின்றனர். இத்தகைய பண்டங்களின் கொள்முதல் மதிப்பீடுகளுடன், களியாட்டம், பழுதுபார்த்

தல், வாழ்க்கைத் தொழில்கள், வீட்டுப் பணிகள்போன்ற எல்லா வகையான ஆள்சார் பணிகளின்மீது செலவிடப்படும் செலவுகளின் மதிப்பீடுகளையும் சேர்த்துக் கணக்கிடல்வேண்டும். பிறகு, முதற் கருவிப் பொருள்கள்மீது செலவிடப்பட்ட தொகையையும் கூட்ட வேண்டும். இத்தகைய பொருள்கள் பெரிதும் கம்பெனிகளால் தான் வாங்கப்படுவதால், இத்தகைய புள்ளிவிவரங்களைச் சேகரிப் பதற்கான முக்கியமான ஆதாரங்கள் கம்பெனி இருப்புநிலைக் குறிப்பு களும், வரி அறிக்கைகளும், உற்பத்திக் கணிப்புமாகும். உற்பத்திக் கணிப்பு என்ன என்பது கீழே விவரிக்கப்பட்டுள்ளது. இவைகளின் மூலம் நிலையான சொத்துகள்மீது—இயந்திரங்கள், கட்டடங்கள், வாகனங்கள் முதலியவை—செலவழிக்கப்பட்ட தொகையைக் கணக் கிட முடியும்; இதேபோன்று கச்சாப் பொருள்களின் இருப்புகளின் மீதும் முழுவதுமாக உற்பத்தி செய்யப்பட்ட அல்லது அரைகுறை யாக உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின்மீதும் செலவிடப்பட்ட தொகையையும் கணக்கிட முடியும்.

மொத்தச் செலவினைக் கணக்கீடு செய்தலென்பது கோட்பாட் டளவில்கூட அத்துணைச் சிக்கலற்றதொன்றாக இல்லை. (புள்ளி விவரங்களைச் சேகரிக்கும் பிரச்சினைகளே கணிசமான அளவிற்கு இருக்கின்றன.) இதில் தவறுகள் சிலவற்றைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும். இவ்வாறு இவற்றைத் தவிர்க்க முயற்சிக்கும்போது வெளியீடு செய்யப்பட்ட நாட்டு வருமான மதிப்பீடுகளில் சிக்கலான பிரச்சினைகள் எழுகின்றன. மொத்தச் செலவு மதிப்பீடுகள் துணை கொண்டு ஒரு தேசத்தின் நாட்டு வருமானத்தைக் கணக்கிடும் போது, சமுதாயத்தில் எவர் ஒருவருக்கும் வருமானத்தை அளிக்கக் கூடிய கொள்முதல்கள்மட்டுமே சேர்த்துக்கொள்ளப்படவேண்டும்; அதே சமயத்தில் அத்தகைய கொள்முதல்கள் விட்டுப்போகாமல் இருக்கும்படி போதிய கவனமுடனும் பார்த்துக்கொள்ள வேண்டும். இதில் இரண்டு சிக்கல்கள் அடங்கியுள்ளமையால் கணக்கிடும் வேலை சற்றுக் கடினமானதொன்றாகவே இருக்கும். சிக்கல்களில் முதலாவ தாக உள்ளது அயல்நாட்டு வாணிபமாகும். இத்தகைய வாணி பத்தில் உள்ள விளைவு யாதெனில், ஒரு நாட்டின் சில கொள் முதல்கள் அந்த நாட்டிலுள்ள வேறு யாருக்கும் வருமானத்தை அளிப்பனவாக இல்லாமல்போகலாம்; ஏனெனில், அப் பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களாகும். நான் பிரிட்டனில் நியூசிலாந்தின் வெண்ணெயை வாங்குகிறேன் என்று கொள்வோம். நான் வாங்கும் வெண்ணெய்க்குச் சமமான வருமானம் அவ் வெண் ணெயின் உற்பத்தியாளர் வசிக்கும் நியூசிலாந்திற்குச் செல்லுமே தவிர பிரிட்டனுக்குச் செல்வதில்லை அல்லவா? இதற்கு எதிரிடையாக ஒரு கார் பர்மிங்ஹாமில் (Birmingham) செய்யப்பட்டு அமெரிக்காவில்

விற்கப்படுகிறதெனக் கொள்வோம். அதனை உற்பத்தி செய்வதில் உதவி செய்த தொழிலாளிக்குக் கூலியானது பிரிட்டனில்தான் கொடுக்கப்படுகிறது. பிரிட்டிஷ் நாட்டு வருமான மதிப்பீட்டில் இக் கூலிகள் சேர்க்கப்பட்டாகவேண்டும்; ஆயினும், இவ் வருமானத்திற்கொப்பான பொருள்களின் விற்பனை பிரிட்டனில் நடைபெறுவதில்லையல்லவா? இத்தகையதோர் இடர்ப்பாட்டினைக் களைவதற்கு பிரிட்டிஷ் புள்ளிவிவர நிபுணர்கள் என்ன செய்கின்றனர்களெனில், முதலில் பிரிட்டனில் உள்ள நபர்களாலும் நிறுவனங்களாலும் செலவிடப்படுகின்ற மொத்தச் செலவு எவ்வளவு எனக் கணக்கிடுகின்றனர். இந்தத் தொகையிலிருந்து பிரிட்டனில் அந்த ஆண்டில் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் மதிப்பைக் கழித்து வந்த தொகையுடன் அந்த ஆண்டில் ஏற்றுமதி செய்யப்பட்ட பண்டங்களின் மதிப்பைக் கூட்டவேண்டும்.

செலவுப் புள்ளிவிவரங்களினின்றும் நாட்டு வருமானத்தின் மொத்தத் தொகையைக் கணக்கிடுதலில் சம்பந்தப்பட்டுள்ள இரண்டாவது சிக்கல், மறைமுக வரிகளினின்றும் (indirect taxes) தோன்றுகிறது—மறைமுக வரிகளென்பவை வருமானம் அல்லது முதல் ஆகியவற்றின்மீது விதிக்கப்படாமல் செலவினங்களின்மீது விதிக்கப்படும் வரியாகும். நான் ஒரு சிப்பம் சிகரெட்டுகளுக்கு (a packet of cigarettes) 4 ஷில்லிங் 0 பென்ஸ் விலை கொடுக்கிறேன் என வைத்துக்கொள்வோம். இதனால் நாட்டிலுள்ள யாரோ ஒருவருக்கு இதற்கிணையான வருமானம் போய்ச் சேருகின்றது என்பது பொருளாகாது. இதற்குக் காரணம் என்னவெனில், விலையில் பெரும் பகுதியும் வட்டி வரவுகளாக அரசாங்கத்தின் பணப்பைக்குள் போய்ச் சேர்ந்துவிடுகிறது. மாறாக, எனது மனைவி, என் சிறிய மகளுக்காக வாங்கும் ஒரு பின்ட் (one pint)—'காலன்' அளவில் எட்டில் ஒரு பங்கு—பாலுக்கு 4 பென்னிகள் விலை கொடுக்கும்போது, அப் பாலுக்காகப் பெற்றுக்கொள்ளப்படும் வருமானம் 4 பென்னிகளைக் காட்டிலும் கணிசமான அளவிற்கு அதிகமாக இருக்கும். இதற்குக் காரணம் என்னவெனில், அரசாங்கமானது பாலிற்கான பால்பண்ணையாரின் விலையில் ஒரு பகுதியைப் பணமானியமாகக் கொடுப்பதேயாகும்—இத்தகைய பணமானியம் ஒருவகை எதிர்க்கணிய மறைமுக வரியாகும். மொத்தச் செலவு மதிப்பீடானது நடப்பு உற்பத்தியின் விளைவாகப் பெறப்படும் வருமானங்களை அளவிடுவதற்குப் பயன்படுத்தப்படவேண்டுமெனில், புள்ளிவிவர நிபுணர்கள் மொத்தச் செலவின் அடிப்படையான மதிப்பீட்டை முதலில் கணிக்கவேண்டும். இத் தொகையிலிருந்து மறைமுக வரிகளின் மதிப்பைக் கழித்து, அத்துடன் பணமானியங்களின் மதிப்பைக் கூட்டவேண்டும். அவர்கள் இவ்வாறு கணக்கிடும்போது நாட்டு வரு

மானத்தைச் சாதனச் செலவாகக் கணக்கிடுகின்றனர் (அதாவது, பல்வேறு உற்பத்திக் காரணிகளுக்குக் கொடுக்கப்படுகின்ற ஊதியங்களைக் கணக்கிட்டு) என்று பொருள்; அவர்கள் இத்தகைய சரிசெய்தலைச் செய்யாமல் கணக்கிடுவார்களாகில், 'அங்காடி விலைகளில்' கணக்கிடுகின்றனரென்று பொருள்.

நாட்டு வருமானத்தைக் கணக்கிடுதலில் இரண்டாவதாயுள்ள ஒரு முறையினைப் பார்ப்போம். இம் முறையின்படி நாட்டிலுள்ள எல்லாத் தொழில் நிறுவனங்களும் உற்பத்தி செய்கின்ற பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் மதிப்புகள் யாவற்றையும் சேர்த்துக் கணக்கிடவேண்டும். இப்படிக் கணக்கிடப்பட்டுக் கிடைக்கப்பெறும் தொகையானது, மொத்த உற்பத்தி மதிப்பின் ஒரு மதிப்பீடாகும். அநேகமாக எல்லாத் தொழில்களுக்குமே, இத்தகைய மதிப்பீடுகள் உற்பத்திக் கணிப்பை அடிப்படையாகக்கொண்டே அமைந்திருக்கும்; இதற்கான அறிக்கைகள் ஐக்கிய அரசாங்கத்தில் ஐந்தாண்டுகட்கு ஒருமுறை எல்லாத் தொழில் நிறுவனங்களாலும் தயாரிக்கப்படுகின்றன. இத்துடன், ஒவ்வோர் ஆண்டிலும் ஏறக்குறைய பெரிய அளவில் ஒரு மாதிரிக் கணக்கெடுப்பும் எடுக்கப்படுகின்றது. இந்த அறிக்கைகள், தொழில் நிறுவனங்களின் உறபத்தி நடவடிக்கைகளைப்பற்றிய செய்திகளைப் பெருமளவில் தருகின்றன; குறிப்பாக அவை, சம்பந்தப்பட்ட ஆண்டில், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் மதிப்பைக் கூறுவனவாக உள்ளன. உற்பத்திக் கணிப்பில் அடங்காத தொழில்களுக்கு, மதிப்பீடுகள் பெரும்பாலும், அத் தொழில்களில் கொடுக்கப்படும் கூலிகள், சம்பளங்கள், வாரம், வட்டி இவைகளடங்கியுள்ள புள்ளிவிவரங்களையும், சம்பந்தப்பட்ட நிறுவனங்களின் இருப்புநிலைக் குறிப்புகள் (balance sheets), வரி விவரங்களையும், (tax data)—இவைகள் அந் நிறுவனங்களுக்குக் கிடைக்கும் இலாபம் இவ்வளவு என்பதையும் அறிவிப்பனவாக இருக்கும்—அடிப்படையாகக் கொண்டனவாக இருக்கும். ஏற்கெனவே கூறப்பட்டதைப்போன்று, உற்பத்திக் காரணிகளுக்கு அளிக்கப்படும் ஊதியங்களும், எச்சத் தொகையான இலாபங்களும் சேர்ந்து (அல்லது நஷ்டங்கள் எதனையும் கழித்தால்) வரும் தொகையானது உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களின் மதிப்பிற்குச் சமமாகவே இருக்கும்.

நாட்டு வருமானக் கணக்கெடுப்பில் செலவு முறையில் கவனம் செலுத்தியதுபோல், நடப்பு உற்பத்தி மதிப்பைக் கூட்டிக் கணித்தலிலும் கணித்தல் முறையில் தவறுகள் நேராதபடி பார்த்துக் கொள்ளுவதிலும் கவனம் செலுத்தவேண்டும். இம் முறையிலும் முக்கியமானவையான இரண்டு பிரச்சினைகள் இருக்கின்றன. முதலாவதாக, இரட்டைக் கணிப்பைத் தவிர்க்க வேண்டும்—அதாவது,

கூட்டிவரும் மொத்தத் தொகையானது பொருள்களின் மதிப்பையும், உற்பத்தியில் பயன்படுத்தப்படும் கச்சாப் பொருள்கள் முதலிய வற்றின் மதிப்பையும்—ஆக இரண்டையும்—கொண்டதாக இருத்தல் கூடாது. உதாரணமாக, £100-க்கு விற்கப்படும் குளிர்சாதனப் பெட்டி யொன்று (refrigerator) £20-க்குச் சமமான எஃகைக் கொண்டதாக வுள்ளதெனக் கொள்வோம். புள்ளிவிவர நிபுணர்கள் எஃகு உற்பத்தியின் மொத்த மதிப்பையும், குளிர்சாதனப் பெட்டிகளின் மொத்த மதிப்பையும் சேர்த்துக் கணக்கிடுவார்களாயின், £20 பெறுமான முள்ள எஃகை இருமுறை கணக்கிட்டிருப்பார்கள்—எஃகு தொழில் உற்பத்தியளவைக் கணக்கிடும்போது ஒரு முறையும், குளிர்சாதனப் பெட்டிகளின் உற்பத்தியளவைக் கணக்கிடும்போது மறுமுறையும் கணக்கிட்டிருப்பர். இத்தகைய தவற்றைக் களைவதற்கு ஒரு வழியுண்டு. ஒவ்வொரு தொழிலிலும் கணக்கிடப்படும் உற்பத்தி யளவானது அதனுடைய மொத்த உற்பத்தியளவு—அதாவது, உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் முழு விற்பனை மதிப்பு—அல்லது, அது அத்தொழிலின் நிகர மதிப்பு, அல்லது ஒவ்வொரு தொழிலினுலும் 'கூடுதலாக்கப்பட்ட மதிப்பாகும்'—அதாவது, உற்பத்தியளவின் அங்காடி மதிப்பில் பிற உற்பத்தியாளர்களிட மிருந்து வாங்கிய கச்சாப் பொருள்கள் அல்லது அரைகுறையாக உற்பத்தி செய்த பொருள்களின் மதிப்பைக் கழித்து வரும் மதிப்பாகும்.

உற்பத்தி மொத்தங்களைப்பற்றி இரண்டாவதாகவுள்ள குறிப்பு கீழ்க்கண்டதைப்போன்றுளது. புள்ளிவிவர நிபுணர்கள் எவ்வாறு உற்பத்தியளவு மதிப்பில் வேறு பிற உற்பத்தியாளரின் உற்பத்தி யளவில் ஏற்கெனவே கணக்கிடப்பட்ட பண்டங்கள் அல்லது மூலப் பொருள்கள் இவற்றைச் சேர்ப்பதைத் தவிர்க்கவேண்டுமோ, அதே போன்று நுகரப்பட்ட எந்த மூலதனத்தைச் சேர்ப்பதையும் தவிர்க்கவேண்டும். முதலானது, உற்பத்தியின்போது குறைமதிப் பினை அடையும்போதோ அல்லது தேய்மானத்தை (wear) அடையும் போதோ (பெரும்பாலும் இவ்வாறு நடைபெறுவதுண்டு) அத்தகைய குறைமதிப்பை அல்லது தேய்மானத்தை உற்பத்தி யளவின் மதிப்பில் வைத்துக் கழித்துவிடவேண்டும்; அப்போதுதான் நடப்பு உற்பத்தியின் உண்மையான புள்ளிவிவரத்தை நாம் அறியலாம். இதனை 7ஆம் அத்தியாயத்தில் நாம் பார்த்துள்ளோம். இவ்வாறு கழிக்காவிடில், ஒரு குறிப்பிட்ட அளவு முதல் நுகர்ச்சி யானது, நடப்பு ஆக்க உற்பத்திப் புள்ளி என்றழைக்கப்படுவ துடன் சேர்க்கப்பட்டுவிடும். இவ்வாறு சேர்க்கப்பட்டுவிடுமாகில், நாட்டு வருமானத்தைக் கணக்கிடும்போது, அவ் உற்பத்திக் காலத்தின்போது உற்பத்தியில் நிகழும் முதலின் நுகர்ச்சியைக்

கழித்தாக வேண்டும். ஏழாம் அத்தியாயத்தில் விளக்கியுள்ளதைப் போன்று, இது ஒரு மிகக் கடினமான புள்ளிவிவரச் சேகரிப்பு வேலையாகும். இருந்தபோதிலும், தற்போது ஐக்கிய அரசாங்கத்தில் (United Kingdom) முதல் நுகர்ச்சியினை அளவிடும் முயற்சி மேற்கொள்ளப்பட்டே வருகிறது. உற்பத்தி மதிப்பினின்றும் இதனைக் கழிக்காவிட்டால், கிடைக்கும் நாட்டின் மொத்தம் நாட்டின் மொத்த உற்பத்தி என அழைக்கப்படும்; மூலதனக் குறைமதிப்பிற்கான தொகையைக் கழித்தால்தான் நாட்டு வருமானம் என்னும் சொல் நாட்டு வருமான மதிப்பீட்டில் சரியான கருத்தில் ஆளப்பட்டுள்ளதென்று பொருள்.

நாட்டு வருமானத்தைக் கணக்கிடுதலில் மூன்ருவதாகவும் கடைசியாகவும் உள்ள முறையானது, நாட்டிலுள்ள நபர்கள், தொழிலமைப்புகள் ஆகியவைகள் பெறுகின்ற வருமானங்களைக் கூட்டிக் கணக்கிடுதலாகும். நபர்களையும் கம்பெனிகளையும் பொறுத்த வரையில் அவைகளின் வருமானங்களின் மொத்தத்தை அவைகளின் வருமான வரிவிதிப்புப் புள்ளிவிவரங்களைக்கொண்டு கணக்கிட்டுவிடலாம்; இத்துடன் உற்பத்தி நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ள அரசாங்க நிறுவனங்களின் பி.பி.சி. (B.B.C.), பிரிட்டிஷ் ஓவர்சீஸ் ஏர்வேஸ் கார்ப்பரேஷன் (the British Overseas Airways Corporation) போன்ற அரசாங்கக் கார்ப்பரேஷன்கள் (Public Corporations), நாட்டு உரிமையாக்கப்பட்ட தொழில்கள், மத்திய அரசாங்கம், உள்ளாட்சி மன்றங்கள் ஆகியவைகளின் வர்த்தகக் கிளைகள் (trading branches) போன்றவைகளின் வருமானங்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

மற்றுமொரு பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டியுளது. ஏற்கெனவே வலியுறுத்திக் கூறியதுபோல், நாட்டு வருமானமானது சமுதாயம் ஒரு குறிப்பிட்ட காலவேளையில் உற்பத்தி செய்யும் செல்வத்தின் மதிப்பை உணர்த்துவதாகவுள்ளது. ஆகவே, மொத்த வருமானங்களென்பவை பொருள்களின் உற்பத்தியில் நேரடியாகத் தொடர்புகொண்டுள்ள வரவுகளைமட்டுமே கொண்டவைகளாக இருக்கவேண்டும். ஆயினும், தற்காலப் பொருளாதார அமைப்பில், அரசாங்கமானது வருமானங்களைச் சமமாகப் பகிர்வு செய்வதில் தீவிரமாக முயற்சி செய்துவருகிறது. செல்வந்தர்களிடமிருந்து வரிவிதிப்புமூலம் வருமானத்தைப் பெற்று அதனை ஏழைகளுக்கு அளிக்கின்றது. இவ்வாறு அளிக்கப்பெறும் செலுத்துகள் மாற்றச் செலுத்துகள் என அழைக்கப்படுகின்றன— குழந்தைப் படிகள், வயதுவந்தோர் ஓய்வுச் சம்பளங்கள் (old-age pensions), நாட்டு உதவி மானியங்கள் (national

assistance grants) ஆகியவற்றை இச் செலுத்துகளுக்கு உதாரணமாகக் கூறலாம். இச் செலுத்துகள் சமுதாயத்தில் பலருடைய வருமானங்களில் இடம்பெறுகின்றன. புள்ளிவிவர நிபுணர்கள் இவைகளை நாட்டு வருமான நோக்கங்களுக்கான வருமான மொத்தத்துடன் சேர்ப்பார்களாகில், மீண்டும் 'இரட்டைக் கணிப்பு' என்னும் பழைய கண்ணியில் (old trap) சிக்கிக்கொண்டவர்களாவார்கள். சுரங்கத் தொழிலாளியாக ஆண்டொன்றுக்கு £ 500 ஈட்டும் ஒருவர், ஆண்டொன்றுக்கு £ 100 வரி செலுத்துகின்றாரெனக் கொள்வோம். அவர் வரியாகச் செலுத்துகின்ற £ 100 ஆனது யாராவது ஒருவருக்கு ஓய்வுச் சம்பளமாக மாற்றப்படுகிறது. எனவே, சுரங்கத் தொழிலாளி, ஓய்வுச் சம்பளம் பெறுபவர் ஆகிய இருவராலும் உற்பத்தி செய்யப்படும் ஆக்கத்தின் மொத்த அளவும் £ 500 ஆகத்தான் இருக்கும். அரசாங்கமானது, சுரங்கத் தொழிலாளி உற்பத்தி செய்யும் £ 500-க்கு சமமான ஆக்கத்தில், £ 400-க்கு சமமான ஆக்கத்தைச் சுரங்கத் தொழிலாளியும், £ 100-க்குச் சமமான ஆக்கத்தை ஓய்வுச் சம்பளம் பெறுபவரும் செலவழிக்கவேண்டுமென முடிவு செய்துள்ளது. ஆனல், புள்ளிவிவர நிபுணர்கள் இரண்டு வருமானங்களையும்கண்மூடித்தனமாகக் கணக்கில் சேர்த்துக்கொள்வார்களாகில், அவர்களுக்குக் கிடைக்கும் மொத்தத் தொகை £ 600 ஆக இருக்கும். இந்தத் தொகையானது நடப்பு உற்பத்தியின் உண்மை மதிப்பை மிகைப்படுத்திக் கூறுவதாகும்; இவ்வாறு அவர்கள் கணக்கிடுவார்களாகில், மாற்ற வருமானமானது, வரிவிதிப்பு செய்யப்பட்ட ஆரம்பமான வருமானத்துடனும்—அவ் வருமானம் மாற்றப்பட்டவரின் வருமானத்துடனும்—சேர்க்கப்பட்டுவிடும். எனவே, வருமான மொத்தத்தைத் திருத்திச் சரியாகக் கணக்கிடுவதற்கு எல்லா மாற்ற வருமானங்களையும் கழிக்கவேண்டும்; பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் நடப்பு உற்பத்தியில் நேரடியாகத் தொடர்பு கொண்டுள்ள வருமானங்களைமட்டுமே கணக்கிடவேண்டும்.

நாட்டு வருமானத்தைக் கணக்கிடுவதற்கு இம் மூன்று முறைகளும் உள; இவைகளின்மூலம் மொத்த நாட்டு வருமானத்தைக் கணக்கிடலாம். இதுகாறும் இவ்வாறு கணக்கிடுவதில் ஏற்படும் சில பிரச்சினைகளும் (எல்லாப் பிரச்சினைகளையும் கூறிவிடவில்லை) கூறப்பட்டன. கோட்பாட்டளவில் இம் மூன்று முறைகளும் ஒரேவிதமான மொத்தங்களையே காட்டவேண்டும்; அவைகள் அவ்வாறு காட்டாதுபோனல், அது புள்ளிவிவரங்களிலுள்ள தவறுகள், குறைபாடுகள் ஆகியவற்றின் விளைவாகவேயிருக்கும். உண்மையில், தற்போது பிரிட்டனைப்பொறுத்தமட்டிலாவது இத்தகைய மதிப்பீடுகளைத் தொகுக்கும் வேலையானது போதிய அளவிற்கு அதிகமான சரிநுட்பமுடையதாக (perfection) இருப்பதுடன், ஒவ்வோர் ஆண்

டிலும் கூடியவரை சரிநுட்பமான (accurate) மொத்தத்தைக் கண்டு பிடிக்கத் துணைசெய்கின்றது. ஐக்கிய அரசாங்கத்தின் 1961ஆம் ஆண்டின் நாட்டு வருமானம், செலவு ஆகியவற்றின் மதிப்பீடு களைச் சுருக்கமாக ஆராய்தல் இவற்றை அறிவுறுத்தும்.

## 2. நாட்டு வருமானக் கணக்குகள் (National Income Accounts)

ஒவ்வோர் ஆண்டிலும் ஐக்கிய அரசாங்கத்தின் நாட்டு வருமானம், நாட்டின் மொத்த ஆக்கம் ஆகியவைகளின் அரசாங்க மதிப்பீடுகள், நாட்டு வருமானமும் செலவும் என்ற பெயரைத் தாங்கி யுள்ள அரசியல் மன்ற அறிக்கையின் திருந்தா முதல் படியில் (Blue Book) பிரசுரிக்கப்படுகின்றன. இத் திருந்தா முதல் படியானது போதிய அளவிற்குப் பல்வேறு இனங்களைக் கொண்டுள்ள பல அட்டவணைகளைக் கொண்டதாக இருக்கிறது.

நாட்டின் மொத்த ஆக்கமும் நாட்டு வருமானமும் என்கிற அட்டவணைதான் மிக அதிகமான இனங்களை உள்ளிட்டதாக இருக் கிறது; இவ் அட்டவணை ஒவ்வோர் இனத்தையும் கொண்டுள்ள துடன் பொருளாதார முறை முழுவதையும் நன்கு படம் பிடித்துக் காட்டுகிறது. அட்டவணை 10-ல் காட்டப்பட்டுள்ளவை 1961ஆம் ஆண்டின் மதிப்பீடுகளாகும்; அட்டவணையில் காணும் பெருவாரி யான இனங்களின் தன்மைபற்றிய விளக்கத்தைச் சென்ற உட்பிரிவில் ஆராய்ந்துள்ளோம். அட்டவணையின் வருமானப் பகுதியில் ஐந்து இனங்களின் தன்மைகளைப்பற்றி சுருக்கமாகச் விளக்குதல் ஈண்டு தேவைப்படுகிறது. முதலாவதாக உள்ள இனம் 'தன் வேலையி னின்றும் கிடைக்கப்பெறும் வருமானமாகும்'. இது தங்களின் வேலையினின்றும் சொத்திலிருந்தும் 'கலப்பு' வருமானத்தைப் (mixed income) பெறுகின்ற விவசாயிகள், கடைக்காரர்கள், சிறு தொழில் உரிமையாளர்கள் ஆகியோரின் வருமானங்களை உணர்த்து கின்றது. அவர்களின் வருமானங்களிலுள்ள பல்வேறு கூறுகளைப் பிரித்துக்காட்டுதல் இயலாதாகையால்—கூலிகள் எவ்வளவு, தொழில் முயல்வோனாக இருத்தலுக்கான ஊதியம் எவ்வளவு என்று— மொத்தம் மட்டுமே காட்டப்பட்டுள்ளது. இரண்டாவதாக 'வட்டி' என்கிற இனம் அட்டவணையில் காணப்படுவதில்லை; இதற்குக் காரணம், அட்டவணையில், இலாபங்களெனக் காட்டப்பட்டிருப்பவை வட்டி, இலாப ஈவுகள் ஆகிய செலுத்துகளைச் செலுத்தப்படா முன்னருள்ள இலாபங்களைக் குறிப்பிடுவதால், தனியாக 'வட்டி' என்று ஓர் இனம் குறிக்கப்படுவது 'இரட்டைக் கணிப்பு' என்னும் தவறுதலைச் செய்ததாகும்; மூன்றாவதாக, நாட்டு வருமானக் கணக் கெடுப்பில் 'வாரம்' என்னும் சொல், நில உடைமைகளினின்றும் கிடைக்கப்பெறும் வருமானத்தையே குறிக்கின்றது. தூய பொரு

ளாதார வாரம் அல்லது போலிவாரம் (quasi-rent) ஆகியவற்றினின்றும் கிடைக்கப்பெறும் வரவுகளைக் கணக்கிடுதல் இயலாததொன்றேயாகும். நான்காவதாக, 'இருப்பு மதிப்பேற்றம்' (stock

## அட்டவணை 10

**ஐக்கிய அரசாங்கத்தின் (United Kingdom) 1961ஆம் ஆண்டின் நாட்டின் மொத்த ஆக்கம்***

(மில்லியன் பவுண்டுகளில்)

| செலவு | | வரவு | |
|---|---|---|---|
| அங்காடி விலைகளில் : | £ | | £ |
| நுகர்வோர்களின் செலவு | 17,336 | வேலையினின்றும் கிடைக்கும் வருமானம் | 16,245 |
| பண்டங்கள், பணிகள் ஆகியவற்றில் அரசாங்க மேலாண்மையாளரின் நடப்புச் செலவு | 4,570 | தன் வேலையினின்றும் கிடைக்கும் வருமானம் | 2,120 |
| மொத்த உள் நாட்டு முதல் ஆக்கம் | 4,798 | இலாபங்கள் | 4,179 |
| | | வாரம் | 1,176 |
| மொத்த உள்நாட்டுச் செலவு | 26,704 | உருத்தெரியாப் பிழைகள் | −112 |
| ஏற்றுமதிகள் (கூட்டப்பட்டுள்ளன) | 6,628 | மொத்த உள் நாட்டு வருமானம் | 23,608 |
| இறக்குமதிகள் (கழிக்கப்பட்டுள்ளன) | −6,589 | இருப்பு மதிப்பேற்றம் (கழிக்கப்பட்டுள்ளது) | −164 |
| மொத்த நாட்டுச் செலவு | 26,743 | அயல்நாடுகளினின்றும் பெறப்படும் வருமானம் (கூட்டப்பட்டுள்ளது) | 257 |
| சாதனச் செலவில் : | | | |
| மானியங்கள் (கூட்டப்பட்டுள்ளன) | 595 | | |
| மறைமுக வரிகள் (கழிக்கப்பட்டுள்ளன) | −3,637 | | |
| மொத்த நாட்டு ஆக்கம் : | | நாட்டு வருமானமும், குறைமதிப்பும் | 23,701 |
| சாதனச் செலவில் | 23,701 | | |
| முதல் நுகர்ச்சி (கழிக்கப்பட்டுள்ளது) | −2,144 | முதல் தேய்மானமடைவதை ஈடுசெய்ய ஒதுக்கி வைக்கப்படும் தொகை (கழிக்கப்பட்டுள்ளது) | −2,144 |
| நாட்டு வருமானம் ... | 21,557 | நாட்டு வருமானம் ... | 21,557 |

*'1962 ஆம் ஆண்டின் நாட்டு வருமானமும் செலவும்'—'National Income and Expenditure' (மாட்சிமை தங்கிய அரசியின் புள்ளிவிவரத் துறை, லண்டன், 1962) என்பதன் அட்டவணை 1ஐ ஆதாரமாகக் கொண்டது.

appreciation) என்று புதிரானதொரு (mysterious) இனம் காணப்படு கிறது; இது, பண்டங்களின் இருப்புகளின் மதிப்பில் ஏற்படும் மாற்றத்தை உணர்த்துகிறது. இம் மாற்றமானது அப் பண்டங் களின் கணியம் (quantity) அல்லது அளவு (volume) இவைகளில் ஏற்படும் மாற்றத்தால் ஏற்படுவதன்று; சம்பந்தப்பட்ட பண்டங்களின் விலைகளின் போக்குகளில் ஏற்படும் மாற்றத்தால் விளைவதாகும். குறிப்பிட்ட பண்டங்களின் இருப்பின் மதிப்பு அதிகரிப்பால் பெறப்படும் எந்த இலாபமும், 'இலாபங்கள்' என்னும் இனத்தில் சேர்க்கப்படும் (முதல் தேய்மானமடைவதை ஈடுசெய்வதற்குத் தேவையான தொகைகளைப்போன்று). ஆனால், இத்தகைய மதிப்பு அதிகரித்தலானது, நடப்பு ஆக்க உற்பத்தியிலோ அல்லது செலவினத்திலோ எந்தவிதமான அதிகரிப்பையும் உண்டுபண்ணுவ தில்லையாகையால், இத்தகைய மதிப்பு மாற்றங்கள் நடப்பு நாட்டு வருமான மொத்தத்திலிருந்து கழிக்கப்படவேண்டும் (முதல் தேய் மானத்தைக் கழிக்கவேண்டியதைப்போல). கடைசியாக, பிற நாடு களிலுள்ள சொத்துரிமைகளிலிருந்தும் கிடைக்கப்பெறும் வருமான மானது, நாட்டிற்குப் பயன்படும் வருமானமாகையாலும் அவ் வரு மானம் நாட்டின் நடப்பு அல்லது மூலதனச் செலவிற்குப் பயன் படுத்தப்பட்டிருந்திருக்கக்கூடுமாதலாலும் 'வெளிநாடுகளினின்றும் பெறப்படும் வருமானம்' என்னும் இனம் இத்துடன் சேர்க்கப் பட்டுள்ளது.

இவ்வகையானதோர் அட்டவணையின்மூலம் நாட்டின் மொத்த ஆக்கத்தைப்பற்றி மட்டும் தெரிந்துகொள்வதோடு நில்லாது, இன்னும் பலவற்றையும் தெரிந்துகொள்கிறோம்; செலவினப் பகுதியில் சமுதாயமானது தன்வசமுள்ள வருமானத்தை எந்தப் பரந்த வழிகளில் செலவிடுகின்றதென்பது காட்டப்பட்டுள்ளது. —தனிநபரின் செலவிற்காக எவ்வளவு செலவழிக்கப்படுகின்றது, அரசாங்கமானது பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின்மீது எவ்வளவு செலவிடுகின்றது, முதற் கருவிப் பொருள்களின் இருப்பில் கூடுதலை உண்டுபண்ணுவதற்கு எவ்வளவு செலவிடப் படுகின்றது என்பனவற்றை எல்லாம் செலவினப் பகுதி விளக்கு கின்றது. வருமானப் பகுதியினின்றும் முதன்மையான காரணி ஊதியங்களின் ஒப்பீடான முக்கியத்துவம் காணப்படுகிறது; மொத்த ஆக்கத்தில் எவ்வளவு விகிதம் உழைப்புக்குக் கொடுக்கப் படுகிறது, இலாபங்களுக்கு எத்தனை விகிதம் கொடுக்கப்படுகிறது என்பனவற்றை வருமானப் பகுதி விளக்குகின்றது. கூலிகள், வாரம், இலாபங்கள் ஆகியவற்றில் ஆண்டுதோறும் ஏற்படும் மாற்றங்களின் ஒப்பீடான முக்கியத்துவத்தை நன்கு தெரிந்து கொள்ளுதல் கூடும்; வருமானங்களும் தேவையும் அதிகரிக்கும்

போதோ அல்லது குறையும்போதோ உற்பத்திக்கு ஆதாரமாக உள்ள சக்திகளில் எவ்வித மாறுதல்கள் ஏற்படுகின்றனவென்பதைத் தெரிந்துகொள்வதற்கான விளக்கத்தை இப் பகுதி நல்குகின்றது.

இன்னும் பிற அட்டவணைகளும் ஒவ்வோர் ஆண்டிலும் வெளியிடப்படுகின்றன; இவைகள் மேற்கண்ட அட்டவணையில் காணும் கூட்டுத்தொகுதிகளைத் தனித்தனியாகப் பிரித்து விவரமாக விளக்குகின்றன. இந்த நோக்கத்திற்காக, பொருளாதார முறையானது ஆறு துறைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது—தனி நபர்கள் கம்பெனிகள், பொதுக் கார்ப்பரேஷன்கள், உள்ளாட்சி மன்றங்கள் (Local Government Authorities), மத்திய அரசாங்கம் (Central Government), வெளிநாட்டுத் துறை ('Rest-of-the-world'Sector)—இத்துறை பிறநாடுகளோடு நடத்தப்படும் பேரங்களைப்பற்றியது—என்று ஆறு துறைகளாகும். ஒவ்வொரு தனிப்பட்ட துறைக்கும் பல்வேறு வழிகளினின்றும் கிடைக்கின்ற வருமானங்களையும், அவைகள் செலவழிக்கப்படும் பல்வேறு வழிகளையும் விளக்குவதற்குத் தனித்தனி அட்டவணைகள் வெளியிடப்படுகின்றன. இவ்வட்டவணைகளின் சிறப்பான பயனுடையதாக இருப்பது எதுவெனில், நாட்டின் ஆக்கத்திற்கு நாட்டிலுள்ள பல்வேறு துறைகளும் அளிக்கும் பங்குகளின் மதிப்புகளை விவரமாகக் காட்டுவதாகும்; உதாரணமாக, அட்டவணை 11 இத்தகைய விவரங்களின் சுருக்கத்தை (1961ஆம் ஆண்டிற்கு) அளிக்கின்றது. இதைப்போன்றே தனிப்பட்டவர்களின் வருமானம், செலவு ஆகியவற்றைக் குறிக்கும் அட்டவணையானது, கூலிகள், சம்பளங்கள், மாற்றச் செலுத்துகள், தனிப்பட்ட வருமான மொத்தத்திலுள்ள இலாப ஈவுகள் இவைகளின் சேர்க்கைகளிலுள்ள மாற்றங்கள் ஆகியவற்றின் ஒப்பீடான முக்கியத்துவத்தை இவ் அட்டவணை விளக்குகிறது. செலவுப் பகுதியில், இந்த மொத்தத்தில் எவ்வளவு செலவிடப்படுகின்றது, எவ்வளவு நேர்முக வரிகளாகச் செலுத்தப்படுகின்றது, எவ்வளவு சேமிக்கப்படுகின்றதென்பதையெல்லாம் காட்டுகின்றது.

நாட்டு வருமானக் கணக்குகளினின்றும் பெறப்படுகின்ற செய்திகள், முழுமையான மதிப்பினைப் பெற்றிருக்கவேண்டுமெனில், நிலவும் வருமானக் கணக்குகளைக் கொண்டுள்ள அட்டவணையைக் கவனித்து உற்றுநோக்குதல் ஒன்றே வழியாகும். ஒரு நாட்டின் பொருளாதார முறையின் தன்மைகள் (characteristics), வளர்ச்சி இவற்றை அறிந்துகொள்ளுவதற்கு இவற்றைவிட வேறு முழுமையானதும் தெளிவானதுமான வழிகாட்டி வேறெதுவுமில்லை. இவைகள் பல பிரச்சினைகளுக்கு விடை அளிப்பதாகவுள்ளன. நாட்டு வருமானம் எவ்வளவு வேகத்தில் அதிகரிக்கின்றது? பிற நாடுக

ளுடன் ஒப்பிடும்போது அதிகரிப்பு வீதம் எவ்வாறு உளது? முதலோடு சேர்க்கப்படுவதற்காக மொத்த வருமானத்தில் எவ்வளவு பகுதி ஒதுக்கிவைக்கப்படுகிறது? இத்தகைய பங்கின் அளவானது

அட்டவணை 11
1961ஆம் ஆண்டில் மூலத் தொழிலால் ஐக்கிய அரசாங்கத்திற்குக் கிடைத்த மொத்த உள்நாட்டு ஆக்கம்

| | உற்பத்தியளவின் மதிப்பு, மில்லியன் பவுண்டுகளில் | | மொத்தத்தில் சதவீதம் |
|---|---|---|---|
| விவசாயம், காடுகள், மீன் பிடித்தல் | | 966 | 4·1 |
| சுரங்கத் தொழில், கற்சுரங்கத் தொழில் | | 694 | 2·9 |
| செய்பொருள் தொழில் : | | | |
| இயைபுப் பொருள்கள் (chemicals) | 674 | | |
| உலோகச் செய்பொருள் தொழில் | 803 | | |
| பொறியியல் | 1922 | | |
| வாகனங்கள் | 906 | | |
| பிற உலோகப் பொருள்கள் (கப்பல் கட்டும் தொழில் உட்பட) | 688 | | |
| நெசவு, தோல், உடைகள் | 997 | | |
| உணவு, பானம், புகையிலை | 845 | | |
| பிற பொருள்கள் | 1421 | | |
| | | 8256 | |
| | | | 34·8 |
| கட்டும் தொழில் (construction) | | 1514 | 6·4 |
| வாயு, மின்சாரம், தண்ணீர் | | 664 | 2·8 |
| போக்குவரத்து, செய்தித் தொடர்பு | | 1929 | 8·1 |
| பகிர்வு (distribution) | | 3020 | 12·7 |
| நிதியம், வாணிபம், இன்னும் பிற பணிகள் | | 3298 | 13·9 |
| அரசாங்கச் செயலாட்சியும் பாதுகாப்பும் | | 1417 | 6·0 |
| பொதுமக்கள் உடல்நலம், கல்வி | | 951 | 4·0 |
| பிற | | 1011 | 4·3 |
| | | 23,720 | 100·0 |

ஆதாரம் : 'நாட்டு வருமானமும் செலவும்' (National Income and Expenditure)—மாட்சிமை தங்கிய அரசியின் புள்ளிவிவரத் துறை, லண்டன், 1968—அட்டவணை 16. இருப்பு மதிப்பேற்றம் (stock appreciation), எச்சப் பிழை (residual error) ஆகிய இனங்கள் மொத்தத்துடன் (total) சேர்க்கப்பட்டிருக்கவில்லை. செய்பொருள் தொழிலின் மொத்தத் தொகை, இந் நூலாசிரியரின் மதிப்பீடுகளை (estimates) ஆதாரமாகக்கொண்டு, பாகுபாடு செய்து காட்டப்பட்டுள்ளது.

முந்தைய ஆண்டுகளின் அல்லது பிறநாடுகளின் அளவோடு ஒப்பிடும்போது எந்த அளவில் உளது? மொத்த வருமான நுகர்ச்சியில் அரசாங்கமானது எத்துணை முக்கியப் பங்கை ஆற்றுகின்றது? பகிர்ந்தளிக்கப்படாத இலாபங்களும் (undistributed profits), தனிநபர் சேமிப்புகளும் (personal savings), முதலீட்டு நிதியச் சாதனங்கள் என்னும் வகையில் எவ்வாறு முக்கியம் வாய்ந்தனவாக இருக்கின்றன? நுகர்வோர் செலவு பாணியில் முக்கிய மாறுதல்கள் ஏதேனும் நிகழ்கின்றனவா? இவ்வாறு கேள்விப் பட்டியல் கிட்டத்தட்ட முடிவற்றதாகவேயுள்ளது. பின்னருள்ள உட்பிரிவொன்று, நாட்டு வருமானக் கணக்குகளை நாட்டு வருமானப் பகிர்வு என்னும் முக்கியப் பிரச்சினைக்கு விளக்கமளிக்கப் பயன்படுத்தியிருப்பதைப் பின்னர் காணுவோம்.

## 3. நாட்டு வருமானமும் மக்கள் நலமும் (National Income and Welfare)

ஆண்டுதோறும் வெளியிடப்படுகின்ற நாட்டு வருமான மதிப்பீடுகளைக் (national income estimates) கண்முடித்தனமாகவும் ஏற்றுக்கொள்வதற்கில்லை; அவைகள் மதிப்பீடுகள்மட்டுமே என்பதே இதற்குத் தகுந்த காரணமாகும். தேவையின் நிமித்தம் இவைகள் பெரும்பாலும் அரைகுறையானவையும் நம்பத்தகாதவையுமான புள்ளிவிவரங்களை அடிப்படையாகக்கொண்டமைந்துள்ளன. மதிப்பீடு செய்வதில் புள்ளிவிவர இடர்ப்பாடுகள் ஒருபுறமிருக்க, ஆண்டிற்கு ஆண்டு நாட்டு வருமான மதிப்பீடுகளில் ஏற்படும் மாற்றங்கள் அவைகளுக்கிணையான மாற்றங்களைச் சமூகத்தின் பொருளாதார நலனில் ஏற்படுத்துவதில்லை என்பதற்கு முக்கியக் கோட்பாட்டியலான காரணங்கள் இருக்கின்றன. முதலாவதும் மிக முக்கியம் வாய்ந்தது மான காரணத்தை நோக்குவோம். ஆரம்பத்திலொரு பகுதியில் வலியுறுத்திக் கூறியுள்ளதுபோல், பொருளாதார ஆய்வானது (நாட்டு வருமானக் கணக்கும் பொருளாதார ஆய்வில் இடம்பெறும்), நடைமுறையில் இயல்பாகப் பணத்தை மத்திமமாகக் (medium) கொண்டு நிகழ்த்தப்பெறும் பொருளாதார பேரங்களைமட்டுமே கணக்கீடு செய்யும். கிடைப்பதாகவுள்ள பண்டங்கள், பணிகள் (goods and services) ஆகியவற்றின் உண்மையான அளிப்பில் எந்தவிதமான மாற்றமும் இல்லாதுபோயினும், நாட்டு வருமானத்தின் பெயரளவு மதிப்பில் இதற்கு முன்னர் பணமின்றி நிறைவேற்றப்பட்ட சில நடவடிக்கைகள் தற்போது பண பேரங்களாக (monetary transactions) ஆகிவிட்டதன் காரணமாக ஒரு மாற்றம் ஏற்படக்கூடும். உதாரணமாக, இல்லக்கிழத்திகளின் பணிகள் நாட்டு வருமானத்தில் சேர்க்கப்படுவதில்லை. ஏனெனில், அப் பணிகளுக்கு யாதோர்

ஊதியமும் தரப்படுவதில்லை. இல்லக்கிழத்திகள், தங்களது வீட்டுத் துணிகளைத் தங்களது வீடுகளில் தாங்களே துவைத்துக்கொள்வ வதற்குப் பதிலாகச் சலவையகத்தில் (laundry) துணிகளை வெளுக்கச் செய்துகொள்வதென முடிவு செய்கின்றனரெனக் கொள்வோம். அப்போது சலவைத் தொழிலின் உற்பத்தியளவு மதிப்பு அதிகரிக்கும் (ஆகவே, மதிப்பீடு செய்யப்பட்ட நாட்டு வருமானமும் அதிகரிக்கும்); ஆனால், நாடு முழுவதிலும் அளிக்கப்படுகின்ற ஆள்சார் பணிகளின் (personal services) மொத்த உண்மை மதிப்பில் எவ்வித அதிகரிப்பும் இல்லாமலிருக்கக்கூடும்.

இரண்டாவது காரணமும் முதல் காரணத்திற்கு மிக நெருங்கிய தொடர்புள்ளதாகவே இருக்கிறது. நாட்டு வருமானமானது நடப்புப் பணமதிப்புகளை வைத்துக் கணக்கிடப்படுவதால், பொதுவான விலை மட்டத்திலேற்படும் அதிகரிப்போ அல்லது இறக்கமோ நாட்டு வருமான மொத்தத்தை (national income total) (அதனுடைய உண்மை மதிப்பில் மாற்றமேதும் இல்லாதிருந்தாலும்) அதிகரிக்கவோ அல்லது குறைக்கவோ செய்யும். உதாரணமாக, 1938, 1961 ஆகிய ஆண்டுகளுக்கிடையே ஐக்கிய அரசாங்கத்தின் நாட்டு வருமானமானது £ 4,816 மில்லியனிலிருந்து £ 21,557 மில்லியனாக அதிகரித்தது—அதாவது, 300 சதவீதமாக அதிகரித்தது. இதனால் பிரிட்டிஷ் பொதுமக்கள், தாம் 1938ஆம் ஆண்டிலிருந்ததைக் காட்டிலும் 1961ஆம் ஆண்டில் நான்கு மடங்கு வசதி மிக்கவராக இருந்தனர் என்று பொருளாகுமா? நிச்சயமாக இல்லையென்றே கூறலாம். ஏனெனில், இவ்வதிகரிப்பின் பெரும்பகுதியும் பொதுவான விலை மட்டத்திலேற்பட்ட அதிகரிப்பினால் ஏற்பட்டதேயொழிய, இருக்கின்ற பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் அதிகரிப்பினால் ஏற்பட்டவையல்ல. ஆனால், விலைப்போக்குகளின் புள்ளிவிவரங்கள், ஐக்கிய அரசாங்கத்தின் நாட்டு வருமானமானது உண்மையான கருத்தில்—அதாவது, பொதுவான விலை மட்டத்திலேற்படும் மாற்றங்களால் ஏற்பட்ட அதிகரிப்பு தவிர்த்து—1938, 1961 ஆகிய ஆண்டுகட்கிடையே 50 சதவீதமே அதிகரித்ததென உணர்த்துகின்றன.

மூன்றாவதாக, நாட்டு வருமானமானது எப்போதும், அது ஆக்கப்படுகிற பொதுப் பொருளாதாரச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு கணக்கிடப்பட வேண்டும். நாட்டு வருமான அதிகரிப்பானது, அவ்வதிகரிப்பைக்காட்டிலும் அதிகமான மக்கள்தொகைப் பெருக்கத்தை உடைத்தாயின், தலா வருமானமானது (per capita income), சராசரி வாழ்க்கைத்தரத்தை வைத்து ஒப்புநோக்கும்போது, குறைந்தோ அல்லது அதிகரித்தோ இருக்கும். மேலும், ஒரு

நாட்டின் வருமானமானது, போர்க் காலத்தின்போது அதிகரிக்கக் கூடும். ஆனல், நாட்டின் சாதனங்கள் போர் நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படும்போது (இவ்வாறு பயன்படுத்தப்படுதலால் நாட்டின் சமூக அல்லது பொருளாதார நலன் பெருகக்கூடும். ஆனல், அது நாட்டின் பொருளாதார நலனுக்குப் பயனளிப்பதாகாது) ; வாழ்க்கைத்தரங்கள் குறைந்தே காணப்படும் மற்றுமொரு சாத்தியக்கூறினை நோக்குவோம். அதிகரித்த நாட்டு வருமானமானது, மக்கள் நீண்ட மணி நேரம் வேலை செய்ததன் விளைவாக இருக்கக்கூடும் ; இம் முறையில் கிடைக்கும் அதிகரித்த நாட்டு வருமானம் விழைதற்பாலதன்று. இதைப்போன்றே, இல்லக்கிழத்திகள் குடும்ப வாழ்க்கைக்கு இடையூறு ஏற்படும்வகையில் பல தொழில்களில் வேலைக்கமர்வதாலும், அல்லது நாட்டின் யதேச்சாதிகார சக்திகளால் தொழிலுக்குக் கட்டாய ஆட்சேர்ப்பு செய்யப்படுவதாலும், தொழிலாளர்கள் தொழில் செய்யுமாறு பலவந்தப்படுத்தப்படுதல் காரணமாகவும் நாட்டு வருமானம் அதிகரித்திருக்கக்கூடும். இத்தகைய சூழ்நிலைகளில், நாட்டு வருமானத்தில் ஏற்படும் அதிகரிப்பானது பொதுவாகப் பொருளாதார நலனிலும் அதிகரிப்பை உண்டு பண்ணும் என்னும் எடுகோளை எச்சரிக்கையாகவே கொள்ள வேண்டியுள்ளது.

கடைசியாக, நிர்ணயிக்கப்பட்ட நாட்டு வருமானமொன்றை அதன் பகிர்வுடன் சேர்த்தே ஆராயவேண்டும். இக் கருத்தானது தனியாக ஒரு தலைப்பின்கீழ் ஆராயப்படுதற்கும் உகந்ததாகவுள்ளது. நாட்டு வருமானத்தின் அதிகரிப்பு அல்லது குறைவு ஒவ்வொருவருடைய வருமானத்திலும் அதிகரிப்பு அல்லது குறைவை உண்டு பண்ணவேண்டுமென்னும் நியதி ஒன்றுமில்லை என்பதைப் புரிந்து கொள்ளுதல் ஈண்டுப் போதுமானது. நாட்டு வருமான அதிகரிப்பானது செல்வந்தர்களின் பக்கம் சாதகமாக வருமான மறுபகிர்வைச் செய்துவிடுமாயின், சமுதாயத்தின் ஏழை மக்கள் தாம் முன்பிருந்த ஏழ்மை நிலையைக்காட்டிலும் அதிகமான ஏழ்மையை அடையக்கூடும். இதனல் சில மக்கள் தாம் முன்பிருந்ததைக்காட்டிலும் வசதி மிக்கவர்களாக ஆகக்கூடும் ; ஆனல், ஏழைகள் நலனை இழப்பதானது, செல்வந்தர்கள் நலன் அதிகரிப்பதைக்காட்டிலும் அதிக அளவில் இருக்கும். ஆகவே, பொருளாதார நலன் முழுவதற்கும் கணக்கிடும்போது நலன் குறையக்கூடும். ஒருசில மக்களின் வருமானங்கள் வேறு பிறரின் வருமானங்களுக்கு எதிர்திசையில் செல்லக் கூடும் என்ற காரணத்தை உத்தேசித்துப் பொருளாதார நலன் அதிகரித்துவிட்டதென்றோ அல்லது குறைந்துவிட்டதென்றோ முரட்டு வாதம் பேசிவிட முடியாது. குறிக்கோளானதோர் அளவுகோலை வைத்துக்கொண்ட பல்வேறு மக்களின் நலனை அளவிடுவதென்பது

இயலாத செயலாகுமாதலால், இலாபங்கள் நஷ்டங்களைச் சரிக்கட்டுமளவிற்கும் மேலாக இருக்கின்றனவென்றோ அல்லது நஷ்டங்கள் இலாபங்களைச் சரிக்கட்டுமளவிற்கு மேலாக இருக்கின்றனவென்றோ நிச்சயமாகக் கூறுவதற்கில்லை.

இன்னோரன்ன குறைபாடுகள் இருப்பினும், ஒரு நாட்டின் ஆக்க உற்பத்தித் திறன்களையும் அதனுடைய வாழ்க்கைத்தரத்தில் ஏற்படும் மாறுதல்களையும் காட்டுகின்றதொரு சுட்டியாக (indicator) மக்களின் நாட்டுத் தலா வருமான மொத்தத்தின் மதிப்பீடு உளது. மேலே ஆராயப்பட்ட குறைபாடுகள், அத்தகைய மதிப்பீடுகளுக்கு விளக்கந்தரும்போது எச்சரிக்கையுடன் இருத்தல்வேண்டுமென்பதை உணர்த்துகின்றன ; குறிப்பாக விலைகள், வேலை நிலைமைகள், வருமானப் பகிர்வு அல்லது பிற பெரும் அம்சங்கள் ஆகியவை முக்கிய மாறுதல்களை அடைந்துள்ள ஒரு கால அளவுடன் ஒப்பிடப்படும் போது இது உண்மையானதொன்ருகவுள்ளது.

### 4. நாட்டு வருமானப் பகிர்வு (The Distribution of the National Income)

இந்தப் பகுதியானது, முதன்மையாக, நான்கு உற்பத்திக் காரணிகளிடையே நாட்டு வருமானம் பகிர்ந்தளிக்கப்பட்டிருத்தலைக் கூறுகின்றது. நிறைவுப் போட்டியுள்ளதோர் உலகத்தில் பொருளாதார முறையொன்றில் உற்பத்தி செய்யப்படும் ஆக்கமானது பல்வேறு காரணிகளால் அவைகளின் இறுதிநிலை ஆக்கத்திற்குத் தகுந்தாற்போல் பங்கு பிரித்துக்கொள்ளப்படுகின்றன என்பதை ஆய்வானது விளக்கியது. நிறைவுப் போட்டியில் விலையானது இறுதிநிலைச் செலவிற்கு சமமாக அமைகின்றது ; இதனல், எல்லாப் பண்டங்களின் மதிப்பும், உற்பத்தியால் அமர்த்தப்படுகின்ற எல்லாக் காரணிகளின் இறுதிநிலை ஆக்கத்தின் மதிப்பிற்குச் சமமாக இருக்குமென்பது தெளிவாகின்றது. அம் மதிப்பானது, சம்பந்தப்பட்ட காரணிகளின் இறுதிநிலை ஆக்கங்களுக்கேற்பக் கூலிகள், வாரம் முதலியவைகளாகக் கொடுக்கப்படும். நடைமுறை உலகத்தில் போட்டியானது நிறைவுபெற்ற போட்டியாக இருப்பதில்லையாதலின், நிறைவுபெற்ற அறிவு அல்லது நிறைவுப் பெயர்ச்சி இருப்பதில்லை. இறுதிநிலை ஆக்கத்தைச் சரிநுட்பமாக அளவிடுவதென்பது இயலாததாகவுள்ளது; காரணிகளின் இறுதிநிலை ஆக்கமானது, எல்லாத் துறைகளிலும் சமமாக இருக்குமளவிற்கு அவைகள் தடையின்றிப் பெயர்ந்து செல்வதற்குத் தடைகள் நிறைய உள்ளன; சர்வாதீன அதிகாரங்கள் பெரிதும் கையாளப்படுகின்றன; இத்தகைய சர்வாதீன அதிகாரங்களைக் கடைப்பிடித்து வாரங்கள் பெறப்படுகின்றன.

தொழிற்சங்கங்களும் கழகங்களும் அளவுக்குமீறி முறையற்ற பேரத் தாக்குதல்களைச் செய்துவருகின்றன.

இன்னேரன்ன சிக்கலான, அளவிடற்கரிய சக்திகள் யாவற்றையும் ஒன்றுதொகுத்து முழுமையானதும் வகைப்படுத்தப்பட்டதுமான ஒரே அமைப்பாகச் செய்வதென்பது—பகுத்தறி முறையின்மூலம் நடைமுறை உலகத்திற்கு விளக்கந் தருவதற்கு—பயனற்றதொரு முயற்சியாகவே இருக்கும். எனவே, காரணிகளுக்கிடையே நிலவும் நாட்டின் ஆக்கப் பகிர்வை ஆராய்ந்தறிவதற்குச் செயலாராய்ச்சி முறையினையே (empirical investigation) நாடவேண்டியதாக உள்ளது. அத்தகையதொரு பகிர்வில் ஏற்படும் மாற்றங்களை ஆராய்வதன்மூலம் அப் பகிர்வை ஆளுகின்ற, அதில் சம்பந்தப்பட்ட காரணிகளைப்பற்றி ஒருசிலவற்றைத் தெரிந்துகொள்ளலாம்.

ஈண்டு வருமானக் கணக்குகள் பெருமளவில் விளக்கந்தரக் கூடியனவாக இருக்கக்கூடும். அட்டவணை 12 ஆனது, வருமானக் கணக்குகளினின்றும் தொகுக்கப்பட்ட புள்ளிவிவரங்களைத் தருகின்றது. ஏற்கெனவே கூறியதுபோன்று, வருமானக் கணக்கு அட்டவணையில் வட்டியானது தனியாக ஓர் இனமாகக் காட்டப்படாமல், இலாபங்கள் என்னும் இனத்துடன் சேர்க்கப்பட்டுள்ளது. ஆயினும், கூலிகள் (wages), இலாபங்கள், வாரம் ஆகியவற்றின் ஒப்பீடான பங்குகளின் போக்குகளை எளிதாகவே ஆராய்ந்துவிட

அட்டவணை 12

ஐக்கிய அரசாங்கத்தில் (United Kingdom) 1938–61 ஆகிய ஆண்டுகளில் காரணிகளுக்கிடையே இருந்த மொத்த நாட்டு ஆக்கப் பகிர்வு

| வருமானத்திற்கான ஆதாரம் | மில்லியன் £-களில் | | மொத்தத்தில் இத்தனை சதவீதமென்பது | |
|---|---|---|---|---|
| | 1938 | 1961 | 1938 | 1961 |
| வேலை, தன்-வேலை | 3,669 | 18,365 | 70·9 | 76·4 |
| இலாபங்களும் வட்டியும்* | 1,036 | 4,488 | 20·0 | 18·7 |
| வாரம் | 470 | 1,176 | 9·1 | 4·9 |
| மொத்தம் | 5,175 | 24,029 | 100·0 | 100·0 |

*இருப்பு மதிப்பேற்றத்தைக் கழித்து (less stock appreciation), ஆனால், வெளிநாடுகளின்றும் கிடைக்கக்கூடிய வருமானத்தையும் தவருக விட்டுப்போனவைகளையும் (residual error) சேர்த்தது.

ஆதாரம்: 'நாட்டு வருமானமும் செலவும்' (National Income and Expenditure), 1955, 1962.

இயலும். (பன்னிரண்டாம் அட்டவணையில், தன்-வேலையி னின்றும்—self-employment—கிடைக்கக்கூடிய வருமானமானது வேலையினின்றும் கிடைக்கின்ற வருமானத்துடன் சேர்க்கப்பட் டுள்ளது. கூலிகளின் கூறே—wages element—இவ்விருவகை வேலைகளிலும் பெரும்பாலும் இடம் பெற்றிருப்பதால் இவ்வாறு சேர்க்கப்பட்டுள்ளது. இதைப்போன்ற காரணங்களுக்காக, அயல் நாடுகளினின்றும் கிடைக்கப்பெறும் வருமானமானது இலாபங்கள், வட்டி ஆகியவைகளுடன் சேர்க்கப்பட்டுள்ளது.) 1938, 1961 ஆகிய இவ்விரு ஆண்டுகளின் மதிப்பீடுகள் (estimates), நாட்டு ஆக்கப் பகிர்வானது, வாரம் பெறுபவர்களைக் காட்டிலும் தொழிலாளர் களுக்குச் சாதகமான முறையில் அவர்களின் பக்கமே குறிப்பிடும் வகையில் பெரிதும் சென்றமைந்திருப்பதை உணர்த்துகின்றன.

இந்த இரு ஆண்டுகளிலும் இலாபங்கள், வட்டி ஆகியவற்றின் பங்கு ஒரேயளவாகவே இருந்தது. இதனால், உழைப்பின் இறுதி நிலை ஆக்கமானது நிலத்திற்கு ஒப்பீடாக அதிகரித்திருந்த தென்று பொருளாகுமா ? இத்தகைய ஆழமான கருத்துகளின்படி பார்க்கும்போது விளக்கம் சரியானதாக இருக்குமென்று கூறுவதற் கில்லை. தொழிலாளர்களின் அதிகரித்துவரும் பேர சக்தியும், வார மட்டத்தைக் குறைவாக இருக்கச் செய்யும்பொருட்டு அரசாங் கத்தின் தலையீடும் முக்கியச் சக்திகளாக இருந்துள்ளன. இந்த ஆண்டுகளுக்கிடையே பேர சக்தியானது. நிச்சயமாக அதிகரித் திருந்தது; 1938ஆம் ஆண்டில் காப்புறுதிப் படிகள் அளிக்கப்பட்ட தொழிலாளர்களில் 13 சதவீதத்தினர் வேலை கிடைக்கப் பெறுமல் இருந்தனர். (எனவே, தேவைக்கு ஒப்பீடாக உழைப்பின் அளிப்பானது ஏராளமாக இருந்தது.) அதே சமயத்தில் 1961ஆம் ஆண்டானது வேலை நிறைவுள்ள ஆண்டாக இருந்தபடியால், அவ் வாண்டில் பொதுவாகத் தொழிலாளர் பற்றுக்குறை இருந்தது. சமீப காலம்வரையிலும், வாரங்கள், அடுத்தடுத்து வந்துள்ள அரசாங்கங்களால் (வாரக் கட்டுப்பாட்டுச் சட்டங்கள்மூலம்) குறைக் கப்பட்டுவந்துள்ளன; இதன் விளைவாக நாட்டு வருமானத்தின் பெயரளவு மதிப்பானது நான்கு மடங்காக அதிகரித்திருந்ததோடு, கால அளவில் வாரச் செலுத்துகள் 150 சதவீதமாக அதிகரித் திருந்தன.

நாட்டு வருமானம் பங்கு பெறப்படுவதில் கவனிக்கப்பட வேண்டிய மற்றொன்று யாதெனில், அது காரணிகளைக் காட்டிலும் மனிதர்களிடையே எவ்வாறு பகிர்வு செய்யப்பட்டுள்ளதென்பதாகும். ஆக்கம் உற்பத்தி செய்யப்படுவதன் கடைசி நோக்கம், மக்கள் அதனை நுகரவேண்டுமென்பதேயொழிய 'உற்பத்திக் காரணிகளால்' அவை

நுகரப்படவேண்டுமென்னும் கோட்பாட்டியலான கருத்தாகமாட்டாது; ஒன்றுக்கு மேற்பட்ட காரணிகளுக்கு அளிக்கப்படும் செலுத்துகள் ஒரு தனி நபரின் வருமானத்துடன்தான் பெரும்பாலும் சேர்க்கப்பட்டுவருகின்றன. பணக்காரர்கள், ஏழைகள் ஆகியவரிடையே உள்ள வருமானப் பகிர்வானது எவ்வாறு மாற்றப்பட்டிருந்தது? உழைப்பின் பங்கு அதிகரித்திருந்தது என்பதனை வைத்துக்கொண்டு வேண்டுமானால், சமுதாயத்தில் உள்ள ஏழை மக்கள், செல்வந்தர்கள் பெறவேண்டியதைத் தாம் அதிகமாகப் பெற்றிருந்தனரென ஊகித்தறியக்கூடும்; ஆனால், இத்தகைய ஊகம் முற்றிலும் நிச்சயமானதொன்ருகவும் இருக்க முடியாது.

சமீப ஆண்டுகளில் நிகழ்ந்துள்ளவற்றைச் சுமாராகத் தெரிந்து கொள்ளவேண்டுமெனில், நாட்டு வருமானம்பற்றிய சட்டமன்ற அறிக்கையின் திருந்தா முதல் படியிலுள்ள (National Income Blue Book), தனிநபர் வருமான அட்டவணைகளைப் பார்த்துத் தெரிந்துகொள்ளக்கூடும்; இது சம்பந்தமான புள்ளிவிவரங்கள் 13ஆம் அட்டவணையில் தரப்பட்டுள்ளன. ஈண்டுவருமானங்களென்று கொள்ளத்தக்கவை, வருமானவரி செலுத்திய பிறகு இருக்கும்

அட்டவணை **13**

ஐக்கிய அரசாங்கத்தில், வருமானவரி கழிக்கப்பட்ட பிறகு உள்ள தனிநபர் வருமானங்களின் பகிர்வு, **1938–61***

(மொத்தத்தில் இத்தனை சதவீதம்)

| | 1938 | | 1961 | |
|---|---|---|---|---|
| வருமான எல்லை £ | வருமானங்களின் எண்ணிக்கை | வருமானங்களின் அளவு | வருமானங்களின் எண்ணிக்கை | வருமானங்களின் அளவு |
| —499 | 96·4† | 79·0 | 45·0 | 21·1 |
| 500—999 | 2·4 | 8·0 | 41 0 | 47·3 |
| 1000—1999 | 0·8 | 5·0 | 12·6 | 24·9 |
| 2000+ | 0·4 | 8·0 | 1·4 | 6·7 |
| மொத்தம் | 100·0 | 100·0 | 100·0 | 100·0 |

*1956ஆம் ஆண்டின் 'நாட்டு வருமானமும்' செலவும்' என்பதன் (மாட்சிமை தங்கிய அரசியின் புள்ளிவிவர இலாக்கா, லண்டன், 1956) அட்டவணை 28ஐயும் 1962 ஆம் ஆண்டின் 'நாட்டு வருமானமும் செலவும்' என்பதன் (மாட்சிமை தங்கிய அரசியின் புள்ளிவிவர இலாக்கா, லண்டன் 1962) அட்டவணை 22ஐயும் ஆதாரமாகக் கொண்டது.

† ஒரு பகுதிமட்டுமே மதிப்பீடு செய்யப்பட்டது.

வருமானங்களேயேயாகும்; ஏனெனில், பயன்படுத்தப்படக்கூடிய இவ் வருமானங்களேச் சமுதாயத்தின் பல்வேறு பிரிவினரின் ஆக்க நுகர்ச்சித் திறனைப் (wealth-consuming power) பிரதிபலிப்பதாக வுள்ளது.

அட்டவணை 13-ல் உள்ள புள்ளிவிவரங்களே ஆராய்ந்து பார்த்தால், 1938ஆம் ஆண்டிலிருந்து ஐக்கிய அரசாங்கத்தில் உள்ள செலவழிக்கத்தகுந்த தனிநபர் வருமானங்களின் பகிர்வில் ஏற்பட்ட முக்கிய மாற்றத்தை நன்கு அறியக்கூடும். அந்த ஆண்டில் தனிப்பட்ட வருமானங்களேப் பெற்றவர்களில் 96 சதவீதத்தினர், ஆண்டொன்றுக்கு, வருமான வரி போக £ 500-க்கும் குறைவாகவே பெற்றுவந்தனர்; இவர்களனைவருமாகச் சேர்ந்து நாட்டின் தனி நபர் வருமானத்தினுடைய ஆளத்தகு வருமான மொத்தத்தில் 79 சதவீதத்தைப் பெற்றனர். இதற்கு எதிரிடையாக, பயன்படு வருமானத்தில் 8 சதவீதமானது, மொத்த எண்ணிக்கையில் 0·5 சத வீதத்திற்குக் குறைவான எண்ணிக்கை யுடையவர்களாலேயே பெறப் பட்டது; இவர்களின் வருமானமானது ஆண்டொன்றுக்கு £2,000-க் கும் அதிகமாக இருந்தது. இவ்வாறு எண்ணிக்கையில் ஒப்பீடான அளவைக்கொண்ட வருமானப் பிரிவுகள், மொத்தப் பயன்படு மதிப்பில் அவர்களின் ஒப்பீடான பங்குகள்—ஆகியவைகளிலுள்ள குறிப்பிடும்படியான வேறுபாடுகள், வருமானப் பகிர்வில் அப்பட்ட மான ஏற்றத்தாழ்வு இருந்ததை உணர்த்துகின்றன. 1961ஆம் ஆண்டில் இத்தகைய ஏற்றத்தாழ்வு வெகுவாகக் குறைக்கப்பட் டிருந்தது. வருமானம் பெறுவோர்களில் 45 சதவீதத்தினர் ஆண்டொன்றுக்கு £ 500-க்கும் குறைவான பயன்படு வருமானத் தைப் பெறுபவர்களாக இருந்தனர்; இவர்கள் மொத்த ஆளத்தகு வருமானத்தில் 21 சதவீதத்தைப் பெற்றனர். £ 2,000-க்கும் மேற் பட்ட பயன்படு வருமானங்களேப் பெற்றவர்கள் மொத்த எண்ணிக் கையில் ஒரு சதவீதமே யிருந்தனர்; மொத்த ஆளத்தகு வருமா னத்தில் அவர்கள் பெற்ற தொகை 7 சதவீதமாகும். வருமானப் பிரிவினரில் மத்தியப் பிரிவினருக்குச் செல்லும் ஆளப்படு வருமானப் பங்கானது அதிகரித்திருந்தது. (1938ஆம் ஆண்டில் 13 சதவீதமாக இருந்ததானது, 1961ஆம் ஆண்டில் 72 சதவீதமாக அதிகரித்தது.) அதே சமயத்தில் இதற்கு இணையாகக் குறைந்த வருமானப் பிரிவின ருடையவும் உயர்ந்த வருமானப் பிரிவினருடையவுமான வருமா னங்கள் அதிகரித்தன. 1938, 1961 ஆகிய ஆண்டுகட்கிடையே பணக் கூலிகள், விலேகள் ஆகியவற்றின் பொதுவான அதிகரிப் பானது மிகக் குறைந்த வருமானப் பிரிவினர் பெறுகின்ற தொகை களின் அளவினைக் குறைவாகச் செய்வதற்கு முக்கியக் காரணமாக விளங்கியது. ஈண்டு ஒன்றைத் தெளிவுபடுத்தவேண்டும். நிலே

இவ்வாறு இருப்பினும், வருமானங்களில் மறுபகிர்வும் பொதுவான நிலைமாறுதலும் ஏற்பட்டுள்ளனவென்பது, மிக அதிகமான வருமான வரிசையிலுள்ளவர்களை நோக்கிச் செல்லுகின்ற மொத்த வருமான விகிதம் குறைந்துவருவதன்மூலம் தெரியவருகின்றது.

தற்போது, நாம் இரண்டு கேள்விகளுக்கு விடை காணவேண்டியவர்களாக இருக்கிறோம். முதலாவது கேள்வி, ஏற்றத்தாழ்வு எவ்வளவுதான் குறைக்கப்பட்டபோதிலும், கணிசமான அளவில் அது இன்னும் நிலைபெற்றிருத்தற்குக் காரணம் என்ன என்பது ஒன்று. இரண்டாவது கேள்வி, அத்தகைய ஏற்றத்தாழ்வினைக் கடந்த பதினைந்து ஆண்டுகளாக அல்லது ஏறக்குறைய பதினைந்து ஆண்டுகளாகக் குறைத்துவருகின்ற சக்திகள் யாவை என்பதாகும். கோட்பாட்டளவில், ஆள்சார் வருமானங்களிலுள்ள ஏற்றத்தாழ்வானது காரணிகளின் உற்பத்தித் திறனிலுள்ள வேறுபாடுகள் காரணமாகவோ, அல்லது மக்கள் காரணிகளைச் சொந்தமாக வைத்திருப்பதில் சமன்கேடு இருப்பதாலோ ஏற்படக்கூடும் என்று கூறக்கூடும். ஏற்றத்தாழ்வுகளில் சில, நிச்சயமாக, முதலில் கூறிய காரணத்தால்தான் ஏற்படுகின்றன. எவ்வாறு என்பதனை ஆராய்வோம். சிலர், பிறரைக் காட்டிலும் அதிகமான திறமையை இயற்கையாகவே பெற்றுள்ளனர். இதைப்போன்றே, சில நிலங்கள் மற்ற நிலங்களைக் காட்டிலும் அதிக வளமுடையனவாக உள்ளன. சிலருடைய உற்பத்தித் திறனானது மிகவும் தனிச்சிறப்பு வாய்ந்ததொன்றாக இருப்பதன் காரணமாக, அவர்கள் எவ்வளவுதான் வரி செலுத்திய பிறகும், அவர்களின் வருமானமானது, சமுதாயம் முழுமைக்குமான சராசரி வருமானத்தைக் காட்டிலும் நான்கு அல்லது ஐந்து மடங்காக இருக்கின்றதென்பது, நம்புவதற்கும் இயலாத அளவிற்கு உண்மையானதொன்றாக இருக்கிறது. ஆக, ஆள்சார் வருமானங்களில் ஏற்றத்தாழ்விற்கு முக்கியக் காரணமாக இருப்பது சொத்துரிமைச் செறிவேயாகும். நிலம், முதல் போன்ற சொத்துகள் ஒருசிலரிடையே செறிந்து காணப்படுவதே இதற்குக் காரணம். 1954ஆம் ஆண்டில் புள்ளிவிவரங்களைக் கண்ணுறும்போது, கிரேட் பிரிட்டனில் மூன்றில் இரண்டு பங்கிற்கு மேல் அதிகமான சொத்துகள், அந் நாட்டின் வயதுவந்தோர் மக்கள்தொகையில் பத்தில் ஒரு பங்கினர் அல்லது அதற்கும் குறைவான மக்கள்தொகையினரால் சொந்தமாக வைத்துக்கொள்ளப்பட்டிருந்தமை நன்கு புலப்படும்.

இது எப்படி வந்தது? முக்கியமான காரணம், சொத்துகளை மரபுரிமையாகப் பெறுதலேயாகும். கடினமான உழைப்பு, சிக்கனம், நல்ல பேறு ஆகிய காரணிகள் ஒவ்வொன்றும் சிறப்புடையன

வாதலின், இவைகள் ஒருசிலரைத் தங்களது சந்ததிகளுக்குக் கணிசமான அளவில் சொத்துகளை மரபுரிமையாக விட்டுப்போவதற்குக் காரணமானவைகளாக இருக்கின்றன. தங்களின் பங்காகப் பயன் பெறுவோர் என்ன செய்கின்றனரென்பதைப் பார்ப்போம்; தாம் மரபுரிமையாகப் பெற்ற சொத்துகளை முதலீடு செய்வதன்மூலம் அவர்கள் அதிகமாகச் சொத்துகளை ஈட்டித் தமது சந்ததியர்களுக்கு விட்டுச் செல்லுகின்றனர்—பெரிய அளவில் செய்யப்படும் முதலீடுகள் பெரிய அளவில் வருமானங்களைக் கொணருமாகையால், சொத்துகளின் குவிப்பும் அதிக அளவில் ஏற்படக்கூடும். மேலும், ஒரு விந்தை! சொத்துகளில் உள்ள ஏற்றத்தாழ்வானது ஈட்டச் சக்தியிலும் ஏற்றத்தாழ்வினை உண்டுபண்ணும். கையில் முதலுள்ள ஒருவர் செலவுமிக்க பயிற்சியையும் கல்வியையும் பெற இயலும், அல்லது ஒரு தொழில்முயல்வோனாக ஆகமுடியும்; அவருக்குச் சமமான திறனையுடைய மக்களால் இவை இரண்டுமே இயலாமற்போகக் கூடும்—இவர்களிடம் முதல் இல்லாமலிருப்பதே இதற்குக் காரணம். எனவே, சமன்கேடான ஈட்டச்சக்தியானது சொத்துரிமையில் ஏற்றத் தாழ்வுகளை உண்டுபண்ணுகிறது. இப்படி, ஒன்று மற்றொன்றின் சேர்க்கையால் வளர்ந்துசெல்லும் ஒரு பாணியில், இம் முறை தொடர்ந்து செல்லுகின்றது.

இரண்டாவது பிரச்சினைக்கு வருவோம். ஏற்றத்தாழ்வுக் குறைப்பிற்கு மூலகாரணமானவைகளை ஆராய்வதன்மூலமே இப் பிரச்சினைக்கு நாம் முடிவுகாண முடியும். சமீப ஆண்டுகளில் கல்வி வாய்ப்புகள் பெருகியுள்ளன; முன்னர் குறிப்பிட்ட வாய்ப்பு ஏற்றத் தாழ்வானது. இக் கல்வி வாய்ப்புகளால் பெரிதும் குறைக்கப்பட்டுள்ளமையை ஈண்டு நினைவு கொள்ளுதல் வேண்டும். தற்காலத்தில், பல்கலைக்கழகப் படிப்பு அல்லது நீண்டகாலத் தொழில்நுட்பப் பயிற்சிக்குப் பணம்படைத்த பெற்றோர்கள் அல்லது ஒப்பற்ற தன்தியாகம், துன்பந் தாங்குந் திறன் ஆகியவை தேவையென்பது உண்மையானதாக இல்லை. ஆயினும், ஒருவர் நடைமுறையில் முதலின்றித் தொழில்முயல்வோராக ஆவது அரிது என்பதுமட்டும் உண்மையானதொன்றாகவே இருக்கிறது.

எது எப்படி இருப்பினும், வருமானப் பகிர்வில் பெரும் பணியினைப் புரிவது வளர்வீத வரி விதிப்பாகும்—அதாவது, இவ் வரி விதிப்பு முறையின்படி அதிக வருமானங்கள் அல்லது உடைமைகள் மீது குறைந்த வருமானங்கள், சிறு உடைமைகள் ஆகியவற்றின் மீது விதிக்கப்படுவதைவிட அதிக விகிதத்தில் விதிக்கப்படுகின்றது. சான்றாக, 1938, 1961 ஆகிய ஆண்டுகளில் £ 250-க்கும் குறைவான வருமானமுடைய ஒருவர் சராசரியில், தன்னுடைய வருமானத்தில்

1 சதவீதத்திற்கும் குறைவாகவே வருமானவரி செலுத்தியிருப்பார். 1961ஆம் ஆண்டில் ஆண்டொன்றுக்கு £ 15,000 வருமானத்தைப் பெற்ற ஒருவர், சராசரியாக அதில் 55 சதவீதத்திற்கு மேலாக வரி செலுத்தியிருக்கக்கூடும்; அதே நபர் 1938ஆம் ஆண்டில் 49 சதவீதத்தை வரி செலுத்தியிருப்பார். இதைப்போன்றே, பிரிட்டிஷ் கருவூலமானது ஓர் உடைமையை மரணவரிகள்மூலம் எடுத்துக் கொள்ளும் விகித அளவானது அவ் வுடைமையின் அளவு அதிகரிப்பதற்கு ஏற்றாற்போல் அதிகரித்துச் செல்லும். அண்மை ஆண்டுகளில், மரணவரிகளின் இவ் வளர்வீதமானது அதிகமான முக்கியத்துவம் அடைந்துளது.

ஈண்டு ஒன்றைக் கவனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். வருமான மறுபகிர்வு செய்வதில் அரசாங்கம் ஆற்றக்கூடிய பணியானது, வருவாய்த் தண்டல் முறையில்மட்டுமே முடங்கிக் கிடப்பதில்லை. செலவு முறையாலும் தற்கால பிரிட்டிஷ் அரசாங்கமானது வருமான மறுபகிர்வைச் செய்துவருகின்றது. அரசாங்கம் ஏராளமான தொகைகளை எல்லா வகையான பொதுநலப் பணிகளுக்கும் செலவிடுகின்றது. இத்தகையதொரு செலவானது, செல்வந்தர்களைவிட ஏழை மக்களுக்கே பெரிதும் நலம் பயப்பதாக உள்ளது. அண்மை ஆண்டுகளில், இவ்வகையான செலவினங்கள் அதிகரித்த முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளன. 1938, 1961 ஆகிய ஆண்டுகட்கிடையே பண்டங்கள், பணிகள் (பெரும்பாலும் பொது நலப் பணிகள்மீது; ஆனல், அவைகள் மீதே முழுவதுமாக அன்று), ஓய்வுச் சம்பளங்கள், வேலையின்மை, உதவிப் பணம் ஆகியவற்றின் மீது பிரிட்டிஷ் அரசாங்க மேலாண்மையாளர்கள் (British Government Authorities) செலவழித்த தொகையானது £ 1,084 மில்லியனிலிருந்து £ 6,957 மில்லியனாக அதிகரித்தது—அல்லது நாட்டு வருமானமானது 23 சதவீதத்திலிருந்து 32 சதவீதமாக அதிகரித்தது எனலாம். எப்படியிருந்தபோதிலும், தற்கால அரசாங்கமானது, வருமானப் பகிர்விலுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் களைவதற்கு முக்கிய வழியாக வருமானம், சொத்து ஆகியவற்றின்மீது வளர்வீத வரிவிதிப்புச் செய்வதையே கடைப்பிடிக்கின்றது என்று கூறுவது உண்மையானதாக உளது.

இத்தகையதொரு வரிவிதிப்பு முறையானது எதுவரையிலும் நீடிக்கப்படவேண்டும்? அரசாங்கமானது, நாட்டிலுள்ள எவருமே சராசரி வருமானத்தில் 50 சதவீதத்திற்குமேல் ஆளத்தகு வருமானத்தை வைத்திருக்க இயலாத அளவிற்கு அல்லது எவரும் தன்னுடைய சந்ததிகளுக்கு யாதோர் உருப்படியான முதலினையும் விட்டுச்செல்ல இயலாத அளவிற்கு வளர்வீத வரியினை அதிகரித்துக்

கொண்டே யிருக்கவேண்டுமா? நாம் ஏற்கெனவே ஆராய்ந்தறிந்ததுபோன்று, இப் பிரச்சினைக்கு முடிவு காணும் பொறுப்பு, பொருளாதார நிபுணரைச் சார்ந்ததன்று. பலதிறப்பட்ட நபர்கள் துய்க்கின்ற பயன்பாட்டினை எவ்விதத்திலும் ஒப்புமை செய்ய இயலாது. ஆக, எந்த ஒரு குறிக்கோளான சோதனையை வைத்தும் மேற்கொண்டு வருமானப் பகிர்வு ஏற்பட்டதன் விளைவாக, சமுதாயம் முழுவதும் வசதி பெற்றதா அல்லது வறுமையுற்றதா என்பதனை ஆராய்வது இயலாததாகும். இது ஓர் அரசியல் அல்லது அறவியல் (ethics) பிரச்சினையாகும்; பொருளாதாரப் பிரச்சினையன்று.

ஆயினும், பொருளாதார நோக்குடைய சில குறிப்பிட்ட கருத்துகளை எப்போதும் நாம் மறக்கலாகாது. சான்றாக, வருமானம் அல்லது உடைமையின் மறுபகிர்வானது ஒரு குறிப்பிட்ட புள்ளிக்கும் மேற்கொண்டு செய்யப்படுமாயின், அது வேலை செய்வதற்கும் சேமிப்பதற்குமான ஊக்கிகளின்மீது (incentives) தீவிரமான தீய விளைவுகளை உண்டுபண்ணக்கூடியதாக இருக்கும். ஒரு தொழில்முயல்வோன், தான் ஈட்டும் இலாபத்தில் ஒரு சிறு பகுதிக்கு மேல் தன்னிடம் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்படவில்லையெனில், தனது தொழிலில் தான் நஷ்ட ஆபத்துகளைத் தாங்குவதையும் தொழிலை நடத்துவதில் உள்ள மன அலைச்சலையும் அவர் கணக்கிட்டுப் பார்க்கும்போது, தன் தொழில் கவைக்குதவாததொன்று என்னும் முடிவுக்கு வருவார். தனது சொத்தினைத் தன் மகனுக்கு மரபுரிமையாகக் கொடுத்தற்குத் தடை செய்யப்படும்போது, ஒரு தொழில்முயல்வோன் தான் முயற்சி ஏதுமின்றி வாளாவிருக்கக் கூடும். அதுமட்டுமல்லாமல், தான் ஈட்டிய சொத்தினை வரித்தண்டலர்கள் கொண்டுபோகவிடுவதற்குப் பதிலாகத் தானே தன் முதலினைத் தொழிலேதும் செய்யாமல் உண்ணத் தலைப்பட்டுவிடுவார். நிலை இவ்வாறாக இருப்பின், புதிய கண்டுபிடிப்புகளும் ஆபத்துகளைத் தாங்குதலும் குறைந்து அழிதல் கூடும்; சொத்துச் சேர்ப்பதென்பது அநாகரீகமான செயலாகப் போகக்கூடும். இவைகளின் விளைவால் ஒரு நாட்டில், காலத்திற்கேற்ப இயங்கும் பொருளாதார நாடியானது வலுவிழந்து போகும். நாட்டு ஆக்கமானது, வேறு சூழ்நிலை இருந்தால் விரைவாக வளர்வதுபோல், அத்துணை விரைவாக அதன் வளர்ச்சியும் தடைப்படும். இவ்வாறு ஒரு தேக்கமான சூழ்நிலையை அடைவதானது மெதுவாகவும் நிதானமானதாகவும் இருக்கக்கூடும்; ஆனால், தேக்கநிலையை அடைவதென்னவோ உண்மையாகும். மேற்சொன்ன நிகழ்ச்சிகள் யாவும் நடைபெறுமானால், ஏழை எளியோரின் பங்காளர்கள் என்று கூறிக்கொள்பவர்கள், அவ்வேழை எளியோருக்கு நலம் பயப்பதைக் காட்டிலும் கேடு விளைவித்தவர்களாவார்கள்; பொன் முட்டைகளையிட்ட வாத்

தினையே எள்ளி நகையாடியவர்களாக, அல்லது அதனைக் கொன்ற வர்களாக ஆவார்கள். குறைந்த வருமானப் பிரிவினர் குறைவானதும் வளர்ச்சியற்றதுமானதொரு நாட்டு வருமானத்தில் பெரும் பங்கினைப் பெறுவதைக்காட்டிலும் அதிகரித்ததும் வளர்வது மானதொரு நாட்டு வருமானத்தில் சிறிய பங்கினைப் பெறுவதால் தான் வசதியானவர்களாக இருக்கமுடியும். £ 40-ல் 10 சதவீதத்தைப் பெறுவதைக்காட்டிலும் £ 100-ல் 5 சதவீதம் பெறுவது சிறந்த தல்லவா ?

ஆனால், எந்த அளவிலுள்ளதொரு மறுபகிர்விலும் இத்தகைய விளைவுகளேற்படுமென்பதனைப் பலர் ஒப்புக்கொள்ள மறுக்கின்றனர். அவர்கள், நிலவும் இலாபங்கள், வாரம், வட்டி ஆகியவற்றிலுள்ள பெரிய அம்சமானது பொருளாதார எச்சப்பாடு என்னும் கருத்தில் வாரமாகவே உள்ளதென்று வாதிக்கின்றனர். அவர்களின் கருத்துப்படி, தொழில்முயல்வோர்கள், தாம் ஈட்டக்கூடிய இலாபங்கள் நடப்பு மட்டத்தில் பத்தில் ஒரு பங்காக இருப்பினும், தாம் தொழில்முயல்வோராகவே தொடர்ந்து நீடிப்பர். இதேபோன்று முதலாளிகளுக்கு ஆண்டொன்றுக்கு $\frac{1}{4}$ சதவீதமே வட்டி கிடைத்த போதும் தம் பணத்தை அவர்கள் வட்டிக்கு விட்டுக்கொண்டு தானிருப்பர். தமது முதலினை வைத்துக்கொண்டு இதைத் தவிர வேறு எதனையும் அவர்கள் செய்ய முடியாதல்லவா? மற்றும் ஒரு வாதத்தினைப் பார்ப்போம். செல்வந்தர்களை ஏழ்மைப்படுத்துவதன்மூலம் உற்பத்தியில் நேருகின்ற தீய விளைவுகளைச் சரிக்கட்டுவதற்கும் மேலாகவே ஏழை மக்களுக்கு அளிக்கப்படும் சிறந்த வாழ்க்கைத் தரம், கல்வி, இன்னும் மற்ற வாய்ப்புகள் இவற்றை நல்குவதால் ஏற்படும் நல்ல விளைவுகள் உண்டாகின்றன.

இத்தகைய வாதத்தை வைத்துக்கொண்டு தீர்மானமான முடிவுக்கு நாம் வந்துவிட முடியாது. சரியான தீர்வு காணக்கூட முடியாதபடி நெருக்கும் பொருளாதாரப் பிரச்சினைகள் வெகு சிலவே உளவெனக் கூறிவிடலாம். வருமான மறுபகிர்வானது முதலாளித்துவ அல்லது தனியார் உடைமை முறையை நிலைகுலையச் செய்யுமளவிற்கு வலுவிழக்கச் செய்வதால், அம் மறுபகிர்வினால் கொணரப்படும் சமத்துவத்தால் ஏற்படும் இலாபங்கள், உற்பத்தியில் தோன்றக்கூடிய ஊக்கமற்ற நிலையால் ஏற்படும் நஷ்டங்களால் சரிக்கட்டுமளவிற்கும் அதிகமாகவே இருக்கும் என்பது உண்மையா? அவ்வாறு உண்மையானால், ஐக்கிய அரசாங்கமானது அத்தகையதொரு நிலையை அடைந்துவிட்டதா? அப்படி அடைந்துவிட்டதானால், மேற்கொண்டும் சமத்துவத்தைக் கொண்டுவருவதற்கு அதிக தியாகங்களைச் செய்யவேண்டி யிருக்குமா? அல்லது, சமத்துவத்

தைக் கொணர்வதால் உற்பத்தியின் நிர்ணய மதிப்பில் ஏற்படும் நஷ்டங்களை ஈடுசெய்யுமளவிற்கு அது துணை செய்யுமா? வாதமானது தற்போது கேள்விகளை எளிதாகக் கேட்கக்கூடியதாகவும், அவைகள் நிறைய உள்ளதுமாகியதோர் எல்லைக்குச் சென்று கொண்டிருக்கிறது. இவ்வெல்லையில், பொருளாதார நிபுணரைக் காட்டிலும், சமூகம் முழுவதுமேதான் இத்தகைய அடிப்படைப் பிரச்சினைகளில் எதனை உண்மையென்று கருதுகிறதோ, அதனைத் தேடித் தடவிப் பயணம் செய்யவேண்டியுள்ளது.

மேலும் படித்தற்குரிய நூல்கள்


Robertson, *Lectures on Economic Principles*, Vol, I, Ch. III.

Marshall, *Principles of Economics*, Bk. VI, Chs. XI—XIII.

Pigou, *The Economics of Welfare*, Chs. III—VIII.

J. E. Meade and R. Stone, *National Income and Expenditure* (3rd ed., Macmillan, London, 1952).

H. C. Edey and A. T. Peacock, *National Income and Social Accounting* (Hutchinson, London, 1954), Part I.

Central Statistical Office, *National Income Statistics: Sources and Methods* (Studies in Official Statistics, No. 3, H. M. S.O., London, 1956).

# 19. அரசாங்க நிதியம்
# (Public Finance)

அரசாங்கத்தின் வேலை (The Role of Government)

முன்னருள்ள அத்தியாயங்களின் ஆய்வானது தனிநபர்களும் உற்பத்தி நிறுவனங்களும்—அவை, தனியார் கம்பெனிகளாயினும் அல்லது பலவகையான அரசாங்கக் கார்ப்பரேஷன்களாயினும்—எவ்வாறு சாதனங்களைப் பயன்படுத்துகின்றன என்று ஆய்வதை முதன்மையான நோக்கமாகக் கொண்டிருந்தன. எனினும், சென்ற அத்தியாயத்திலுள்ள அட்டவணை 10-லிருந்து, தற்போது ஐக்கிய அரசாங்கத்தின் உள்நாட்டு நடப்புச் செலவில் (அங்காடி விலைகளில்) 20 சதவீதமானது, உண்மையில் அரசாங்கத்தாரிடமிருந்தே—மத்திய அரசாங்கத்தினிடமிருந்தும் உள்ளாட்சியினின்றும்—வெளிவருகின்றது. இந்தத் தொகைகள் உள்நாட்டு முதல் ஆக்கத்திற்கு ஏறக்குறைய பெரும் விகிதத்தை அளித்துவருகின்றன. ஆக, அரசாங்கத்தினர், பிரிட்டனினின்றும் பெறுகின்ற சாதனங்களில் ஐந்தில் ஒரு பங்கினைத் தற்போது செலவழித்துவருகின்றனர். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இச் செலவானது, சாதனங்களுக்கான மொத்தத் தேவையில் ஏறக்குறைய பெரும் பகுதியாகும். இதனை விளக்குவதற்குச் சென்ற அத்தியாயங்களின் ஆய்வானது குறிப்பிட்ட அளவிலும் தகுதியுடனுமே கடைப்பிடிக்கத் தகுந்ததாகும். ஆகவே, அரசாங்கத் துறையினர் (government sector) சாதனங்களைப் பெறுதல், செலவிடல் ஆகியவற்றின் முக்கிய அம்சங்களை ஆராய்வது அவசியமானதாக இருக்கிறது—இதுவே நிதியியலாகும்.

தனியார் சாதனங்களைப் பயன்படுத்துதலில் அடிப்படையான நோக்கங்களை எளிதாக விளக்கிவிடலாம். நுகர்வோர்கள் தங்களதும் தங்களது குடும்பத்தினரதுமான நலன் அதிகபட்சமாக இருக்கப் பாடுபடுகின்றனர். அதே சமயத்தில், தொழில் துறைகள் தங்களது இலாபங்களை அதிகபட்சமாகப் (maximum) பெறுவதில் முனைகின்றன. இந்த எடுகோள்களின் அடிப்படையில்தான் பொருளாதார

ஆய்வு அமைந்துள்ளது. இருப்பினும், தற்காலப் பொருளாதார அமைப்பில் ஓர் அரசாங்கத்தின் நோக்கங்கள் இன்னவையென்று விளக்குவது அத்துணை எளிதானதாக இல்லை. அரசாங்க நிதியத்தின் பணிகளை (கருத்தின் அடிப்படையில் இப் பணிகள் ஒவ்வொன்றும் தனித்தனியானவை) நான்காகப் பிரிக்கலாம். முதலாவதாக, இன்றியமையாத அரசாங்கப் பணிகளை அளித்தலைக் கூறலாம். இப் பணிகள் அரசாங்கத்திற்கே ஆதாரமானவை. இப் பணிகளின் தன்மை அப்படிப்பட்டதாகையால் வேறு எவ்விதப் பதிலாண்மையும் (agency) அவைகளை நிறைவேற்ற முடியாது. அப் பணிகளாவன, அரசாங்கத்தின் தலைமை (head of the state), சட்டசபை, நீதிமன்றங்கள் (Courts of Justice) ஆகியவற்றைப் பராமரித்தல், உள்நாட்டில் சட்டம், அமைதியைப் (law and order) பாதுகாத்தல், நாடு தன்னை அயல்நாடுகளினின்றும் வரக்கூடிய ஆபத்துகளினின்றும் பாதுகாத்துக்கொள்ளவும் அதன் பன்னாட்டுப் பொறுப்புகளை நிறைவேற்றவும் பாதுகாப்பு (defence), தூதாண்மைப் (diplomatic representation) பிரதிநிதித்துவத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தல் ஆகியவைகளாம்.

இரண்டாவது முக்கியப் பணியினைப் பார்ப்போம். இது, போர் (strategic), சமுக அல்லது பொருளாதாரக் காரணங்களுக்காக, நாட்டிலுள்ள குறிப்பிட்ட துறைகளை ஊக்குவிப்பதோ அல்லது கட்டுப்படுத்துவதோ ஆகும். இப் பணியானது நாட்டிற்கு நாடு பெருமளவில் வெவ்வேறு வகையில் விளக்கப்பட்டுள்ளது. அரசாங்கத்தின் சில பணிகள் மறைமுகப் பணிகளாக இருக்கக் கூடும். உதாரணமாக, உள்நாட்டு விவசாயத்திற்குப் பண மானியங்கள்மூலம் உதவியளித்தல், அல்லது குறிப்பிட்ட தொழில்களுக்குப் பண உதவி அளித்தல், பலவாருன கருத்துரைகளை எடுத்து விளக்கி உதவுதல் ஆகியவற்றின்மூலம் ஊக்கமளித்தல் ஆகிய இப் பணிகள் யாவும் மறைமுகமான பணிகளாகும். பணிகள், நேர்முகமான பணிகளாகவும் இருக்கக்கூடும். உதாரணமாக, சில பணிகள் பகுதியாகவோ அல்லது முழுவதுமாகவோ அரசாங்கத்தாலேயே ஏற்று நடத்தப்படுகின்றன—இதற்கு, அஞ்சல் பணியை எங்கும் பொதுவானதோர் உதாரணமாகக் கூறலாம். இத்தகையதொரு பணியை எந்த அளவிற்கு விரிவுபடுத்தவேண்டும், எவ்வளவு விரிவுபடுத்த இயலும் (நேர்முகமாக அல்லது மறைமுகமாக) என்பது மிகவும் சர்ச்சைக்குரியதொரு பிரச்சினையே ஆகும். பொருளாதார நோக்கங்களைக்காட்டிலும் அரசியல் நோக்கங்களே இதற்கு முடிவு காண்பதில் பெரிதும் இடம் பெற்றுள்ளன.

இந்த நூற்றாண்டில் அதிகமான முக்கியத்துவம் அடைந்து வருகிற மூன்றாவது பணியினை ஆராய்வோம். இப் பணி சமூகக் கைக்கோளினை செயல்படுத்துதல் குறித்தது. இப் பணி இரு பக்கங்களைக் கொண்டதாகும். ஒன்று வருவாய்ப் பகுதி—அதாவது, இது வரிவிதிப்பு மட்டம், அவ் வரிவிதிப்பினால் கிடைக்கக்கூடிய வருமானம், சமுதாயத்தின் பல்வேறு பிரிவுகளுக்குப் பகிர்வு செய்தல் ஆகியவைபற்றியது. மற்றொரு பகுதி அரசாங்கங்களின் செலவு பற்றியது. பொதுவாக இது கல்வி, உடல் நலம் முதலிய சமூக நலப் பணிகள்பற்றியதாகும். சென்ற அத்தியாயத்தில் நாம் கூறியதுபோல, நிறைவுப் போட்டியானது தூய போட்டியாக இருக்கும்போதுதான் கட்டுப்படுத்தப்படாத அங்காடிச் சக்திகள் சமூகத்தில் நலனை உயர்ந்தபட்சமாகச் செய்கின்றன; அப்போது தான் வருமானப் பகிர்வானது உத்தம அளவில் இருக்குமென்று கருதப்படும். ஆனால், உண்மையில் நடப்பது வேறு. தொழில்கள் பெருகியுள்ள சமூகங்களில் அதிக அளவில் ஏற்றத்தாழ்வுகளும் இடர்ப்பாடுகளும் இருப்பதால், மக்கள் தம் அரசாங்கங்களை அவற்றைக் களையுமாறு வலியுறுத்துகின்றனர். வருமானப் பகிர்வை ஏதாவது ஒரு வகையில் சீர்ப்படுத்தவேண்டுமென்று அவர்கள் கோருகின்றனர். இந்தப் பணி எவ்வாறு நிறைவேற்றப்படுகின்றது என்பதனைச் சரிநுட்பமாகக் கூறுவது கண்டிப்பாக அரசியல் பிரச்சினையைச் சார்ந்த கருத்தாகும்.

கடைசியாக, தற்போதைய அரசாங்கங்கள் பொருளாதார முறை முழுவதற்குமானதொரு பொறுப்பை மேற்கொண்டுள்ளன—அப் பொறுப்புகள் நிலையான உயர் வேலை மட்டத்தைக் கடைப்பிடித்தல், நாட்டில் பல ஆண்டுகட்கு ஆக்க சக்தியின் வளர்ச்சி வீதம் உச்சமாக இருப்பதற்கு ஊக்கம் அளித்தல், வெளிவர்த்தக உறவுகளில் அதன் வகையுள்ளமையைப் பாதுகாத்தல் ஆகியவைகளாகும். இவைகளும் வருவாய், செலவு சம்பந்தப்பட்டனவாக உள்ளன—அதாவது, குடிமக்களிடமிருந்து வரி வசூல் செய்து சாதனங்களைப் பெறுவதும், அரசாங்கத்தின் செலவினங்களின் மூலம் குடிமக்கள் கைகளில் பணத்தைத் திரும்ப அளிப்பதுமான செயலையும், இவை இரண்டுக்குமிடையேயுள்ள தொடர்பையும் தழுவியவைகளாக உள்ளன. அரசாங்க நிதியத்தின் இக் குறிப்பிட்ட பகுதி சம்பந்தமாக இன்னும் அதிகமான கருத்துகள் இந் நூலின் ஏழு, எட்டு பிரிவுகளில் கூறப்பட்டுள்ள பெரும் பொருளாதாரம் (macro-economics), பன்னாட்டுப் பொருளாதாரம் ஆகியவற்றை ஆராய்ந்த பின்னர் நமக்குத் தெரியவரும்.

ஈண்டு ஒன்றைக் கவனித்தல் நலம். இவ்வாறு பலதிறப்பட்ட பணிகள் ஒவ்வொன்றையும் வேறுபடுத்திக் கூறுவது கோட்பாட்டளவில் எளிதெனினும், ஒவ்வொரு முறையும் நடைமுறையில் எந்தச் சரிநுட்பமான நோக்கத்தை உடையதாக இருக்கிறதென்பதனைத் தீர்மானிப்பது இயலாததாகவே இருக்கின்றது. இன்றியமையாப் பணிகளுக்கு (essential services) வரிவிதிப்புமூலம் நிதி உதவி அளித்து ஊக்குவித்தலானது, சமூகக் கைக்கோளின் வருமான மறுபகிர்வு என்னும் அம்சத்தின்கீழ் வருவதாகவுள்ளது. அதே சமயத்தில் சமூக நலத் திட்டத்தின்கீழ் ஆரம்பத்தில் கொண்டு வரப்பட்ட பணமானியங்கள் (பிரிட்டிஷ் விவசாயப் பணமானியங்களைப்போன்று) குறிப்பிட்ட் பொருளாதாரத் துறைக்கு ஊக்கமளிப்பதற்குகந்தவைகளாகப் பணிபுரிகின்றன. இத்தகைய பலதிறப்பட்ட நோக்கமானது, தற்போதுள்ள பிரிட்டிஷ் அரசாங்க நிதியத்தின் முக்கிய அம்சங்களைப்பற்றிச் சுருக்கமாக ஆராய்ந்தறிவதன்மூலம் தெரியவரும்.

## 2. மத்திய அரசாங்கச் செலவீடு (Central Government Expenditure)

வரவுசெலவுத் திட்டமென்பது (budget) மத்திய அரசாங்கத்தின் நாட்டுக் கணக்குப் பதிவியலாகும் (house - keeping account). இது இயல்பாக ஆண்டிற்கொருமுறை சட்டசபையில் சமர்ப்பிக்கப்படுகிறது. இது வரப்போகிற ஆண்டிற்கான செலவு, அதற்கு நிதியளிப்பதற்கான திட்டங்கள் ஆகியவற்றைக் கொண்டதாகவுள்ளது. இது பலவிதமாகச் சமர்ப்பிக்கப்படுகின்றது. தற்போது நாட்டு வருமானக் கணக்குகளில் வகைப்படுத்தப்பட்டுள்ளபடி—அட்டவணை 14-ல் சுருக்கமாகத் தொகுக்கப்பட்டுள்ளதைப்போன்று—வகைப்படுத்துவதே தற்போதைய நோக்கங்களுக்கு மிகவும் வசதியானதாக இருக்கும். நடைமுறையில் அரசாங்கத்தின் பல்வேறு துறைகளின் செலவுத் திட்டங்கள்—அதாவது, மதிப்பீடுகள்—தீட்டப்பட்டு அவை முதலில் சட்டசபையில் சமர்ப்பிக்கப்படும்; கருவூல வேந்தரானவர் (நிதி அமைச்சர்), செலவீட்டுத் திட்டங்கள் யாவற்றையும் தீர்மானித்த பிறகே தனது வரித் திட்டங்களைத் தீட்டுகின்றார். எனவே, அரசாங்க வரவுசெலவுத் திட்டத்திற்கும் வீட்டு வரவு செலவுத் திட்டத்திற்கும் வேறுபாடு உண்டு. வீட்டில், செலவுக்கு ஏற்றவாறு இவ்வளவு வருமானம் வந்தாகவேண்டுமென்பதைத் தீர்மானிக்க இயலாது; எனவே, செலவை வருமானத்திற்கு ஏற்றவாறு அமைத்துக்கொள்ளுதல் வேண்டும்—வருமானத்தைச் செலவிற்கு ஏற்றவாறு அமைத்துக்கொள்ளுதல் பொதுவாக இயலாது,

எனவே, கணக்கின் செலவுப் பகுதியை முதற்கண் ஆராய்வது பொருத்தமுடையதாகும்.

அரசாங்கச் செலவினை (Government expenditure) ஒன்றுக்கு மேற்பட்ட பிரிவாக வகைப்படுத்தலாம். ஆனால், பொருளாதார நிபுணருக்குத் தேவையான பிரிவுகள் இரண்டுதாம். ஒன்று நடப்புக் கணக்கு; மற்றொன்று மூலதனக் கணக்கு. நடப்புக் கணக்கிற்கும் மூலதனக் கணக்கிற்கும் உள்ள வேறுபாடு யாதெனில், நடப்புக் கணக்கிலடங்கியுள்ள செலவுகள் தொடர்ந்து திரும்பத் திரும்ப வரும் தன்மையதாகும்; மூலதனக் கணக்கிலடங்கியுள்ள செலவுகள் சொத்துகளைப் பெறுதற்குச் செலவிடப்பட்ட கணக்குகளை உள்ளடக்கியதாகும். நடப்புக் கணக்கையும் இருவகையாக உட்பிரிவு செய்யலாம். இதில் மிக முக்கியமான இனமானது, பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின்மீது செலவிடப்படும் செலவினமாகும். இந்தச் செலவினமானது சாதனங்களை நேரடியாகக் கொள்கின்றது. இவற்றையெல்லாம் நாம் தற்போது காணப்போகிறோம். இச் செலவினத்தில் பெரிய இனமாக உள்ளது ராணுவ, சிவில் பாதுகாப்பாகும். இவைகள் பெறுகின்ற சாதனங்கள் என்னவென்று பார்ப்போம். ராணுவமானது ஆண்கள் பெண்கள் ஆகியோரின் பணிகளையோ அல்லது அதில் பணிபுரிகின்றவர்களுக்குச் சேவை செய்யும் (உள்நாட்டிலும், வெளிநாட்டிலும்) பணிகளையோ பெறுவதாகவுள்ளது. இன்னும் உணவு, உடை, போர்த்தளவாடங்களும், போர்த்தளவாட உற்பத்தியும் ராணுவத்திற்குத் தேவைப்படுவனவாகவுள்ளன. இரண்டாவது பெரிய இனம் உடல்நலமாகும். இதற்கு முக்கியமாக அலுவலர்களும், சாதனங்களும், நாட்டு உடல்நலப் பணித்துறையின் (National Health Service) செயல்முறையும் தேவைப்படுகின்றன. இந்தத் தலைப்பில் இடம்பெறும் மற்றொரு செலவினம் சிவில் பணித்துறைகள் (இதில் ஒரு குறிப்பிட்ட துறை மட்டும் என்று கொள்ளாமல் எல்லாத் துறைகளும் என்று கொள்ளுதல்வேண்டும்), மத்திய காவல் பணிகள் (Central Police Services), நீதிமன்றங்கள், வேலையளிப்புப் பணிகள் (Employment Services) முதலியனவாகும்.

செலவீட்டில் இரண்டாவதாகவுள்ள பெரிய இனம் பண மானியங்களாகும். சில குறிப்பிட்ட பொருள்களை அவைகளின் முழு உற்பத்திச் செலவிற்கும் குறைவான விலையில் விற்கச்செய்வதற்காக அளிக்கப்படும் ஊதியங்களே பணமானியங்களாகும். பண மானியங்களில் மிக முக்கியமானவை விவசாய மானியங்களாகும். இம் மானியங்களில் மூன்றில் இரண்டு பங்கு, விவசாயிகளுக்கு அளிக்

கப்படும் மானியங்களாகும். ஒவ்வோர் ஆண்டிலும் விவசாயிகளும் அரசாங்கமும் சேர்ந்து விவசாயப் பொருள்களை இன்ன விலைக்கு விற்க வேண்டுமென உடன்படிக்கை செய்துகொள்கின்றனர். இவ் விலைகளுக்கு உத்தரவாதமளிக்கப்பட்ட விலைகளெனப் பெயர். இவ்வாறு செய்வது அரசாங்கக் கைக்கோளின் ஓர் அம்சமாகும். விவசாயிகள் உள்நாட்டு அங்காடியில் இத்தகைய உத்தரவாதமளிக்கப்பட்ட விலைகளுக்கும் குறைவான விலையில் தம் பொருள்களை விற்பதால் ஏற்படும் பற்றுக்குறையை ஈடுசெய்யும்பொருட்டு அரசாங்கம் பணமானியங்களை அளித்துவருகிறது. அரசாங்கம் அளிக்கும் பணமானியங்களில் மூன்றில் இரண்டு பங்கு பிரிட்டிஷ் விவசாயிகளுக்குச் செலுத்தப்படும் பற்றுக்குறை ஈட்டுச் செலுத்துகளே. இத்தகையதொரு திட்டமானது முதன்முதலில் இரண்டாவது உலகப் போரின்போது தீட்டப்பட்டது. அப்போது, வாழ்க்கைச் செலவு அதிகரித்துச் செல்வதைத் தடுத்துக் குறைக்கும் நோக்கத்துடன்தான் (சமூகக் கைக்கோளின் ஓர் அம்சமாக) இத் திட்டம் கொண்டுவரப்பட்டது. தற்போது இத் திட்டமானது, பிரிட்டிஷ் விவசாயிகள், அயல்நாட்டு உற்பத்தியாளர்களிடமிருந்து குறைந்த விலையில் இறக்குமதி செய்யப்பட்டுக் குறைந்த விலைக்கு விற்கப்படுகின்ற பொருள்களின் போட்டியால் பாதிக்கப்படாமலிருக்கும் பொருட்டு அவ் விவசாயிகளுக்கு உதவியளிக்கும் பரந்த கைக்கோளின் ஓர் அம்சமாக உள்ளது. மீதமுள்ள விவசாயப் பணமானியங்கள் குறிப்பிட்ட வகை விவசாயிகளுக்கு உதவி செய்யும் பொருட்டு நேரடியாகச் செலுத்தப்படும் செலுத்துகளாக—உதாரணமாக, இறுதிநிலை மலைப்பண்ணை உதவிக் கொடைகள்—அளிக்கப்படுகின்றன; அல்லது விவசாயத்தின் சில சிறப்புத் திட்டங்களுக்கும் (உதாரணமாக, உரத்திற்காக அளிக்கப்படும் பணமானியங்கள்—fertiliser subsidies) அளிக்கப்படுகின்றன. இன்னும், மற்றப் பணமானியங்களும் உள. உள்ளாட்சி மன்றங்களுக்குச் சொந்தமான வீடுகளைக் குறைந்த வாடகைக்கு விடுவதில் ஏற்படும் நஷ்டங்களில் மத்திய அரசாங்கமானது, தான் ஒரு பங்கை ஏற்கும் நோக்கத்துடன் பணமானியங்களை (சமூகக் கைக்கோளின் ஓர் அம்சமாக) அளித்து வருகிறது. அதேபோன்று, நாட்டின் ஒரு குறிப்பிட்ட துறைக்கு உதவும்பொருட்டு, ரயில் வண்டி முறையை இயக்குவதில் ஏற்படும் இழப்புகளைச் சரிக்கட்டுவதற்கும் பணமானியங்கள் அளிக்கப்படுவதுண்டு.

செலவீட்டில் மூன்றாவது பெரிய இனம் நபர்களுக்கு அளிக்கப்படும் நேர்முகப் பண உதவிக் கொடைகளாகும். இவை யாவும் சமூகக் கைக்கோள் என்ற தலைப்பின்கீழ் வருகின்றன. இவற்றில் சில ஏற்கெனவே ஒப்பந்தம் செய்யப்பட்டதன்பிரகாரம் செலுத்தப்

படும் தொகைகளாகும். இவற்றிற்கு உதாரணமாக நாட்டுக் காப்புறுதி உதவித் தொகைகளைக் கூறலாம். (ஓய்வுச் சம்பளங்கள், வேலையின்மை உதவித் தொகைகள், பிணி உதவித் தொகைகள் ஆகியவை பெரிதும் இவற்றில் இடம் பெறுகின்றன.) இவ்வாறு செலுத்தப்படும் தொகைகளில் சில ஏற்கெனவே ஒப்பந்தம் செய்யப்பட்டவையாதலால், நாட்டுக் காப்புறுதித் திட்டத்திற்கு இணையாக இவைகள் உள்ளன. இத் திட்டத்தின்படி இதில் பங்குபெறும் நபர்கள் பங்குத் தொகைகளை அளிக்கவேண்டும். இவ்வாறு பங்குத் தொகைகளை ஒப்பந்தப்படி அளிப்பவர்கள்மட்டுமே, தங்களின் பங்குத் தொகைகளைச் செலுத்திவரும் தகுதியினால், உதவித்தொகைகளைப் பெறத் தகுதிவாய்ந்தவர்களாவார்கள். எனவே, நாட்டுக் காப்புறுதி உதவித் தொகைகளினின்றும் இவ்வாறு பங்கு செலுத்தியவர்களே, அவ்வாறு பங்கு செலுத்திய தகுதியைக்கொண்டு உதவித் தொகைகளைப் பெறத் தகுதிவாய்ந்தவர்களாவார்கள். நாட்டு உதவித் தொகைகள், குடும்பப் படிகள் (family allowances) அல்லது மாணாக்கர் உதவிச் சம்பளங்கள் (scholarships) போன்ற மற்ற உதவிக் கொடைகளும் உண்டு. இவை பொதுவாக, வரிவிதிப்பினின்றும் கிடைக்கக்கூடிய நிதிகளிலிருந்து அளிக்கப்படுகின்றன. இவைகளைப் பெறுவதற்கு எவ்விதப் பங்கு செலுத்தும் தகுதியும் தேவையில்லை. (நாட்டு உடல்நலப் பணிக்கும் வரிவிதிப்பிலிருந்தே நிதி அளிக்கப்படுகிறது. இதனைப் பெறுவதற்கும் எத்தகைய பங்குசெலுத்தும் தகுதியும் தேவையில்லை; எனினும், நாட்டுக் காப்புறுதித் திட்டத்தின்கீழ்—கட்டாயமாக வசூலிக்கப்படும் பங்குத் தொகைகளினின்றும்—ஒரு பகுதி உடல்நலப் பணிக்காக—health service—ஒதுக்கிவைக்கப்படுகிறது).

செலவீட்டில் இன்னும் இரண்டு பெரிய இனங்களும் உள. ஒன்று நாட்டுக் கடனுக்காகச் (national debt) செலுத்தப்படும் வட்டியாகும். அரசாங்கத்தின் முந்தைய ஆண்டுகளின் கடன்களின் மொத்தத் தொகைகளுக்குக் காலாண்டிற்கு ஒருமுறை அல்லது அரையாண்டிற்கொருமுறை வட்டி செலுத்தப்படுகிறது. இந்த அத்தியாயத்தில் பின்னர் வரும் உட்பிரிவில் நாட்டுக் கடனைப்பற்றி விரிவாகக் கூறப்படும். உள்நாட்டு மன்றங்களுக்கு அளிக்கப்படும் உதவிக் கொடைகளைப்பற்றி, உள்ளாட்சி நிதியம் என்பதுபற்றிக் கூறுகின்ற உட்பிரிவில் ஆராய்வோம்.

மூலதனச் செலவின் பல்வேறு இனங்கள் பெரிதும் தாமே விளக்கந்தரக்கூடியனவாக உள்ளன. இவைகளின் மொத்தத் தொகையில் ஐந்தில் ஒரு பகுதி நேர்முக முதல் ஆக்கத்திற்கு (direct

capital formation) அரசாங்கத்தால் செலவிடப்படுகிறது. அரசாங்கம் பொறுப்பேற்றுள்ள சில துறைகளில் முதல் ஆக்கத்தினைத் தோற்றுவிக்க இவ்வாறு செலவிடப்படுகிறது—குறிப்பாக அஞ்சலக முதலாக்க வேலைகள் (Post Office Capital Works), சாலைகளைப் பராமரித்தல், சாலைகளை அதிகரித்தல், புதிய மருத்துவமனைகள் மருத்துவ விடுதிகள் ஏற்படுத்துதல், பாதுகாப்புத் திட்டத்தின்கீழ் பல்வகையான போர் நிறுவனங்களை அமைத்தல் (military installations) போன்றவற்றை உதாரணமாகக் கூறலாம். மத்திய அரசாங்கத்தின் செலவீட்டில் பெரும்பகுதி, உண்மையில், மறைமுகமானவைகளாகவே இருக்கின்றன—அரசாங்கமானது நாட்டுரிமையாக்கப்பட்ட தொழில்களுக்கு (nationalised industries) அவைகளின் முதலாக்கத்திற்கு நிதியளித்துதவக் கடன்களை வழங்குகின்றது. (உதாரணமாக, நிலக்கரி வெட்டி எடுக்கும் தொழில் அல்லது ரயில்வேக்களைக் கூறலாம்.) இன்னும் மற்ற முக்கியமான முதலளிப்பு நடவடிக்கைகளைப் பார்ப்போம். இவைகள் நாட்டில் அயல்நாட்டு நிதிய உறவுகள் சம்பந்தப்பட்டனவாகும்—அவையாவன, அயல்நாட்டு மாற்றுக் காப்புகள், பன்னாட்டுப் பண நிலையங்களிலுள்ள வைப்புகள் ஆகியவற்றின் போக்கு சம்பந்தப்பட்டவையாகும். இந்த இனங்கள், பன்னாட்டுச் செலாவணி சம்பந்தப்பட்டவைகளை எட்டாம் பகுதியில் நாம் ஆராய்ந்த பின்னரே, நமக்கு இன்னும் எளிதாக விளங்கக் கூடும்.

### 3. மத்திய அரசாங்க வருவாய் (Central Government Revenue)

அரசாங்கத்தின் செலவினத்தைப்போன்றே அதன் வரவுகளும் நடப்பு வரவுகளாகவோ—அதாவது, ஒவ்வோர் ஆண்டிலும் திரும்பத் திரும்ப வந்துகொண்டிருக்கும் வரவுகளாகவோ—அல்லது எப்போதுமுள்ள மூலதன இனங்களாகவோ இருக்கக்கூடும். அரசாங்கத்தின் நடப்பு வரவுகளில் பெரும்பகுதியும் பல்வேறு வகையான வரிகளால் தான் பெறப்படுகின்றன. வரிகள் என்பவை யாவை? அவைகள் ஒரு நாட்டின் குடிமக்கள்மீது கட்டாயமாக விதிக்கப்படுவனவாகும். இவ் வரிகள் அவைகளுக்கு ஈடாகக் கொடுக்கப்படும் பொருள் அல்லது பணி இவற்றிற்கு இணையானவைகளாக இருப்பனவல்ல. எனவே, வரிகள் வேறுவிதத்தில்தான் வகைப்படுத்தப்படவேண்டும். வரிகள், வரிசெலுத்துவோரின் நடப்பு வருமானத்தின் அடிப்படையில் விதிக்கப்பட்டுள்ளனவா, அல்லது அவருடைய மூலதனச் செல்வத்தின்மீது விதிக்கப்பட்டுள்ளனவா, அல்லது ஒரு குறிப்பிட்ட பண்டத்தை வாங்குவதன்பேரில் விதிக்கப்பட்டுள்ளனவா என்பனவற்றின் அடிப்படையில் மிக எளிதாக வகைப்படுத்தப்படுகின்றன.

## அட்டவணை 14

### மத்திய அரசாங்கத்தின்* வருவாயும் செலவும், 1961ஆம் ஆண்டு

(மில்லியன் £-களில்)

#### அ: நடப்புக் கணக்கு

**வருவாய் (Revenue)**

| | | |
|---|---|---|
| 1. வருமானத்தின்மீது வரிகள் : | | |
| (அ) வருமானவரி | 2,565 | |
| (ஆ) மேல்வரி (sur-tax) | 196 | |
| (இ) இலாபங்கள்மீது வரிகள் | 317 | |
| | | 3,078 |
| 2. மரணவரிகள் | | 259 |
| 3. செலவின்மீது வரிகள் : | | |
| (அ) புகையிலை | 857 | |
| (ஆ) கொள்முதல் வரி | 509 | |
| (இ) எண்ணெய், பெட்ரோல் | 480 | |
| (ஈ) பீர், ஒயின், சாராய வகை | 440 | |
| (உ) இறக்குமதி வரிகள் | 151 | |
| (ஊ) இதர சுங்கத் தீர்வைகளும் ஆயத் தீர்வைகளும் (other customs and excise) | 90 | |
| சுங்கத் தீர்வைகள், ஆயத் தீர்வைகளின் மொத்தம் | 2,527 | |
| (எ) மோட்டார் வண்டிகள் | 141 | |
| (ஏ) முத்திரை வரிகள் | 97 | |
| (ஐ) பிற வரிகள் | 36 | |
| | | 2,801 |
| 4. நாட்டுக் காப்புறுதிப் பங்குத் தொகைகள் | | 1,071 |
| 5. வாணிப வருமானங்களும் வாடகைகளும் | | 127 |
| 6. வட்டி, இலாப ஈவுகள் (dividends) முதலியவை | | 387 |
| மொத்தம் ... | | 7,723 |

**செலவு (Expenditure)**

| | | |
|---|---|---|
| 7. பண்டங்களும் பணியும் : | | |
| (அ) பாதுகாப்பு (defence) | 1,745 | |
| (ஆ) உடல்நலம் | 796 | |
| (இ) பிற (other) | 543 | |
| | | 3,084 |
| 8. பணமானியங்கள் (subsidies) : | | |
| (அ) விவசாயமும் உணவும் | 325 | |
| (ஆ) பிற | 229 | |
| | | 554 |
| 9. நபர்களுக்கு அளிக்கப்படும் உதவிக்கொடைகள் (grants): | | |
| (அ) நாட்டுக் காப்புறுதி நலத் திட்டங்கள் | 1,234 | |
| (ஆ) நாட்டு உதவித் திட்டம் | 170 | |
| (இ) குடும்பத்திற்கான சலுகைகள் | 139 | |
| (ஈ) கல்வி உதவிக் கொடைகள் | 82 | |
| (உ) பிற | 73 | |
| | | 1,698 |
| 10. நாட்டுக் கடனுக்கான வட்டி | | 907 |
| 11. உள்ளாட்சி மன்றங்களுக்கான உதவிக் கொடைகள் | | 826 |
| 12. பிற | | 222 |
| மொத்த நடப்புச் செலவு | | 7,291 |
| 13. நடப்பு உபரி | | 432 |
| மொத்தம் ... | | 7,723 |

## அட்டவணை 14

| வருவாய் (Revenue) | | செலவு (Expenditure) | |
|---|---|---|---|
| **ஆ: மூலதனக் கணக்கு** | | | |
| 13. நடப்பு உபரி (Current Surplus) | 432 | 17. முதலினச் செலவு | |
| 14. செலாவணி வெளியீடு | 75 | (அ) அஞ்சலகம் | 34 |
| 15. இதர வரவுகள் | 134 | (ஆ) சாலைகள் | 52 |
| 16. கடன் பெறுதல் : | | (இ) உடல்நலம் | 38 |
| (அ) நாட்டுச் சேமிப்புகள் (National Savings) | 146 | (ஈ) பாதுகாப்பு | 24 |
| (ஆ) பிற | 228 | (உ) பிற | 70 |
| | 374 | | 218 |
| | | 18. அயல்நாடுகளின் அரசாங்கங்களுக்குக் கடன்கள் | 60 |
| | | 19. பன்னாட்டு நிறுவனங்களில் வைத்துள்ள வைப்புகள் | 9 |
| | | 20. அயல்நாட்டு மாற்றுக் காப்புகளில் அதிகரிப்பு | 30 |
| | | 21. அரசாங்கக் கார்ப்பரேஷன்களுக்குக் கடன்கள் | 548 |
| | | 22. பிற | 150 |
| மொத்தம் ... | 1,015 | மொத்தம் ... | 1,015 |

*நாட்டுக் காப்புறுதித் தொகைகளையும் சேர்த்து.

ஆதாரம் : 'நாட்டு வருமானமும் செலவும்', 1962 (National Income and Expenditure), மாட்சிமை தங்கிய அரசியாரின் புள்ளிவிவர அலுவலகம், லண்டன், 1962, அட்டவணைகள் 36—7.

முதலாவது இனமாகிய வருமான வரிகள் என்பவை, கோட்பாட்டளவில் சிக்கலேதுமற்றவைகளாக இருக்கின்றன. பிரிட்டிஷ் வருவாய்க் கைக்கோளின்படி (British fiscal practice), தனிநபர்களும் நிறுவனங்களும் ஒவ்வோர் ஆண்டிலும் தங்களது நிகர வருமானத்திற்கு வரி செலுத்தும்படி கோரப்படுகின்றனர். தனிநபர்களுக்கு வருமான வரி விதிப்பில் பல்வேறு சலுகைகள் தரப்படுகின்றன. வருமானம் பெறுகின்றவர்களைச் சார்ந்து வாழுகின்றவர் உள்ளனர் என்பதற்காகவும், காப்புறுதி வட்டங்கள், வீடு அடைமானங்கள் முதலியவைகளில் செலுத்தப்படும் வட்டிக் கட்டணங்கள் ஆகியவற்றிற்காகவும் பலதிறப்பட்ட சலுகைகள் அளிக்கப்படுகின்றன. மேலும், ஈட்டப்படும் வருமானத்திற்கும் சலுகை அளிக்கப்படுகிறது. இதற்கு எதிரிடையாக சொத்துகளினின்றும் பெறப்படுகிற வருவானங்களுக்கு (வட்டி, இலாப ஈவுகள்—dividends—அல்லது வாரங்கள்) சலுகை அளிக்கப்படுவதில்லை. இவைகள் ஈட்டப்படாத

வருமானங்களெனக் கருதப்படுகின்றன. கடைசியாக, குறைந்த வருமான வரிசையிலுள்ளவர்களுக்குக் குறைந்த வீத வரிகளே விதிக்கப்படுகின்றன. இம்முறைகள் யாவும் வரிவிதிப்புச் சுமையை அறமுறையில் சுமத்துவதற்காகவே திட்டமிடப்பட்டவைகளாகும். இவ் வரிகள் தனி மனிதனின் வரி செலுத்து திறனோடு ஏதாவதொரு வகையில் இணைந்துள்ளனவாகவே இருக்கின்றன. இத்தகைய சலுகைகள் எதுவும் தொழில் நிறுவனங்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை. தொழில் நிறுவனங்கள் தனிநபர்களல்ல; அவைகளுக்குத் தனிப்பட்ட சலுகையை அளித்தலென்பது அறமுறைக்குப் புறம்பாகும். மற்றொருபுறம், நபர்கள், ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேல் அதிகமான வருமானங்களை ஈட்டுவார்களாயின், அவ் வருமானங்களின்மீது அதிகரித்த வீதத்தில் மேல்வரி விதிக்கப்படுகிறது. இன்னோரன்ன வழிமுறைகள் யாவும் பிரிட்டிஷ் வருமான வரி விதிப்பு முறையை அதிக வளர்வீத முறையில் இருக்கும்படி செய்வதற்கே கடைப்பிடிக்கப்படுகின்றன. இலாப வரிகள் என்பவை கம்பெனிகள்மீது மட்டுமே விதிக்கப்படுகின்றன. தற்காலத்தில், அவ் வரி, ஒரு தொழில் நிறுவனமானது வருமான வரி, வாங்கியுள்ள கடனுக்கான வட்டிக் கட்டணங்கள் இவை யாவற்றையும் செலுத்திய பிறகு உள்ள நிகர இலாபங்களின்மீது ஒரு நிரவலான வீதத்தில் கணக்கிடப்பட்டு வசூலிக்கப்படுகிறது.

பிரிட்டிஷ் வரி அமைப்பில் தற்போது மூலதன வரி என்பது ஒரு சிறு கூறாக இருந்துவருகிறது. அட்டவணை 14ஐப் பார்த்தால் இவ் வகையில் 1961ஆம் ஆண்டில் நடைமுறையில் உள்ள வரிகள் மரண வரிகளே என்பது விளங்கும். இவ் வரிகள் சொத்துகளின் மீது வளர்வீதத்தில் விதிக்கப்படுகின்றன. சொத்தின் உடைமையாளர் இறந்துபட்டதும், சொத்தானது வேறொருவர் கைக்குச் செல்லுந் தருணத்தில், இவ் வரிகள் விதிக்கப்படுகின்றன. 1962ஆம் ஆண்டு வரவுசெலவுத் திட்டத்தில் குறுங்கால மூலதன இலாப வரி என்னும் வரியைப் புகுத்தியதன்மூலம் வரிவிதிப்பு முறையில் வெகுவானதொரு திருப்பம் ஏற்பட்டது. அதுவரையிலும், ஒருவருடைய செல்வமானது, அவருடைய சொத்தின் மூலதன மதிப்பு அதிகரிப்பதன்மூலம், அதிகரிக்குமானால், அத்தகைய அதிகரிப்பிற்காகத் தான் வரி செலுத்தவேண்டியதனின்றும் தப்பித்துக்கொண்டே வந்திருந்தார் (மரண வரிகள் இவற்றினின்றும் வேறுபட்டனவாகும்). இத்தகைய வரியைச் செலுத்தவேண்டிய கடமையானது, ஒருவர் இதைப்போன்ற மூலதன இலாபங்களைத் தான் தொழில் நடத்தும் போது (உதாரணமாக ,இலாபகரமாகத் தொழில் நடத்தும் ஒரு பங்கு பத்திரத் தரகரைப்போன்று) அத் தொழிலின் வழியாகத் தொடர்ந்து பெற்றுக்கொண்டிருந்தாலொழிய மூலதன இலாப வரியைச் செலுத்

தியேயாகவேண்டும். 1962ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட இந்த வரியினுல் அத்தகைய இலாபங்கள் நிகர வருமான வரியுடன் சேர்க்கப்பட்டன. இப்படிச் சேர்க்கப்படுவதற்கு, இலாபங்கள் பெறப்பட்ட சொத்துகளை ஆறு மாத கால அளவிற்குள் (நிலமாக இருந்தால் மூன்று ஆண்டுகளுக்குள்) வாங்கப்பட்டும் விற்கப்பட்டு மிருக்கவேண்டும். இவ் வரியின் விளைவானது, வருவாயினைப் பொறுத்தவரை, மிக அதிக அளவில் இருக்காது என (பல்வேறு காரணங்களால்) அது புகுத்தப்பட்டபோது பொதுவாக நம்பப் பட்டது. எனினும், மூலதன இலாப வரிகளின் கோட்பாடு புகுத் தப்பட்டுவிட்டதாகையால், எதிர்காலத்தில் இதன் வளர்ச்சி யானது, வரி முறையின் மிகச் சிறந்ததோர் அங்கமாக இருக்கக் கூடும்.

மூன்ருவது இனம், செலவு வரிகளாகும். இது அரசாங்கக் கருவூலத்திற்கு அளிக்கும் மொத்த வருவாயை ஒப்புநோக்கும்போது, இதனை வருமான வரிக்குச் சமமான முக்கியத்துவம் வாய்ந்ததெனக் கூறலாம். புகையிலை, எண்ணெய், சாராய வகைகள் ஆகிய இம் மூன்று வகைகளும் செலவு வரிகளில் ஒரு சதவீதத்திற்குக் குறை வில்லாமல் வருவாயை அளிக்கின்றன. இப் பண்டங்கள் யாவும் ஒப்பீடாக நெகிழ்வற்ற தேவையையுடையனவாக இருக்கின்றன. மற்ருெரு வரி கொள்முதல் வரியாகும். வருவாயில் இதுவும் ஒரு பெரிய கூருக உள்ளது. இவ் வரியானது வரிகளின் பல்திறப் பட்ட பணிகளை விளக்குவதாகவுள்ளது. இது, ஆரம்பத்தில் உள்நாட்டில் சாதனங்களை மக்கள் நுகர்வதால் தீர்ந்துபோவதைத் தடுப்பதற்கும், அவைகளைப் போர் நடவடிக்கைகளுக்குப் பின்னர் ஏற்றுமதி அங்காடிகளுக்கும் கிடைக்கும்படி செய்வதற்குமே புகுத்தப்பட்டது. தற்போது இவ் வரியானது வருவாய்க்குப் பெரிய தொரு தோற்றுவாயாக இருந்துவருகிறது. இதைப்போன்றே ஆரம்பத்தில் பல இறக்குமதி வரிகள் இறக்குமதிப் பண்டங்களி னின்றும் உள்நாட்டுத் தொழில்களைப் பாதுகாக்கும்பொருட்டே விதிக்கப்பட்டன; ஆயினும், அவைகள் பயன்தரத்தக்கவகையில் வருவாயினை அளிக்கின்றன.

அடுத்தபடியாக, நாட்டுக் காப்புறுதிப் பங்குத் தொகைகளைப் பற்றிப் பார்ப்போம். இந்த இனத்தை வரியினுள் வைத்தோ அல்லது வரிக்குப் புறம்பானதென்ரே அவ்வளவு எளிதாக வரிசைப் படுத்துவதியலாது. பெயரளவில் அவைகள் ஒரு நிதிக்கு அளிக்கப் படும் செலுத்துகளாகவும், அச் செலுத்துகளைப் பங்குத் தொகையாகச் செலுத்துபவர் குறிப்பிட்ட காலங்களில் அந் நிதியினின்றும் ஓய்வுச் சம்பளம் அல்லது உதவி நலன்களைப் பெறுவதற்கு

அவருக்கு உரிமை அளிப்பனவாகவும் உள்ளன. மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது இவைகளை வரி என்று கூறுவதற்கில்லை; ஏனெனில், வரிவிதிப்பு முறையில் ஒரு வரியானது செலுத்தப்படுவதற்கொப்பான ஆதாரம் வழங்கப்படுவதில்லை. ஆயினும், நடைமுறையில், பொது விலைமட்டத்திலேற்படும் தொடர்ந்த அதிகரிப்பானது ஓய்வுச் சம்பளங்கள், இன்னும் மற்ற உதவி நலன்கள் ஆகியவற்றில் அவ்வப்போது எற்படும் அதிகரிப்பிற்கு—செயலளவில் அரசியல் காரணங்களுக்காகவே இவ்வாறு அதிகரிப்பு செய்யப்படுகிறது—காரணமாக இருப்பதால், காப்புறுதி நிதிக்கு ஒருவர் ஏற்கெனவே செலுத்திவந்துள்ள பங்குத் தொகைகளின் குவிப்பிற்கும், உதவி நலன்களைப் பெறுகின்ற உரிமைக்குமிடையேயுள்ள தொடர்பானது மிக மெல்லியதாகிவிட்டது. வரியைப்போன்றே, இப் பங்குத் தொகைகளும் வேலையிலமர்த்தப்பட்டுள்ளவர்களுக்கும், தாமாகவே ஒரு தொழிலை ஏற்படுத்திக்கொண்டு வேலை செய்து வருபவர்களுக்கும் கட்டாயமானவைகளாகவே இருக்கின்றன.

மற்ற நடப்பு வருவாய்கள் வரிவிதிப்புமூலம் கிடைக்கின்ற தொகைகளோடு ஒப்பிடப்படும்போது, மிகச் சிறிய அளவில்தானிருக்கின்றன. வணிக வருமானமும் வாரங்களும் என்பவை பெரும்பாலும் அஞ்சலகம் பெறுகின்ற இலாபங்களையும் அரசாங்கம் தனக்குச் சொந்தமான நிலம், கட்டடங்கள் ஆகியவற்றினின்றும் பெறும் வாரம் அல்லது வாடகை ஆகியவற்றைக் கொண்டனவாகும். வட்டியும் இலாப ஈவுகளும் என்பவை அரசாங்கமானது உள்ளாட்சி மன்றங்களுக்கும் நாட்டுரிமையாக்கப்பட்ட தொழில்களுக்கும் கொடுத்துள்ள கடன்களினின்றும் பெறப்படுகின்ற வரவுகளாகும்; இக் கடன்களைப் பெறுகின்றவர்கள் வட்டி செலுத்தியாகவேண்டும்.

அரசாங்கத்தின் முதலினச் செலவுகளுக்கு எவ்வாறு நிதி அளிக்கப்படுகிறது? முதலாவதாக, நடப்பு வருவாய்களினின்றும் எல்லா நடப்புச் செலவுகளையும் செய்து முடித்த பின்னரும் உள்ள எந்த எச்சமான தொகையைக்கொண்டும் நிதியளிக்கப்படுகிறது. (நடப்பு நடவடிக்கைகளில் வருவாய்ப் பற்றுக்குறை—deficit—ஏற்படுமாகில், இந்த இனமானது அட்டவணையின் வேறு பகுதியில் இடம் பெறுவதாகும். அதாவது, நிதி தேவைப்படுகின்ற முதலினங்களின் பட்டியலில் இடம்பெறுவதாகும்.) இரண்டாவதாக, செலாவணி வெளியிடுவதில் கூடுதலான செலாவணிகளை வெளியிடுதலின் மூலம் கிடைக்கும் வரவுகள் யாவும் இந்த (நிதியளிக்கும்) இனத்தில் சேர்த்துக்கொள்ளப்படத்தக்கனவாகும். செலாவணி சம்பந்தமான முழுப் பிரச்சினையையும் அடுத்த இரு அத்தியாயங்களில் ஆராயப்பட்டுள்ளது. தற்போது ஒன்றைமட்டும் இங்குக் கூறுவது போதுமான

தாகும். அதாவது, அரசாங்கமானது இங்கிலாந்து பாங்கைப் புழக்கத்திலுள்ள அதன் நோட்டுகளின் அளவை அதிகரிக்குமாறு உத்தரவிடுமாகில், இங்கிலாந்து பாங்கானது அரசாங்கத்தினிடமிருந்து கடன் பத்திரங்களைப் பெற்றுக்கொண்டு—இக் கடன் பத்திரங்கள் எதிர்காலத்தில் பணம் செலுத்தப்படும் என்பதற்கான வாக்குறுதிகளாகும்—நோட்டுகளை அரசாங்கத்திற்கு அளிக்கும். இக் கூடுதலான அளவு பணத்தைக்கொண்டு அரசாங்கமானது தனது செலவுகளுக்கும் நிதியளிக்கும். (மீண்டும், நோட்டுகள் வெளியிடுவதில் செய்யப்படும் குறைப்பானது இந்த இனத்தை அட்டவணையின் வேறு பகுதியில் மாற்றி இடம்பெறச் செய்யும்.) மூன்றாவதாகவுள்ளவை, அரசாங்கத்திற்கு அவ்வப்போது கிடைக்கும் பல்வகை மூலதன வரவுகளாகும்—அவை, அயல் அரசாங்கங்களினின்றும் கிடைக்கப்பெறும் மூலதன உதவிக் கொடைகள், எச்சமாக உள்ள பொருள்களின் விற்பனை, தொழில் நிறுவனங்கள் முதலியவற்றில் அரசாங்கம் பெற்றுள்ள பங்குகளை விற்பனை செய்தல் ஆகியவைகளாம்.

இவ்வாறு வரவுகளையெல்லாம் கூட்டி, கிடைக்கின்ற மொத்தத் தொகையை முதலின் வெளிச்செல்லுதல்களைக் கூட்டிக் கிடைத்த மொத்தத் தொகையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, வரவுகளின் தொகை அதிகமாக இருக்குமாயின்,—மூலதன வரவுகள் (நடப்பு எச்சப்பாட்டினையும் சேர்த்து) மூலதனச் செலவுகளைக்காட்டிலும் அதிகமாக இருக்குமாயின்—அரசாங்கத்திற்கு முழுவதும் தழுவிய எச்சப்பாடு கிடைக்கும். இதற்கு எதிர்மறையானதொரு நிலை இருக்குமானால், முழுவதும் தழுவியதொரு பற்றுக்குறை ஏற்படும். இந்த எச்சமானது எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது அல்லது பற்றுக்குறையானது எவ்வாறு ஈடுசெய்யப்படுகிறதென்னும் பிரச்சினையை நாம் தற்போது ஆராயவேண்டும்.

### 4. நாட்டுக் கடன் (The National Debt)

பொது விதியாக, ஒரு தனிப்பட்ட குடும்பமோ அல்லது நிறுவனமோ, தனது செலவை அதனுடைய நடப்பு வருமானத்திற்குள் வரையறுத்துக்கொள்ளவேண்டும். இதற்கு ஒரு விதிவிலக்குக் கூறலாம். கடன் வாங்குதல் இயலுகின்றவரையிலும், உகந்ததாக இருக்கின்றவரையிலும் தவிர்த்து என்பதனை மேற்சொன்ன பொது விதியுடன் சேர்த்துக்கொள்ளவேண்டும். பின்னதாகக் கூறப்பட்டுள்ள நிறுவனத்தின் எல்லையானது, ஓரளவிற்குத் தேவையால்—இருபுறமும்—கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. தான் பெறுகின்ற கடனைத் திருப்பி அளித்தலில் ஏற்படும் செலவைக்காட்டிலும் (அதாவது,

காலந்தோறும் செலுத்தப்படும் வட்டிக் கட்டணங்கள், முடிவாகக் கடனைத் திருப்பி அடைத்தல்) அதிகமான வருமானத்தைக் கடன் பெறுவோர் பெறுவதாக இருக்கவேண்டும். இந்த அதிகமான வருமானத்திலிருந்துதான் மேற்சொல்லப்பட்ட செலவினைச் சமாளிக்க வேண்டும். ஆயினும், அரசாங்கத்தின் நிலை வேறு. அதற்கு நோட்டுகளை வெளியிடுகின்ற சர்வாதீன அதிகாரம் இருப்பதனால், அதனால் பணத்தைச் சிருட்டிக்க முடிகின்றது (இது அடுத்த அத்தியாயத்தில் ஆராயப்பட்டுள்ளது). இதனால், இருவித விளைவுகள் ஏற்படுகின்றன. முதலாவதாக, அரசாங்கம் விரும்பும்பட்சத்தில் தனது செலவிற்குப் புதிய பணத்தைச் சிருட்டித்தலின்மூலம் பணம் பெறக்கூடும். இத்தகையதொரு சாத்தியக்கூறுனது. சமூகத்திலுள்ள வேறு எந்த அங்கத்தினருக்கும் சட்டபூர்வமாகக் கிட்டுவதில்லை. இரண்டாவது, இத்தகையதொரு வாய்ப்பின் காரணமாக அதனுடைய கடன்கள் (debts) தகுதியுள்ள கடனளிப்போர்களால் (potential lenders) பெரிதும் ஏற்கப்படுகின்றன. அரசாங்கம் பணம் சிருட்டிக்கும் அதிகாரத்தினைப் பெற்றுள்ள காரணத்தால், தனது கடப்பாடுகளை நிறைவேற்றமுடியாததொரு நிலை அதற்கு ஏற்படுவதில்லை. அதனுடைய கடனளிக்கும் திறனும் கடன் வாங்குந் திறனும் எப்போதும் அதிகமாகவே இருக்கின்றன.

ஆகவே, தனது செலவுகளுக்கு நிதியளிப்பதற்கு அரசாங்கத்திற்கு மூன்று தனித்தனியான வழிகள்—அயல்நாடுகளினின்றும் அது பெறக்கூடும் இலவசப் பரிசுகள் அல்லது உதவிக் கொடைகள் ஆகியவற்றைப் பெற இயல்வதல்லாமல்—உள்ளன. முதலாவதாக, அது சென்ற உட்பிரிவில் விளக்கப்பட்டுள்ள பல்திறப்பட்ட வரிகளின்மூலம் கிடைக்கின்ற ஆதாயங்களைப் பயன்படுத்திக் கொள்ளக்கூடும். இரண்டாவதாக, அது புதிய பணத்தைச் சிருட்டிக்கக்கூடும். மூன்ருவதாக, நாட்டுக் கடனின் பெருக்கத்தின் மூலம் அது கடன் பெறக்கூடும். ஐக்கிய அரசாங்கமானது இக் கடைசி முறையை அவ்வப்போது எந்த அளவிற்குப் பயன்படுத்தியுள்ளதென்பதை 1962ஆம் ஆண்டில் அதனுடைய நாட்டுக் கடன் சேகரிப்பு £ 29,000 மில்லியனாக இருந்ததைக்கொண்டு முடிவுக்கு வரலாம். இந்த நாட்டுக் கடனானது, அரசாங்கம் எதிர்காலத்தில் ஏதாவதொரு நாளில் பணத்தைத் திருப்பித் தருவதாக அளிக்கப்பட்ட வாக்குறுதிகளையும்—ஏதாவது ஒரு நாள் என்பது குறிப்பிடப்பட்டும் அல்லது குறிப்பிடப்படாமலும் இருக்கலாம்—ஒப்புக்கொள்ளப்பட்ட தொகைகளை அவ்வப்போது வட்டியாகச் செலுத்திவிடுவதாக அளிக்கப்பட்ட வாக்குறுதிகளையும் கொண்டதாக இருக்கிறது. இதில் £ 2,000 மில்லியன் வெளிநாடுகளிடமிருந்து கடன் பெற்ற தொகையாகும். இத்தொகையின் பெரும்

பகுதியும் ஐக்கிய அமெரிக்காவிலிருந்து கடனுகப் பெறப்பட்டதாகும். மீதமுள்ள தொகையில் (அதாவது, உள்நாட்டுக் கடனில்) ஐந்தில் ஒரு பங்கு குறுங்காலக் கடன்களாகும் (குறுந்தவணைக் கடன்—floating debts). இக் குறுங்காலக் கடன்கள் பெரிதும் பாங்குமுறையினின்றும் பெறப்பட்டவைகளாகும்; இவற்றில் ஐந்தில் மூன்று பங்கு நெடுங்காலக் கடன் பத்திரங்களைக் கொண்டதாகவுள்ளது. இந் நெடுங்காலக் கடன் பத்திரங்கள், ஓராண்டுமுதல் இருபதாண்டுக் காலத்திற்குள்ளாகவோ அல்லது அரசாங்கம் தெரிதல் செய்யும் ஒரு தேதியிலோ பணம் திருப்பிச் செலுத்தப்படத்தக்கவையாகவுள்ளன. அட்டவணை 14ஐப் பார்த்தால், இக் கடனுக்காக அளிக்கப்படும் ஆண்டு வட்டியானது, அரசாங்க ஆண்டு வரவு செலவுத் திட்டத்தில் மிகவும் தவிர்க்க முடியாததோர் இனமாக உள்ளது.

வரவுசெலவுத் திட்டமொன்றைச் சமர்ப்பிக்கும்போது, நிதி அமைச்சருக்கு, வரவுகளையும் செலவுகளையும் சமநிலைப்படுத்தும் ஓர் எளிதான பிரச்சினைமட்டுமே இருப்பதில்லை. அவருடைய பிரச்சினையெல்லாம், அரசாங்கம் மேற்கொண்டுள்ள திட்டத்திற்கான செலவுகளுக்குத் தேவையான சாதனங்களை எவ்வகையில் பெறுவதென்பதே. வரியினை விதித்தால், சாதனங்கள் பெரும்பாலும் நடப்புச் செலவினின்றும் எடுக்கப்பட்டுவிடுவதாகக் கருதப்படும்; கடன்பெறு முறையினின்றும் பெறப்படுமாகில், அவ்வாறு பெறப்படும் வரவுகள் (proceeds) முதல் ஆக்கத்திற்கு நிதியளிக்கப் பயன்பட்டிருக்கக்கூடிய நிதிகளினின்றும் வரக்கூடுமாதலால், முதல் ஆக்கத்தினைப் பாதிக்கும்; செலாவணிச் சிருட்டிப்பு முறை பயன்படுத்தப்படுமாகில், சாதனங்களைத் தியாகம் செய்வதன் பகிர்வானது, அத்தகைய கடன் சிருட்டிப்பானது பொதுவாக விலைகளிலும் உற்பத்தியிலும் ஏற்படுத்தும் விளைவுகளைப் பொறுத்திருக்கும். நாட்டில் முற்றிலும் பயன்படுத்தப்படாத அல்லது அரைகுறையாகப் பயன்படுத்தப்படும் சாதனங்கள் இருப்பதாலும், நிலை மேலும் சிக்கல் வாய்ந்ததாக அமையும். இத்தகைய சூழ்நிலைகளில் அரசாங்கம் சாதனங்களைப் பயன்படுத்துவதற்கு நுகர்ச்சி அல்லது முதலீடு இவற்றின் தியாகம் எதுவும் தேவைப்படுவதில்லை; ஆனால், பயன்படுத்தப்படாமையால் ஏற்படும் சாதனங்களின் விரயத்தை இது தவிர்க்கும். இதற்கு இணையான கருத்துகள், நிதி அமைச்சரொருவருக்கு வரப்போகும் வரவுகள் (அமலில் உள்ள வரி வீதங்களில்), வரப்போகும் செலவுகளைக் (அரசாங்க) காட்டிலும் அதிகமானவையாக இருக்கக்கூடிய ஒரு நிலைமை ஏற்படும்போது பொருந்துவனவாக இருக்கும். அவர் வரி குறைக்கின்ற வாய்ப்பினை வல்லந்தமாகக் கைக்கொள்வதன் மூலம் உள்ளார்ந்த உபரி தோன்றுவதைத் தடுக்கக்கூடும்;

மற்றொருபுறம், அவர் ஓர் உபரியான வரவுசெலவுத் திட்டத்தைக் (surplus budget) கொண்டுவருவதன்மூலம் செலாவணியின் அளவைக் குறைக்கவோ அல்லது நிலுவையாகவுள்ள நாட்டுக் கடனின் ஒரு பகுதியை மீட்கவோ கூடும்.

இவைகள் மிகவும் சிக்கலான பிரச்சினைகளே. ஏழாம் மடலில் விளக்கப்பட்டுள்ள பெரும் பொருளாதாரம் (macro-economics) என்னும் தலைப்பினை ஆராய்ந்த பின்னரே சிக்கல்கள் தெளிவுபெறும். தற்போதைக்கு ஞாபகத்தில் கொள்ளவேண்டிய இன்றியமையாத கருத்து இதுதான். அதாவது, வரவு செலவுத் திட்டத்தின் வருவாய்ப் பகுதியின் அளவும் அமைப்பும், ஓர் அரசாங்கமானது அதன் சொந்தச் செலவின் நிதியளிப்பிற்குத் தேவைப்படுகின்ற தேவையால்மட்டுமே நிர்மானிக்கப்படுவதில்லை என்பதாகும். அத்தகையதொரு தேவையானது, நாட்டிலுள்ள பிற தனிநபர்களும் தொழில் நிறுவனங்களும் சாதனங்களைப் பயன்படுத்துவதில் நேரடியானவும் முக்கியமானவுமான விளைவுகளை உண்டுபண்ணத்தக்கதாக உள்ளது. எனவே, நாடு முழுவதிலும் நிலவுகின்ற நிலவரம், நாடு முழுவதற்குமான தேவைகள் ஆகியவைகளே, நிதி அமைச்சர், வரப்போகிற ஆண்டின் வரவுகள் எவ்வளவு இருக்க வேண்டும், எந்த வகையானவைகளாக இருக்கவேண்டுமென்பதனைத் தீர்மானிப்பதற்கு வழிகாட்டிகளாகப் பின்பற்றப்படவேண்டும்.

### 5. உள்ளாட்சி நிதியம் (Local Government Finance)

ஐக்கிய அரசாங்கத்தில் தற்போது, அரசாங்கத் துறையில் செலவு செய்யப்படுவதில் ஏறக்குறைய மூன்றில் ஒரு பகுதி உள்ளாட்சி மன்றங்களால்தான் செலவு செய்யப்படுகிறது; இதில் முக்கியச் செயலாண்மைகள் (agencies) கோட்டாண்மைக் கழகங்களாகும் (County Councils) (அல்லது பெரிய நகரங்களில், மாநகரங்களில் அவைகளுக்குச் சமமான கோட்ட நகராண்மைக் கழகங்களும்—County Borough Councils). பொதுவாக, உள்ளாட்சி மன்றத்தினருக்கு நாட்டைப்பொறுத்த பணிகள் இல்லை; உள்ளாட்சி சம்பந்தமான பணிகளை ஆற்றவேண்டிய பொறுப்புகளே அவற்றிற்குத் தரப்பட்டுள்ளன. உள்ளாட்சியிலும் மத்திய அரசாங்கத் துறைகள் அறுதியிட்டுள்ள எல்லைக்கும் படித்தரங்களுக்கும் (standards) உட்பட்டே—ஆனால், பல்வேறு சரிநுட்ப அளவில்—செயல்படவேண்டும்.

ஐக்கிய அரசாங்கத்தின் இத்தகைய அரசாங்கப் பிரிவின் வருவாய் செலவினங்களின் முக்கிய அம்சங்கள் அட்டவணை 15-ல் காட்டப்பட்டுள்ளன. முதலாவது செலவினப் பகுதியை நோக்கு

## அட்டவணை 15

### உள்ளாட்சி மன்றங்களின் வருவாயும் செலவும், 1961ஆம் ஆண்டு

(மில்லியன் £-களில்)

| வருவாய் (Revenue) | | செலவு (Expenditure) | |
|---|---|---|---|
| **அ. நடப்புக் கணக்கு (Current Account)** | | | |
| 1. மத்திய அரசாங்கத்தினின்றும் உதவிக் கொடைகள்: | | 6. பண்டங்களும் பணிகளும்: | |
| (அ) குறிப்பிடப்படாத இனங்கள் (non-specific) | 632 | (அ) கல்வி | 750 |
| (ஆ) கல்வி | 75 | (ஆ) சாலைகள் | 125 |
| (இ) சாலைகள் | 30 | (இ) உடல்நலம் | 101 |
| (ஈ) காவல் (Police) | 69 | (ஈ) காவல் | 140 |
| (உ) பிற | 20 | (உ) சாக்கடை, குப்பை | 90 |
| | | (ஊ) பிற | 280 |
| | 826 | | 1,486 |
| 2. உள்ளாட்சி வரிகள் (rates) | 824 | 7. வீடுகளுக்கான பணமானியங்கள் | 32 |
| 3. வாடகைகள் (rents) | 406 | 8. மாணாக்கர் உதவிச் சம்பளங்கள் (scholarships) | 39 |
| 4. வணிக வருமானம் (trading income) | 44 | 9. பள்ளி உணவு, பால் | 64 |
| 5. வட்டி முதலியன | 48 | 10. கடனுக்காக வட்டி | 330 |
| | | மொத்த நடப்புச் செலவு | 1,951 |
| | | 11. உபரி (surplus) | 197 |
| மொத்தம் ... | 2,148 | மொத்தம் ... | 2,148 |
| **ஆ. மூலதனக் கணக்கு (Capital Account)** | | | |
| 11. நடப்பு உபரி | 197 | 15. முதல் ஆக்கம்: | |
| 12. மத்திய அரசாங்கத்தினின்றும் மூலதன உதவிக் கொடைகள் | 45 | (அ) வீட்டு வசதி | 268 |
| 13. மத்திய அரசாங்கத்தினின்றும் பெற்ற கடன்கள் | —20 | (ஆ) கல்வி | 133 |
| 14. பிற கடன்கள் | 527 | (இ) சாலைகள் | 64 |
| | | (ஈ) சாக்கடை | 50 |
| | | (உ) நீர் | 43 |
| | | (ஊ) பிற | 117 |
| | | | 675 |
| | | 16. நபர்களுக்கு அளிக்கப்படும் மூலதன உதவிக் கொடைகள் | 14 |
| | | 17. வீடு வாங்கக் கடன்கள் | 60 |
| மொத்தம் ... | 749 | மொத்தம் ... | 749 |

ஆதாரம்: 'நாட்டு வருமானமும் செலவும்', 1962, மேன்மை தங்கிய அரசியின் புள்ளிவிவரத் துறை, லண்டன், 1961, அட்டவணைகள் 40–1.

வோம். இங்கே, நடப்புக் கணக்கு, மூலதனக் கணக்கு எனப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது; பயனளிப்பதாக உள்ளது. அட்டவணையை நோக்கும்போது, நடப்புச் செலவுப் பகுதியில் மிக முக்கியமானதொரு தனியான இனம் கல்வி என்பது புலனுகும். இந்த இனத்தில் முக்கியமாக இடம் பெறுபவை ஆசிரியர் சம்பளம், இன்னும் மற்றப் பள்ளிப் பணியாளர் சம்பளங்கள், பள்ளிகளின் பராமரிப்பு, பள்ளிகளுக்கு வேண்டிய சாதனங்கள், தாள் முதலிய எழுதுவதற்கான பொருள்கள், நூல்கள் முதலியன இடம்பெறும். பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின்மீது செலவழிக்கப்படும் செலவினங்களில் இரண்டாவது முக்கியத்துவம் வாய்ந்ததொன்ருக இருப்பது வீதிகளாகும். இந்தப் பகுதியில் வீதிகள் என்று குறிப்பிடப்பட்டிருப்பது, வீதிகளின் பராமரிப்பைக் குறிக்குமேயல்லாது வீதிகள் அமைத்தலைக் குறிக்காது; ஏனெனில், வீதிகள் அமைத்தலென்பது முதலாக்கத்தின்பாற்படும். இந்தத் தலைப்பின்கீழ் பொது உடல்நலப் பணிகள், உள்ளாட்சிக் காவல் படைகள் (local police forces) முதலியனவும் முக்கியம்வாய்ந்த இனங்களாகவுள்ளன. நடப்புச் செலவில் மற்றெரு பெரிய இனம், கடன் வட்டி (debt interest)யாகும். இதில் பாதிப் பங்கு மத்திய அரசாங்கத்தினிடம் பெற்ற கடன்களுக்கான வட்டியாகும். இதில் மற்றெரு பாதி, கடந்த காலங்களில் அவ்வப்போது வெளி முதல் அங்காடியில் பெற்ற கடன்களுக்கான வட்டிச் செலுத்துகளாகும்.

1961ஆம் ஆண்டில் உள்ளாட்சி மன்றங்களின் முதலினச் செலவில் முக்கால் பங்கு புதிய வீடுகள், பள்ளிகள் ஆகியவற்றைக் கட்டுவதற்கும், அவைகளைச் சீரமைப்புச் செய்வதற்கும் பயன்படுத்தப்பட்டது. சாலைகளுக்குச் செலவிடப்படும் முதலினச் செலவானது ஒப்பீடாகச் சிறிதளவாகவே உள்ளது. இதற்குக் காரணம், பிரிட்டனில் நெடுஞ்சாலைகளுக்கான நிதியப்பொறுப்பு மத்திய அரசாங்கத்தின் (புதிய சாலைகள் அமைக்கும் வேலையை உள்ளாட்சி மன்றங்கள், மத்திய அரசாங்கத்தின் பதிலாட்களாக—agents—ஏற்று நடத்தலாம் என்று இருந்தபோதிலும்) பொறுப்பில்தானுள்ளது.

உள்ளாட்சி மன்றங்களின் நடப்பு வருவாயில் முக்கால் பங்காக இருப்பவை (ஏறக்குறைய சம விகிதங்களில்), அரசாங்க உதவிக் கொடைகளும் உள்ளாட்சி வரிகளுமாகும். பின்னதாகக் கூறப்பட்டிருப்பது, உள்ளாட்சி மன்றங்கள் தன்னுரிமையாகப் பெறுகின்ற வருவாயின் பெரியதொரு சாதனமாகும். இவ் வருவாயானது, சம்பந்தப்பட்ட உள்ளாட்சி மன்றத்தின் எல்லையிலுள்ள நிலம், கட்டடங்கள் ஆகியவற்றின் மதிப்பில் ஒரு £-க்கு இவ்வளவு வரி என்று அறுதியிட்ட வரியை விதிப்பதன்மூலம் கிடைக்கின்றது.

(ஏனைய செலவின வரிகளைப்போன்றே இதுவும் ஒரு தேய்வுவீத வரியாகும்—regressive tax—. சான்ருக, இரு நபர்கள் ஒரே வரியுள்ள இரண்டு வீடுகளைத் தனித்தனியே வைத்துள்ளனர் எனக் கொள்வோம். இதில் ஒருவர் ஏழை, மற்ருருவர் பணக்காரராக இருப்பின், ஏழை செலுத்துகின்ற வீட்டு வரி அவருடைய வருமானத்தில் அதிக விகிதமாகவும், அதே சமயத்தில் அவ் வரி பணக்காரருடைய வருமானத்தில் குறைந்த விகிதமாகவும் இருக்கும். எனவே, இத்தகைய வரிகள் வருமான வரிக்கு நேர்மாருனவையாக இருக்கின்றன.) மத்திய அரசாங்கங்களிடமிருந்து தற்காலங்களில் கிடைக்கப்பெறும் பெரும்பாலான நடப்பு உதவிக்கொடைகள் இன்ன குறிப்பிட்ட செலவினங்களைச் சார்ந்தவை எனக் குறிப்பிடும்படியாக இல்லை. இத்தகைய உதவிக் கொடைகளை அளிப்பதன் முக்கிய நோக்கம் யாதெனில், பல்வேறு உள்ளாட்சி மன்றங்களிடையே ஓரளவிற்கு சமத்துவத்தை நிலைநாட்ட முயல்வதேயாகும். எனவே, அத்தகைய உதவிக் கொடைகள் மிகக் குறைந்த மக்கள்தொகையையும், குறைந்த உள்ளாட்சி வரிகளையும்கொண்ட நாட்டுப்புற எல்லைகளிலுள்ள உள்ளாட்சி மன்றங்களுக்கு ஒப்பீடாக அதிகமான உள்ளாட்சி வரிகளைப் பெற்று, அவைமூலமே செலவுகளைச் சமாளித்துக்கொள்ளத்தக்க நகர்ப்புறங்களிலுள்ள உள்ளாட்சி மன்றங்களைக்காட்டிலும் அதிக விகிதத்திலுள்ளன.

மத்திய அரசாங்கத்தைப்போன்று, உள்ளாட்சி மன்றங்களுக்குப் பணம் சிருட்டிக்கும் உரிமையில்லை; எனவே, அவைகள் தம் முதலினச் செலவுகளுக்குத் தம்முடைய நடப்பு வருவாயின் உபரியைக் கொண்டு நிதியளிக்கவேண்டும், அல்லது நடப்பு வருவாய் செலவினங்களைக்காட்டிலும் குறைவாக இருக்குமானுல் இவ் வேறுபாட்டினை நீக்கிச் சமாளிப்பதற்காக அவைகள் கடன் வாங்கியாக வேண்டும். (அவர்களுடைய எச்சப்பாடும், உபரி மூலதன உதவித்தொகைகளும் சேர்ந்து முதலினச் செலவைக்காட்டிலும் அதிகமாக இருக்குமானுல், இவ்வதிகத் தொகையை ஏற்கெனவே குவிந்துள்ள கடன்களைத் தீர்ப்பதற்குப் பயன்படுத்திக்கொள்ளக்கூடும்.) சமீப ஆண்டுகளில், மத்திய அரசாங்கத்தின் போக்கு, உள்ளாட்சி மன்றங்கள் அரசாங்கக் கருவூலத்தினின்றும் (exchequer) கடன் பெறுவதைத் தடுப்பதாகவுள்ளது. இயன்றபோதெல்லாம் அவைகள் வெளி அங்காடியில்—அதாவது, பாங்குகள், இன்னும் பிற தனிப்பட்ட கடனளிப்போர்களிடமிருந்து—கடன் பெறவேண்டுமென்று மத்திய அரசாங்கம் கோருகிறது. அட்டவணை 15ஐப் பார்த்தால், 1961ஆம் ஆண்டில் உள்ளாட்சி மன்றங்கள் முழுவதுமாக அரசாங்கத்திடமிருந்த அவைகள் பெற்றிருந்த கடன் நிலுவைகளில் £ 20 மில்லியனைத் திருப்பித் தந்துவிட்டன என்பது தெரியவரும். இவ்

வாறு அவைகள் தாம் வாங்கிய கடனைத் திருப்பித் தருவதற்கும், நடப்பு உபரிக்கும், முலதன உதவிக் கொடைகளுக்கும், அதிகமாக ஏற்படும் முதலினச் செலவிற்கும் பணம் பெறும்பொருட்டு (அவைகள் யாவும் சேர்ந்து) தனிப்பட்ட கடனளிப்போர்களிடம் £ 527 மில்லியனைக் கடன் வாங்கின. கடன் வாங்கிய தொகைகளைக்கொண்டு அவைகள் புதிய பள்ளிகள், வீடுகள், சாலைகள், குடிநீர் அளிப்பு முதலியனவற்றை அமைக்குமானால், இவ்வாறு பெரிய அளவில் கடன் வாங்குதலினால் ஆபத்து ஒன்றும் வந்துவிடாது. ஆயினும், ஆண்டுகள் செல்லச்செல்ல அவைகளின் ஆண்டு வரவுசெலவுத் திட்டங்களில் கடனுக்காக வட்டியும் கடன் அடைத்தலும் என்னும் இனமானது, அதிகரித்துவரும் முக்கியத்துவத்தையுடையதோர் இனமாக இடம்பெறும்.

## மேலும் படித்தற்குரிய நூல்கள்

*Report of the Committee on the Working of the Monetary System* (The Radcliffe Report) Cmd. 827, H. M. S. O., London, 1959, Chs. III and VII.

A. R. Prest, *Public Finance* (Weidenfeld and Nicolson, London, 1960).

U.K. Hicks, *British Public Finances,* (Oxford University Press, London, 1958).

R. A. Musgrave, *The Theory of Public Finance* (McGraw-Hill, New York, 1959).

# கலைச்சொல் அகராதி

## (ஆங்கிலம்—தமிழ்)

### A

| | | |
|---|---|---|
| Abnormal | — | இயல்பு கடந்த |
| Absolute price | — | நிர்ணய விலை |
| Absolute value | — | நிர்ணய மதிப்பு |
| Accounting surplus | — | கணித எச்சப்பாடு |
| Accumulation | — | குவிப்பு |
| Active | — | செயலீடுபாடு |
| Adaptability | — | சூழ்நிலைக்கேற்பச் சரிப்படுத்திக் கொள்ளும் தன்மை |
| Adjustment | — | சரிசெய்தல் |
| Advantage | — | நலன் |
| Agency | — | பதிலாண்மை (அ) செயலாண்மை |
| Affection | — | பற்றுள்ளம் |
| Aggregate | — | கூட்டுத் தொகுப்பு |
| Aggregation, simple | — | எளிதான மொத்தக் கணக்கீடு |
| Allocation | — | பங்கீடு |
| Alternative methods | — | மாற்று வழிகள் (அ) மாற்று முறைகள் |
| Amateur | — | பொழுதுபோக்குக்காகத் தொழில் செய்பவர் |
| Ambition | — | உயர்வுள்ளல் |
| Amortisation | — | முதலின் கடன் ஒதுக்கீடு |
| Annual Balance Sheet | — | ஆண்டு இறுதிநிலைக் குறிப்பு |
| Apprenticeship, high cost of | — | தொழில் பயில்வதில் அதிகச் செலவு |
| Aptitude | — | இயற்கையாகவுள்ள திறன் |

| | | |
|---|---|---|
| Arbitration Tribunal | — | நடுவர் உயர் முறைமன்றம் |
| Arson | — | தீவைத்தல் |
| Assess | — | மதிப்பீடு செய்தல் |
| Assumption | — | எடுகோள் |
| Automatically | — | தன்னியக்கமான |
| Average and marginal cost | — | சராசரி உற்பத்திச் செலவும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் |
| Average cost curves | — | சராசரி உற்பத்திச் செலவுக் கோடுகள் |
| Average revenue, total | — | மொத்தச் சராசரி வருமானம் |
| Axes | — | அச்சுகள் |

## B

| | | |
|---|---|---|
| Balance sheet | — | இருப்புநிலைக் குறிப்பு |
| Bar | — | பாளம் |
| Bartering | — | பண்டமாற்று |
| Beneficiaries | — | பயன்பெறுவோர் |
| Bi-annual | — | அரையாண்டிற்கொருமுறை |
| Birth-rate | — | பிறப்பு வீதம் |
| Blue-book | — | சட்டமன்ற அறிக்கையின் திருந்தா முதற்படி |
| Board of Trade | — | வர்த்தக சபை |
| Brands | — | சின்னங்கள் |
| British Electricity Authority | — | பிரிட்டிஷ் மின் மேலாண்மை |
| Broad policy | — | பரந்த குறிக்கோள் |
| Budget | — | வரவுசெலவுத் திட்டம் |
| Budget line | — | வரவுசெலவுத் திட்டக் கோடு |
| Bulbs | — | குமிழ்கள் |

## C

| | | |
|---|---|---|
| Cake | — | இனிப்பு ரொட்டி, அப்பம் |
| Capital equipment | — | மூலதனச் சாதனம் |
| Capital goods | — | முதற்கருவிப் பொருள்கள் |
| Capital expenditure | — | மூலதனக் கணக்கு |
| Capital formation | — | முதல் ஆக்கம் |
| Capital formation, direct | — | நேர்முக முதலாக்கம் |
| Capital items | — | மூலதன இனங்கள் |
| Capitalist | — | முதலாளி |

Capital outflow — மூலதன வெளியேற்றம்
Capital transactions — முதல் அளிப்பு நடவடிக்கைகள்
Capital wealth — மூலதனச் செல்வம்
Capital works — முதலாக்க வேலைகள்
Category — இனம்
Cathode-ray tubes — மின் எதிர்முனைக் குழாய்கள்
Central Electricity Board — மத்திய மின்சார சபை
Central Government — மத்திய அரசாங்கம்
Changes in the state of technology — தொழில் நுணுக்க அமைப்பில் உள்ள மாறுதல்கள்
Chemistry — இயைபியல்
Choice — தெரிதல்
Choose — தெரிந்தெடுத்தல்
Classify — வகைப்படுத்துதல்
Climate — தட்பவெப்ப நிலை
Climate, tropical — வெப்ப மண்டலம்
Clinics — மருத்துவ விடுதி
Combination — சேர்க்கை
Closed shop policy — மூடிய கடைக் கைக்கோள்
Clubs — கழகங்கள்
Coincidence — ஒத்த நிகழ்ச்சி
Colleague — கூட்டாளி
Collective organization — கூட்டு அமைப்பு
Competition, potential — உள்ளியல்பான போட்டி
Competition, imperfect — நிறைகுறைப் போட்டி
Competitor — போட்டியாளர்
Complementary goods — நிரப்பு பொருள்கள்
Components — உறுப்புகள்
Composite demand — கலப்புத் தேவை
Concentration — குவிவு (அ) செறிவு
Conscription — கட்டாய ஆட்சேர்ப்பு
Consideration — பயன் (அ) கருத்து (அ) கைம்மாறு
Constant level — நிலையான மட்டம்
Consumer-behaviour theory — நுகர்வோர் செயல்முறைக் கோட்பாடு
Consumers' surplus — நுகர்வோர் எச்சப்பாடு
Consumption — நுகர்ச்சி
Consumption goods — நுகர்ச்சிப் பண்டங்கள்
Contribution — பங்குத் தொகை

Contributory — ஒன்றுக்கொன்று துணையாக
Controller — கட்டுப்படுத்துபவர்
Co-operative societies — கூட்டுறவு சங்கங்கள்
Co-ordination — ஒருங்கிணைப்பு
Cost — உற்பத்திச் செலவு
Cost advantages — உற்பத்திச் செலவு நன்மைகள்
Cost curves — உற்பத்திச் செலவுக் கோடுகள்
Cost of book-keeping — கணக்குப் பதிவியல் செலவு
County Borough Councils — கோட்ட நகராண்மைக் கழகங்கள்
County Councils — கோட்டாண்மைக் கழகங்கள்
Crew — கப்பலோட்டிகள்
Cross-elasticity — பின்னிய நெகிழ்ச்சி
Crude-steel — தூய்மைப்படுத்தப்படாத எஃகு
Current surplus — நடப்பு உபரி (அ) நடப்பு எச்சப்பாடு
Current wage-rate — நடப்புக் கூலி வீதம்
Curve — கோடு (அ) வளைகோடு
Currency issue — செலாவணி வெளியீடு
Customs duties — சுங்கத் தீர்வைகள்
Cumulative preference shares — குவியும் சலுகைப் பங்குகள்
Current account — நடப்புக் கணக்கு
Current expenditure — நடப்புச் செலவு
Current grants — உதவிக் கொடைகள்
Current receipts — நடப்பு வரவுகள்

## D

Daily paper — தினத்தாள்
Death-rate — இறப்பு வீதம்
Debuntures — கடன் பங்குப் பத்திரங்கள் (அ) பிணையங்கள்
Decimal average — பத்தாண்டுச் சராசரி
Deductions — பிடிப்புகள்
Demand curves — தேவைக் கோடுகள்
Derived demand — வழிவந்த தேவை
Deductive method — பகுத்தறி முறை
Defence programmes — பாதுகாப்புத் திட்டங்கள்
Deficiency payment — குறை ஈட்டுச் செலுத்து
Deficit — பற்றுக்குறை

